# சங்க இலக்கியங்களில் மறவர்கள் - பன்முக ஆய்வு

**சென்னைப்பல்கலைக் கழகத்திற்கு**
**முனைவர் (பிஎச்.டி) பட்டப்பேற்றிற்காக**
**அளிக்கப்படும் ஆய்வேடு.**


**ஆய்வாளர்**

**திருமதி கா. கலைச்செல்வி,** எம்.ஏ, எம். ஃபில்., பி.எட்.,
முழு நேர ஆய்வாளர் - தமிழ்த்துறை
பச்சையப்பன் கல்லூரி
சேத்துப்பட்டு, சென்னை-600 030

**நெறியாளர்**
**முனைவர். திருமதி. சொ. சுடலி,** எம்.,ஏ., பிஎச்.டி.
தமிழ் இணைப்பேராசிரியர்
பச்சையப்பன் கல்லூரி
சேத்துப்பட்டு, சென்னை- 600 030






**சென்னைப்பல்கலைக்கழகம்**
**மார்ச் - 2010**

முனைவர் இராம. வேணுகோபால், எம்.ஏ., பிஎச்.டி.
தமிழ்த்துறைத் தலைவர்
பச்சையப்பன் கல்லூரி
சென்னை - 600 030

## துறைத் தலைவர் சான்றிதழ்

செல்வி. கா. கலைச்செல்வி என்பவர் சென்னை பச்சையப்பன் கல்லூரித் தமிழ்த்துறையில் 2008-2010-ஆம் ஆண்டில் முழுநேர முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்கான ஆராய்ச்சியினை மேற்கொண்டு, அதனடிப்படையில் 'சங்க இலக்கியங்களில் மறவர்கள் - பன்முக ஆய்வு' என்னும் தலைப்பில் அமைந்த இந்த ஆய்வேட்டினை அளிக்கிறார் என்று சான்றிதழ் வழங்குகிறேன்.

சென்னை : 600 030
நாள் : 19.03.2010

இராம. வேணுகோபால்
தமிழ்த்துறைத் தலைவர்
Dr. R. VENUGOPAL, Ph.D.,
Head of the Dept. of Tamil
Pachaiyappa's College
Chennai - 600 030.



முனைவர் திருமதி. சொ. சுடலி, எம்.ஏ., பிஎச்.டி.
தமிழ் இணைப்பேராசிரியர்
தமிழ்த்துறை
பச்சையப்பன் கல்லூரி
சென்னை - 600 030

## மேற்பார்வையாளர் சான்றிதழ்

"சங்க இலக்கியங்களில் மறவர்கள் - பன்முக ஆய்வு" என்னும் தலைப்பில் செல்வி. கா. கலைச்செல்வி என்பவர் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்த்துறையில் 2008-2010 முடிய உள்ள காலத்தில் முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளராக இருந்து ஆய்வினை மேற்கொண்டார். இவ்வாய்வேடு, இவரது சொந்த முயற்சியில் செய்யப்பட்டது என்றும், இவ்வாய்வேடு இதற்கு முன், வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

இடம்: சென்னை - 600 030
நாள்: 19.03.2010

(சொ. சுடலி)
ஆய்வு நெறியாளர்

DR. S SUDALI THYAGARAJAN, M.A.Ph.D.
READER IN TAMIL
PACHAIYAPPA'S COLLEGE
CHENNAI-600 030.



திருமதி கா. கலைச்செல்வி, எம்.ஏ.,எம்.ஃபில்., பி.எட்.,
முழுநேர ஆய்வாளர்-தமிழ்த்துறை,
பச்சையப்பன் கல்லூரி
சென்னை - 600 030

# ஆய்வாளர் உறுதி மொழி

"சங்க இலக்கியங்களில் மறவர்கள் - பன்முக ஆய்வு" என்னும் தலைப்பில் சென்னைப் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காகப் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்த்துறை இணைப்பேராசிரியர் சொ. சுடலி, எம்.ஏ., பிஎச்.டி. அவர்கள் மேற்பார்வையில் 2008-2010-ஆம் ஆண்டில் ஆராய்ச்சி மேற்கொண்டு படைக்கப்பட்ட இவ்வாய்வேடு என் சொந்த முயற்சியில் உருவானது என்றும், இதற்கு முன் இந்த ஆய்வேடு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் வழங்கப்பெறவில்லை என்றும் உறுதி அளிக்கிறேன்.

இடம்: சென்னை - 600 030
நாள்: 19.03.2010

(கா. கலைச்செல்வி)
ஆய்வாளர்



# நன்றியுரை

தமிழுக்கும் தாய்க்கும் என் பணிவான வணக்கம்.

இவ்வாய்வினை மேற்கொள்ள வாய்ப்பளித்த சென்னைப் பச்சையப்பன் கல்லூரி முதல்வர் முனைவர் ஜி. பாலகிருஷ்ணன் அவர்களுக்கும், தற்பொழுது முதல்வர் பொறுப்பில் பணியாற்றிவரும் முனைவர். ஆர். ருக்மணி அம்மையார் அவர்களுக்கும், முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர். பெ.தமிழ்ச்செல்வி அம்மையார் அவர்களுக்கும், தற்போதைய தமிழ்த்துறைத் தலைவர் முனைவர். இராம.வேணுகோபால் அவர்களுக்கும் எனது நன்றியை உரித்தாக்குகிறேன்.

நான் ஆர்வத்தோடு முன்வைத்த இவ்வாய்வுத்தலைப்பினை அங்கீகரித்து, தேவையான பயனுள்ள ஆலோசனைகளை வழங்கி, ஆய்வுப்பணிக்கான நெறிகளையும் எடுத்துக்கூறி, நன்முறையில் ஆய்வு செய்து இவ்வாய்வேடு செம்மையாக உருவாக எல்லா நிலைகளிலும் பேருதவி புரிந்து ஆக்கமும் ஊக்கமும் நல்கிய மேன்மைபொருந்திய எனது நெறியாளர் தமிழ் இணைப்பேராசிரியர், முனைவர். சொ. சுடலி அம்மையார் அவர்களுக்கு எனது நெஞ்சங்கனிந்த நன்றியினைப் பணிவோடு தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்வாய்வேடு நன்கு அமைய அதன் தொடர்பான பல பனுவல்களை வழங்கி அவ்வப்போது அறிவுரை புகட்டி ஆய்வைச் செம்மையாய் மேற்கொள்ள ஆலோசனை வழங்கிய பேராசிரியர். தி.இரா. சின்னப்பன் அவர்களுக்கும், தாம் வெளியிட்ட நூல்களுள் எம் ஆய்வுத்தொடர்பான எல்லா நூல்களையும் வழங்கி, நல்வழிகாட்டி உதவிய காவ்யா பதிப்பக உரிமையாளர் பேராசிரியர் சு. சண்முக சுந்தரம் அவர்களுக்கும், தம் அனுபவங்களை அவ்வப்பொழுது எமக்கு எடுத்துக்கூறி ஆய்வேடு அமைய வேண்டிய வழிமுறைகளைக்கூறி நல்லூக்கம்

நல்கிய பேராசிரியர் பெ.இளவரசு அவர்களுக்கும் அன்புகனிந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வேடு நன்கு அமையவேண்டும் என்ற எண்ணத்தையும், உணர்வையும் அவ்வப்பொழுது தூண்டி, உயர் சிந்தனையோடு அருகில் இருந்தவாறு வழிகாட்டி எல்லாவகையிலும் நல்லுதவி நல்கிவந்த எனது தாய்மாமன் திரு. மு.தவசிப்பாண்டியன் அவர்களுக்கும், அத்தை மரகதம் பாண்டியன் அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியை உவகையோடு உரித்தாக்குகிறேன்.

இந்த ஆய்வினை நன்கு மேற்கொண்டு பட்டம் பெற்று எல்லாவகையிலும் உயர வேண்டுமென பாசத்தோடு அறவுரை கூறி, ஆணிவேராக இருந்து பேருதவிபுரிந்துவந்த என் பெற்றோர்க்கும், என் சித்தி முனைவர். மு. ஞானத்தாய் அவர்களுக்கும் என் நன்றியைப் பணிவோடு உரித்தாக்கிக் கொள்கிறேன்.

ஆய்வுப்பணிகளுக்குத் தேவைப்படும் பார்வை நூல்களை வழங்கி உதவிய பச்சையப்பன் கல்லூரி நூலகத்தார்க்கும், சென்னைப் பல்கலைக்கழக நூலகத்தார்க்கும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகத்தார்க்கும், மதுரை காமராசர் பல்கலைக்கழக நூலகத்தார்க்கும், கன்னிமரா நூலகத்தார்க்கும் என்மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்ஆய்வு நன்கு அமையவேண்டுமென்ற நல்லெண்ணத்துடன் அவ்வப்பொழுது பல பயனள்ள தகவல்களை நல்கி உதவிவந்த நல்லுள்ளம் கொண்ட எண்ணிறந்த பெரியோர்க்கும், பேராசிரியர்களுக்கும், உடன் ஆய்வு செய்துவந்தோர்க்கும், தோழியர்க்கும், பிறர்க்கும் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது ஆய்வுப்பணிக்கு எல்லாவகையிலும் உறுதுணையாக இருந்து நல்லுதவி நல்கிய என் கணவர் திரு. மு. விசயகுமார் அவர்கட்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்த ஆய்வேடு நன்கு அமைய எல்லாவகையிலும் உதவிய கௌரிவாக்கம் கம்ப்யூட்டர் ஸ்கில் டெவலப்மெண்ட் சென்டர் உரிமையாளர் திரு. என். பாலு அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

கா. கலைச்செல்வி

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம் | - | அகநானூறு |
| கலி, நெய்தல் | - | கலித்தொகை, நெய்தல் கலி |
| குறள் | - | திருக்குறள் |
| குறுந் | - | குறுந்தொகை |
| தெ.சை.சி.நூ.க.லி. | - | தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட் |
| தொல். பொ. மர. | - | தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல் |
| தொல். அகம் | - | தொல்காப்பியம், அகத்திணையியல் |
| தொல். பொ. செய்.நூ. | - | தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல், நூற்பா. |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| புறம் | - | புறநானூறு |
| p. | - | Page |
| pp. | - | Pages |

# பொருளடக்கம்

# முன்னுரை

## அறிமுகம்

நாட்டின் மேலாண்மையில் சிறப்பிடம் பெறும் மறவர்கள் மன்னர் முதலாக ஊர்க்காப்பாளர்வரை பல பொறுப்புகளேற்று நாடுநலம் பெறவும், நற்காவலுடன் இடுக்கணின்றி வாழவும் நற்றொண்டாற்றியவர்கள். இவர்களைப் பற்றிய முழு வரலாறு, பழைமையான இலக்கியங்களாகப் போற்றப்பட்டுவரும் சங்க இலக்கியங்களாகிய பத்துப்பாட்டிலும், எட்டுத் தொகையிலும் மிக விரிவாக இடம்பெற்றுள்ளன. இவர்கள் தொடர்பான இலக்கண நெறிகள் தொல்காப்பியத்தில் கூறப்பட்டுள்ளன. இவர்கள் தொடர்பான அறக் கோட்பாடுகள் திருக்குறளில் கூறப்பட்டுள்ளன. இவ்விரண்டு நூல்களின் துணைக்கொண்டு சங்க இலக்கியமாகிய பத்துப்பாட்டில் இடம் பெற்ற பத்துநூல்களிலும், எட்டுத்தொகையில் இடம் பெற்ற எட்டு நூல்களிலும் மறவர்களைப் பற்றிக்கூறப்பெற்ற பல விதமான கடமைகள், போர்ப்பணிகள், சமூகப்பணிகள், இல்லறப்பணிகள் போன்றவற்றைப் பன்முகப் போக்கிலும் நோக்கிலும் ஆராய்ந்து அவர்களுடைய பழம்பெரும் சிறப்புக்களை மீட்டுருவாக்கமாக்கி இவற்றை தமிழ்ச் சமூகத்திற்கு எடுத்துக் காட்டுவதாத இவ்வாய்வு அமைந்துள்ளது.

## ஆய்வுப்பொருள்

மறவர்கள் பற்றிய பழம் பெருஞ்செய்திகள் சங்க இலக்கியத்தில் மட்டுமே முழுமையாகவும் நிறைவாகவும் இடம் பெற்றுள்ளன. அதன் பிறகு எழுந்த பல இலக்கியங்களிலும், புறப்பொருள் பற்றிக்கூறும் இலக்கணநூல்களிலும், வரலாற்று நூல்களிலும் இவர்களைப் பற்றிய செய்திகள் பரவலாக இடம் பெற்றுள்ளன. அனைத்து நூல்களையும் துணையாகக் கொண்டு பல

ஆய்வாளர்கள் பல்விதமாக ஆய்வு செய்து நூல் வடிவம் தந்துள்ளனர். வி.கனகசபை இயற்றிய 'ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகட்டு முற்பட்டதமிழகம்' என்ற ஆங்கில நூல் மறவர்கள் பற்றிய கருத்துக்களைக் கூறும் முதல் நூல் எனப்போற்றப்படுகிறது. சு. வித்தியாநந்தன் எழுதிய 'தமிழர்சால்பு' என்னும் நூல் மறவர்கள் மேற்கொண்ட போர் பற்றிய செய்திகளைக் கூறுகின்றன. ரா.பி. சேதுப்பிள்ளை எழுதிய 'தமிழர் வீரம்' என்ற நூலும், சாமிசிதம்பரனார் இயற்றிய 'தமிழர் வீரம்' என்ற நூலும் மறவர்கள் பற்றிய கருத்துகளைச் சுட்டிக் காட்டியுள்ளன. கி.வா. சகந்நாதன் இயற்றிய 'வீரர் உலகம்' என்ற நூலும் மறவர்கள் பற்றிய ஆய்வுக் கருத்துக்களை வெளியிட்டுள்ளது.

எசு. கதிர்வேல், முனைவர் பட்டத்திற்காக ஆங்கிலத்தில் 'மறவர் வரலாறு ' என்ற தலைப்பில் ஆய்வு செய்து சமர்ப்பித்த ஆய்வேட்டில் மறவர்கள் பற்றிய வரலாற்றுச் செய்திகள் காலவாரியாக இடம் பெற்று விளக்கப்பட்டுள்ளன. பி.முத்துத்தேவரது 'மூவேந்தர் குலத்தேவமார் சமூக வரலாறு ' என்ற நூலும் மறவர் தொடர்பான கருத்துக்களையே எடுத்துக் கூறுகின்றன. வி.எஸ். குழந்தை வேல்சாமி எழுதிய மறவர்சரித்திரம், இரா. நடராசன் இயற்றிய 'செந்தமிழ் நாட்டுச் செம்மை மறவர்கள்', ந.மு. வேங்கடசாமி நாட்டார் படைத்த 'கள்ளர் சரித்திரம்', முனைவர். ந.இராசையா தொகுத்த 'மாவீரன் பூலித்தேவன்' என்ற நூலும் மறவர்களைப் பற்றிய செய்திகளைக் கூறுகின்றன. தமிழிலக்கிய வரலாறு என்ற தலைப்பில் பல ஆசிரியர்களால் காலந்தோறும் வெளியிடப்பட்ட நூல்களிலும், 'தமிழக வராலாறும் பண்பாடும்' என்ற தலைப்பில் பலரால் எழுதி வெளியிடப்பட்ட நூல்களிலும் மறவர்கள்பற்றிய செய்திகள் தேவைக்கேற்ப இடம் பெற்றுள்ளன.

சங்க இலக்கியம் பற்றி ஆய்வு செய்து நூல் வடிவம் பெற்ற ஒருசில நூல்களில் கூட மறவர்கள் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன. எந்த நூலிலும் சங்க இலக்கியங்கள் கூறும் மறவர்கள் பற்றிய பன்முகச் செய்திகள் தனித்தும் முழுமையாகவும் இடம் பெறவில்லை என்றே கூற வேண்டியுள்ளது. முனைவர். சு.முத்தையா இயற்றிய 156 பக்கங்கள் மட்டும் கொண்ட 'சங்கால மறவர்' என்ற தலைப்பில் வெளிவந்த நூல் மட்டுமே ஓரளவு சங்க இலக்கிய மறவர்களை ஆராய்ந்து சில பயனுள்ள கருத்துக்களை வெளியிட்டுள்ளது. இருப்பினும் இந்நூல் மறவர்களைப்பற்றிய பன்முகக் கருத்துக்களை, பன்னோக்கில் ஆராயவில்லை. மேலும், மறவர்களைப் பற்றி ஆய்வு செய்த எந்தநூலும் சமூகக் கட்டமைப்பை அடிப்படையாகக் கொண்டு ஆய்ந்து செய்திகளை வெளியிடவில்லை. எனவே, மானுடவியல், சமூகவியல், இல்லறவியல், அரசியலியல், பொருளாதாரவியல் போன்றவற்றின் கோட்பாட்டோடு பொருத்திப் பார்த்து சங்க இலக்கியங்கள் கூறும் மறவர்களைப் பற்றிய பல்வித கருத்துகளை ஆழ்ந்து ஆய்வுசெய்து வெளியிட வேண்டிய கடப்பாடு உள்ளது என முடிவு செய்து இந்தத் தலைப்பு ஆய்வுப் பொருளாக எடுத்துக் கொள்ளப்பட்டது.

**ஆய்வுத்தலைப்பு**

மேலே குறிப்பிட்ட ஆய்வுப்பொருள்களை அடிப்படைாகக் கொண்டு பன்முக நோக்கில் ஆய்வு செய்தால் பயனுள்ள செய்திகள் கிடைக்கும் என்ற நோக்கில் 'சங்க இலக்கியங்களில் மறவர்கள் - பன்முக ஆய்வு' என்ற தலைப்பு ஆய்வின் தலைப்பாக அமைத்துக் கொள்ளப்பட்டது. இதனால், சங்க இலக்கிய சமூகக்கட்டமைப்பு, அதில் மறவர்கள் பெற்ற சிறப்பான இடம், சமூகக் கட்டமைப்பிற்கு மறவர்கள் உதவிய

விதம், அவர்களால் சமூகத்திற்கு விளைந்த பயன்கள், சமூகத்தால் அவர்கள் பெற்ற சிறப்புகள் போன்றவற்றை முறையாக ஆய்வுசெய்து கருத்துக்களை வெளியிட இயலும் என்ற நோக்கில் 'சங்க இலக்கியங்களில் மறவர்கள் - பன்முக ஆய்வு' என்ற தலைப்பு ஆய்வுத்தலைப்பாக அமைகிறது.

## ஆய்வின் நோக்கம்

சங்க இலக்கியங்களாகிய பத்துப்பாட்டும், எட்டுத்தொகையும் மறவர்களைப்பற்றிய பன்முகப் பணிகளையும் சிறப்புகளையும் விரிவாக எடுத்துக்கூறுகின்றன. அவற்றுள் போர்பற்றிக்கூறும் புறப்பொருள் இலக்கியங்களைத் தனித்துப்பிரித்து அவற்றுள் கூறப்படும் செய்திகளை அடிப்படையாகக்கொண்டு பன்முக ஆய்வினை, மேற்கொள்வதே முதன்மை நோக்காக அமைத்துக்கொள்ளப்பட்டது. இவற்றுள் சிறுபாணாற்றுப்படை, பெரும் பாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை, மதுரைக்காஞ்சி, பட்டினப்பாலை, மலைபடுகாடம் என்னும் ஆறு இலக்கியங்கள் பத்துப்பாட்டில் இடம் பெற்ற புறப்பொருள் இலக்கியங்களாகும். பரிபாடல் என்னும் எட்டுத்தொகை இலக்கியம் புறமும் அகமும் கலந்த இலக்கியமாகும். இவற்றை முதலில் ஆய்வுக்கு எடுத்துக் கொண்டு மறவர்கள் தொடர்பாகக் கூறப்படும் செய்திகளைப் பன்முகநோக்கில் ஆய்வுசெய்வதே முதன்மை நோக்கமாகும். பிற அகப்பொருள் இலக்கியங்களில் கூறப்படும் செய்திகள் குறைவாக இருந்தாலும் அவையும் பன்முக ஆய்விற்குப் பெருந்துணைபுரிவதால், அவற்றில் உள்ளவற்றைக் கண்டறியும் நோக்கோடு பன்முக ஆய்வு மேற்கொள்ளப்பட்டது. எனவே, சங்க இலக்கியங்கள் அனைத்திலும் மறவர் பற்றிய பன்முக ஆய்வே ஆய்வின் நோக்கமாக அமைத்துக்கொள்ளப்பட்டது.

## ஆய்வின் எல்லை

சங்க இலக்கியம் எனப்படும் கடைச்சங்ககாலத்து இலக்கியங்கள் பதினெட்டும், அவற்றிற்கு அடிப்படையான இலக்கண நெறியை விளக்கும் தொல்காப்பியம் மற்றும் திருக்குறள் நூல்களும், ஆய்வின் எல்லைகளாக அமைத்துக் கொள்ளப்பட்டன. மொத்தமுள்ள இந்த இருபது நூல்களும் பன்முக ஆய்வின் எல்லையாக வகுத்துக் கொள்ளப்பட்டன. இவற்றுள் இடம்பெற்ற புறப்பொருள் செய்திகளை மட்டும் எல்லையாகக் கொண்டால், பன்முக ஆய்வு முழுமைபெறாது என்பதால் இந்த இருபது நூல்களில் கூறப்பட்ட அகப்பொருள் செய்திகளும் ஆய்வின் எல்லைக்கு உட்படுத்தப்பட்டன.

## ஆய்வு அணுகுமுறை

பன்முக ஆய்வைத் தலையாய நோக்காகக் கொண்டதால் ஆய்வின் அணுகுமுறைகளையும், ஆய்வியல்நெறிமுறைகள் போற்றும் பல ஆய்வு அணுகுமுறைகளையும் போற்ற வேண்டியுள்ளது. அடிப்படை அணுகுமுறை, மரபு வழி ஆய்வு முறையாகும். இது அகம், புறம் எனத் தொல்காப்பியம் கூறும் திணை துறைகளின் தொடர்பாகக் கூறப்பட்ட நெறிமுறைகள் அனைத்தும் அடிப்படை அணுகுமுறையில் ஆராயப்பட்டன நிறுவன அமைப்பு முறைகளை அடிப்படையாகக் கொண்டு சங்ககாலச் சமூக கட்டமைப்புத் தொடர்பான ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. இதில் சமூகம்,இல்லறம், அரசியல் எனப்படும் பலநிறுவன அமைப்புகளை அடிப்படையாகக் கொண்டு மறவர்களது பன்முகப்பங்களிப்புகளைக் கண்டறிய நிறுவன அமைப்பின் அணுகுமுறை பெரிதும் உதவின. பொருள் அடிப்படையில் புறப்பொருளில் இடம் பெற்ற வீரம், கொடை போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டு ஆயும் அணுகுமுறை

மேற்கொள்ளப்பட்டது. ஆவண ஆய்வின் அணுகுமுறையில் இலக்கியங்களுள் இடம் பெற்ற பாடற் கருத்துக்களையே முதன்மையாகக் கொண்டு மதிப்பீடு செய்து, குறிக்கோள்களின் அடிப்படையில் மறவர் மேற்கொண்ட பங்களிப்புகளைக் கண்டறியும் அணுகுமுறை போற்றப்பட்டது. இதனால் பெறப்பட்ட கருத்துக்களின் மெய்ம்மைகாண் ஆய்விற்கு உதவும் கிரேக்கம், ரோமானியம் போன்ற பிற நாட்டவரின் மறவர்கள் பண்புகளையும் முன்வைத்து ஒப்பிட்டு ஆய்வுசெய்யும் அணுகுமுறையும் பயன்படுத்தப்பட்டது. இதற்கு உதவும் தருக்க முறை ஆய்வின் அணுகுமுறை எங்கெங்கு தேவைப்படுமோ அங்கங்கெல்லாம் பயன்படுத்தப்பட்டது. இலக்கியங்கள் கூறிய கருத்துக்களைக் கொண்டு இப்படித்தான் இருந்திருக்கக் கூடும் என்ற உய்த்துணர்முறை கூட சில இடங்களில் அணுகுமுறையாக உதவியது. எங்கெங்கு எந்த அணுகுமுறை நன்கு உதவியாக இருந்ததோ, அங்கங்கு அந்தந்த அணுகுமுறையைப் பயன்படுத்த முயற்சி மேற்கொள்ளப்பட்டது. இவ்வாறு, ஆய்வு சிறப்பாக அமைய வேண்டுமென்ற நோக்கில் பல அணுகு முறைகள் மேற்கொள்ளப்பட்டன.

**ஆய்வுப்பயன்**

காலந்தோறும் நாட்டுப்பற்று, மொழிப்பற்று மற்றும் இனப்பற்று ஒவ்வொரு நாட்டவர்க்கும் தொடர்ந்து அமைதல் வேண்டுமெனும் சான்றோர் கருத்துக்கள் சங்ககால மறவர்களைப்பற்றிய பன்முக ஆய்வாலும், அதன் முடிவாலும் ஆய்வுப் பயனாக அமைக்கப்பட்டுள்ளது. வரலாற்றைக் காட்டிலும், இலக்கியங்கள் இத்தகு பற்றுக்களை அதிகம் வளர்க்க உதவும் என்ற நோக்கோடு ஆராயப்பட்டுள்ளன. இந்த ஆய்வின் பயன் மறவர்தம் தனித்தன்மைகள்

இன்றும் தொடர்ந்து வாழையடிவாழையாக வந்து கொண்டிருக்கிறது என்பதைச் சுட்டி நினைவுப்படுத்துவதேயாகும்.

## முதன்மைநூல்களும் முன்னோடிகளும்

தெ. சை. சி. நூ. க. லி., உ.வே. சா. நூலகம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், பாரிநிலையம், வர்த்தமானன் பதிப்பகம் வாயிலாக வெளிவந்த சங்க இலக்கியங்கள் பதினெட்டும், தொல்காப்பியம் மற்றும் திருக்குறள் நூல்களே முதன்மை நூல்களாக ஏற்றுக்கொள்ளப்பட்டன. உ.வே.சா., ஔவை துரைசாமி, புலியூர் கேசிகன், இரா.மோகன், வீ.நாகராசன், ச.வே.சுப்பிரமணியன், கே.கே.பிள்ளை, வே.தி. செல்வம், மா.இராசமாணிக்கனார், அன்னிதாமசு, பரிதிமாற்கலைஞர், ப. மருதநாயகம், அ.அ.மணவாளன் மா. பொ. குருசாமி, அ.ச. ஞானசம்பந்தன், பக்தவத்சல பாரதி, தா. ஏ. ஞானமூர்த்தி, தாயம்மாள் அறவாணன், சாமி சிதம்பரனார், முனைவர். சாலினி இளந்திரையன், மு.வரதராசனார், மயிலை சீனி வேங்கடசாமி, மேஜர். கதிர்மகாதேவன், ந.சுப்புரெட்டியார், வே.தி. செல்வம் போன்றோர் எழுதிய நூல்கள் இந்த ஆய்விற்கு முன்னோடியாக இருந்து தத்தம் நூல்கள் வாயிலாக பயிற்சியும் பேருதவியும் செய்தன. இவையல்லாமல் வேறுபல ஆங்கில நூல்களும், தமிழ் நூல்களும் துணைமை நூல்களாகி ஆய்விற்கு உதவின. முதன்மை, துணைமைச் சான்றாதார நூல்களின் பட்டியல் பின்னிணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளது.

## ஆய்வேட்டின் அமைப்பு

முன்னுரை, முடிவுரை நீங்கலாக இவ்வாய்வு ஐந்து இயல்களாக அமைக்கப்பட்டுள்ளது. அவை:

(1) சங்க இலக்கியம் காட்டும் சமூகக்கட்டமைப்பு

(2) சங்க இலக்கிய பன்முக அமைப்புகள்

(3) சங்க இலக்கியம் சிறப்பிக்கும் மறவர்கள்

(4) சமூகக் கட்டமைப்பில் மறவர்கள்

(5) மறவர்கள் பண்பு நலன்களால் விளைந்த சமூகப்பயன்கள்

முதல் இயலாக அமைந்தது 'சங்க இலக்கியம் காட்டும் சமூகக்கட்டமைப்பு' ஆகும். இதில், சங்க இலக்கிய அறிமுகம், பண்டைத் தமிழர்தம் சமூகம், சமூகத்தின் உள்கட்டமைப்பு, உள்கட்டமைப்பில் பழக்கம் - வழக்கம் - மரபுகள், உள்கட்டமைப்பிற்கு உதவும் தொல்காப்பியர், உள்கட்டமைப்பிற்குதவிய முப்பொருள், சமூகத்தின் வெளிக்கட்டமைப்பு, சமூகவியலார் கோட்பாடும் சங்கத்தமிழ்ச் சமூகமும், அரசியலார் கோட்பாடும் சங்கத்தமிழ்ச் சமூகமும், வரலாற்றியல் கோட்பாடும் சங்கத்தமிழ்ச் சமூகமும், போரியலாரும் தமிழ்ச் சமூகமும், சங்க இலக்கிய கட்டமைப்பு கூறும் சமூகம், சங்க இலக்கியம் சுட்டும் மறவர் பங்களிப்பு முதலியவைகளை உள்தலைப்புகளாக அமைத்து ஆய்வினை மேற்கொண்டு, கிடைத்த ஆய்வு முடிவுகள் இயலின் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளன.

இரண்டாவது இயலாக அமைந்தது, 'சங்க இலக்கிய பன்முக அமைப்புகள்' ஆகும். இதில் சங்க இலக்கிய பன்முக அமைப்பு, இலக்கிய மாந்தர் பன்முக அமைப்பு, சங்ககாலச்சமூகக் காப்பும் வளர்ச்சியும், வளர்ச்சியும் மாற்றமும், சமூக மாற்றம், சேரமன்னர், சோழமன்னர், பாண்டிய மன்னர், மானுடம் போற்றும் நெறிகள், பொறுப்புகள், கடமைகள், தொழில்கள், தனிநபர் உரிமைகள், சமூகக் கலைகளும் நுண்கலைகளும், சமூகஇயக்கம்., மன்னரும் சான்றோரும், மன்னரும் புலவர்களும், மன்னரும் மறவர்களும், மறவர்கள் பங்கும் பணிகளும், மறவர்களின்

சமூக உறவுகள் முதலான தலைப்புகளில் ஆய்வுசெய்து கண்டறிந்த முடிவுகள் இயலின் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளன.

மூன்றாவது இயலாக, 'சங்க இலக்கியம் சிறப்பிக்கும் மறவர்கள்' என்ற தலைப்பு அமைக்கப்பட்டுள்ளது. இதில், மறவர்க்கான சங்க இலக்கிய வரையறை, மறவர்களைச் சுட்டும் சிறப்புப் பெயர்கள், சங்க இலக்கிய மறவர் அறிமுகம், மறவர்க்கான இலக்கணம், சமூகம் கண்டறிந்த மறவர், சான்றோரும் புலவரும் பாராட்டிய மறவர், மன்னர் கண்டறிந்த மறவர், சமூகக் காவலரான மறவர், போர்க்களம் போற்றும் மறவர், மன்னரும் சான்றோரும் வழிபடும் மறவர், மறவர்தம் வரலாற்றுக் களஞ்சியம் எனும் தலைப்புகளில் ஆய்வுசெய்து கண்டறிந்த கருத்துக்கள் இயலின் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளன.

நான்காவது இயலாக, 'சமூகக் கட்டமைப்பில் மறவர்கள்' என்ற தலைப்பு அமைக்கப்பட்டுள்ளது. இதில், நாடும் சமூகமும், அரசும் சமூகமும், சமூக நிறுவனங்களும் துறைகளும், மறவர்க்கான பதவிகளும் பணிகளும், அரசாணைகளும் சமூகக் கட்டமைப்புகளும், அரசாணையும் மறவர் பங்கும், சமூக நம்பிக்கைகளும் மறவர்களும், போர்க்கால மறவரும் அமைதிக்காலத்து மறவர்களும், மக்கள் கண்ணோட்டத்தில் மறவர், சமூகக் கட்டுப்பாட்டால் சிறந்த மறவர், சமூகக் கட்டமைப்பில் மறவர் பெற்ற பெரும்பங்கு என்னும் தலைப்புகளில் ஆய்வுசெய்து கண்டறிந்த உண்மைகள் விளக்கப்பட்டுள்ளன. இயலின் இறுதியில் ஆய்வுமுடிகள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

இந்த ஐந்து இயல்களில் கண்டறியப்படுகிற முடிவுகள் இறுதியில் முடிவுரையாகத் தரப்பட்டுள்ளன.

பின்னிணைப்பில் முதன்மை நூல்கள், துணைமை நூல்கள், ஆங்கில நூல்கள் முதலானவற்றின் நூற்பட்டியல்கள் இணைக்கப்பட்டுள்ளன.

# இயல் ஒன்று

# சங்க இலக்கியம் காட்டும் சமூகக் கட்டமைப்பு

## முகவுரை

சங்க இலக்கியம் புலப்படுத்தும் சமூகக் கட்டமைப்பு என்ற இவ்வியல், சங்க இலக்கியம், பண்டைத் தமிழர்தம் சமூகம், சமூகத்தின் உள் கட்டமைப்பு, உள் கட்டமைப்பில் பழக்க-வழக்கம், மரபுகள், உள் கட்டமைப்பிற்கு உதவும் தொல்காப்பியர், உள்கட்டமைப்பிற்கு உதவிய முப்பொருள், வரலாற்றியல் கோட்பாடும் சங்கத்தமிழ்ச் சமூகமும், போரியலாரும் தமிழ்ச் சமூகமும், சங்க இலக்கியக் கட்டமைப்பு கூறும் சமூகம், சங்ககாலச் சமூக உறுப்பினர், சங்க இலக்கியம் சுட்டும் மறவர் பங்களிப்பு - என்ற தலைப்புகளில் மறவர்களோடு தொடர்புடைய செய்திகளைச் சங்க இலக்கியங்களில் கண்டறிந்தவற்றை ஆய்வு நெறியோடு மதிப்பீடு செய்து கண்டறிந்து முறைப்படுத்தி முடிவுகளைக் கூறுகிறது.

'மறம்' என்ற சொல்லை அடிப்படையாகக் கொண்டு உருவான சொல்தான் மறவன், மறவர் என்பனவாகும். அறத்திற்கு மாறுபட்ட எதிர்மறைச் சொல்லாகக் கருதப்படும் 'மறம்' என்ற சொல்லிற்கு, 'வீரம் ; வலிமை ; பகை ; பிணக்கு ; சினம் ; கொலைத் தொழில் ; கெடுதி ; பாவம் ; மயக்கம் ; வெற்றி ; யமன் ; கலம்பகத்தின் ஓர் உறுப்பு ' எனப் பன்னிரண்டு பொருள்கள் கூறப்படுகின்றன. இவற்றின் அடிப்படையில் தான், 'மறக்களம் ; மறக்குடி ; மறத்துறை ; மறத்தி ; மறக்கற்பு ; மறநிலைப் பொருள் ; மறல் ; மறக்கருணை'[1] எனப் பல சொற்கள் ஆக்கம் பெற்றுள்ளன. அறத்திற்கும் மறத்திற்கும் இயல்பாகவே நெருங்கிய உள்ளுறவு உண்டு என்பதை,

'அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார் ;

மறத்திற்கும் அஃதே துணை '

- (குறள் - 76)

என்று குறள் நிலை நாட்டும். 'அறியாதவர்தான், அறத்திற்கு மட்டுமே அன்பு துணையாகும் என்று கூறுவர். ஆராய்ந்து பார்த்தால் வீரத்திற்கும் அதுவே துணையாக நிற்கின்றது ' என வள்ளுவர் கூறுவர். இதனை வலியுறுத்தும் நோக்கில், 'அவற்றின் மண்டிய மறப்போர் வேந்தர் '[2] என்று கழாஅத்தலையார் கூறியுள்ளதையும் காணலாம்.

போர்க்களத்தில் எல்லாரும் வீழ்ந்தொழிந்தனர். சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும், அவனை எதிர்த்த சோழன் வேற்பஃறடக் கைப் பெருவிறற் கிள்ளியும் மட்டுமே போர்க்களத்தில் உள்ளனர். தத்தம் வீரர் இறந்துபட்டனர் எனவறிந்து கையறு நிலைக்காட்பட்டு, வருந்தி, சந்து செய்து இரு மன்னர்களும் உயிருடன் நாடு திரும்பியிருக்கலாம். அன்பின் மிகுதியால் எழுந்த நாட்டுப்பற்று மறமிகு மன்னர்களாக்கித் தனித்தே இருவரும் போரிட்டு களத்தில் பட்டு வீழ்ந்தனர். இது கண்டு வியந்த கழாஅத்தலையார் 'அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்' என இருவரையும் பாராட்டிப் பாடினார்.

கோவூர்கிழார், ஆவூர் கோட்டை வாயில்களை அடைத்துக் கொண்டு, உள்ளே இருந்த சோழன் நெடுங்கிள்ளியிடம் சென்று, ' நீ அறத்தை யுடையை யாயின் இது நினதன்றோ வென்று சொல்லித் திறத்தல் செய்வாயாக ! மறத்தையுடையை யாயின் போரால் திறத்தல் செய்வாயாக ! அவ்வாறன்றி அறத்தையும் மறத்தையும் உடையை யல்லையாக, திறவாது அடைக்கப்பட்ட திண்ணிய நிலையை யுடைத்தாகிய கதவினையுடைய, நீண்ட மதிலுள் ஒரு

பக்கத்தே ஒதுங்குதல் நாணுந் தன்மை யுடைத்து' எனக்கூறி இடித்துரைத்துச் சிந்திக்க வைக்கிறார்.

'பசிமிகுந்த யானைகள் உணவு பெறாது, கட்டிய கம்பம் வருந்தச் சாய்த்து, நிலத்திற்புரண்டு, இடியேறு போலப் பிளிருகின்றன. பாலில்லாதவாய்க் குழந்தைகள் அழுகின்றன. மகளிர் பூவில்லாத வெறுந்தலையை முடிக்கின்றனர். நல்ல வீட்டிலும் குடிநீர் இன்றி வருந்தி மக்கள் கதறுகின்றனர். இவையெல்லாம் கேட்டும் நாணங்கொள்ளாது இங்கு இனிதாக நீ இருப்பது மிகவும் தவறானது ' எனக்கூறி, கோட்டையை முற்றுகையிட்ட நலங்கிள்ளியையும் சந்தித்து, நிலைமையை எடுத்துக் கூறிச் சந்து செய்து, போர் நிகழாவண்ணம் தடுத்து நிறுத்தினார். கோவூர் கிழார் இருவரையும் சந்து செய்ய அறத்தையே துணைக் கருவியாகக் கொண்டு முயன்று வெற்றி பெற்றார். இரு மன்னரும் மறமே பெரிதென விடாப்பிடியாக எதிரும் புதிருமாக இருந்து போரிட முயன்ற பொழுது, 'அறத்தான் வருவதே இன்பம் ' என உணர்த்தி, சந்து செய்து வெற்றி பெற்றார். கோவூர்கிழார்,

'அறவை யாயின் நினதெனத் திறத்தல் ;
மறவை யாயின் போரொடு திறத்தல் ;
அறவையும் மறவையும் அல்லை யாகத்
திறவாது அடைத்த திண்ணிலைக் கதவின்
நீள்மதில் ஒருசிறை ஒடுங்குதல்
நாணுத்தக வுடைத்திது காணுங் காலே '

- *(புறம் - 44)*

என்று பாடிய திறன் போற்றற்குரியது ; சிந்தித்து மகிழ்வதற்குரியது. அறத்திற்கு மாறானது மறம் என்பதையும், இவற்றிற்கு அடிப்படையாக அமைவது 'அன்பு'

என்பதையும், அது, நாட்டுப்பற்று இனப்பற்று முதலானவற்றிற்கு அடித்தளம் அமைத்து விடுவதென்பதையும் கண்டறிய முடிகிறது. இவை, திருக்குறளின் கருத்திற்கு வலிமையூட்டும் உண்மை நிகழ்ச்சிகளாகும்.

மதுரைக் கணக்காயனார் பாடிய அகநானூற்றுப் பாடலொன்றில் கூட இத்தொடர் இடம் பெற்றுச் சிறப்புச் செய்வதையும் காணலாம். புலவர், தலைவி கூற்றாகக் கூறும் பொழுது,

'. . . .    . . . .    . . . . வடவயின்
வேங்கடம் பயந்த வெண்கோட்டு யானை
<u>மறப்போர்ப்</u> <u>பாண்டியர்</u> <u>அறத்தின்</u> <u>காக்கும்</u>
கொற்கை அம்பெரும் துறைமுத்து . . .'

- *(அகம் : பா. எண்.- 27 : 6-9 )*

எனக் குறிப்பிடுவதைக் காணலாம். இத்தகு மறப்பண்புடையோர் தமிழகத்தில் பரவலாக இருந்துள்ளனர். அரசர் முதல் மிகச் சிறந்த சாதாரண வீரர் வரை அக்காலத்தில் 'மறவர்' என்றே பொதுப் பெயரால் அழைக்கப்பட்டு வருவதைச் சங்க இலக்கியங்களில் எல்லா இடங்களிலும் காணமுடிகிறது.

சங்க இலக்கியம் மிகச்சிறந்த வரலாற்று நூலாகும். அதில் தமிழ்ச் சமுதாயம் பற்றிய எல்லாச் செய்திகளும் இடம் பெற்றுள்ளன. மானிடவியல், சமூகவியல், அரசியல், பொருளியல், நிர்வாக இயல், இல்லறவியல் எனப்பல துறைகளின் தொடர்பான செய்திகள் மிக விரிவாகக் கூறப்பட்டுள்ளன. பழந்தமிழ்ச் சமுதாயத்தின் முழுமையான வரலாற்றைக் கண்டறிய நமக்குக் கிடைத்த வரலாற்றுக் களஞ்சியமாகத் திகழ்வது தான் சங்க இலக்கியங்கள். அதில் கூறப்படும் மறவர்கள் தொடர்பான கருத்துக்களை ஒன்று திரட்டி வெளிப்படுத்த சங்க இலக்கியங்கள் எடுத்துக் காட்டும் தமிழ்ச் சமுதாயம், அதன்

உள்கட்டமைப்பு மற்றும் வெளிக் கட்டமைப்பு பற்றி கருத்துக்களை ஒன்றாகத் திரட்டிக் கொள்வது இன்றியமையாப் பணியாகும். இவற்றின் துணையாகத்தான் பண்டைத்தமிழ் மறவர்களின் மாண்பை உள்ளங்கை நெல்லிக்கனியென யாவரும் அறியும் வண்ணம் வெளிப்படுத்த இயலும். 'தமிழரின் வாழ்வு, தமிழர் பேசிய மொழி, தமிழர் வாழ்ந்த நிலம் ஆகிய இம்மூன்றுக்கும் இயல்பான நெருங்கிய தொடர்பு உண்டு என்ற உண்மை தமிழரின் நாகரிகத்தின் அடிப்படைத் தத்துவமாக அமைந்துள்ளது. இத்தத்துவத்தை விளக்குவனவே சங்க இலக்கியங்கள்'[3] எனத் திறனாய்வாளர் கூறுவது இங்கு ஒப்பு நோக்கத்தக்கதொன்றாகும்.

## சங்க இலக்கியம்

கடைச் சங்க இலக்கியத்தைத் தான் இன்று சிறப்பித்துச் 'சங்க இலக்கியம்' எனப் பொதுப்படக் கூறும் மரபு உருவாகியுள்ளது. ஆய்வாளர்கள் கூறும் தலைச் சங்கம் மற்றும் இடைச்சங்கம் பற்றிய செய்திகள் மட்டுமே நூல்களில் காணப்படுகின்றன. இலக்கிய நூல்கள் மறைந்தொழிந்தன. ஒரு சில பெயரளவிற்குச் சுட்டிக் காட்டப்படினும் முழுமையாகக் கிடைக்கவில்லை. எனவே, தமிழர்தம் பழம்பெரும் சமூக வாழ்வியலைக் கண்டறிய உதவும் கடைச்சங்க நூல்களே 'சங்க இலக்கியம்' எனச் சுட்டப்படுகின்றன.

'பண்டைத் தமிழகத்தின் வரலாற்றை அறிவதற்குத் துணை புரியும் புறச்சான்றுகள் வெகுசிலவே. எனவே, அகச்சான்றுகளை நாடும் தேவை நேரிடுகின்றது. இவ்அகச் சான்றுகள் அத்தனையும் சங்க இலக்கியங்களுக்குள் கிடைக்கின்றன. எட்டுத் தொகை, பத்துப்பாட்டு என்னும் தொகைகளில் சேர்க்கப்பட்டுள்ள இலக்கியங்கள் சங்க இலக்கியங்கள் எனப் பெயர்

பெற்றுள்ளன. கடைச் சங்ககாலத்தில் எழுந்தவையே எட்டுத் தொகை, பத்துப்பாட்டு நூல்கள் எனக்கொள்வதும் தமிழகத்தில் வழக்கமாய் இருந்து வருகின்றது. பொதுவாகச் சங்கம் என்னும் சொல்லானது கடைச் சங்கத்தையே குறித்து நிற்கும்.' [4]

இதில் இடம் பெற்ற 18 நூல்களுள் தமிழச் சமுதாயம் பற்றிய எல்லாச் செய்திகளும் விரிவாகக் கூறப்படுகின்றன. இவற்றிற்கு முன்னதாக இயற்றப்பட்ட இலக்கண நூலாகத் தொல்காப்பியம் கருதப்படுகிறது. அறநூலாகத் திருக்குறள் கருதப்படுகிறது. இந்தப் பதினெட்டு நூல்களின் கருத்துக்களை நிலைநாட்டிச் சிறப்பிக்க இந்த இரண்டு நூல்களும் அடிப்படை நூல்களாக உள்ளன. பழந்தமிழ் மறவர்தம் வரலாற்றையும், வாழ்வாதாரங்களையும், சமூகத்தில் பெற்ற பங்கு பணிகளையும் கண்டறிய இவையே துணை நிற்கின்றன. இவற்றைக் கொண்டு அற்றைய சமூக அமைப்பைக் கண்டறிய முயலும் பொழுது, மறவர்தம் பங்கு பணிகளும், தனித்தன்மைகளும், சிறப்புகளும் வெள்ளிடை மலையென வெளிப்படுகின்றன.

## பண்டைத் தமிழர்தம் சமூகம்

'நீண்ட வரலாற்றுப் பின்புலங்கொண்ட ஒரு சமூகம் தோன்றிய காலம் முதல், பல்துறை சார்ந்த வாழ்வியல் கூறுகளில் குறை நிறைகளைச் செம்மைப் படுத்திக் கொண்டே வருவது இயல்பு. கால வளர்ச்சிக் கேற்பவும், சமூகத் தேவைக் கேற்பவும் கருத்துகள் புத்தாக்கம் பெறுவதும் புதுப்பொலிவு பெறுவதும் இயற்கை. இத்தகைய வளர்ச்சியைக் காலந்தோறும் பெற்று வந்தாலும் அடிப்படையான கருத்தாக்கங்களில் மாற்றம் பெற எந்தச் சமூகமும் விரும்புவதில்லை. காரணம் அவை ஒரு சமுதாயத்தின் உயிர்நாடியாகத் தனித்தன்மையாக நின்று நிலைத்துப் பயன் தருவதேயாம்'[5] என்ற

திறனாய்வாளர் கருத்தை மனதிற் கொண்டுதான் பண்டைத் தமிழர்தம் சமூகத்தைப் பற்றிச் சிந்திக்க வேண்டியிருக்கிறது. எல்லாவற்றிலும் தனித்தன்மை பெற்று விளங்கும் இச்சமூகம், ஒவ்வொரு துறையிலும், ஒவ்வொரு நிலையிலும் தத்தம் தனிமுத்திரையை நன்கு பதித்து வந்துள்ளதைத் தெளிவாகக் காணமுடிகிறது.

ஆதிமனிதர்கள் காடுமேடுகளில், தனியாக ஆதரவற்று விலங்குடன் தாமும் ஒரு விலங்காய் இருந்த நிலைமாறி, அவர்கள் கூட்டங் கூட்டமாய் ஒன்றி, ஓரிடத்தில் தங்கி வாழத் தலைப்பட்ட போதே சமூகம் உருவாயிற்று எனலாம்.

இதற்கு டார்வின் கூறும் விளக்கம் மிகச்சிறந்ததாகக் கருதப்பட்டது. அதுவே, பழந்தமிழ்ச் சமூகத்திற்கும் பொருத்தமாக உள்ளதென்பதைத் தெளிவாகக் கண்டறிய முடிகிறது. 'ஆதிகால மனிதர்கள் இயற்கையின் சீற்றத்திலிருந்தும், விலங்குகளினின்றும் தங்களைக் காத்துக் கொள்ள வேண்டியிருந்தது. தங்களின் உடைமைகளையும், செல்வங்களையும் பிற இனத்தவர்கள் வன்முறையில் கவர்ந்து செல்வதைத் தவிர்க்க அவர்களுக்குத் திறன் தேவைப்பட்டது. அதனால், அவர்கள் ஒன்றி ஒரு கூட்டமைப்பில் இணைந்து சமூகமாகச் செயற்படத் தொடங்கினர்'[6] என டார்வின் விளக்குகிறார்.

சங்க இலக்கியம் காட்டும் பழந்தமிழர் சமுதாயம் நன்கு வளர்ச்சியுற்று, முதிர்ச்சியடைந்த சிறந்த சமுதாயமாகும். பன்னெடுங்காலமாகப் பெற்ற அறிவு, அனுபவம் முதலியவற்றால் நன்கு பண்பட்ட சமூகமாக வாழ்ந்து வந்ததைத் தெளிவாகக் கண்டறிய முடிகிறது. நாகரிகத்திலும், பண்பாட்டிலும், பழக்க வழக்கத்திலும், மரபுகளைப் போற்றும் நெறிமுறைகளிலும் மிகச்சிறந்து விளங்கியதற்குச் சங்க இலக்கியங்களே பல சான்றுகளைப் பகருகின்றன.

'தமிழ்ச் சமுதாயம் மிகவும் பழமையான ஒன்றாகும். பண்டைய எகிப்து, பாபிலோனியா, கிரீசு, ரோம் ஆகிய நாடுகள் நாகரிகத்தில் மிகவும் சிறந்து விளங்கிய பண்டைக் காலத்திலேயே தமக்கென ஒரு நாகரிகத்தையும் சிறந்த பண்பாட்டையும் வளர்த்து வாழ்ந்து வந்தவர்கள் தமிழர்கள்'[7] என்பதற்கு ஏராளமான சான்றுகளைச் சங்க இலக்கியங்கள் பகருகின்றன.

இத்தகு தனித்தன்மை வாய்ந்த சமூகத்தில் தம் சிறந்த காப்புப் பணிகள் காரணமாகப் பெருமை பெற்று வாழ்ந்து வந்தவர்கள் தான் மறவர்கள். இவர்கள் பழந்தமிழ்ச் சமூகத்தின் இன்றியமையா ஒரு தனிக்குழுவாகவே கருதப்பட்டு பாராட்டப் பட்டு வந்ததைப் பரவலாகக் காணமுடிகிறது. சமூக வளர்ச்சிக்கும் தேவைக்கும் ஏற்ப மறவர்கள் சாதாரண ஊர்க்காவலர் முதலாக மாமன்னர் ஈறாக உள்ள எல்லாப் பொறுப்புக்களிலும் இருந்து தத்தம் காவற் சிறப்புகளாலும், பிற பணிகளாலும், நாடு நலம்பெறத் தத்தமக்குரிய பங்களிப்பைக் குறையின்றி செய்து வந்துள்ளதைக் காணமுடிகிறது.

ஒரு தோழி, செவிலித்தாய்க்குத் தலைவியின் தூய காதல் வாழ்வை எடுத்தியம்ப முற்படுகிறாள். தமிழர் போற்றிய சமூக நெறிக்கேற்ப 'அறத்தொடு நிற்றல்' என்னும் நன்னெறியை மேற்கொண்டு எடுத்துக் கூற முற்படுகிறாள். 'தலைவி விரும்பிக் காதலித்தவன் ஒரு சாதாரண மனிதன் தான் ; ஆனால், சிறந்தமறவன்; தலைவியைப் போற்றிப்புரந்து இல்லறம் நடத்தி வரத்தேவையான எல்லாப் பண்புகளையும் பெற்றவன் ; அவனைப் பற்றி முதலில் அறிந்து கொள்!' எனக் கூறி அவனைத் தம் இனிய மொழிகளால் சுவைபட அறிமுகப்படுத்துகிறாள்.

'மறவர் குலத்து இளஞ்செம்மல்; கண்டார் விரும்பிப் போற்றும் இளமையழகு ; குலத்திற்கேற்ற தோற்றப் பொலிவு ; வயதிற்கேற்ற மறப்பண்பு ;

பயிற்சிக்கேற்ற வீரச் செயல் ; வேட்டையாடிப் பொழுதைப் போக்கும் கவலையற்ற வாழ்க்கைச் சூழல் ; வீர மரபிற்கேற்ற அடையாளச் சின்னங்கள்' எனத் தோழி தமக்கேயுரித்தான பெண்ணியல்பிற்கேற்ப தலை முதல் கால் வரை இடம் பெற்ற அத்தனையையும் நயம் படக்கூறித் தலைவி விரும்பிக் காதலித்தற்கு இவையே காரணம் என்பதைத் தக்க உத்தியோடு கூறி முடிக்கிறாள்.

சமூகக் கண்ணோட்டத்தில் இளமை நிறைந்த பெண் மகள் ஓர் ஆடவனை எப்படி நோக்குவாள் ; எதனை விரும்பிப் பார்ப்பாள் என்பதை யாவரும் அறிவர். இளமைக்கு அழகும் இனிமையும் பயக்கும் தோற்றப் பொலிவை விரிவாகக் கூறித் தாயும் பாராட்டும் விதமாகக் கூறி முடிக்கிறாள்.

'கருமம் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு
உரிமை உடைத்துஇவ் வுலகு'.

- (குறள் - 578)

என்ற குறளுக்குத் தோழி நல்ல சான்றாகத் திகழ்கிறாள். அதன்காரணமாகவே, செவிலித் தாய் பொறுமையாக இருந்து தோழி கூறுவதைக் கேட்டுச் சிந்திக்கத் தொடங்குகிறாள் எனலாம்.

'தாயே ! நாங்கள் அசோக மரத்து நிழலில் இருந்தோம். அப்போது ஒருவன் வந்தான். அவன் குடுமியில் எண்ணெய் தடவப்பட்டிருந்தது. சுருட்டை முடி. குளிர்ந்த நறுமணம் பொருந்திய திண்ணிய பொருள்களால் செய்த மணம் மிக்க மயிர்ச் சாந்து தடவியிருந்தான். முடியின் ஈரம் புலரும் படி விரலை அலைப்பதால் முடிக்கப்பட்டு, அவிழ்ந்திருந்தது. அழகான வரிகள் கொண்ட வண்டுகள் அவன் மடியைச் சார்ந்து யாழின் இசை போல முரன்று கொண்டிருந்தன. பல வண்ண மலர்களை முடியிலும், மார்பிலும், இடையிலும்

கண்ணிகளாக்கி அணிந்திருந்தான். முருகனோ என்று கண்டோர் அஞ்சும்படி பெரிய மலர்மாலையைக் கழுத்தில் அணிந்திருந்தான். அசோகின் தளிர்களைக் காதில் செருகியிருந்தான். மார்பிலே சந்தனம் ; வலிமை நிலை கொண்ட மார்பு; எப்போதுமே நறுமண மாலை அணிபவன் எனத் தெளிவாகத் தெரியவந்தது, மூன்று வரிகள் பதிந்த உத்தம இலக்கணத்துக்குப் பொருத்தமான மார்பு அது. இறுகி விரைப்பாய் உள்ள முன்கை கொண்ட பெரிய கையிலே, அழகியதாய்க் கட்டப்பட்ட வில் ; தேர்ந்தெடுத்த அம்பு ; நுண்ணிய வேலைப்பாடு அமைந்த கச்சு நெகிழாவண்ணம் கட்டப்பட்ட இடுப்பு. ஒரு வீறு கொண்ட தோற்றம் பெற்றவன். அங்க இலக்கணப்படி அழகினால் பொலிந்ததும், பொன்னால் செய்யயப்பட்டதுமான வீரக்கழல் அவன் பெயரும் போதெல்லாம் திருத்தமான காலிலே ஏறி இறங்கிப் பொலிவோடு விளங்கியது' என்று கூறினாள்.

சமூகத்தில் வாழ்ந்து வரும் இளம் மறவனின் தோற்றம் கபிலரால் இயற்றப்பட்ட குறிஞ்சிப் பாட்டில் இடம்பெற்றதை மேலே தோழியின் கூற்றில் காணலாம். குறிஞ்சி நிலத்தின் சுற்றுச் சூழலும், இயற்கைச் செழிப்பும், மக்களின் வாழ்வியல் ஆதாரங்களும், அன்றாடப் பணிகளும், இந்நிலம் தொடர்பான பல பயனுள்ள செய்திகளும் விரிவாக விளக்கம் பெற்றிருப்பதைக் காணமுடிகிறது.

'இலக்கியத்திற்கு வேறு எத்தன்மை இருப்பினும் போதாது. உணர்த்தும் ஆற்றல் இருத்தல் இன்றியமையாதது ; உணர்த்துதல் இல்லையேல் அது இலக்கியம் ஆகாது. எதை உணர்த்தல் வேண்டும் ? புலவரின் மனத்தில் விளங்கிய அனுபவமே, படிப்பவரின் மனத்திலும் விளங்குமாறு செய்தல் வேண்டும். அனுபவித்தது என்ன என்று விளக்குதல் போதாது ; அனுபவம் எப்படி ஏற்பட்டது என்று சொல்லுதலும் போதாது ; வந்த அனுபவத்தையே

தருதல் வேண்டும். ஒரு மனத்திலிருந்து மற்றொரு மனத்திற்கு அந்த அனுபவம் மாறி அமைய வேண்டும் என்கிற அறிஞர் ஆபர் கிராம்பி'[8] என்ற திறனாய்வாளிரின் கருத்திற்கு இந்தக் குறிஞ்சிப் பாட்டின் காட்சிகள் நல்ல சான்றாகத் திகழ்வதைக் காணலாம். தோழி ஒருவள் பெற்ற உண்மையான அனுபவத்தைச் செவிலித்தாய்க்கு எடுத்தியம்பும் கருத்தைக் கபிலர் பாடலாக வடிவங் கொடுத்த பொழுது அப்படியே அந்த அனுபவம் படிப்பவர்கட்கும் சென்று சேருமாறு சுவைபட அமைத்திருப்பதைக் காணமுடிகிறது. இதன் வாயிலாக அற்றையச் சமூகத்தின் ஒரு பிரிவினரின் வாழ்வியலை உள்ளவாறு நாம் கண்டறிந்து அற்றைச் சமூகக் கட்டமைப்பின் ஒரு பகுதியைக் கண்டறியப் பயன்படுத்திக் கொள்ளலாம். இவ்வாறு, சங்க இலக்கியங்களின் துணைக் கொண்டு அற்றைய சமூகக் கட்டமைப்பை முதலில் கண்டறிந்தால்தான், அதில் மறவர்கள் இடம் பெற்றுச் சிறப்படைய வேண்டிய பங்குப் பணிகளை எவ்வாறு அமைத்துக் கொண்டனர் என்பதைத் தெளிவாகக் கண்டறிய முடியும். நமக்குத் தேவையான எல்லாச் சமூகக் கருத்துக்களையும் சங்க இலக்கியங்கள் பல கோணங்களில் எடுத்தியம்புகின்றன. திறனாய்வாளர் பலரும் இதனை உறுதி செய்துள்ளனர்.

'பண்டைத் தமிழ் இலக்கியங்கள் இவ்வகையில் நமக்குப் பெரிதும் உதவுகின்றன. சங்க இலக்கியத்தில் உயர்வு நவிற்சி மிக அரிதாகவே காணப்படுகின்றன. இயல்பு நவிற்சியே பெரிதும் கையாளப் பட்டுள்ளன. சங்க இலக்கியம் பழந்தமிழ்ச் சமுதாய வரலாற்றை உருவாக்கிட மிகமிகக் கைக் கொடுக்கின்றன. சங்க இலக்கியமாகிய பத்துப்பாட்டு, எட்டுத் தொகை ஆகியவற்றுள் இந்த வகையில் புறநானூறு மிகமிக நம்பத் தகுந்த வரலாற்றுச் செய்திகளைத் தருகிறது'[9] எனக்கூறும் பேராசிரியர். ம.ரா.போ. குருசாமி அவர்களின் கருத்து இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

இவர் கருத்தை வழி மொழிவது போலவே வே.தி. செல்வம் கூறும் கருத்துக்கள் 'தமிழக வரலாறும் பண்பாடும்' என்று நூலில் நன்கு பதிவு செய்யப்பட்டுள்ளன. அவர் முதலில், 'இலக்கியம் காலத்தின் எதிரே சமூக வாழ்வின் எல்லாப் பகுதிகளையும் முழுமையாகப் படம் பிடித்துக் காட்டுவதால் பழமையின் ஒப்பற்ற கொடையாகவும், வரலாற்றின் முக்கியச் சான்றாகவும் அமைகின்றது'[10] என்று பொதுவாகக் கூறிவிட்டு, அதன்பிறகு சங்க இலக்கியங்கள் இதற்கு எவ்வாறு உதவி வருகின்றன என்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறார்.

'தமிழ் இலக்கியத்தில் சங்க இலக்கியம் பண்டைக் காலத் தமிழர்களின் வாழ்வின் முழு உருவப்படத்தைக் காட்டுகின்றது. அவர்களுடைய வாழ்வை எல்லாக் கோணங்களிலிருந்தும் கண்டறியும் அரிய வாய்ப்பை அளிக்கின்றது. புறநானூறு, நற்றிணை, பதிற்றுப்பத்து, மதுரைக்காஞ்சி, பட்டினப்பாலை, ஆற்றுப்படைகள் முதலியவை குறிப்பிடத் தக்கவை'[11] எனக் கூறுகிறார்.

புகழ் பெற்ற பல திறனாய்வாளர்களும் இக்கருத்தைத் தத்தம் ஆய்வின் முடிவிற்கேற்ப வெவ்வேறு வகையில் வெளிப்படுத்தியிருப்பதைக் காணலாம். விரிவஞ்சி அவை விடப்பட்டன. வெவ்வேறு சந்தர்ப்பங்களில் ஆய்வின் முடிவிற்குத் துணை செய்யும் கருத்துக்களை ஆய்வாளர் அடுத்து வரும் எல்லா இயல்களிலும் பயன்படுத்தியுள்ளார். எனவே, சங்க இலக்கியங்களின் துணைக்கொண்டு பண்டைய தமிழ்ச் சமூகத்தின் கட்டமைப்பை உள்கட்டமைப்பென்றும், வெளிக்கட்டமைப்பென்றும் தனித்தனியே ஆய்ந்து கண்டறிந்த பிறகே மறவர் தொடர்பானவற்றை ஆய்வது தான் நல்லது.

## சமூகத்தின் உள் கட்டமைப்பு

'உயிரியின் வாழ்க்கையைப் போன்றே சமுதாய வாழ்க்கையைக் காணும் போது அதனுள் பல்வேறு அலகுகள் இணைந்திருக்கும் படியான அமைப்பு உள்ளதைக் காணமுடியும். சமுதாய அமைப்பிற்குள் தனிமனிதர்கள் முதன்மையான அலகுகளாக உள்ளனர். இவர்கள் நிலையான சமுதாய உறவுகள், நெறிமுறைகள், விழுமியங்கள், செயற்பங்குகள் முதலானவை மூலம் சமுதாயம் என்னும் முழுமைக்குள் ஒரு முறைப்படுத்தப்பட்ட நிலையில் பிணைக்கப்பட்டுள்ளனர்.'[12] என்ற பண்பாட்டு மானிடவியலார் கூற்றினைப் புரிந்து கொண்டு பண்டைய தமிழ்ச் சமூகத்தின் உள் கட்டமைப்பினைக் கண்டறிய முயல வேண்டியிருக்கிறது.

சமூகம் அமைய இடங்கொடுப்பது உலகம். அந்த உலகம் பஞ்சபூதங்களால் ஆனது. அதில் எண்ணிறந்த உயிரினங்கள் உருவாகின்றன. அவற்றுள் உயர்வாகவும், சிறப்புத்தன்மை கொண்டதாகவும் கருதப்படுவதுதான் மானுட இனம். பஞ்சபூதங்களும், பிற உயிரினங்களும் இல்லாமல் மானுட வாழ்வு இல்லை. எனவே, இவற்றை அடிப்படையாகக் கொண்டுதான் எல்லாம் இயங்குகின்றன. இதனை உணர்த்தவே,

'நிலம்தீ நீர்வளி விசும்போடு ஐந்தும்
கலந்த மயக்கம் உலகம் ஆகலின்
இருதிணை ஐம்பால் இயல்நெறி வழாஅமைத்
திரிவுஇல் சொல்லொடு தழாஅல் வேண்டும்'

- (தொல்; பொ;மர; நூற்பா - 90)

என்று தொல்காப்பியர் கூறுவர். இவ்வுலகம், 'நிலம், தீ, நீர், காற்று, வான் என்ற ஐம்பூதங்களின் கலவைதான். அதனால், உயர்திணை, அஃறிணை, ஆண், பெண், பலர், ஒன்று, பல என்ற இருதிணை, ஐந்து பால்களின் இயல்பினின்றும் வழுவாது, திரிபு இல்லாத சொற்களால் கூறித் தழுவிக் கொள்ளல் வேண்டும்' எனக்கூறுவர். தமிழ்ச்

சமூகத்தின் கட்டமைப்பிற்கு இவையெல்லாம் துணை புரியக் கூடியவை என்பதை இன்றும் உள்ளங்கை நெல்லிக் கனியென கண்டறிய முடிகிறது.

உயர்திணையாகக் கருதப்படும் மானுடம் குழந்தையாகப் பிறப்பெடுத்து, பிறகு ஆண் எனவும், பெண் எனவும் பாலின் அடிப்படையில் இரு பிரிவாக வளர்ந்து ஒன்றை ஒன்று சார்ந்து நின்று, பிற உயிரினங்களோடு உறவு கொண்டு வாழ்ந்து வருவதை யாவரும் அறிவர். இந்தச் சார்பும், உறவும் தான் வாழையடி வாழையாக மானுட இனம் தோன்றி வளர்ந்துகொண்டே வருவதற்குத் துணை புரிகின்றன. இதனால்தான் சமூகத்தின் உள் கட்டமைப்பு நன்கு செம்மையுற அமைந்து வெளிக் கட்டமைப்புச் சிறக்க வழி வகுத்துக் கொண்டிருக்கிறது. ஆண், பெண் என்ற இந்த மானுட இனமே உள் கட்டமைப்பிற்கு அடிக்கோடிட்டுத் தொடக்கமாக அமைகின்றது.

'இரண்டு அல்லது மேற்பட்ட மனிதர் ஒருவர் இருப்பதை மற்றவர் உணர்ந்து தங்களுக்கு இடையே பொதுவான ஏதோ ஒன்று இருப்பதையும் அறிந்து பரிமாறிக் கொள்ளும் தொடர்பே சமூகத் தொடர்பு ஆகும். இந்த மனிதத் தொடர்பே ஆண்-பெண் தொடர்பாகவும், குடும்பமாகவும், குடும்பங்களாகவும், சொந்தமாகவும் பரிணமிக்கிறது. தெரு, ஊர், வட்டம், மாவட்டம், நாடு, உலகம் என்று விரிவடைகிறது.'[13] என்பர்.

இந்த விரிவாக்கமே முதலில் சமூகத்தின் உள் கட்டமைப்பை செம்மை செய்து நல்ல வடிவு பெற வழி வகுக்கிறது. இதனால், உருவாகும் உறவுகளும், வளர்ச்சிகளும், தேவைகளும் சமூக வெளிக்கட்டமைப்பை உருவாக்கிச் செம்மைப்படுத்த வழிவகுக்கிறது எனலாம்.

சமூகத்தின் உள் கட்டமைப்பு ஒரு சுற்று வட்டம் போல அமைந்து, ஆண்-பெண்-குழந்தை என்பதன் அடிப்படையில் தாய், தந்தை, மக்கள், உறவினர் என வளர்ச்சியுற்று, அதன் தேவைக்கேற்ப குடும்பம் என்ற ஒரு நிறுவனம் இயல்பாகவே உருவாகிப் பிற குடும்பங்களோடு இணைந்து தத்தம் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள முயலும்

பொழுது சமூகத்தின் உள் கட்டமைப்பு நன்கு உறுதிப்பட அமைந்து மானுடம் சிறக்க வழி வகுக்கிறது.

'மானுட வாழ்க்கை இருவகை அமைப்புகளைக் கொண்ட ஒரு முழுப் பொருண்மை ; புறத்தே தோன்றும் ஒவ்வொரு வகையான வாழ்க்கை நிலைக்கும் அடிப்படையான அக அமைப்பு ஒன்று உண்டு. புற அமைப்பின் செயற்பாடு, அக அமைப்பின் வெளிப்பாடு தானே தவிர, தன்னிச்சையாக இயங்க வல்லதன்று; இப்புற வெளிப்பாடும் அவ்வப்போது மாறி இயங்கும் கால, தேச, நடை முறைகளுக்கு ஏற்ப அக அமைப்பின் கூறுகளை மாற்றி அமைக்கும் இயல்பினது. இவ்வாறு அக அமைப்புக்கும் புற வெளிப்பாட்டிற்கும் இடையில் தோன்றும் வேறுபாட்டிற்கும் இடையில் தோன்றும் வேறுபாடுகளின் தொடர்ச்சியே வரலாறாகப் பரிணமிக்கிறது' [14] என்ற திறனாய்வாளரின் கருத்தை மனதிற்கொண்டு சங்க இலக்கியம் காட்டும் சங்க காலத் தமிழர் சமூகத்தின் உள் கட்டமைப்பை ஆராய வேண்டும். அங்கு வளர்ச்சி மட்டுமன்று; புரட்சி; மறுமலர்ச்சி; பழையன கழிதல்; புதியன புகுதல் எனப் பலதிறப்பட்ட பரிணாம வளர்ச்சியைக் காணமுடிகிறது. இவையெல்லாம் இடம் பெற்றதால் உள் கட்டமைப்பு நன்கு வலு பெற்று ஒரு தனிப்பட்ட தமிழர் நாகரிகமாக அடையாளங் காட்டிப் புகழ்ந்து போற்றும் உயர்நிலைக்கு இட்டுச் சென்றது. இவற்றிற்கெல்லாம் தேவைப்படும் சான்றுகள் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, ஐங்குறுநூறு, கலித்தொகை முதலான சங்க இலக்கியங்களில் மிகுதியாகக் கிடைப்பதைக் காணலாம்.

சங்க இலக்கியத்தில் இடம் பெற்ற அகப்பொருள் இலக்கியங்கள் பண்டைய தமிழ்ச் சமூகத்தின் உள் கட்டமைப்புகளைத் தெளிவாகக் கண்டறிய பேருதவி புரிகின்றன. அவை அனைத்தும் கருத்துக் கருவூல பதிவேடுகளாகத் திகழ்கின்றன எனலாம். 'கூடி வாழும் விலங்கான மனிதன் பிறரோடு பழகுகின்ற பொழுது அவர்கள் எப்படிச் சிந்திக்கிறார்கள்? எப்படி வாழ்கிறார்கள் ? எப்படி உணருகிறார்கள்? எப்படிச் செயல்படுகிறார்கள்? என்பன

போன்றவற்றை அறிய வேண்டும் எனும் ஆர்வமேலீட்டால் பிறருடைய சிந்தனை, செயல்முறை, உறவுமுறை முதலியன எவ்வாறு அமைகின்றன என்பதை அறியத் துடிக்கிறான். இந்த ஆர்வத்தின் விளைவாகக் கருத்துப் பரிமாற்றமும், கலந்துரையாடலும், பிணக்கும், பூசலும் தோன்றுகின்றன. இவையெல்லாம் தெரிவித்தல் என்னும் உந்துதல் சக்தியால் இயக்கப்படும் பொழுது இலக்கியம் பிறக்கிறது' என்று கூறும் பேராசிரியர். அ.ச.ஞானசம்பந்தன் சுட்டிக் காட்டும் பேருண்மையின் பல வடிவங்களைச் சங்க இலக்கியத்தின் அகப்பொருள் இலக்கியங்களில் வெளிப்படையாகவே காணலாம்.

## உள் கட்டமைப்பில் பழக்கம்-வழக்கம்-மரபுகள்

இயற்கையிலேயே மனிதன் சமுதாய இயல்புடையவனாக உள்ளான் என முதன்முதலில் வாதிட்டவர் அரிஸ்டாட்டில் என்றும், பிறக்கும் போதே மனிதனின் இயல்புகள் சமுதாயத்தோடு ஒன்றுபடும் தன்மைகளைப் பெற்றுள்ளன என்றும், இத்தன்மைகள் மொழி, பழக்கங்கள், வழக்கங்கள் அறிவார்ந்த முறையில் சிந்தித்தல் போன்றவற்றில் புதைந்து கிடக்கின்றன என்றும் அரிஸ்டாட்டில் கூறுவதாகத் தம் 'பண்பாட்டு மானிடவியல்' என்ற நூலில் பக்தவத்சல பாரதி கூறுவர். [15]

க. காந்தி தாமியற்றிய, ' தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும்' என்ற நூலில், 'ஒரு சமுதாயத்தின் உண்மை நிலையை நாம் அறிய வேண்டுமென்றால் அச்சமுதாயத்தின் நம்பிக்கை, பழக்கவழக்கங்களை நாம் ஆய்வு செய்ய வேண்டும். அச்சமுதாயத்தின் கால ஓட்டத்தில் உருவாக்கப்படுகின்ற இலக்கியங்களில் அச்சமுதாயத்தின் வெளிப்பாடாக இத்தகு பழக்கவழக்கங்கள் பரவலாகப் பதியப்படுகின்றன' [16] எனக் கூறுவர்.

இத்தகு பதிவினை அதிகமாகவே சங்க இலக்கியத்தின் அகப்பொருள் இலக்கியங்கள் பெற்றிருக்கின்றன.

பழக்கம் என்பது ஒரு கற்கும் செயலாகும். இது தனி மனிதனிடம் இயல்பாக வந்தமைந்த நடத்தையைக் குறிப்பதாகும். இது வளர்ச்சிக்கு இன்றியமையாத கூறாகக் கருதப்படுகிறது. நனவுடன் தொடங்கிய செயல் நாளடைவில் நனவின்றியே நிகழக் கூடியதாக ஆகிவிடும் செயலையே பழக்கம் எனக் கலைக்களஞ்சியம் கூறுகிறது.

- (கலைக்களஞ்சியம் ; தொ - 07; பக் 29-30)

பழக்கத்தின் தொடர்ந்த நிலையே வழக்கமாகும். வழக்கம் சமூகம் சார்ந்த ஒன்றாகும். ஒரு இனத்தின் ஒரு சிறு பகுதியைச் சார்ந்தோரோ சிற்சில நாட்டினரிடையே அல்லது அவருள்ளும் இடம் பெற்ற ஒரு சிறு வகுப்பினரோ ஒழுங்காகச் செய்து வருவதையே வழக்கம் என்று கூறுவர். இஃது ஒழுக்கத்தாலும் செயல்களாலும் உருவாவது. இயற்கையும் செயற்கையும் இணையும் கூட்டுறவால் நிலைபெறுவது.

ஒரு இனக் குழுவிலுள்ள பலருடைய மனவெழுச்சி, உணர்ச்சி, விருப்பு, வெறுப்பு ஆகியவற்றுடன் இணைந்து நிற்பது வழக்கம் எனக் கருதப்படுகிறது. ஒரு வழக்கம் செல்லக் கூடியதாக இருக்க வேண்டுமாயின் அது பண்டைக் காலம் முதல் இடையீடின்றித் தொடர்ந்து வழக்கில் வந்ததாக இருப்பதுடன் அறிவுக்கு ஒத்ததாயும் தென்பட வேண்டும்.

மரபு என்பது எழுதப்படாத சட்டம். இதனைச் சமூகம், உள ஒருமைப்பட்டால் உருவாக்குகின்றது. இம்மரபுகள் சமுதாய நலன் கருதி ஏற்பட்டவை. மரபு என்பது வழக்கமாகத் தலைமுறை தலைமுறையாகப் பின்பற்றப்படுவது. பழக்கம் என்பது தனிமனிதனைச் சார்ந்ததென்றும், வழக்கம் சமுதாயத்தைச் சார்ந்ததென்றும், மரபு சமுதாயம் விதிக்கும் கட்டுப்பாடு என்றும் கூறுவர்.[17]

சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகளை அமைத்தவர்களுள் பேக்ஹாட் என்பவரும் ஒருவராவர். அவர் வழக்கம் தான் மனித சமூக வாழ்க்கையின் முதற்கட்டுப் பாடாக அமைவது என்பர். மக்கள் எல்லோரும் ஒன்றுபடவும், அவர்களுடைய நடவடிக்கைகளை ஒத்த தன்மையுடையதாக அமைக்கவும் இது உதவும். சுய நல

எண்ணங்களைக் கட்டுப்படுத்தவும் அத்தகைய கட்டுப்பாட்டிற்கு ஆட்படாத வேர்களை ஒதுக்கித் தள்ளவும் இது உதவும். தேவையான திறமையும் உறுதியும் வாய்ந்த வழக்கங்களை உருவாக்கிக் கொண்ட சமூகங்கள், தாம் நிலைத்து நிற்கும் போட்டியில் வெற்றி பெற்றுப் பிழைத்து நிற்கின்றன என்று கூறுவர்.[18]

'வழக்கம் என்பது சமுதாயத்தில் கட்டுக்கோப்பிற்குட்பட்டு வாழ்க்கையில் மனநிறைவைப் பெற மக்கள் கடைபிடித்து ஒழுகும் ஒழுக்கத்தால் அமைவது. பன்னெடுங் காலமாகப் பழக்கத்தில் இருந்து வரும் சிறந்த நெறியே, வழக்கம் எனப்படுவதாகும். வழக்கு என்பதே வழக்கம் எனப் புத்துரு பெற்றது. உயர்ந்தோர்களாகிய சான்றோர்கள் இடத்துத் தோன்றி நிகழ்வனவே வழக்கு எனப்படும்.'[19]

> 'வழக்கு எனப்படுவது உயர்ந்தோர் மேற்றே
> நிகழ்ச்சி அவர்கட் டாகலான'
>
> - (தொல் ; பொ; மரபு - 63)

'தமிழ் இலக்கிய கோட்பாட்டில் இதன் அடிப்படையில் மூவகை வழக்குப் போற்றப்பட்டு வந்துள்ளன. அவை: நாடக வழக்கு ; உலக வழக்கு ; பாடல் சான்ற புலனெறி வழக்கு எனப்படும். 'சங்க இலக்கியத்தில் இடம் பெற்ற வழக்கே,' புலனெறி வழக்கு' என்பதைத் தொல்காப்பிய உரையாசிரியர்கள் வாயிலாக அறிந்து கொள்ள முடிகிறது. 'புலம்' எனும் சொல்லிற்கு 'அறிவு ' என்பது பொருள். இதனை வேர்ச் சொல்லாகக் கொண்டே புலமை, புலவர் எனும் சொற்கள் படைக்கப்பட்டன. புலமை என்னும் சொல் அறிவையும், புலவர் எனும் சொல் அறிவுடையவர் எனும் பொருளையும் தருவனவாகவே தமிழருடைய சிந்தனை வளர்ச்சியில் தொடக்க காலத்தில் கருதப்பட்டன'[20] எனக் கூறும் திறனாய்வாளரின் கருத்தை முன் வைத்துச் சங்க இலக்கியத்தின் அகப்பொருள் இலக்கியங்களை ஆராயும் பொழுது தமிழ்ச் சமூகத்தின் உள் கட்டமைப்பு நன்கு புலப்படுகிறது.

## உள்கட்டமைப்பிற்கு உதவும் தொல்காப்பியர்

'ஒல்காப் புகழ் தொல்காப்பியன்' என்றும், 'மல்குநீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன் எனத் தன் பெயர் தோற்றிப் பல் புகழ் நிறுத்துப் படிமையோன்' என்றும் புகழப்படும் நல்லாசிரியர், தாமியற்றிய தொல்காப்பியம் என்னும் இலக்கண நூலில் பொருளதிகாரம் எனத் தனித்தமைத்து, தமிழ்ச் சமூகத்தின் கட்டமைப்பினைத் தனியாக அகம் என்றும், புறம் என்றும் அமைத்துக் காட்டி எல்லாச் செய்திகளையும் விரிவாக விளக்குவர்.

'தொல்காப்பியர் வகுத்துள்ள பொருளதிகாரத்துக்கு ஒப்பான இலக்கணம் எங்கும் இல்லை. இப்பொருளதிகாரம் வெறும் மொழிக்கும், மொழியாலாகிய இலக்கியத்திற்கும் மட்டும் இலக்கணம் வகுக்கவில்லை. அம்மொழியைப் பேசும் மக்களுக்கும், அவர்கள் வாழ்க்கை முறைக்கும் கூட இலக்கணம் வகுத்தது. இதனால், தொல்காப்பியப் பொருளதிகாரத்தை ஒரு 'சமுதாய நூல்' என்று கூடக் கூறலாம்'[21] எனத் திறனாய்வாளர் கூறுவர்.

தொல்காப்பியர், அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல் எனத் தனித்தனியாக அமைத்துக் கொண்டு, சமூக உள்கட்டமைப்பை விரிவாக எடுத்துக் கூறுவர். இத்தகு சமூக உள்கட்டமைப்பிற்கு உரிய அடிப்படைக் காரணமான ஒன்றை முன் வைத்து விளக்கிய பிறகு, அதன் தொடர்பான அனைத்தையும் மிக விரிவாகத் தனித்தனியாக விளக்கிச் செல்வர்.

'எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
தானமர்ந்து வரூஉம் மேவற் றாகும்'

- (தொல் ; பொ ; பொருளியல் - 27)

என்னும் தொல்காப்பியரின் கருத்து உயிர்கட்கு இன்பம் தோன்றுவதற்கான அடிப்படைக் காரணத்தை விளக்கும் பிராய்டின் கருத்தோடு ஒன்றி நிற்கக் காண்கிறோம். இருவரும்

வெவ்வேறு சூழ்நிலைகளில் இக்கருத்தை வெளிப்படுத்தியிருப்பினும், உயிர்களின் அடிப்படை இயற்கையை இருவரும் ஒரே தன்மையில் விளக்கியிருப்பது சிந்திக்கத் தக்கது. இயல்பூக்க நெறியில் ஒழுகும் குழந்தைக்கு இன்பம் எவ்வாறு தோன்றுகிறது என்று பிராய்டு விளக்குகிறார். இயல் பூக்க நெறியிலிருந்து மாறிச் சமுதாயம் ஏற்றுக் கொள்ளும் வாழ்க்கை நெறிக்கு உட்பட்டு வளர்ந்து நிற்கும் தலைவனுக்கு இன்பம் எவ்வாறு நிறைவடைகிறது என்று தொல்காப்பியர் கூறுகிறார்.

'தன் விருப்பத்தோடு இயைந்து வரும் வினை நிகழ்ச்சியே இன்பம் தருவது ; இவ்வியற்கை எல்லா உயிர்க்கும் பொது' என்பதே மேலே காட்டிய தொல்காப்பிய நூற்பா நுவலும் கருத்து. 'தலைவன் விழைவிற்கிணங்க செயற்படும் பரத்தையிடத்தும் அவனுக்கு இன்பம் தோன்றும் ; தன் விழைவிற்கிணங்கச் செயற்படாத விடத்து மனைவியின் பாலாயினும் அவனுக்கு இன்பம் தோன்றாது என்னும் இளம்பூரணரின் விளக்கம், இன்பம் தோன்றுவதற்குக் காரணம் இன்பத்திற்கு உரிய பொருளன்று ; தான் விரும்பியவாறு தன் விழைவு நிறைவேறலே என்னும் கருத்தை உட்கொண்டது. தம் பண்பாட்டு மரபிற்கேற்பத் தலைவன் மேற்சார்த்தி உரைகாரர் விளக்கம் கூறினாராயினும், தலைவன், தலைவி என்னும் இருபாலாருக்கும் இது பொருந்தும். உலகக் கட்டுப்பாடுகளைக் கடக்கும் அல்லது புறக்கணிக்கும் விழைவு நிறைவேற்றமே இங்குக் கருதப்படும் உளவியற் கோட்பாடு என்பது தான் இங்கு அறியத் தக்கது.'[22]

தொல்காப்பியர் 'களவியல்' என்ற அதிகாரத்தில் கூறும் செய்திகள் அனைத்தும் தலைவனும் தலைவியும் உலகக் கட்டுப்பாடுகளைக் கடக்கும் விழைவு நிறைவேற்றத்திற்கான செய்திகளேயாகும். இதனைக் 'களவு' எனப் பெயரிட்டு விளக்கம் தருவர்.

'வேட்கை யொருதலை உள்ளுதல் மெலிதல்
ஆக்கஞ் செப்பல் நாணுவரை இறத்தல்

நோக்குவ எல்லாம் அவையே போறல்

மறத்தல் மயக்கஞ் சாக்காடு என்ற

சிறப்புடை மரபினவை களவென மொழிப்'

- (தொல், பொருள், களவியல் ; நூற்பா - 09)

என்ற நூற்பாவின் வாயிலாக விளக்கம் செய்வர். நச்சினார்க்கினியர், 'புணராத முன்னும் புணர்ந்த பின்னும் இருவர்க்கும் இடைவிட்டு நிகழாது ஒரு தன்மைத்தாகி நிலைபெறும் வேட்கை ; இடைவிடாது ஒருவர் ஒருவரைச் சிந்தியா நிற்றல் ; அங்ஙனம் உள்ளுதல் காரணத்தான் உடம்பு வாடுதல் ; யாதானும் ஓர் இடையூறு கேட்டவழி அதனை ஆக்கமாக நெஞ்சிற்குக் கூறிக் கோடல் ; ஆற்றுந் துணையும் நாணி, அல்லாத வழி அதன் வரையிறத்தல் ; பிறர் தம்மை நோக்கிய நோக்கெல்லாந் தம் மனத்துக்கரந்து ஒழுகுகின்றவற்றை அறிந்து நோக்குகின்றாரெனத் திரியக்கோடல் ; விளையாட்டு முதலியவற்றை மறத்தல் ; செய்திறன் அறியாது கையற்றுப் புள்ளும் மாவும் முதலியவற்றோடு கூறல் ; மடலேறுதலும், வரைபாய்தலும் போல்வன கூறல் ; என்று சொல்லப்பட்ட அந்தச் சிறப்புடைத்தான முறைமையினையுடைய ஒன்பதும் களவொழுக்கமென்று கூறுப' எனப்பொருள் கூறுவர். இவ்வாறு, களவுப் புணர்ச்சி, தலைவன் மற்றும் தலைவியின் மனத்தைப் பாதித்து, பலவாறு துன்புறும் நிலையை உருவாக்கி விடும். இருப்பினும் காதல் தூய்மையாதலால், அதனை இழக்க அவர்கள் விரும்புவதில்லை.

தம் விருப்பத்தோடு இயைந்து வரும் வினை நிகழ்ச்சியாதலால் நல்லின்பம் தந்தது. எனவே, துன்பத்தைப் பொருட்படுத்தாது, எல்லா உயிர்க்கும் பொதுவான அந்தக் களவின்பத்தையே பெரிதாகக் கருதி வாழ்கின்றனர். தொல்காப்பியர் இந்நூற்பா வாயிலாக இலக்கணத்தை மட்டும் எடுத்துக் கூறி, இதன் தாக்கமாக உருவாகும் மெய்ப்பாடுகளை மிக விரிவாக 'மெய்ப்பாட்டியல்' என்ற இயலில் அதன் ஐந்திணைக்குரிய மெய்ப்பாடுகளாக

எடுத்துக் கூறுவர். தலைவன் - தலைவியரின் மனத்தெழுச்சி மிகுதியாக இருப்பதால் இருபத்து நான்கு விதமான மெய்ப்பாடுகள் உருவாகும் என ஆசிரியர் கூறுவர். [23]

இவற்றிற்குரிய சான்றுகள் சங்க இலக்கிய அகப்பொருள் பாடல்களுள் எண்ணிறந்து இடம் பெற்றிருப்பதைக் காணலாம். சான்றாக ஒன்றினை இங்குச் சிந்தித்துப் பார்க்க முயல்வது நன்று. தலைவன் குறியிடத்தே வந்து, செவ்வி நோக்கி ஒரு சார் ஒதுங்கியிருக்கக் கண்ட தலைவி, அவன் தன்னை விரைவாக வந்து வரைந்து கொள்ளலை விரும்பினாளாகத் தன் தோழிக்குச் சொல்லுவாள் போல, தலைவன் கேட்டு உணருமாறு சிலவற்றைக் கூற முயல்கிறாள். ஆசிரியன் பெருங்கண்ணன் என்பார் அக்கருத்துடைய பாடலை நயம்பட அமைத்துள்ளதைக் காணலாம்.

'தொடிநெகிழ்ந்த தனவே! தோள்சா யினவே
விடும்நாண் உண்டோ ? தோழி விடர்முகைச்
சிலம்புடன் கமழும் அலங்குகுலைக் காந்தள்
நறுந்தாது ஊதும் குறுஞ்சிறைத் தும்பி
பாம்புமிழ் மணியின் தோன்றும்
முந்தூழ் வேலிய மலைகிழ வோற்கே'

- (குறுந்தொகை - 239)

'தோழி ! அசைகின்ற காந்தட் பூவின் கொத்துக்களிலிருந்து எழும் நறுமணம், பிளப்புக்களையும் முழைகளையும் கொண்ட மலைச் சாரல் முழுவதுமே கமழும் ; அக்காந்தட் பூக்களின் நறிய பூந்தாதினைக், குறிய சிறையையுடைய தும்பியானது சென்று ஊதும். அந்தத் தும்பி, பாம்பால் உமிழப்படும் மணியைப் போலத் தோன்றும். மூங்கிலை வேலியாக உடைய அத்தகைய மலைகளை உடையவன் நம் தலைவன். அவன் பொருட்டாக என் வளைகள் நெகிழ்ந்தன ; என் தோள்களும் மெலிந்தன! இனி, விடுவதற்கான நாணமென்பதும் என்பால் ஏதும் உண்டோ?' என்று தலைவி கூறி

வருந்துகிறாள். களவுப் புணர்ச்சியின் உச்சக் கட்டம் எனலாம். எல்லையைக் கடந்தாகி விட்டது ; இன்பந்துய்த்து அது நெடிதாகத் தொடர்ந்து நிலைத்து நிற்க வேண்டுமென்ற அவா பெருக்கெடுத்தோடியது ; அதனால் எழுந்த அச்சமிகுதியால் தலைவி கூறுவதாக அமைந்த இப்பாடல், ' வேட்கை ; ஒரு தலை உள்ளுதல் ; மெலிதல் ; ஆக்கம் செப்பல் ; நாணுவரை இறத்தல் ' என்னும் களவியல் கூறும் களவு இலக்கண நூற்பா அடிகளுக்குச் சான்றாகும். பேராசிரியர், ' ஆற்றாமை மிக்க விடத்து ஊழணி தைவரல் ' என்னும் மெய்ப்பாட்டிற் குரிய சான்றாகக் காட்டுவர்.

'அகப்பாடலின் அடிப்படை தனிமனிதனின் அனுபவமாயினும், சிறந்தவை என்று கருதப்பெறும் அகப்பாடல் அனைத்தும் தனிமனிதனுடைய அனுபவங்கட்கு மட்டும் வடிவு கொடுக்காமல் உலகில் உள்ள மக்கள் அனைவருடைய அனுபவங்கட்கும் வடிவு கொடுப்பன போல் அமைந்துள்ளதைப் பேராசிரியர். ஹட்சன் கூறுவர். இக்கருத்து தமிழ் இலக்கியங்களைப் பொறுத்த வரை முற்றிலும் உண்மை. இது , உண்மையாக இருத்தலினாற்றான் நாம் இரண்டாயிரம் ஆண்டுகட்குப் பிறகும் இன்னும் அகநானூறு போன்ற நூல்களை அனுபவிக்க முடிகிறது' [24] என்ற திறனாய்வாளரின் கருத்தை இங்கே நினைவு படுத்திக் கொள்ள வேண்டும். சமூகக் கட்டமைப்பின் உள்கட்டமைப்பாகக் கருதப்படும் இல்லறம் சிறப்பாக அமைய, தலைவனும், தலைவியும் தான் விரும்பியவாறே களவு புணர்ச்சியை மேற்கொண்டு இன்பம் துய்த்து, விரைவில் மணம் புரிந்து கொள்ளும் மரபு தமிழகத்தில் இயல்பாகவே இருந்தது. அத்தகு நல்லதொரு துடிப்பைத் தான் இப்பாடலின் தலைவிக் கூற்றில் வெளிப்பட்டதைக் காணலாம்.

'தனக்கென ஒரு குடும்பம் ஏற்படுத்தி ஓரிடத்தே நிலைபெற்று வாழ முற்பட்டமையே மருத வாழ்க்கையாகும். இவ்வாழ்க்கையில்தான், முதன் முதலாகச் சமுதாய வாழ்க்கை ஆரம்பமாகிறது. மனைவி, மக்கள், தனிமனிதனின் உடைமை யென்ற நினைவு தோன்றியது. இவர்கள் உடைமையாகக் கருதப்பட்டமையின் வாழ்க்கையின்

பிணிப்பு அதிகமாயிற்று. ஒருவருடைய வாழ்க்கையில் மற்றவர் தலையிடும் உரிமையும் பெற்றனர். தவறு நேர்ந்த வழி, ஒருவரை ஒருவர் கண்டிக்கவும், வருத்தம் கொள்ளவும் தொடங்கினர். இதனாலேயே 'ஊடல்' என்பது மருதத் திணைக்கு உரிமையுடையதாயிற்று. குடும்பம், உடைமைப் பொருளாக மாறியவுடன் 'நாளைக்கு வேண்டும்' என்ற எண்ணமும், அதற்கெனப் பொருளைச் சேர்த்து வைக்கிற பழக்கங்களும் அப்பொழுதுதான் தோன்றலாயின. சுருங்கக் கூறின் பொருளாதார நினைவு மருதத்திணை வாழ்க்கையில் தான் முதன் முதலில் தோன்றியது.[25] எனச் சிறப்பித்து விளக்கந்தரும் பேராசிரியர் கருத்தை இங்கு ஒப்பு நோக்கிப் பார்ப்பது நன்று. குறிஞ்சி நிலத்தின் களவுப் புணர்ச்சி, மருத நிலத்தின் இல்லற வாழ்க்கைக்கு இட்டுச்சென்று, பிறரைப் போலவே, தாமும் சமூகத்தின் உள் கட்டமைப்பிற்குத் தம்மால் இயன்ற பங்கினைச் செலுத்த வேண்டுமென்ற எண்ணம் இயல்பாக அமைந்ததால்தான், பழந்தமிழ்ச் சமூகம் சிறிது சிறிதாக வளர்ந்து பேருருப்பெற்று, பிறர்க்கும் வழிகாட்டியாகத் திகழ்ந்தது எனலாம். தொல்காப்பியர் இத்தகு கற்பு வாழ்க்கையின் சிறப்பையும், நெறிமுறைகளையும், சமூக உறவுகளையும் விரிவாக 'கற்பியல்' என்ற பகுதியில் எடுத்துக் கூறுவர். அங்கே, தலைவன் தலைவியைச் சார்ந்து நிற்போர் பலராவர்.

சேர, சோழ, பாண்டியர் என்ற பேரரசர் மூவர்க்கும் உரிய வதுவைச் சடங்குகள் பின்பு மக்களுக்கும் வந்து சேர்ந்தன.[26] பெரியோர், ஐயர் என்போர் நன்னெறி வழியில் சடங்குகளை உருவாக்கினர்.[27] தோழி, காமக்கிழத்தி, செவிலி, நற்றாய், பாங்கர், இளையோர், பார்ப்பார், வாயிலோராகிய பாணன், பாடினி, விருந்தினர், கூத்தர், விறலியர், அறிவர், கண்டோர் எனப் பலருடனும் உறவு கொள்ள நேரிட்டது. எனவே, தனிமனிதனாக வாழத் தலைப்பட்ட தலைவன், தலைவி மூலம் இல்லற வாழ்வைப் பெற்று, பலரோடு இணைந்து சமூக உள்கட்டமைப்பு சிறக்கத் தம் பங்கினைஆற்றினான் என்பது தெளிவாகிறது. இவையனைத்திற்கும் மையப்புள்ளியாகத் திகழ்பவள் தலைவி என்பதைத் தெளிவாகத்

தொல்காப்பியர் களவியலில் கூறுவர். சமூக உள் கட்டமைப்பிற்கு அவளே தொடக்கம், அவளே மையம், அவளே முடிபு என்பதைத் தமிழர்கள் நன்கு உணர்ந்து போற்றி வந்தனர்.

'கணவனே தன் தலைவன் என்ற மனத்திண்மையும், மாறாத அன்பும், நன்றின்பால் உய்க்கும் ஒழுக்கமும், மென்மைத் தன்மையால் பிறரைப் பொறுக்கும் தன்மையும், மறை புலப்படாமல் ஒழுகும் நிறையும், சமையல் தொழில் வல்லமையால் விருந்தினரைப் பாதுகாத்தலும், சுற்றத்தாரைக் காத்தலும், இவை போன்றன தலைவியின் பண்புகள் ஆதலால், அவளின் செயல்களை முகம் மகிழ்ந்து கேட்கும் நிலையில் தலைவனிடம் உரைத்தல், மனைக்கண் பழகும் பாணர் போன்றோரின் தலையாய கடமைகள் ஆகும்'[28] எனத் தொல்காப்பியர் கூறுவர்.

இதனை,

'கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்
மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்
விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்
பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்
முகம்புகல் முறைமையின் கிழவோர்க்கு உரைத்தல்
அகம்புகல் மரபின் வாயில்கட்கு உரிய'

- (தொல் ; பொரு ; கற்பியல் ; நூற்பா - 11)

என்ற நூற்பாவின் வாயிலாக அறியலாம்.

தலைவியின் இத்தகு நற்கடமைகளுக்குத் துணை நிற்கும் செவிலி, அறிவர், இளையோர், பாங்கர் முதலானோர் நல்வழி காட்டி சமூக உள் கட்டமைப்பு சிறக்க இவளைப் பயிற்று விப்பதும் சமூகக் கடமையாகவே கருதப்பட்டதெனத் தொல்காப்பியர் கூறுவர்.

'இறந்த காலத்திலும், எதிர் காலத்திலும் நிகழ்காலத்திலும் வழிவழியாக வரும் நல்லனவற்றை உரைத்தலும், தீயவனவற்றை விலக்கலும் செவிலிக்குரிய பண்பாகும்' [29]

'தலைவனும், தலைவியும் அறிவர் கூறும் எல்லையில் நிற்றலால், பிழைகள் கண்டவழி, இடித்துரைத்து நல்லன கூறுவது அறிவர்க்குரிய பண்பாகும்' [30]

'பக்கத்தே இருந்து குற்றேவல் செய்தலும், மெய்க்காத்தலும், உயர்ந்தோர்க்குரிய நற்செயல்களை நினைவுபடுத்தலும் இளையோர்க்குரியது'. அவர், 'தலைவன் செல்வதற்குரிய வழியினது தட்பவெட்ப நிலைகளைக் கூறியும், மேற்கொண்ட தொழிலின் பயன்களைக் கூறியும், வினையின் முடிபுகளைக் கூறியும், மேலும் செய்ய வேண்டிய வற்றைக் கேட்டலும், கூறலும், ஐயங்களைப் போக்கலும், சமூகத்தில் கண்டவற்றையும் கேட்டவற்றையும் கூறுதலும்' தமக்குரிய கடமைகளாகக் கொண்டொழுகுவர்.' [31]

இவ்வாறு, வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து, தத்தம் பங்களிப்பிற்கேற்ப சமூக உள்கட்டமைப்பு நன்கு அமைய பிறருடன் சேர்ந்து தலைவனும் தலைவியும் வாழ்ந்து ஆற்றிய பணிகளும், வாழ்வியற் கூறுகளும் தான் சங்க இலக்கிய அகப்பொருள் பாடல்களில் விரிவாக விளக்கப்பட்டுள்ளன. சமூகக் கட்டமைப்பிற்கு இதுவே, அடித்தளம் அமைப்பதால், இதன் தொடர்பான கருத்துக்கள் நிறைந்த அகப்பாடல்களே அதிகமாகச் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றிருக்கின்றன எனக் கூறலாம்.

திறனாய்வாளர்கள் இதன் தொடர்பான கருத்துக்களைப் பயனுள்ள முறையில் எடுத்துக் கூறி யிருப்பதைப் பரவலாகக் காணமுடிகிறது. பேராசிரியர். அ.ச. ஞானசம்பந்தன், 'மனிதன் இரண்டு வாழ்வு வாழத் தலைப்பட்டான். ஒன்று தன் பொருட்டாகவும், தன் குடும்பம் பொருட்டாகவும் வாழும் அகவாழ்க்கை. ஏனையது, பிறர் பொருட்டாக வாழும் புறவாழ்க்கை. இவை இரண்டையும் அறுதியிட்டு எல்லைகூற இயலாதாதலின் ஒன்றோடொன்று மிக நெருங்கிய தொடர்புடன் வளரலாயின. பிற்காலத்தில் சமூகம் முழு

வளர்ச்சி அடைந்த பொழுது இலக்கியம் தோன்றலாயிற்று. இவ்விலக்கியம் வாழ்வையே படம் பிடித்துக் காட்டும் கண்ணாடி ஆயிற்று.'[32] என்று விளக்கம் தருவர்.

டாக்டர். கே.கே. பிள்ளை,'தாம் வாழும் நிலத்தின் இயல்புக்கு ஏற்றவாறு மக்களின் வாழ்வு முறையும், பண்பாடு அமையும் என்பது பண்டைய தமிழரின் சிறந்ததொரு கொள்கையாகும். அத்துடன் 'காலம்' என்ற தத்துவமும் மக்கள் வாழ்க்கையில் பேரிடங் கொண்டது. ஆகவே, மக்கள் வாழ்ந்த இடமும், காலமும் அவர்களுக்குத் தேவையான முதற்பொருள் எனக் கொள்ளப்பட்டன. ஓரறிவுடைய புல் முதல் ஆறறிவுடைய மக்கள் ஈறாகிய உயிர்ப்பொருள்களும் ஏனைய உயிரில்லாத பொருள்களும் முதற்பொருள்களின் சார்பாக நின்று கருக் கொண்டு உலகின் மேல் தோற்றுகின்றன. ஆகையால், அவற்றுக்குக் கருப்பொருள் என்று பெயர் வழங்கப்பட்டது. மக்கள் வாழ்க்கையின் செய்திகளைப் புலப்படுத்துவது உரிப்பொருள் எனப்பெயர் பெற்றது' [33] எனக் கூறுவர்.

டாக்டர். அன்னிதாமசு, ' பண்பாட்டுச் சிறப்பும் சமூக மேம்பாடும் கொண்டு இரண்டாயிரம் ஆண்டுகட்கு மேல் வாழ்ந்து வரும் தமிழர் தம் சமூகச் சிந்தனைகளை இலக்கியங்களில் பதித்துச் சென்றுள்ளனர். சமூகம் அல்லது சமுதாயம் என்ற சொல் பழந்தமிழரின் தொல் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்திலோ, சங்கத் தமிழ் மக்களின் வாழ்வியல் கலைக் களஞ்சியமாகிய சங்க இலக்கியத்திலோ அமையவில்லை. எனினும், 'உலகம்' எனவும், 'மக்கள்' எனவும் கருதிக் கண்ட அவர்தம் எண்ணங்கள் சமூகவியல் பிழிவுகளாக அமைந்து இனிக்கின்றன [34] 'எனக் கூறுவர்.

தாயம்மாள் அறவாணன், ' ஒரு சமூகம் அதில் உறுப்பாகி உள்ள ஒருவரின் படிநிலையைக் குறிப்பிட்ட காரணிகளால் மதிப்பிடுகிறது. அவை, கட்டுப்பாட்டிற்கு உட்பட்ட காரணிகளாகவும், கட்டுப்பாட்டிற்கு உட்படாத காரணிகளாகவும் அமைகின்றன. ஒருவன் பிறந்த குடி, ஆண், பெண் என்ற பால் வேறுபாடு, வயது, அவனுடைய நிறம், உடலமைப்பு ஆகியவற்றை அவனால் மாற்றவும் முடியாது ;

திருத்தவும் முடியாது. எனவே, இவை ஒருவன் கட்டுப்பாட்டுக்கு உட்படாத காரணிகள் ; ஒருவன் சேர்க்கின்ற செல்வம், தொழில், கல்வி, நட்பு, சமயச் சார்பு முதலாயின அவனுடைய கட்டுப்பாட்டுக்கு உட்பட்டவை. அவற்றை அவன்தன் முயற்சிகளால் மாற்றி அமைக்க முடியும். இவற்றைச் சமூகவியல் அறிஞர்கள் அடைந்த தகுதி என்றும், அடையத்தகும் தகுதி என்றும் அறிவிக்கின்றன. சமூகத்தின் உள் கட்டமைப்பிற்கு இவையும் காரணிகளாக அமைகின்றன[35] 'எனக் கூறுவர்.

உளவியல் பேராசிரியர். செ.ரா. பரமேஷ், 'நம் வாழ்க்கை நம் சமூகத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. இத்தொடர்பு பொதுவாக வெளிப்படையாகத் தெரியாமல் மறைந்து இருக்கிறது. ஆயினும் இ∴து எப்பொழுதும் நம் வாழ்க்கையைப் பாதித்துக் கொண்டுதான் இருக்கிறது. இத்தகைய தொடர்பு தனியன் குடும்பத்தில் காணப்படலாம்; அல்லது அவன் சுற்றத்தாருடனும், சுற்றுப்புறத்தாருடனும் கொண்டுள்ள தொடர்புகள் வழியாக எழலாம்; அல்லது அவன் தன் மாவட்டம், நாடு முதலியவற்றுடன் கொண்டுள்ள இடைவினையால் ஏற்படலாம். இத்தொடர்புகளால் தனியனின் வாழ்க்கையில் பல சிக்கலான கட்டங்கள் உருவாகின்றன. இத்தகு சிக்கல்கள் சமூகப் பிரச்சினைகளுக்கு அடைப்படைகளாக அமைகின்றன' [36] என்று கூறுவர்.

இவையெல்லாம் சங்க அகப்பாடல்களின் கருத்துக்கள். இவை? தமிழர் சமூக உள்கட்டமைப்புகளின் சிறப்புகளைப் பாராட்டிக் கூறப் பெற்ற ஏற்புரைகளாகவும், பாராட்டுரைகளாகவும் அமைந்துள்ளன.

## உள்கட்டமைப்பிற்குதவிய முப்பொருள்

அகத்திணையின் முக்கூறுகளாக அமைவன முதற்பொருள்; கருப்பொருள் ; உரிப்பொருள் என்பனவாகும். இவையே பண்டைய தமிழ்ச் சமுதாயத்தின்

உள்கட்டமைப்பிற்குப் பெரிதும் உதவின. இத்தகு முப்பொருள் பற்றிய எல்லாச் செய்திகளையும் நெறிமுறையோடு எடுத்துக் கூறும் தொல்காப்பியர்,

'முதல் கரு வுரிப்பொருள் என்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறந் தனவே
பாடலுட் பயின்றவை நாடுங் காலை'

- (தொல் ; அகம் ; நூற்பா - 03)

என்று கூறுவர்.

இதற்கு நச்சினார்க்கினியர், ' புலனெறி வழக்கிடைப் பயின்ற பொருட்களை ஆராயுங் காலத்து, முதலுங் கருவும் உரிப் பொருளும் என்ற மூன்றேயாம். அவைதாம், செய்யுள் செய்யுங்கால் ஒன்று ஒன்றனிற் சிறந்து வருதலுடையன' என விளக்கம் தருவர்.

'தென்றலிலும் நிலவிலும் உடல் குளிர்ச்சியுறுதல் போல், சான்றோரின் சூழலில் உள்ளம் உயர்ந்து நிற்றல் போல், நல்ல இலக்கியம் பயில்வதால் உள்ளம் பெறும் பயன் மிகுதியாகவே உண்டு. அதனால், உள்ளம் விரிவடைந்து தூய்மையும் பெற்று நிற்குமாறு இலக்கியம் செய்கிறது ; வாழ்வு பற்றிய விழுமிய உணர்ச்சி பெற்று உள்ளம் உயர்வு பெறுகிறது' எனக்கூறும் திறனாய்வாளரின் கருத்திற்கு உள்உரமாக அமைவனவே முப்பொருள். இதனைச் சான்றாதாரம் மூலம் விளக்கி நிலைநாட்ட ஏராளமான அகப்பாடல்கள் இருக்கின்றன. சான்றாக ஒன்றைக் காட்டலாம்.

'கருங்கால் வேங்கைச் செவ்வீ வாங்குசினை
வடுக்கொளப் பிணித்த விடுபுரி முரற்சிக்
கைபுனை சிறுநெறி வாங்கி பைபென
விசும்பாடு ஆய்மயில் கடுப்ப யான்இன்று
பசுங்காழ் அல்குல் பற்றுவனன் ஊக்கிச்
செலவுடன் விடுகோ தோழி! பலவுடன்

வாழை ஓங்கிய வழைஅமை சிலம்பில்

துஞ்சுபிடி மருங்கின் மஞ்சுபட காணாது

பெருங்களிறு பிளிறும் சோலையவர்

சேண்நெடுங் குன்றம் காணிய நீயே!

- (நற்றிணை - 222)

கபிலர் இயற்றிய குறிஞ்சித் திணைப்பாடலில், மலையும், மலையைச் சார்ந்த இடமும் தெளிவாகக் குறிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். பெரும்பொழுது கூதிர் காலமும் சிறுபொழுது யாமமும் தோழியின் கூற்றால் அறியலாம். கருப்பொருள்களே மிகுதியாகச் சுட்டப்பட்டுள்ளன. வேங்கை, வாழை முதலான மரங்கள்; சுரபுன்னைச் சோலை ; பெண்யானை ; களிறு ; மயில் முதலானவை கருப்பொருள்கள். புணர்தலும் புணர்தல் நிமித்தமாகவும் வளர்ச்சியுற்ற களவொழுக்கம் பற்றிக் கூறுவதால் உரிப்பொருளாயிற்று..

தோழி, தலைமகன் வரவு உணர்ந்து, சிறைப்புறமாகச் செறிப்பு அறிவுறீஇ வரைவு கடாயது எனத்துறை விளக்கம் தருவர். தோழி தலைவியைப் பார்த்து, 'தோழி! பலவாகச் சேர்ந்து வளர்ந்துள்ள வாழைமரம். சுரபுன்னைகள் நிறைந்த சோலை. இத்தகு மலையிலே பெண்யானை படுத்திருக்கிறது. மேகங்கள் அதை மறைத்து விட்டதால் களிறு, தன் பிடியைக் காணாது பிளிறுகிறது. இத்தகு செழிப்பான மலைக்குத் தான் நும் தலைவன் உரிமையானவன். அவன், உன்னைக் காணவராததால் வருந்தும் நீ, இற்செறிப்பால் மேலும் வருத்தம் அடைவதை விட்டு ஆறுதல் பெற வேங்கை மரத்தில் கட்டப்பெற்ற ஊஞ்சலில் அமர்ந்து ஆடுவது நன்று. அப்பொழுது, உயரமாகச் செல்லும் ஊஞ்சல் தலைவன் மலையைக் கண்டு ஆறுதல் பெறுமாறு உதவும். உன் துயரமும் குறையும்' என்று கூறுகிறாள். இப்பாடலில் முப்பொருள்களும் கருத்திற்கேற்ப தேவையான அளவில் இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

நான்கு நிலத்திற்கும் உரிய முப்பொருள்கள் தமிழ் மக்களோடு உறவு கொண்டு ஒருவரொடு ஒருவர் பின்னிப் பிணைந்து வாழும் சமூக மரபை இயல்பாகவே வளர்க்கப் பெரிதும் துணை நிற்கின்றன. தெய்வம், உணவு, விலங்குகள், பறவைகள், தாவரங்கள், மக்கள், செய்யும் தொழில்கள், இசைக்கருவிகள், வாழும் ஊர்கள் முதலானவற்றைத் தனித்தனியே தமக்குரிய நிலம் பொழுதுகளுக்கேற்பப் பெற்று விளங்கினாலும், ஒன்றோடொன்று நல்லுறவு கொண்டு வாழ்வதற்கேற்ற சமூக உள்கட்டமைப்புப் பெற்றே விளங்கினாலும், ஒன்றோடொன்று நல்லுறவு கொண்டு வாழ்வதற்கேற்ற சமூக உள்கட்டமைப்புப் பெற்றே நானிலமும் திகழ்ந்தன. இச்சிறப்பை எல்லா அகப்பாடல்களும் நயம்பட எடுத்துக் காட்டுகின்றன.

இதனை,

'திணை மயக்குறுதலும் கடிநிலை இலவே
நிலன் ஒருங்கு மயங்குதல் இன்றென மொழிப
புலன்நன் குணர்ந்த புலமையோரே'

- (தொல் ; பொருள் ; அகம் ;நூ - 12)

என்று தொல்காப்பியர் குறிப்பிடுவர்.

திணைக்குரிய ஒழுக்கங்கள் மயங்கி நிகழ்தல் உண்டு. ஆனால், நிலங்கள் மயங்காது. நிலங்களில் உள்ள கருப்பொருள்கள் இடம் பெயர்ந்து வேறு நிலத்தில் தோன்றுவதும் உண்டு. தமிழக நிலங்கள் நிலைத்தே இருப்பதால், அதில் வாழும் தமிழர்கள் வாழ்வு நிலைத்திருக்க இத்தகு சமூக உறவுகள், இயற்கையின் உதவியால் உருவாகும் என்பர். நிலம் கூட, கோடைக்கால வெப்பத்தால் வறண்டு பாலை நிலமாக ஆகும். அதுவும் தற்காலிகமே. மீண்டும் மழை பெய்தால் பாலை மறைந்துவிடும். முல்லை நிலமும், குறிஞ்சி நிலமும் தம்முள் வெப்ப மிகுதியால் ஏற்படும் தற்காலிக மாற்றத்தையே பாலை எனப்பெயரிட்டு அழைத்தனர். நிலையான நிலம் நாநிலமே. இத்தகு மாற்றத்திற்கும் மயக்கத்திற்கும்

இயல்பான சந்தர்ப்பம் கிடைத்ததால்தான், அகப்பாடல்களில் இத்தகு மயக்கமுற்ற நிகழ்ச்சிகளை விளக்கும் பாடல்களும் இடம் பெற்றன.

சான்றாக,

'கருங்கால் வேங்கை வீஉகு துறுகல்
இரும்புலிக் குருளையின் தோன்றும்காட்டிடை
எல்லி வருநர் களவிற்கு
நல்லை அல்லை நெடுவெண் நிலவே !'

- (குறுந். 47)

என்ற குறுந்தொகைப் பாடலைக் காட்டுவர்.

'வலிய தாளையுடைய வேங்கை மரத்தின் பூக்கள் உதிர்ந்து கிடக்கின்ற குண்டுப் பாறையானது, பெரும்புலியின் குட்டியைப் போலத் தோன்றுகிறது. காட்டின் வழியே இரவு நேரத்தில் வரும் தலைவர்க்கும் தமக்கும் தொல்லை தரவே வெண்ணிலவு தம் ஒளியை மிகுதியாக வெளிப்படுத்திக் கொண்டிருக்கிறது' எனத் தலைவி கூறி வருந்துகிறாள். குறிஞ்சித்திணைக் குரிய களவொழுக்கம் பற்றிக் கூறும் பாடலில் இளவேனிற்குரிய நிலா வெளிச்சமும், வேங்கை மலர்களும் கூறப்பட்டது. இவ்வாறு, வாழும் மக்கள் தம்முள் கூடிப் பழகி மகிழ்வது போல, இயற்கையும் மகிழும் எனக் கூறிச் சமூக உறவின் சிறப்பைக் கூறுவர்.

'விருப்பு, வெறுப்பு, இன்பதுன்பம், அன்பு, அருள், பயபக்தி ஆகியவை மனித இயல்பின் தலைமையான இணைப் பண்புகள் ஆகும். இதனை, இக்கால உளவியல் அறிஞர்களான ஃப்ராய்ட் மற்றும் யங் போன்றோர் இனிது புலப்படுத்தியுள்ளனர். இந்த இயல்புகளை எத்துணை அளவிற்கு இலக்கியங்கள் வெளிப்படுத்துகின்றனவோ, அத்துணை அளவிற்குப் படிப்பவர் உள்ளத்திலும் உணரும் ஆற்றலை உருவாக்கும்' என்ற

திறனாய்வாளர் கருத்திற்கேற்ப சமூக உறவுகள் மேம்பட இவை துணைபுரிகின்றன எனலாம்.

பிறர் அடையும் துயரையும் கேட்டு நாமும் வருந்தும் பொழுது, இரக்கங் கொண்டு பேசும் போது சமூக உறவுகள் நல்ல வலுப்பெறும் என்பதை யாவரும் அறிவர். அதற்கு முப்பொருள்களும் இன்றியமையாக் கூறுகளாகத் திகழ்கின்றன என்பதை யாவரும் அறிவர்.

## சமூகத்தின் வெளிக்கட்டமைப்பு

மெக் ஈவர் எனும் சமூகவியல் அறிஞர் சமுதாயத்தின் அடிப்படைகளாகக் குறிப்பன: (1) இடம் (2) சமுதாய உணர்வு (3) சார்புணர்வு. இவை, வெளிப்படையாக எல்லாரும் அறிந்து கொள்ளும் முறையிலும், பகிர்ந்து கொள்ளும் முறையிலும் முழுமை பெற்றிருக்க வேண்டும். இதற்குச் சமூகத்தின் வெளிக்கட்டமைப்பு நன்கு உருவாகியிருக்க வேண்டும். இதற்குத் துணை புரிபவை பற்பலவாகும். அவையனைத்தும் நிறைவு பெற்று அமையும் சமூகம் நல்ல சமூகமாகும்.

சமூகத்தின் வெளிக் கட்டமைப்பு இன்றியமையாததும், பாதுகாப்புக் கொண்டதும் எனக் கூறுவதற்கு கீழே குறிப்பிட்டவை நிறைவாக இருத்தல் வேண்டும் என்பர்.

1. திரளான மக்களாகத் திரண்டிருப்பர்.
2. குறிப்பிட்ட நிலப்பகுதியில் கூடி வாழ்வர்.
3. அங்கு வாழ்வோர் ஒருவரை ஒருவர் நம்மைச் சேர்ந்தவர் என்று அறிந்து வைத்திருப்பர்.
4. பொதுப் பண்பாட்டைப் பெற்றிருப்பர்.
5. அம்மக்கள் வாழும் இடத்தாலும் பின்பற்றும் பண்பாட்டாலும் ஒற்றுமையுடனும், கூட்டுறவுடனும் இருப்பர்.

6. சமூகத்தின் பல்வேறு பணிகள் தடையின்றியும், மோதல் இன்றியும் நிகழ வாய்ப்பாகக் குடும்பம், கல்வி, பொருளாதாரம், அரசியல், சமயம், பொழுதுபோக்கு ஆகியவற்றைச் சார்ந்து குழுக்கள் அமைத்துக் குடியிருப்பர்.

7. ஒவ்வொரு சமூகமும் தனக்கென்று பண்பாட்டுடனும், எல்லைகளுடனும் அமைத்து, வேறு சமூகத்திலிருந்து பிரித்துக் காட்டும் பண்பாட்டுடன் தனி அலகாக விளங்கும்.[37]

இத்துணைச் சிறப்புகளையும் பழந்தமிழ்ச் சமூகம் வெளிப்படையாகப் பெற்று நன்கு கட்டமைக்கப் பெற்ற சிறந்த நாகரிகம் போற்றும் சமூகமாக வாழ்ந்தது என்பதற்குச் சங்க இலக்கியத்தில் சான்றுகள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

இவற்றின் அடிப்படையில் தமிழ் மக்கள் என்றும் வாழ வேண்டுமென்ற நோக்கில் தான் ஔவையார் நிலத்தையும், அதில் வாழ்வோரையும் இணைத்து விதி ஒன்று செய்து உலகறிய பறை சாற்றினார்.

'நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே'

- (புறநானூறு - 187)

என்று பாடி, சமூகத்தின் அடிப்படை ஆடவரால் உருவாகுகிறதென்று நினைவுபடுத்தினார். சமூகத்தின் உள் கட்டமைப்பிற்குப் பெண்கள் முக்கியமானவர்களாகக் கருதப்படுவது போலவே, சமூகத்தின் வெளிக் கட்டமைப்பிற்கு ஆடவர்களே முக்கியமானவர்கள் என்று நினைவுபடுத்தினார்.

'நிலத்தின் நீர் நிலவளங்கட்கேற்ப அந்நிலத்து வாழும் மக்கட் பண்பும், செயலும் இயைபு படுகின்றன. நாட்டவர்க்கு அவ்வக் காலங்களில் செய்வன செய்து, பெறுவன

பெற்றுக் கல்வி கேள்விகளில் மேம்படும் நலமும் நாட்டவர்க்கு வேட்டம் புரிவதே பொதுச் செயலாதலின், தறுகண்மை, போர்ச் செயல் வன்மைகளில் மேம்படு நலமும், பள்ளத்தில் வாழ்பவர்க்கு நீர்வளம் வாய்த்தலாற் பொருள் மிகவுண்டாதலின் ஈதல் மனப்பான்மையும், மேட்டு நிலத்தவர்க்குச் செட்டும் சிக்கனமுமாயிருக்கும் திறமுமாகிய நலங்களும் உண்டாகின்றன எனும் நிலநூல் வழக்கு ஒருகால் ஒளவையார் ஆராய்ச்சிக்கு வந்தது. நாடும் காடும் அவலும் மிசையு மென்ற பாகுபாடு நிலத்தின் கட் காணப்படுதல் போல, நிலத்து வாழும் மக்களிடையே ஆண்களும், பெண்களும், இளையரும், முதியருமென்ற பாகுபாடு தோன்றக் கண்டார். இவருள் ஆண்மையும் இளமையும் சிறக்கும் ஆடவர் நல்லராய வழி யாவரும் நலமுடையராதலும், அவரால் நாடுகள் நல்லிசை பெறுதலும் கண்டு, 'நிலமே, நின்பால் எவ்வழி ஆடவர் நற்பண்பும் நற்செயலுமுடையராய் விளங்குகின்றனரோ, அவ்வழி நின்னை நன்னாடெனச் சான்றோர் பாராட்டுகின்றனர் [38] ' என்று சித்தாந்த கலாநிதி ஒளவை. சு. துரைசாமி கூறுவதை மேலே குறிப்பிட்ட சமூகக் கோட்பாட்டுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், பழந்தமிழர் கொண்டிருந்த தெளிவான சமூகக் கோட்பாடு உள்ளங்கை நெல்லிக் கனியெனப் புலனாகும்.

'பெருமை எனும் இயல்பு இலக்கியத்தில் எவ்வாறு இடம் பெறுகிறது ? எனும் எண்ணம் எழலாம். ஓர் இலக்கியத்தில் இடம் பெறும் கருத்துகள், பரந்துபட்ட மனித இயற்கையைச் சித்தரிப்பதாகவும், அனைத்துலகக் கண்ணோட்டம் உடையதாகவும் இருந்து பொருள் நயமும், சொல் நயமும் கவர்ச்சிமிகு படிமங்களைக் கொண்டதாகவும் அமையுமானால் அதனைச் சிறப்புடையதாகப் போற்றுவர். இதனால், பொருண்மையில் உயர்ந்ததாகவும், பொதுமைப் பண்பில் சிறந்ததாகவும், புதுமைக் கவர்ச்சி வாய்ந்ததாகவும் விளங்கும் இலக்கியமே 'பெருமை' யுடையதாகக் கருதப்படும் என்பது தெளிவாகிறது ' [39] என்ற திறனாய்வாளரின் கருத்திற்கேற்ப சிறப்பு வாய்ந்த தனித்தன்மையுடைய பாக்களைப் புறநானூறு, பதிற்றுப்பத்து, பட்டினப்பாலை, மதுரைக் காஞ்சி போன்ற இலக்கியங்கள்

பெற்றுத் திகழ்கின்றன. அவை பண்டைத் தமிழரின் சமூக வெளிக்கட்டமைப்பிற்கு உதவிய நெறிமுறைகளை நமக்குத் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன எனலாம்.

இராபர்ட் பியர்ஸ் டெட் எனும் அறிஞர் சமூகத்தின் வெளிக் கட்டமைப்பிற்குப் பெரிதும் வழிவகுக்கும் கருத்துக்களை ஆய்ந்து வெளியிட்டார். அவை : பண்பாட்டு வழி உருவாகும் சிந்தனை ; செயல் ; உடைமை என்பனவாகும். இவற்றை எந்த அளவிற்குச் சிறப்பாக ஒரு சமூகம் பெற்று விளங்குகிறதோ, அந்த அளவிற்கு அச்சமூகத்தின் வெளிக் கட்டமைப்பு மகிச் சிறப்பாக அமைந்து பெருமை பெறும் என்பர். சிந்தனையின் அடித்தளம் எண்ணங்கள் என்றும், செயலின் அடித்தளம் நெறிகள் என்றும், உடைமைகளின் அடித்தளம் பொருள்கள் என்றும் கூறுவர்.[40] இவற்றை அடிப்படையாகக் கொண்டு பழந்தமிழ்ச் சமூகத்தின் வெளிக்கட்டமைப்பை ஆய்வதால், அதன் பெருமை தெற்றென வெளிப்படும்.

' சமுதாய மானிடவியலார் சமுதாய உறவுகளைப் படிப்பதையே முதன்மையான ஆய்வுப் பரப்பாகக் கொண்டுள்ளனர். குறிப்பாக குடும்பம், உறவுமுறை, வயது அடிப்படைக் குழுக்கள், அரசியல் அமைப்பு, சட்டம், சமயம், பொருளாதாரச் செயல்கள் போன்றவற்றை ஆராய்வர். அவை அனைத்தையும் சமுதாய அமைப்பு என்ற பெருந்தலைப்பின் கீழ் ஆராய்கின்றனர். சமுதாய அமைப்பின் கீழ் உள்ள கூறுகளை மற்றவையோடு எவ்வாறு சார்புடையதாக உள்ளது என்றும், அது அச்சமுதாய அமைப்பில் எவ்வாறான உறவைப் பெற்றுள்ளது என்றும் விவரிப்பதில் மிகுந்த ஆர்வங் காட்டுகின்றனர். அவ்வகையான ஆய்வுகளில் சமுதாயத்தின் கடந்தகால வரலாறு பயன்படுத்தப்படுவதில்லையாதலால், சமுதாய மானிடவியல் வரலாற்று அணுகுமுறையைச் சாராதது என்பர்.[41] '

இந்த உண்மையை உணர்ந்தே இராபர்ட் பியர்ஸ் டெட் எனும் சமூகவியலார் சிந்தனை, செயல், உடைமை மூன்றையும் அடிப்படையாகக் கொண்டு கணக்கிட்டும்,

மதிப்பிட்டும் காணும் பொழுதுதான் பயனுள்ள கருத்துக்களைச் சேகரிக்க இயலுமெனக் கருதினார். இதற்கு வரலாற்று நூல் உதவுவதைக் காட்டிலும், இலக்கியங்களே அதிகம் உதவும் என்பதே உண்மை. ஏனெனில், வரலாற்று நூல் மன்னரையும், அவர்தம் ஆட்சித் தொடர்பான செய்திகளை மட்டுமே கூறும். அதன் உதவியோடு சமூகப் பண்பாட்டையும், வாழ்வியல் நெறிமுறையையும் கண்டறிய இயலாது. மன்னர்களை மையமாகக் கொண்ட வரலாற்று நூல் மக்களைப் பற்றிச் சிந்திக்க இடமளிக்காது. ஆனால், இலக்கியம் மக்களை மையமாகக் கொண்டு படைக்கும் பொழுது, மன்னரையும் இடம் பெறுமாறு செய்துவிடும். எனவேதான், ஹட்சன் என்னும் திறனாய்வாளர் இலக்கியம் பற்றிக் கூறும் பொழுது, 'இலக்கியத்தின் பொருள்கள் ஐவகையாகப் பகுக்கப்படுகின்றன. அவை : தன்னனுபவ வெளியீடு ; மனித உணர்வுகளின் புலப்பாடு ; சமுதாய செய்திகளின் ஆக்கம் ; இயற்கையை அளித்தல் ; பல்வகைக் கருத்துகளை உள்ளடக்குதல்'[42] எனக் கூறுவர். இவற்றுள் இராபர்ட் பியர்ஸ்டெட் கூறும், 'சிந்தனை ; செயல் ; உடைமை ' ஆகிய மூன்றும் இடம் பெற வேண்டிய இன்றியமையாச் சிறப்புச் செய்திகள் என்பதை யாவரும் அறிவர். சங்க இலக்கியத்தில் இவை பரவலாக இடம் பெற்றுள்ளதைக் கற்பார் அறிவர்.

ஐம்புலன்கள் வாயிலாக ஒருவன் பெறும் அறிவு மற்றும் அனுபவங்களைத் தம் சிந்தனா சக்தியால் பகுத்தறிந்து, தாம் கண்ட கருத்துக்களை முறையாக வெளிப்படுத்துவதைச் சிந்தனை எனக் கூறுவர். 'உற்று நோக்கல், நினைத்தல், பகுத்தறிதல், முடிவுகாணல், வெளிப்படுத்துதல்' எனப்படுபவை இச்சிந்தனையின் உட்கூறு என்பர். இது மனிதனுக்கு மனிதன் மாறுபட்டு அமைவது போலேவே, சமூகத்திற்குச் சமூகம் மாறுபட்டு அமையும். இதன் அடிப்படையில் தான் பழக்கவழக்கம், நம்பிக்கை, மரபு முதலானவை தோன்றி வளர்ந்து பண்பாடாக உருப்பெறுகிறது. இஃது ஓர் இனத்தைச் சார்ந்த எல்லார்க்கும் பொதுவான உடைமை எனக் கருதிப் போற்றுவர்.

பண்பைப் பெரிதாகப் போற்றி வாழும் சான்றோர் மிகுதியாக இருப்பதால் தான் உலகம் அழியாது நிலைத்து நிற்கிறது என்ற சிந்தனைக்கு உடன்பட்டு திருவள்ளுவர்,

'பண்புடையார்ப் பட்டுண்டு உலகம் அதின்றேல்
மண்புக்கு மாய்வது மன்'

- (குறள் - 996)

என்று கூறுவர். இதை மேலும் வலியுறுத்தவே,

'அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்
மக்கட்பண்பு இல்லா தவர்'

- (குறள் - 997 )

என்பர்.

இத்தகு மக்கட் பண்பைச் சமூகத்திடமிருந்தே கற்க வேண்டும். அதற்கு உதவுவது தான் கேள்விச் செல்வம். அது, எல்லாச் செல்வத்தைக் காட்டிலும் உயர்ந்தது ; சிறந்தது. முறையாகக் கல்வி கற்காதவர் கூட, கற்றவர் அறிந்தவற்றைக் கற்றுத் தெளிய இது வழிவகுக்கும். எதுவாக இருப்பினும் நன்மை தரும் கருத்துக்களைக் கேட்டு வாழக் கற்றுக் கொள்ள வேண்டும் எனக்கூறும் திருவள்ளுவர்,

'செவியின் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என் ?'

- (குறள் - 420)

என வேதனையுடன் கூறுவர்.

தாம் சிந்தித்து வெளிப்படுத்தியதைப் பிற்காலத்தவரும் உணர வேண்டும், கற்றறிய வேண்டும் என்ற நல்ல நோக்கில்தான் ஏட்டில் எழுதி வைத்துப் பாதுகாத்தனர். அத்தகைய நூல்களே அடுத்து வரும் தலைமுறைக்கு நல்வழி காட்டிகளாகும். அவற்றைக் கேட்டும்,

கற்றும் வாழவேண்டும். அதைப் புறக்கணிப்போர் மக்களாகப் பிறப்பினும் விலங்குகளாகவே கருதப்படுவர்.

'விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோடு ஏனை யவர்.'

- (குறள் - 410)

எனக் கூறுவர்.

இவ்வாறு சிந்தனா சக்தியால் சமூகத்தில் அவ்வப்பொழுது உருவான பண்பாட்டுக் கூறுகள் எல்லார்க்கும் பொதுவானவை என்றும், இல்லறத்தார்க்கே உரியவை என்றும், போர் மறவர்க்கே உரித்தானவை என்றும் தனித்தனியாகப் பிரிக்கப்பட்டு வெளிப்படுத்தப்பட்டதால், அவை பல்கிப் பெருகி, இலக்கிய வடிவம் பெற்று நிலைத்து நின்றன எனலாம். எல்லார்க்கும் பொதுவானவை எனக் கருதுவதில் மிகச்சிறந்தது,

' ஆற்றுத லென்பதொன் றலந்தவர்க் குதவுதல்
போற்றுத லென்பது புணர்ந்தாரைப் பிரியாமை
பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுதல்
அன்பெனப் படுவது பேதையார் சொல்நோன்றல்
அறிவெனப் படுவது கூறியது மறாஅமை
நிறையெனப் படுவது மறைபிற றறியாமை
முறையெனப் படுவது கண்ணோடா துயிர்வௌவல்
பொறையெனப் படுவது போற்றாரைப் பொறுத்தல்'

- (கலி ; நெய்தல் ; 16 ; 05-14)

என நல்லந்துவனார் கூறுவர். இவ்வாறே, பிறவும் பலவற்றுள் இடம் பெற்றுள்ளன எனலாம்.

சிந்தனையால் உருவாகும் பண்பாட்டுக் கோட்பாடுகள் காலப் போக்கில் செயலாக்கம் பெற்றுச் சமூகத்தில் பின்பற்றப்பட்டு வரும்பொழுது, அவை, நெறியாகவும், விதியாகவும், சட்டமாகவும், ஆணையாகவும் உருப்பெற்று, சமூகத்தின் வெளிக் கட்டமைப்பிற்கு இன்றியமையாக் கூறுகளாக நிலைத்து நின்று விடும். இவை, உருவாகி வழக்கிலும், பழக்கவழக்கங்களிலும், மரபுகளிலும் இடம் பெற்று நிலைத்து நிற்க உதவுவன நாட்டவர் வழக்குகள் ; அறப்பாடுகள் மற்றும் சட்டங்கள் [43] எனச் சமூகத் திறனாய்வாளர்கள் கூறுவர்.

சமூகத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்ட பொதுவாய் அமைகிற தலைமுறை தலைமுறையாகப் பின்பற்றுகிற வழிகள் நாட்டவர் வழக்குகள் எனப்படும். தமிழ்ச் சமூகத்தில் இத்தகு நாட்டவர் வழக்குகள் ஏராளமாக உருவாகிப் பல்கிப் பெருகி விட்டன. அவை, இலக்கியங்களில் தேவைப்படும் இடத்திற்கேற்ப புலவர்களால் வெளிப்படுத்தப்பட்டுள்ளன. தமிழர்தம் நாட்டவர் வழக்குகளின் தலைசிறந்ததாகக் கருதப்படுவது, மானங்காத்தல் ஆகும். இது தமிழினத்தின் தலையாய கோட்பாடு என்பதை யாவரும் அறிவர்.

இதனை வாழையடி வாழையாகப் போற்றி வரவேண்டுமென்ற நோக்கில் மன்னன் ஒருவனே, தம் வாழ்வில் நடந்த உண்மை நிகழ்ச்சியைக் கூறித் தமிழினத்திற்கு என்றும் வேண்டப்படுவது, இன்றியமையாததென வலியுறுத்திப் பாடலாகப் படைத்து வழங்கிச் சென்றுள்ளான்.

'குழவி யிறப்பினு மூன்றடி பிறப்பினும்
ஆளன் றென்று வாளிற் றப்பார்
தொடர்ப்படு ஞமலியி னிடர்ப்படுத் திரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்
மதுகை யின்றி வயிற்றுத்தீத் தணியத்

தாமிரந் துண்ணு மளவை

ஈன்ம ரோவிவ் வுலகத் தானே'

- (புறம் - 74)

என்று சேரமான் கணைக்காலிரும் பொறை கூறியுள்ளார்.

இதில் நாட்டவர் வழக்கை நன்கு புரியும் வண்ணம் எடுத்துக் காட்டியுள்ளார். 'பிள்ளையிறந்து பிறப்பினும், தசைத் தடியாகிய மணை பிறப்பினும், அவற்றையும் ஆளல்லவென்று கருதாது வாளோச்சுதலில் தவறார் அரச மரபினர். பகைவர் வாளாற் படாது சங்கிலியால் பிணிக்கப்பட்ட நாய்போலப் பிணித்துத் துன்பத்தைச் செய்து இருத்திய, கேளல்லாத கேளிருடைய உபகாரத்தான் வந்த தண்ணீரை இரந்துண்ணக் கடவே மல்லேமென்னும் மனவலியின்றி, வயிற்றின் கண் தீயை யாற்ற வேண்டி, தாமே இரந்துண்ணும் அளவினை உடையாரை இவ்வுலகத்தின்கண் அவ்வரசர் பெறுவார்களோ? பெற மாட்டார்கள்' எனக்கூறி, மன்னர்க்கு மட்டுமன்றி, மக்களுக்கும் இது வேண்டப்படும் ஒன்று எனக்கூறிப் போந்தார். மறவர்க்குரிய வீரப்பண்பை மேலும் மேலும் வளர்க்க இத்தகு தன்மான உணர்வு அதிகம் வேண்டப்படும் ஒன்று என்பதை யாவரும் அறிவர்.

இதனை,

'உறின்உயிர் அஞ்சா மறவர் இறைவன்

செறினும்சீர் குன்றல் இலர்.'

- (குறள் - 778)

'போர் வந்தால் உயிரின் பொருட்டு அஞ்சாமல் போர் செய்யத் துணியும் வீரர் ; அரசன் சினந்தாலும் தம்முடைய சிறப்புக் குன்றாதவர் ஆவர்' எனக்கூறும் திருவள்ளுவர் கருத்தோடு ஒப்பு நோக்கத்தக்கது. இவ்வாறு, நாட்டவர் வழக்கின் அடிப்படையில் மரபாகி,

நெறியாகி இன்றும் போற்றப்பட்டு வரும் பலவற்றுள் இதுவும் ஒன்று என்பதை யாவரும் அறிவர். இதற்கென தனித்துக் கூறப்படும் வரலாறு பற்பலவாம்.

ஒரு சமூகம் கட்டாயம் கடைப்பிடிக்க வேண்டியவை, வேண்டாதவை என்று வற்புறுத்தப்படுவன அறப்பாடுகள் எனப்பெறும். சிந்தித்தும், நாட்டவர் வழக்குகளை அறிந்தும் தத்தம் சமூகம் சிறப்பாகப் போற்றுவதைத் தாமும் போற்றி, புறக்கணிப்பதைத் தாமும் புறக்கணித்து வாழக் கற்றுக் கொள்ளும் பண்புகளையே அறப்பாடுகள் எனக்கூறுவர். சமூக உறவால் இயல்பாகவே நல்லனவற்றை ஏற்று வாழ வழிவகுக்கும் பண்பாட்டுக் கூறுகளையே அறப்பாடுகள் என்பர். இது கட்டாயப்படுத்தப்பட மாட்டாது ; சிறப்பினை எடுத்துக் கூறிப் போற்ற வேண்டுமெனக் கேட்டு வலியுறுத்துவது.

'இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்
அறவிலை வணிக னாயலன் பிறரும்
சான்றோர் சென்ற நெறியென
ஆங்குப் பட்டன அவன்கை வண்மையே.'

- (புறம் - 134)

என்ற பாடல் வாயிலாக ஏணிச்சேரி முடமோசியார் என்னும் புலவர், 'உலகில் அறப்பணி இரு நோக்கோடு மேற்கொள்ளப்படுகிறது. முதல் நோக்கு - இப்பிறவியில் அறம் செய்தால் மறுபிறப்பிற்கு உதவும் என்பது. மற்றொரு நோக்கு - பெரியோர்கள் செய்து வருகின்றனர் ; அதனால், நானும் செய்து வருகிறேன் என்பது. முதல் நோக்கு சுயநலம் நிறைந்தது ; தவிர்க்கப் படவேண்டியது ; அத்தகையோரை உலகம் ' அறவிலை வணிகன் ' எனப்பழித்துக் கூறும். இத்தகைய நோக்கோடு அறப்பணி செய்வது கூடாது. சான்றோர்கள் நல்வழி எனக்கூறி அறப்பணி செய்து வருகின்றனர். அது ஒவ்வொரு மனிதனின் கடமை எனக் கருதி செய்து வருகின்றனர். எனவே, எல்லோரும் சுயநல நோக்கின்றி அறப்பணி செய்து வரவேண்டும் என்று கூறுவதற்குச் சான்றாக ஆய் அண்டிரன் மேற்கொண்ட

பணியைப் பாருங்கள் ' எனச்சான்று காட்டி விளக்குகிறார். இது நாட்டவர் வழக்குக்குப் பெருமை சேர்க்கும் விதமாக உள்ளதைக் காணலாம். இத்தகு அறப்பாடுகள் தமிழகத்தில் காலந்தோறும் உருவாகிப் போற்றப்பட்டு வந்துள்ளதைச் சங்க இலக்கியங்கள் எடுத்துக் காட்டுகின்றன. இவையே, காலப் போக்கில் அறம், பொருள், இன்பம் என வரையறுக்கப்பட்டன எனக் கூறுவாரும் உள். அறப்பாடுகளின் சிறப்பினைக் கண்டறிய புறநானூற்றில் பல கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன. அவற்றை ஆழ்ந்து கற்பார் அதன் மேன்மையை நன்கு புரிந்து கொள்ள இயலும் எனலாம்.[44]

இவ்வாறே, சட்டங்கள், விழுமங்கள், உடைமைகள், தகுதிப்பாடு, நிறுவனங்கள் எனக் கூறப்படும் அனைத்தும் சங்க காலச் சமூகத்தின் வெளிக்கட்டமைப்பிற்குப் பெரிதும் உதவின என்பதையும் சங்க இலக்கியங்கள் வாயிலாகத் தெளிவாகக் காணமுடிகிறது. அவை பிற சமூக அமைப்புகளின் சிறப்புகளைக் கண்டறியும் பொழுது வெளிப்படக் கூடியவை என்பதால், விரிவஞ்சி இங்கே குறிப்பிடாமல், தொடர்பான செய்திகள் விளக்கப்படும் பொழுது சுட்டிக் காட்டப்படும்.

## சமூகவியலார் கோட்பாடும் சங்கத் தமிழ்ச் சமூகமும்

சமூகவியல், சமூக நிறுவனங்கள், அமைப்புகள் போன்றவற்றில் மக்கள் எவ்வாறு அமையப் பெற்றுச் செயல்படுகின்றனர் என்றும், அவர்களின் நடத்தை அக்குழுவினுள் அல்லது நிறுவனங்களுக்குள் எவ்வாறு செயல்படுகின்றது என்றும் ஆராய்ந்து அறிந்து கூறுவதாகும். சமூகத்தைக் குழுக்களாகப் பகுத்து ஒவ்வொரு பகுதியையும் முழுமையாக ஆராய முற்படுகின்றது. சான்றாகக் குடும்பம், பல்வேறு குழு அமைப்புகள், நாடு போன்ற பிரிவுகளின் அடிப்படையில் சமூகவியல் சமூகத்தினை ஆராய்கின்றது. இஃது சமூக நடத்தையினைத் திட்டவட்டமான குழு நடத்தையாகவே காணுகிறது. சமூக உளவியலோ தனிமனிதனின் ஒவ்வொரு நடத்தையையும் அந்தச் சமூக அமைப்பில் எவ்வாறு இருக்கிறது

என ஆராய்வதாகும். இவ்வகையில், சமூகத்தினது ஆய்விற்கு உகந்த பொருளாக ஏற்றுக் கொண்டிருப்பதில் இவையிரண்டும் மிக நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளன. எனவே, இவையிரண்டும் ஒரே நாணயத்தின் இருபக்கங்களாகக் கருதப்படுகின்றன. சமூகம் என்பது பல்வகைப்பட்ட மக்கள் ஒன்று கூடிவாழும் ஒரு கூட்டமைப்பாகும். உளவியல் என்பது உள்ளத்தையும், அதன் அகவழிச் செயலையும், அதன் தூண்டுதலில் செயற்படும் புறச்செயல்களையும், அவற்றின் விளைவால் ஒருவனிடம் ஏற்படும் நடத்தையையும் விரிப்பது.[45]

சங்க இலக்கியங்கள் எனப்படும் பத்துப்பாட்டு எட்டுத் தொகை நூல்களுள் சுட்டிக் காட்டப் பெறும் பல கருத்துக்கள் சமூகக் கோட்பாட்டிற்குக் கட்டுப்பட்டவையாகவே இருப்பதைக் காணலாம். சமூக வளர்ச்சிக்கும் அமைப்பிற்கும் ஏற்ப நாட்டின் நிலம் விரிவு படுத்தப்பட்ட தென்பதைப் பட்டினப் பாலை தெளிவாகக் கூறுகிறது.

' காடுகொன்று நாடாக்கிக்
குளந்தொட்டு வளம் பெருக்கிப்
பிறங்குநிலை மாடத் துறந்தை போக்கிக்
கோயிலொடு குடிநிறீஇ '

*- (பட்டினப்பாலை - 283 - 286)*

'நிலம் மனிதனின் வாழ்க்கைத் தோட்டம் ; இயற்கைப் பின்னணி மனித வாழ்வின் உயிரோட்ட மாகியது. எனவே, நிலத்துடன் இணைந்த மனிதனுடைய வாழ்வு ; அதனைக் காலம் கட்டுப் படுத்துகின்றது. எனவே, வரலாற்றுக்குக் காலவரை முறையும் நில இயலும் இரு கண்களுக்கு ஒப்பானவை ; சந்திரனையும் கதிரவனையும் போன்றவை என்றார் ரிச்சொர்டு ஹேக்கிலியூட். மனித வாழ்வு நிலத்துடன் பின்னிப்பிணைந்துள்ளது. அவனுடைய வாழ்வின் வளமும் - வறட்சியும், வளர்ச்சியும் - தளர்ச்சியும் , பீடும் - சிறுமையும், ஏற்றமும் - வீழ்ச்சியும், நகைப்பும் - ஏக்கமும், ஒளியும் - இருளும் நில இயல் கூறுகளின் பின்னணியைப்

பொறுத்திருக்கின்றன .' [46] எனக் கூறுவர். பழந்தமிழக நானிலங்களில் வாழ்ந்த மக்களின் அடிப்படையே நிலங்களால்தான் உறுதி செய்யப்பட்டன.

மாங்குடி மருதனார் இயற்றிய மதுரைக்காஞ்சி, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை முதலானவற்றின நிலவளமும் மக்கள் வாழ்வும் விரித்துரைக்கப்பட்டுள்ளன. இவற்றின் இறுதியில் மூவகை நிலையாமை பற்றிய செய்திகளும் கூறப்பட்டுள்ளன.

'வியன்மேவல் விழுச் செல்வத்து
இருவகையான் இசை சான்ற
சிறுகுடிப் பெருந்தொழுவர்
குடிகெழீ இய நானிலவரொடு
தொன்று மொழிந்து தொழில் கேட்ப'

- (மதுரைக் காஞ்சி - 120-124)

என்றும்,

'மருதம் சான்ற தண்பணை சுற்றி',
'மணிமருள் நெய்தல் உறழ'
'முல்லை சான்ற புறவணிந்து'
'கருங்காற் குறிஞ்சி சான்ற வெற்பு'
'பாலை சார்ந்த சுரஞ்சேர்ந்து'

என்றும்,

' நன்றுந் தீதுங் கண்டாய்ந் தடக்கி
அன்பும் அறனும் ஒழியாது காத்து
பழியொரீஇ உயர்ந்து பாய்புகழ் நிறைந்த'

- (மதுரைக் காஞ்சி - 496-498)

என்றும்,

'வியப்புஞ் சால்புஞ் செம்மை சான்றோர்
பலர்வாய்ப் புகரறு சிறப்பிற் தோன்றி
அரியதந்து குடியகற்றிப்
பெரிய கற்று இசை விளக்கி
முந்நீர் நாப்பண் ஞாயிறு போலவும்
பன்மீன் நடுவண் திங்கள் போலவும்
பூத்த சுற்றமொடு பொலிந்தினிது விளங்கிப்
பெய்யா நல்லிசை நிறுத்த'

- (மதுரைக் காஞ்சி - 764 - 771)

என்றும் கூறியிருப்பதைக் காணலாம்.

தனி மனிதனின் விருப்பங்களுக்கும் சமூக மதிப்புகளுக்கும் இடையே உள்ள இசைவே சமூக அமைப்பு எனப்பெறும். தனி மனித விருப்பதிற்கும் சமூக மதிப்பிற்கும் இடையே இடைவெளி தோன்றும் போதும், இசைவு இன்மை தோன்றும் போதும், பெருகும் போதும், சமூக ஒழுங்கு குலைகிறது. இத்தகு குறைபாடுகள் மக்களிடையேயும் குழுக்களிடையேயும் காணப்படும். உடன்பாட்டு இன்மையை, ஒத்துப் போகாமையைக் காட்டுகிறது. தலைமுறை தலைமுறையாகச் சமூகத்தில் பின்பற்றப்பெறும் நெறிமுறைகள் அதிகக்கட்டுப்பாட்டை உருவாக்கும் பொழுது இத்தகு குலைவு ஏற்படுகிறது எனக் கூறுவர்.[47]

இதற்கு, சங்ககால சமூகத்திலிருந்த கைக்கிளை, பெருந்திணை, பரத்தமை முதலான எதிர்மறைப் பழக்கவழக்கங்களைச் சுட்டிக்காட்டலாம். இவை சமூகஉளவியல் சார்பாகக் குறித்து விளக்கம் பெறும் கூடாஒழுக்கங்கள் எனலாம். 'சமுதாயப் பண்பாட்டு உணர்வுக்கு ஒவ்வாத பாலியல் விழைவுகள், குறிகள், பாலுறவுச் செய்கைகள், அதிகார ஆதிக்க ஆசைகள், அவை

தொழிற்படும் கொடூரமான காட்சிகள் போன்றவற்றை அடிமனம் கட்டுப்பாடற்ற நிலையில் அடிமன எல்லைக்குள் தள்ளுகிறது. இவ்வாறு தள்ளுமிடத்து, ஆசைக்குறிகளைச் சுருக்கி உருவமாக்கியும், ஒன்றை மற்றொன்றாக மாற்றியும், சிறியதைப் பெரியதாக்கியும், பெரியதைச் சிறியதாக்கியும், மேலதைக் கீழதாகவும், கீழதை மேலதாகவும், மாற்றியமைத்தும், சிலவற்றைத் தொகுத்தும் சிலவற்றைக் கவர்படு பொருளாக மயக்கியும், ஒப்பனவற்றை உறழ்ந்து காட்டியும், முரண்பட்டவற்றை ஒப்பாக்கியும் இன்ன பிறவெல்லாம் செய்து ஏதோ ஒரு பொருள் தருவதுபோல் மாற்றியமைக்கிறது'[48] என்பது உளவியல் கோட்பாடாகும். தொல்காப்பியர் கூறும் இலக்கணநெறிகளோடு இதனை ஒப்பிட்டுக் கண்டு உணரும் செய்திகள் இலக்கியத்திலும் இடம் பெற்றுள்ளன என்பதை அறிந்து படித்துச்சுவைக்கலாம்.

முதலில் கைக்கிளைத் தொடர்பான செய்திகளைக் கண்டுணரலாம். தொல்காப்பியர் அகத்திணையியலில் இதன் தொடர்பானவற்றை ஒரு நூற்பாவில் கூறுவர்.

'காமஞ் சாலா விளமை யோள்வயின்
ஏமஞ் சாலா இடும்பை எய்தி
நன்மையும் தீமையும் என்றிரு திறத்தால்
தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்துச்
சொல்லெதிர் பெறாஅன் சொல்லி இன்புறல்
புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே'

*- (தொல்; பொருள் ; அகம் ; நூ.50)*

இதற்கு நச்சினார்க்கினியர், 'காமக்குறிப்பிற்கு அமைதியில்லாத இளமைப் பிராயத்தாள் ஒருத்தி கண்ணே, ஒரு தலைவன் இவள் எனக்கு மனைக்கிழத்தியாக

யான்கோடல் வேண்டுமெனக் கருதி, மருந்து பிறிதில்லாப் பெருந்துயரெய்தி, தனது நன்மையும், அவளது தீங்கையுமென்கின்ற இரண்டு கூற்றான் மிகப்பெருக்கிய சொற்களைத் தன்னோடும் அவளோடுங் கூட்டிச்சொல்லி, அச்சொல்லுதற்கு எதிர்மொழி பெறாதே பின்னுந்தானே சொல்லி இன்புறுதல், பொருந்தித்தோன்றும் கைக்கிளைக்குறிப்பு' என விளக்கம் செய்வர்.

இதற்குச்சான்று கலித்தொகையில் மிகுதியாக இருப்பதாகக் கூறுவர். கபிலர் இயற்றிய **25**ஆம் கலிப்பாடலின் இடையே இத்தகு கைக்கிளைக் குறிப்பு காணப்படுகிறது. கபிலர், தோழி வாயிலாக இக்கைக்கிளைக் குறிப்பை நமக்குப்புலப்படுத்துகிறார். இஃது இயற்கைப்புணர்ச்சிக்கு முன் வெளிப்படும் கைக்கிளைக்குறிப்பு எனலாம்.

'இவள் தந்தை,

*காதலின் யார்க்குக் கொடுக்கும் விழுப்பொருள் யாது நீ வேண்டியது?*
*பேதாஅய் பொருள் வேண்டும் புன்கண்மை ஈண்டில்லை*
*யாழ் மருளி மட நோக்கிநின்தோழி என்னை*
*அருளீயல் வேண்டுவல் யான்'*

- *(குறிஞ்சிக்கலி-25)*

தோழி, 'இவளுடைய தந்தை, தன்னிடம் வந்து இரப்பவர்கள் மேல் கொண்ட விருப்பத்தால், எவருக்கும் எதுவும் வழங்குவான். உனக்கு வேண்டியது என்ன? சொல்' எனவினவ, தலைவன், 'பேதைப் பெண்ணே! பொருள் கேட்டுப் பெறவேண்டிய கீழ்நிலை எனக்கு இல்லை. உன்தோழி, எனக்கு அருள் வழங்க வேண்டியான் நிற்கின்றேன் ' என்று தம் விருப்பத்தைக் கூறி நிற்கிறான். பாடல் முழுவதும், இத்தகு கைக்கிளைக்குறிப்பு வெளிப்படுவதைக் காணலாம்.

இவ்வாறே, பெருந்திணைக்கு உரியவற்றையும், பரத்தமைக்கு உரியவற்றையும் தனித்தனியே கூறுவர். [49]

சங்க இலக்கியங்களில் பாலை மறவர் பற்றிய செய்திகளும் இடம்பெற்றுள்ளன. இதுவும் சமூக ஒழுக்கத்தின் பிறழ்வுக்கு இடமளிக்கும் உளவியல் பாங்கு என்றே அறிஞர் கூறுவர். 'மக்கள் இயல்பிற்கும் அவர் வாழ்ந்த மண்ணின் இயல்பிற்கும் தொடர்புண்டு. உணவு, உடை, உறையுள் எனும் இம்மூன்றும் நிறைவு பெற்ற பின்னே சிறப்பாக வாழ்வது பற்றிச் சிந்திக்க முடியும். பாலைநிலத்து மக்களுக்கு இவை மூன்றையும் அடைவதற்கே போராட்டமாக இருந்தது. இதற்கு அவர்கள் வாழ்ந்த நிலமும் சூழ்நிலையுமே காரணமாகும். இந்நிலையில் அவர்கள் உயர்ந்த எண்ணங்களைக் கொண்டு சிறந்த செயல்களைச் செய்து திருந்திய வாழ்க்கை நடத்த இயலாதிருந்தது ' [50] எனக் கூறுவதும் சமூக உளவியல் கோட்பாடேயாகும்.

இரும்பிடர்த் தலையார் பாண்டிய மன்னனைப் புகழ்ந்து பாடும் பொழுது, அவனுக்குப் பாலைமறவர் கொடுஞ்செயலையும், அதிலிருந்து இரவலர் தப்பித்து வந்து உம்மைப் பார்த்துப் பரிசு பெற வந்தனர். அவர்க்கும் பரிசு வழங்கி மகிழ்வித்து, பெருமை பெற்றவன் எனக் கூறிப் பாராட்டுகிறான்.

'ஊரில்ல உயவரிய
நீரில்ல நீளிடைய
பார்வ லிருக்கைக் கவிகண் ணோக்கிற்
செந்தொடை பிழையா வன்க ணாடவர்
அம்புவிட வீழ்ந்ததோர் வம்பப் பதுக்கைத்
திருந்துசிறை வளைவாய்ப் பருந்திருந் துயவும்
உன்ன மரத்த துன்னருங் கவலை

நின்னசை வேட்கையின் இரவலர் வருவரது
முன்ன முகத்தி னுணர்ந்தவர்
இன்மை தீர்த்தல் வன்மை யானே'

- *(புறம் - 03)*

'ஊரில்லாதனவும் பொறுத்தற்கரிய உயங்குதலையுடையனவும், நீரில்லாதனவும், நீண்ட வழியானவுமாகிய வம்பலரை நலியச் சேய்மைக் கண்ணே பார்த்திருக்கும் இருப்பினையும், கையாற் கவிக்கப்பட்ட கண்ணாற் குறித்துப் பார்க்கும் பார்வையையும், செவ்விய தொடை பிழையாத தறுகண்மையையுமுடைய பாலை மறவர், தாம் அம்பை விடுதலாற் பட்டோரது, உடல் மூடிய புதிய கற்குவையின் மேலே, திருந்திய சிறகினையும் வளைந்த வாயினையுமுடைய பருந்த இருந்து வருந்தும், உன்ன மரத்தினை உடைய அணுகுதற்கரிய கவர்த்த வழியின் கண்ணே, நின்பால் நச்சிய விருப்பத்தால் இரப்போர் வருகுவர்' எனக் கூறுவார் புலவர். இத்தகு சமூக முரண்பாடுகள் ஒரு சமூகத்தில் அமைவது இயல்பே எனச் சமூகவியலார் கூறுவர்.

### அரசியலார் கோட்பாடும் சங்கத் தமிழ்ச் சமூகமும்

'அரசின் அடிப்படைக் கூறுகள் அன்றைய குடும்பங்களின் கட்டுப் பாட்டில் ஆரம்பமாயின. குடும்பத் தலைமையிலிருந்து நாட்டின் தலைவனாக, அஃதாவது, அரசனாக வளர்ச்சியுற வெகுகாலம் பிடித்திருக்கவேண்டும். மக்கள் நாடோடிகளாக இருந்தபோது நிலவிய அமைப்புப் பழங்குடி இனத்தவரின் தேவைகளைப் பூர்த்தி செய்வதாக இருந்தது. ஆனால், அவர்களின் நாடோடி வாழ்க்கை முடிந்து நிலையான வாழ்க்கை ஆரம்பமான போது புதியதொரு அமைப்பு அவசியமாயிற்று. மக்களனைவரும் ஒரே இடத்தில் வசித்த போது





வளர்ந்து வந்த தேவைகள் அரசாட்சியிலிருந்து பிரதேச ஒற்றுமை வளரக் காரணமாயின.' [51] என்று அரசு தோன்றக் காரணமாக இருந்த சமூகச் சூழலை அரசியலார் எடுத்துக்காட்டுவர்.

'பகைக் குழுக்களின் மோதல், உணவு நெருக்கடி ஆகியனவும் சிலரைத் தலைவராகமுன் நிறுத்திவிடும். இவ்வாறு வரும் தலைவர்கள் நிலையாகத் தலைவராக நீடித்து விடுவதும் உண்டு. இத்தலைவர்களை ஒட்டியே அரசு என்னும் நிறுவனம் மெல்லப் படருகிறது. அரசு மனிதருடைய முக்கியத் தேவைகளுக்காக இருக்கிறது ; மனிதனுடைய நல்வாழ்க்கைக்காகத் தொடர்ந்து இயங்குகிறது. மனிதன் முதலில் குடும்பத்தையும், இரண்டாவதாகச் சமூகத்தையும், மூன்றாவதாக அரசையும் சார்ந்து இருக்கிறான். சமூகம் சிக்கலாக இயங்கத் தொடங்கும் போது அரசின் இன்றியமையாமை முதன்மை பெறுகின்றது ' [52] எனத் திறனாய்வாளர் கூறுவர்.

அரசு, அரசாங்கம், அரசியலமைப்பு ஆகியவை சங்கிலித் தொடர் போல நன்கு அமைந்துவிட்டால் மக்களுக்கு நல்ல பாதுகாப்பாக அமையும். உரிமை பற்றிய உயர்ந்த பண்பான ஓர் உணர்வு மாற்றமே அரசு என ஹெகல் கூறுவர். தானே இயற்றிய சட்டங்கள் மூலம் மனித செயல்களைச் சட்டப்படி கட்டுப் படுத்தும் நிறுவனமே அரசாங்கம். இதனுடைய விதிகள் மற்ற சங்கங்களின் விதிகளிலிருந்து மாறுபட்டு, சட்டம் என்ற பெயரில் அழைக்கப்படுகிறது. இந்த நிறுவனத்தின் மூலமே அரசின் நடவடிக்கைகள் செயலாகின்றன. எந்தக் கோட்பாடுகளை வைத்து அரசாங்கத்தின் அதிகாரமும், ஆளப்படுவோரின் உரிமைகளும் அவர்களுக்கிடையேயுள்ள உறவுகளும் நிர்ணயிக்கப்படுகின்றனவோ அதற்கு அரசியலமைப்பு என்று பெயர்.

பல்வேறு வகையான கூட்டமைப்புகளில் அரசும் ஒன்று. எனவே, அரசும் சமூகமும் வெவ்வேறானவை. குடும்பம், வணிகம், தொழில், சமயம் போன்ற பல கூட்டமைப்புகள் சமூகத்தில் உள்ளன. இவை சமூக வாழ்வைப் பாதிக்கின்றன. ஆனால், இவை அரசால் உருவாக்கப்படுவதில்லை. வழக்கம், வழக்காறுகள் இவையும் பலமான சக்திகள். இவை அரசரால் உண்டாக்கப்படுவன அல்ல. இவை, சிறந்து விளங்கும் போது சில மாற்றங்களை அரசு ஏற்படுத்த முடியும். சமூகத்தின் ஓர் அங்கமாக இருப்பதால் அரசு சமூகத்தின் அரசியல் உணர்வை மற்றும் தன்மையைப் பிரதி பலிக்கிறது.

நடைமுறையில் ஒரே மக்களே அரசிலும், சமூகத்திலும் அங்கத்தினர்களாக உள்ளனர். பெரும்பாலான நேரங்களிலும் சமூகத்தின் பெரும்பான்மை உறுப்பினர்கள் ஒரே அரசின் கீழேயே உள்ளனர். எனவே, சமூகத்திற்கும், அரசிற்கும் உள்ள உறவு நெருக்கமானது. அவை இணைந்தே செயல்புரிகின்றன. ஒரு சமூகத்தின் மரபுகளாலும் வழக்காறுகளாலும் பாதிக்கப்படுகின்றன. ஒன்று மற்றொன்றிற்கு நிறைய பணியைச் செய்கின்றது. [53]

அரசும் அரசாங்கமும் அரசியலமைப்பும் செந்நெறி போற்றாது இருப்பின் சமூகம் எவ்வாறு கெட்டழியும் என்பதைப் பிசிராந்தையார் அரசியல் பிழைத்த பாண்டியன் அறிவுடை நம்பிக்கு எடுத்துக்கூறும் புறநானூற்றுப் பாடல் அரசியலார் கோட்பாட்டினை நன்கு புலப்படுத்தும்.

'காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே
மாநிறை வில்லதும் பன்னாட் காகும்
நூறுசெறு வாயினுந் தமித்துப்புக் குணினே
வாய்புகு வதனினுங் கால்பெரிது கெடுக்கும்
அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே

கோடி யாத்து நாடுபெரிது நந்தும்
மெல்லியன் கிழவனாகி வைகலும்
வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப வெடுக்கும் பிண்ட நச்சின்
யானை புக்க புலம்போலத்
தானு முண்ணான் உலகமும் கெடுமே.'

- *(புறம் - 184)*

'காய்ந்த நெல்லையறுத்துக் கவளமாகக் கொள்ளின் ஒரு மாவிற்குறைந்த நிலத்திற் கதிரும் பல நாளைக்காகும். நூறு செய்யாயினும் யானை தனித்துப்புக்கு உண்ணுமாயின், அதனது வாயின்கட் புகுந்த நெல்லினும் கால் மிகவும் கெடுக்கும். அப்பெற்றியே அறிவுடை அரசன். இறைகொள்ளும் நெறியை அறிந்து கொள்ளின், அவன் நாடு கோடிப் பொருளினையீட்டிக் கொடுத்துத் தானும் மிகவும் தழைக்கும். வேந்தன் அறிவால் மெல்லியனாகி நாடோறும் தரமறியாத உறுதி கூறாது அவன் விரும்புவதனையே தானும் கூறும் ஆரவாரத்தையுடைய சுற்றத்தோடு கூடி, அன்பு கெடக் கொள்ளும் பொருட்டொகுதியை விரும்பின், அந்த யானை புக்கபுலம் போலத்தானும் உண்ணப் பெறான் ; உலகமும் கெடும்.' என்று மாந்தர் - மன்னர் - அரசு - அரசாட்சி - ஆட்சியியல் பற்றிய அரசியல் கோட்பாட்டினை எதிர்மறையாக சான்றொன்றை எடுத்துக் கூறி விளக்கவதைக் காணலாம். கொடுங்கோன்மை பற்றிக் கூறிச் செங்கோன்மைக்கு வழிவகுக்கும் புதிய உத்தி இப்பாடலில் கையாளப்படுவதைக் காணலாம்.

**பொருளியலார் கோட்பாடும் சங்கத் தமிழ்ச் சமூகமும்**

'மனித சமுதாயம் என்பது மக்களின் தேவைகளுக்காகத் தோன்றியது. மிகத்தொடக்கக் காலத்தில் மக்கள் ஒரு குறிப்பிட்ட பகுதியில் ஒன்று கூடி வாழமுற்பட்டபோது அவர்களின் தேவையை ஈடு செய்ய ஒவ்வொருவரும் அவரவருக்குத் தெரிந்த வேலையைச் செய்து தேவைகளை நிறைவேற்றிக் கொண்டனர். இதனடிப் படையிலேயே உழவர்கள், நெசவாளர்கள், கருமார்கள், தச்சர்கள், வணிகர்கள், தொழிலாளர்கள், படைவீரர்கள், ஆட்சியாளர்கள் போன்ற பல்வேறு வகுப்பினர் தோன்றினர் என்பார் பிளேட்டோ.' [54] இதுதான் பொருளாதாரம் பற்றிய சிந்தனைக்குத் தோற்றமாகக் கருதப்படுகிறது. இதனடிப்படையில் பண்டமாற்றுமுறை முதன்முதலில் அறிமுகமாயிற்று. நாகரிக வளர்ச்சியால் சமூகம் வளரவளர ஆட்சியாளர் பணிகள் அதிகம் உருவாகத் தொடங்கின. அவற்றுள் அடித்தளமாக அமைந்தது பொருளாதார சிந்தனையே யாகும். 'பொருளில்லார்க்கு இவ்வுலகில்லை' என்ற எண்ணம் வலுப்பெற வலுப்பெற பொருளாதார சிந்தனையும், கோட்பாடும் தமக்குத் தாமே தோன்றி, வளர்ச்சியுற்று, காலப் போக்கில் சமூகத்தின் ஆணிவேர் பொருளாதாரமே என்ற நிலைக்கு வரவேண்டியதாயிற்று.

திருவள்ளுவர் இக்கருத்தை அடிப்படையாகக் கொண்டே 'பொருள் செயல்வகை' என ஓர் அதிகாரம் தனியாக அமைத்து, அக்காலத்தேவைக்கேற்ப பொருளாதாரக் கோட்பாட்டை உருவாக்கி வழங்கினார். ஒரு பொருளாக மதிக்கத் தகாத வரையும் மதிப்புடையவராகச் செய்வதாகிய பொருள் அல்லாமல், சிறப்புடைய பொருள் வேறு இல்லை எனக் கூறினார். அரசர்க்கு, இறையாக வந்து சேரும் பொருளும், சுங்கமாகக் கொள்ளும் பொருளும், தன்

பகைவரை வென்று திறையாகக் கொள்ளும் பொருளும் உரிமையுடையவை என்பார்.

'உறுபொருளும் உல்கு பொருளும்தன் ஒன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்'

*- (குறள் - 756)*

எனக்கூறி, பொருள் வரும் வழிகளை மேன்மேலும் இயற்றலும், வந்த பொருள்களைச் சேர்த்தலும், காத்தலும், காத்தவற்றை வகுத்துச் செலவு செய்தலும் வல்லவன் அரசன் எனக்கூறுவர்.

'இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த
வகுத்தலும் வல்லது அரசு'

*- (குறள் - 385)*

என்றார். அக்காலத்துப் பொருளாதாரம், வாழ்க்கைக்குத் தேவைப்படும் அனைத்தின் அடிப்படையில் பல்வகைக் கோட்பாடாக உருவாயிற்று.

'அறம் பொருள் இன்பம் வீடடைதல் நூற்பயனே' எனக் கூறிப் பொருளாதார வளர்ச்சிக்குத் தமிழ் நூல்களும் வழிவகுக்குமாறு பழந்தமிழர் செய்திருந்தனர். இற்றைய பொருளாதார கோட்பாட்டிற்கும் பழைய தமிழர்தம் பண்பாட்டோடு இணைந்து வளர்ந்த பொருளாதாரக் கோட்பாட்டிற்கும் வேறுபாடுகள் மிகுதியே. இருப்பினும், அடிப்படை ஆதாரம் ஒன்றாகவே உள்ளது. நிலம், தொழில், வணிகம், வரிவகைகள் ஆகியவையும், அரசின் நிதி நிலையும் - அறிக்கைகளும்தான் பொருளாதாரத் தேவைக்கும், பூர்த்தி செய்வதற்கும், வளர்ச்சிக்கும், பங்கீட்டு முறைக்கும், நல்வாழ்விற்கும் அடித்தளமிட்டன எனலாம். இத்தகு பொருளாதாரத்திற்கு ஏற்றுமதியும், இறக்குமதியும் நல்லூற்றுகளாக இருந்ததையும் காணமுடிகிறது. பண்டைய

தமிழகப் பொருளாதார மேம்பாட்டிற்கு கடல் வழி வணிகம் நன்கு துணை புரிந்ததென்பர்.

'திரைகட லோடியுந் திரவியம் தேடு' என்பது மூதுரை. காலத்தால் பிற்பட்டதாயினும் பழந்தமிழரின் வாழ்க்கைப் பண்பாடுகளுள் ஒன்றை இது தெற்றென விளக்குகின்றது. பண்டைத் தமிழர்கள் சோம்பித் திரிந்தவர்கள் அல்லர்; உழைத்து உழைத்து வாழ்க்கையில் இன்பங்காணுவதிலேயே கண்ணுங்கருத்துமாய் விளங்கியவர்கள். அவர்கள் மலைகளுடனும், காடுகளுடனும், கடலுடனும் கலந்து உறவாடினார்கள். மேற்கே கிரீஸ், ரோம், எகிப்து முதல் கிழக்கே சீனம் வரையில் கடலோடிப் பிழைத்தார்கள். எகிப்து, பாலஸ்தீனம், மெசப்பொடோமியா, பாபிலோனியா ஆகிய நாடுகளுடன் பண்டைய தமிழர்கள் வாணிகத் தொடர்பு வைத்துக் கொண்டிருந்தனர் ' [55]

'ஒரு நாட்டு மக்கள் கடல் கடந்து சென்று அயல் நாடுகளில் தங்கி வாணிகம் செய்து வர வேண்டுமாயின் அந்நாட்டில் உள்நாட்டு வாணிகம் மிகவும் செழிப்பான முறையில் நடைபெற்று வந்திருக்கவேண்டும் என்பதில் ஐயமில்லை; எனவே, தமிழகத்தின் உள்நாட்டு வாணிகம் செழித்தோங்கியிருந்தது எனலாம். தமிழகத்து வணிகர்கள் கூட்டங் கூட்டமாகக் கூடிக் கொண்டு வண்டிகளிலும் பொதிமாடுகளின் மேலும் தம் பண்டங்களை ஏற்றிச் சென்று ஊரூராக விலை கூறுவர். இதற்குச் சங்க இலக்கியத்தில் சான்றுகள் மலிந்து கிடக்கின்றன. ' [56]

சான்றாகப் பட்டினப்பாலை கூறும் செய்திகளைப் பற்றிச் சிந்திப்பது நன்று. தமிழகப்பழைய ஏற்றுமதி - இறக்குமதி வணிகத்தின் சிறப்பை நன்கு படம் பிடித்துக் காட்டுகிறது. 'முகில் தான் முகந்த நீரை மலையிடத்தே பொழியவும், மலையிற் சொரிந்த நீர் கடலிலே புகாநிற்பமும், மாரிக்காலத்தே

பெய்யா நின்ற செவ்வி போன்று, நீரினின்று நிலத்து ஏற்றவும், நிலத்தினின்று கடலின்கண் மரக்கலங்களிலே பரப்பப்படுவனவுமாகிய நெஞ்சாலே அளந்து அறிதற்கு அரிய பல்வேறு பண்டங்களும் எல்லையின்றி வந்து குவிந்து கிடப்ப, அவற்றை கிட்டுதற்கரிய மிகப்பெரிய காவலமைந்த சுங்கச் சாவடியிலே, கள்வரைப் பெரிதும் வருத்தும் தன்மையுடைய இலச்சினைப் பொறிப்போன், சோழமன்னன் அடையாள இலச்சினையாகிய புலி இலச்சினையிட்டுப் புறத்தே போக்கப்படுதலானே, மதித்தறியப் பட்டனவாகிய பல்வேறு பண்டங்களையும் பொதிந்தடுக்கிய மூட்டைகளாகிய குவியல் காவிரிப் பூம் பட்டினத்துக் கடற்கரையில் இருந்தன.'[57] அறத்தோடு வரும் பொருள்களே சிறந்ததென்ற அறவழிப் பொருளியல் கோட்பாடு மானுடத்தை மையமாக் கொண்டதென வள்ளுவம் கூறும் [58]

## வரலாற்றியல் கோட்பாடும் சங்கத்தமிழ்ச் சமூகமும்

*'சமுதாயத்தின் வரலாற்றியக்கத்தின் பதிவேடாகவும், வரலாற்று நிகழ்வுகளின் ஆவணத் தொகுதியாகவும் வரலாறு அமைகின்றது. வரலாறு சமுதாயத்தைப் பற்றியது ; மானுடத்துக்கும் கால உறவுக்குமுள்ள தொடர்பைப் பதிவாக்குவது என்றும், இத்தகு வரலாற்றுப் பதிவுகள் ஏராளமாக இலக்கியங்களில் இடம் பெற்றிருக்கின்றன. உரோமானியப் பேரரசர் அகத்தசு சீசருடைய முடிசூட்டுவிழா (கி.மு.18) வுக்கு பாண்டிய மன்னனுடைய தூதுவர்கள் சென்றமை, கி.மு. நாலாம் நூற்றாண்டில் மகதநாட்டையாண்ட நந்த மன்னனுடைய தலைநகரான பாடலி புத்திரத்துடன் சங்கப்புலவர் தொடர்பு கொண்டமை, கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் தமிழ் மன்னர்கள் பாதுகாவல் கூட்டமைப்பு உருவாக்கியமை, மௌரியப் பேரரசர்கள் தமிழகத்தைத்*

தங்களுடைய பேரரசில் இணைக்க இயலாது போனமை, மகதநாட்டு நந்தர் மௌரியர் மன்னர்களுக்குச் சமமாக ஆட்சி புரிந்து வந்தமை முதலான வரலாற்று உண்மைகள் கடைச்சங்கத் தமிழ்இலக்கியங்களில் தக்க ஆதாரத்துடன் இடம் பெற்றுள்ளன' என்றும் கூறுவர். [59]

'வரலாற்று நூல் என்றால் ஆட்சிப் பீடத்திலிருக்கும் அரச குடும்பங்களின் செய்திகளையும் போர்கள் பற்றிய செய்திகளையும் சில பல தேதிகளையும் தரும் என்று கருதிய காலம் மலையேறிவிட்டது. சமுதாய வரலாறே - மக்கள் பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், குறிக்கோள்கள், பண்பாட்டு உணர்வுகள் ஆகியவற்றைத் தரும் சமுதாய வரலாறே உண்மையான வரலாறு என்ற கருத்தே இன்றைய அறிஞர் உலகினரால் போற்றப்படுகிறது. இவ்வகையில் புறநானூற்றுப் பாடல்கள் மிகவும் உதவும் என்பது உறுதி' [60] என ம.ரா.போ. குருசாமி கூறுவதையும் நினைவிற் கொண்டு சங்க இலக்கியங்களை ஆராயின், வரலாற்றியல் கோட்பாடுகள் நல்ல தமிழ்ச் சமூகம் அமையவும் உதவியுள்ளன எனத் தெரியவரும்.

பேராசிரியர். கே.கே. பிள்ளை மிகச் சிறந்த வரலாற்றுத் திறனாய்வாளர் ஆவர். அவர், 'தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும்' என்று ஒரு சிறந்த நூல் எழுதியுள்ளார். அதில், அவர் வரலாற்றியல் கோட்பாடுகளை முன் வைத்துதான் தமிழக வரலாற்றைப் படைத்துள்ளார். அதற்குத் துணை நின்ற அடிப்படை ஆதாரங்கள், மேற்கொண்ட ஆய்வு நெறிமுறைகள், இலக்கியங்கள், வெளிநாட்டார் குறிப்புகள், வணிகத் தொடர்புகள், கல்வெட்டுகள், செப்பேடுகள் பற்றி விரிவாக எடுத்துக் கூறுவர். அதில், அவருக்குப் பேருதவியாக இருந்தவை சங்க இலக்கியங்களே என்பதை விரிவாக எடுத்தியம்புவர்.

ஓரிடத்தில்,

'பண்டை தமிழகத்தின் வரலாற்றை அறிவதற்குத் துணைபுரியும் புறச் சான்றுகள் வெகுசிலவே. எனவே, அகச்சான்றுகளை நாடும் தேவை நேரிடுகின்றது. இவ்வகச்சான்றுகள் அத்தனையும் சங்க இலக்கியங்களுக்குள் கிடைக்கின்றன. எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்னும் தொகைகளில் சேர்க்கப்பட்டுள்ள இலக்கியங்கள் சங்க இலக்கியங்கள் எனப்பெயர் பெற்றுள்ளன' [61] என்று குறிப்பிடுவர்.

'தமிழ் வளர்க்கும் சீரிய நோக்கத்துடன் பண்டைய காலத்துப் பாண்டிய மன்னர்கள் தமிழ்ப் புலவர் பலரையும் ஒன்று கூட்டித் தமிழ்ச் சங்கங்களை நிறுவித் தமிழுக்கு ஏற்றம் புரிவித்தார்கள் என்றும், இறையனார் அகப்பொருள் உரையாசிரியர், தம் உரையில் தலை, இடை, கடைச் சங்கங்களின் வரலாற்றைச் சுருக்கிக் கூறியுள்ளார்'[62] எனப் பிறிதோர் இடத்தில் கூறுவர். தலை, இடைச் சங்கங்களின் நூல்கள் மறைந் தொழிந்தன எனக் கூறும், இவர், கடைச் சங்க இலக்கியங்களைப் பற்றிய வரலாற்றுண்மையைத் தனித்து எடுத்துக் காட்டுவர்.

'சங்க இலக்கியங்கள் கி.பி. இரண்டாம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டவையல்ல என்பதற்கு அவ்விலக்கியங்களிலேயே அகச்சான்றுகள் கிடைக்கின்றன. சிங்களத்து மன்னனான கயவாகுவும் சேரன் செங்குட்டுவனும் உடன் காலத்தவர் என்பதற்குச் சிலப்பதிகாரம் சான்று பகர்கின்றது. இதைக் கொண்டு சேரன் செங்குட்டுவன் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் விளங்கியவன் என அறிகின்றோம். காலத்தால் இம்மன்னனுக்கு முற்பட்ட சேர மன்னரைப் பற்றியும் பல பாடல்கள் சங்க இலக்கியத்தில் தொகுக்கப்பட்டுள்ளன. ஆகையால், சங்கப் பாடல்கள் பல கி.பி. இரண்டாம் நூற்றாண்டுக்கு முன்பே இயற்றப்பட்டிருக்க வேண்டும் என்பது புலனாகின்றது'. [63]

சங்க இலக்கியங்கள் சமூக நிகழ்ச்சிகளையும், மக்கள் வாழ்வியலையும் விளக்கும் பொழுது பற்பல வரலாற்றுக் குறிப்புகளை உவமைகளாகவும், உருவகங்களாகவும், சான்றுகளாகவும் இடம் பெறச் செய்துள்ளனர். அவை வரலாற்றியில் கோட்பாட்டிற்குட்பட்டு, தமிழ்ச் சமுதாயத்தைப் படம் பிடித்துக் காட்டுவதைக் காணலாம். சான்றுகள் சில :

'மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்படப்
புலியொடு வில்நீக்கிப் புகழ்பொறித்த கிளர்கொண்டை
வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்'

- *(முல்லைக்கலி ; 04 ; 1-4)*

'நிரைபல குழீஇய நெடுமொழிப் புல்லி
தேன்தூங்கு உயர்வரை நன்னாட் டும்பர்
வேங்கடம் இறந்தனர் ஆயினும் ஆண்டவர்'

- *(அகம் ; 393 ; 18-20)*

'குல்லைக் கண்ணி வடுகர் முனையது
வல்வேற் கட்டி நன்னாட் டும்பர்'

- *(குறுந் ; 11 ; 05-06)*

தமிழகம் பன்னூறு ஆண்டுகள் பாண்டி நாடு, சோழநாடு, சேரநாடு, கொங்குநாடு முதலிய அரசியற் பிரிவுகளுக்குட்பட்டுக் கிடந்ததற்கு அதன் இயற்கையமைப்புதான் காரணம். பல சமவெளிகளில் வாழ்ந்த மக்கள் ஆங்காங்குத் தனித்தனி நாட்டு மக்களாகவே வாழ்ந்து வந்தனர். மிகப்பெரிய நாடுகளான பாண்டிநாடு, சோழநாடு, சேரநாடு, கொங்குநாடு, தொண்டை நாடு ஆகிய நாடுகள் தனித்தனியாக அமைந்திருந்தன. இவையேயன்றி,

அதியமான்களும், ஆய்களும், மலையமான்களும், வேளிர்களும் ஆண்டு வந்த குறுநாடுகள் பலவும் தனியரசுகளாகவே இயங்கி வந்தன. காட்டு நாடு, பாரிநாடு, கோனாடு, முக்காவல் நாடு, வேங்கடநாடு முதலிய நாடுகளும் புறநானூற்றில் குறிப்பிடப்பட்டுள்ளன.[64] இருப்பினும் சமூகம் இயற்கையோடு இயைந்த வாழ்வைப் பெற்று குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் முதலான திணைக்குரிய வாழ்வைப் பெற்று பழக்கவழக்கங்களிலும், மரபுகளிலும், நம்பிக்கைகளிலும் பெரிதும் ஒன்றுபட்டே வாழ்ந்துள்ளனர் என்பதைத்தான் சங்க இலக்கியங்கள் எடுத்துக் காட்டுகின்றன.

## உளநூலார் கோட்பாடும் தமிழ்ச்சமூகமும்

மெக்டூகல் மற்றும் ராஸ் எனப் புகழ் பெற்ற சமூக உளவியலார் பல ஆய்வுகளைக் கொண்டு சமூக உளவியல் கருத்துக் கோட்பாடுகளை உருவாக்கினர். மற்றவர்கள் பார்த்துக் கற்கும் இயல்பூக்கம், இணைந்து வாழும் இயல்பு, கருத்தேற்றம், ஆதிக்கம் போன்றவற்றைக் கோட்பாடுகளாக எடுத்துக் கொண்டு அதன் மூலம் சமூக நடத்தையை விளக்க முயன்ற பலர் பலவகைக் கோட்பாடுகளைச் சமூக நடத்தைக்கான காரணிகளாக ஊகித்துக் கூறியுள்ளனர். இவை சமூக உளவியலின் கருத்துக் கோட்பாடுகள் என அழைக்கப்படுகின்றன.

அவை :

1. இன்பியல் கோட்பாடு
2. தன்னலக் கோட்பாடு
3. இரக்கவுணர்ச்சிக் கோட்பாடு
4. போலிப் பாவனை கோட்பாடு
5. கருத்தேற்றம் [65]

எல்லா நேரங்களிலும் மனிதன் ஏதாவது ஒரு நோக்கத்தின் பால் நடத்தைக்கு உட்படுகிறான். அந்த நோக்க வெற்றியின் இறுதியில் கிட்டும் மகிழ்ச்சியைச் சுவைப்பதற்கே ஒருவன் அவ்வாறான நடத்தைக்கு உட்படுகிறான். இதுவே, இன்பியல் கோட்பாடு. கடியலூர் உருத்திரங்கண்ணனார், பட்டினப்பாலையில் அறிமுகப்படுத்தும் தலைவன் கூறும்,

'முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்
வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய
வாரேன் வாழிய நெஞ்சே ......'

- *(பட்டினப்பாலை ; 218-220)*

'அரிமா அன்ன அணங்குடைத் துப்பின்
திருமா வளவன் தெவ்வர்க் கோக்கிய
வேலினும் வெய்ய கானமவன்
கோலினுந் தண்ணிய தடமென் தோளே'

- *(பட்டினப்பாலை ; 298-301)*

என்னும் கூற்றுக்களை இந்த இன்பியல் கோட்பாட்டிற்குரிய சான்றாகக் காட்டலாம்.

தலைவன், 'குறைவுபடாத எல்லாச் சிறப்புக்களையும் பெற்ற காவிரிப்பூம்பட்டினத்தை எனக்கு உரிமையாகப் பெறுவேனாயினும், நீண்ட கரிய கூந்தலையும் அணிகலன்களையும் உடையவள் ஈண்டு பிரிந்திருக்க, நான் பொருள் ஈட்டும் நோக்கோடு இருக்கும் நெஞ்சே, உனக்கு உடன்பட்டு உன்னுடன் வாரேன். ஏனெனில், சிங்க ஏற்றை ஒத்துப் பகைவரை வருத்தம் செய்கின்ற வலியினை உடைய திருமாவளவன் என்னும் வேந்தன், தன் பகைவர்மேல் எறிந்த அச்சந்தரும் கூர்மையான வேலினைக் காட்டிலும்

கொடியது நாம் செல்லக் கருதிய காடு. அந்தத் திருமாவளவனின் செங்கோலைக் காட்டிலும் குளிர்ச்சியாக இருப்பது, யான் இன்பம் துய்க்க இடமளித்த எம் தலைவியின் குளிர்ந்த மெல்லிய தோள்கள்' என்று கூறிப் பேரின்பம் பெறுகிறான்.

தாய் தந்தையர் தங்களின் இறுதிக் காலத்தில் தங்களைக் காப்பாற்றவும், பொருளாதாரத்தில் தங்களுக்கு உதவவும் பிள்ளைகளைப் பேணி வளர்க்கின்றனர். ஒருவர் பிறருடன் நட்பாய் இருப்பதும் ஒரு குழுவில் அங்கத்தினராகி அக்குழுவின் சட்டதிட்டங்களுக்கு உட்பட்டிருப்பதும், அக்குழுவோடு சேர்ந்து வாழ்வதும், மன அமைதி தரும் என்ற காரணத்தை விட, தன்னைப் பிற எதிரிகளிடமிருந்து காத்துக் கொள்வதற்கான பாதுகாப்பு நடவடிக்கை என்பதே பொருத்தமான காரணமாகும். இதனையே தன்னலக் கோட்பாடு என்பர்.

கபிலர் ஒரு முறை மலையமான் திருமுடிக் காரியைப் பார்த்து, 'பொது நோக்கு ஒழிமதி ' எனக்கூறியது இதற்குத் தகுந்த சான்றாகும். அப்புலவர் அரசரைப் பார்த்து, 'அரசே! உம்மையே நினைத்து நாற்புறத்திலிருந்து பரிசில் பெற வருவோர் அதிகமாவர். அவரவர் தகுதியை அளவிட்டு அறிதல் இயலாது. ஆயினும், நீவிர் முயன்று, வருவோர் தகுதியறிந்து பரிசினை வழங்க வேண்டும். அதுதான் உமக்குப் பெருமை சேர்க்கும்' என்று கூறிச் செல்கிறார். தம்தகுதிக்கேற்ப பரிசு வழங்கவில்லை என்பதைத் தன்னல நோக்கில் சுட்டி, பிறகு புகழ்ந்து, அறவுரை கூறுவது போலக் கூறுகிறார்.

'ஒரு திசை ஒருவனை உள்ளி நாற்றிசைப்
பலரும் வருவர் பரிசில் மாக்கள்
வரிசை அறிதலோ அரிதே ; பெரிதும்

ஈதல் எளிதே ! மாவண் தோன்றல் ;

அதுநற்கு அறிந்தனை யாயின்

பொதுநோக்கு ஒழிமதி புலவர் மாட்டே '

*- (புறம் - 121)*

என்ற பாடல் தன்னலக் கோட்பாட்டிற்குச் சான்றாகக் காட்டுமாறு புலவர் ஒருவரின் உளப்பாங்கு அமைந்திருப்பதைக் காணலாம்.

தமது கடந்தகால அனுபவங்களும், துன்பங்களும் ஒருவரிடம் தோன்ற அவர் தம்மை விடுவித்துக் கொள்ள விரும்புகிறார். இந்நிலையில் அவர் சந்திக்கும் மற்றவரும் அவரை ஒத்து சூழ்நிலையில் இருப்பதை அறியும் போது அவர்பால் இவருக்கு இரக்கவுணர்ச்சி தோன்றுகிறது. இந்த இரக்கவுணர்ச்சியே பிறருக்காக எதையும் செய்யும் அன்பினைத் தோற்றுவிக்கின்றது. இவ்வாறு, ஒருவர் மற்றவர்பால் இரக்கவுணர்ச்சியால் தூண்டப்பட்டு, அவரோடு ஒத்துவாழவும், அவருக்கு உதவியாக இருக்கவும் நினைக்கின்றார். இவ்வாறே, வெற்றி கண்ட ஒருவனை மனமகிழ்ந்து போற்றும் போதும், மீளாத்துயரத்தில் ஆழ்ந்திருக்கும் ஒருவனுக்கு ஆறுதல் மொழி கூறும் போதும், நாம் இன்ப துன்பமெனும் இரு உணர்ச்சிகளுக்கும் அப்பாற்பட்டவராக இருக்கின்றோம். இங்கே ஏற்படும் இரக்கவுணர்ச்சி அறிவு வளர்ச்சியைச் சார்ந்ததாகும். இத்தகு உளவியல் நடத்தைகளை இரக்கவுணர்ச்சிக் கோட்பாடு என்பதனுள் அடக்குவர்.

பக்குடுக்கை நன்கணியார் என்னும் புலவர், ஒரு புறநானூற்றுப் பாடலில் உலகில் உருவாகும் இன்பதுன்பங்களைப் பற்றி உளவியல் நடத்தைகளோடு இணைத்துக் கூறுவார். அதில் இரக்கவுணர்ச்சி இயல்பாக வெளிப்படுவதை நயம்படக் கூறுவர்.

'ஓரில் நெய்தல் கறங்க ஓரில்
ஈர்ந்தண் முழவின் பாணி ததும்ப ;
புணர்ந்தோர் பூவணி அணியப் பிரிந்தோர்
பைதல் உண்கண் பணிவார்பு உறைப்பப்
படைத்தோன் மன்ற அப்பண்பி லாளன்!
இன்னாது அம்ம இவ்வுலகம்
இனிய காண்க இதனியல்புணர்ந் தோரே.'

- *(புறம் - 194)*

தானாகவே ஒன்று பெரும்பான்மையினரால் ஏற்றுக் கொள்ளப்பட்டு, பின்பற்றப்பட்டுப் போற்றி வருவதைப் பிறரும் விரும்பி ஏற்றுப் போற்றி வருவது உலகில் இயல்பாகி விட்டது. இதனால், சமூக உறவு இணக்கமாக உருவாகி வளர்வதைக் காணலாம். ஒரு சிலர் போற்றுவதைப் பலரும் விரும்பி ஏற்பதையும், அதுபோல் செய்ய முயல்வதையும் காணலாம். இதனையே, போலிப் பாவனைக் கோட்பாடு என்பர். இது நல்லனவற்றுள் போற்றப்படுவதும், அல்லனவற்றுள் புறக்கப்படுவதும் உலக இயற்கையாயிற்று, பண்பாடு மற்றும் நாகரிகங்கள் இத்தகு போலிப் பாவனைகளால் தான் வளர்ந்தன என்பர்.

பாலை பாடிய பெருங்கடுங்கோ, பாடிய குறுந்தொகைப் பாடல் ஒன்றை இதற்குச் சான்று காட்டலாம். பெரியோர் கற்பித்த வழக்கை உலக வழக்காக்கி எல்லாரும் போற்றுவதையே நின் தலைவனும் போற்றுகிறான் எனக் கூறி, இடித்துரைப்பதுபோல, புகழ்ந்து தோழியுரைப்பதாகப் பாடியுள்ளார்.

'வினையே ஆடவர்க்கு உயிரே ; வாள்நுதல்

மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிரென

நமக்குரைத் தோரும் தாமே !

அழாஅல் தோழி அழுங்குவர் செலவே'

- (குறுந்தொகை - 135)

என்று படைத்த பாடலில், 'வினை செய்தல் என்பது ஆடவர்க்கு உயிரைப் போன்றது ; இல்லத்தரசிகளுக்கு அத்தகு ஆடவரே உயிர் போன்றவர் ' என்று கூறுவதைப் போலிப் பாவனை எனலாம்.

மெக்டுகல் என்னும் சமூக உளவியலார், 'கருத்தேற்றம் என்பது நாம் தொடர்பு கொண்டு உரையாடும் ஒருவருடைய சொற்களின் கருத்தை ஏற்றுக்கொண்டு, பகுத்தறிவுக்கு ஏற்ற அடிப்படைக் காரணம் ஏதுமின்றி அவர் எண்ணங்களுக்குத் தாம் இணக்கம் தெரிவிக்கும் ஒரு செயலாகும்.' என்பர். கோவூர்கிழார் சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளி வளவன் முன்பு நின்று, 'நீ செய்வது தவறு ' எனக்கூறி இடிந்துரைக்கிறார். 'ஒரு புலவர் சொல்வதைத் தாம் கேட்பதா ? ' என்று எண்ணாமல் அவ்வாறே அவர் சொல் கேட்டு நடந்து பெருமை பெற்றார்.

அப்பாடல்,

'நீயே ! புறவினல்ல லன்றியும் பிறவும்

இடுக்கண் பலவும் விடுத்தோன் மருகனை

இவரே, புலனுழு துண்மார் புன்கணஞ்சித்

தமதுபகுத் துண்ணுந் தண்ணிழல் வாழ்நர்

களிறுகண் டழூஉ மழாஅன் மறந்த

புன்றலைச் சிறாஅர் மன்றுமருண்டு நோக்கி

விருந்திற் புன்கணோ வுடையர்

கேட்டனை யாயினீ வேட்டது செய்ம்மே'

- (புறம் - 46)

என்பதாகும். புலவர் மன்னரைப் பார்த்து, 'புறாவின் துயரமன்றியும், பிற துயரங்கள் பலவற்றையும் நீக்கியவர் மரபில் வந்தவன் நீ! இவரோ, கற்றோர் வறுமை அடையாதவாறு தம் விளைபொருள்களைப் பகுத்து உண்ணும் பண்புடைய மரபில் வந்தவர்கள். யானையைக் கண்டதும் தம் இளமை காரணத்தால் மகிழ்ந்து நிற்பவர். அழுகையையும் மறந்து நிற்பவர். சின்னஞ்சிறு பிள்ளைகள். கூடியிருக்கும் கூட்டத்தைக் கண்டு வருந்தி நிற்பவர். நான் கூற வேண்டியதைக் கூறி விட்டேன். இனி விருப்பம் போல் செய்க' என்று கூறி நின்றார். கிள்ளிவளவன் புலவர் கூறியதைக் கேட்டுத் தம்சினம் தணிந்து குழந்தைகளைக் கொல்லாமல் விட்டுவிட்டான். அரசன் என்ற ஆணவத்தில் தவறு செய்யாமல், புலவர் அறவுரையைக் கேட்டு அப்படியே நடந்து கொண்டான்.

'பண்பாட்டின் ஒவ்வொரு கூறும் மக்களின் அறிதிறனால் விளைந்ததாகும். எனவே, பண்பாட்டுக் கூறுகள் மக்களின் அறிதிறக்கோலத்தை வெளிப்படுத்துக் கூடியதாக உள்ளன. எடுத்துக்காட்டாக மொழியானது மக்களின் அறிதிறனை வெளிப்படுத்தும் ஒரு பண்பாட்டுக் கூறாகும். மக்கள் கையாளும் மொழியும், சொற்களும் அப்பண்பாட்டினரின் எண்ணங்களையும் சிந்தனைகளையும் வடிவமைக்கின்றது. கண்முன்னுள்ள இயற்கையை அல்லது ஒரு நிகழ்வை விவரிப் பதில் ஒவ்வொரு மொழியினரும் வேறுபடுகின்றனர். இவ்வாறான வேறுபாட்டிற்கு அம்மொழியின் இலக்கணமும் சொற்கோவையும் காரணமாகின்றன. இதனடிப்படையிலேயே மக்களின் அறிதிறனும்

அமைகின்றன'[66] என்ற திறனாய்வாளர் கருத்திற்கு ஆக்கமும் ஊக்கமும் நல்குபவை மனிதனின் உளப்பாங்கும் அதன்வழி உருவாகும் நடத்தைகள் எல்லாம், சமூகவியலாரின் கோட்பாட்டுள் அடங்குமென்பதை மேலே குறிப்பிட்டவற்றால் கண்டறிய முடிகிறது.

பண்பாட்டிற்கும் நடத்தைகளுக்கும் பெரிதும் வழி வகுப்பவை மானுடத்தின் மனவியக்கமே என்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டுவது தான் சமூக உளவியலும், சமூக உளப்பாங்குமாகும்.

### போரியலாரும் தமிழ்ச் சமூகமும்

பொன்னாசை, பெண்ணாசை, மண்ணாசை ஆகிய மூன்றுமே போர்ச் செயலுக்கு அடித்தளம் அமைத்து விடுகிறது. தனிநபரும், தலைவர்களும், அரசர்களும் போர்ச் செயலுக்குத் தம்மை ஆட்படுத்த இத்தகு ஆசைகளே காரணமாகின்றன எனக் கூறுவாரும் உள்ர். இத்தகு போர்க்குணம் தலைதூக்க பூசல், பகை, வெறுப்பு, பொறாமை, பேராசை, போராட்டம், மறுமலர்ச்சி, புரட்சி முதலானவை ஆணிவேராக அமைந்து விடுகின்றன. போர் என்று சொன்னாலே நாட்டிற்கு நாடு ; அரசுக்கு அரசு உருவாகக் கூடிய பகைமையின் உச்சக் கட்டம் என்பர். எனவே, பழங்கால அரசுகளின் வரலாற்றில் போர்ச் செயல்களே மிகுதியாக இடம் பெற்றிருப்பதைக் காணலாம். இத்தகு போர்மிகு காலத்தை வீரயுகம் என்றும், வரலாற்றை வீர வரலாறு என்றும் கூறுவர். உலகத்தில் படைக்கப்பட்ட பழைய இலக்கியங்கள் கூட வீர இலக்கியம் என்றே அழைக்கப்பட்டன. கிரேக்க வீரர் உலகம் குறித்து ஹீசியெட்,

'வளந்தரு வண்மை உலகத்து வானகம்
களங்காண் வீரரே கடவுள ராமென

எண்ணவே பேரினஞ் சான்றோர் தாம்நின்று
கண்ணஞ் சாப்படைஞர் தம்மொடு தேபசு
நகரிலும் கவின்வளர் கூந்தல் நலனெனும்
நிகரில் அழகிக்காகத் திராயிலும்
சகமெலாம் வியக்கும் அமரட்டு மாண்டனரே' ⁶⁷

என்று கூறுவதைக் காணும் போது வீரர்தம் நோக்கும் செல்வாக்கும் நன்கு வெளிப்படுவதைக் காணலாம்.

போருக்குத் தேவைப்படும் நால்வகைப்படைகள் தரைப்படை, தேர்ப்படை, குதிரைப்படை, யானைப்படை எனப்படுபவை உலகத்தின் எல்லா நாடுகளின் பழைய படைக் கட்டமைப்பாகும். பழைய போரியல் கருத்துக்கள் இவற்றைமையமாகக் கொண்டு ஆராயப்பட்டு வருகின்றன. இவற்றின் உயிர்ப்பாக இருப்பவர்கள் வீரர்கள் என்றும், மறவர்கள் என்றும் போற்றப்படுகின்றனர். இம்மறவர்கட்கு இத்தகு போர்க்குணம் நிறைந்து வழிய சமூகமே காரணமாக அமைகிறது. வீரர்கட்குரிய சமூகக் கடமை என்று கூறுவதைவிட, சமூகப் பண்பாலும், சமூகக் கட்டமைப்பாலும் உருவாகும் சமூகமயமாக்கல் என்பதன் அடிப்படையில் பலர்க்கு இத்தகு வீரப்பண்பு இயல்பாகவும், சூழலின் காரணமாகவும் வளர்ந்து விடுகிறது.

ஆபிரகாம் மாஸ்லோ தாம் எழுதிய 'செயல் தூண்டல் மற்றும் ஆளுமை' என்ற நூலில் இதற்கு நல்ல விளக்கம் தருவர்.

அவர், 'மனித வாழ்க்கைப் பாணி போக்கில் ஐந்து முக்கிய நிலைகளில் தேவைகள் உருவாகின்றன. அவை, வீரிய மிகு தேவைகள், உடலியல் அடிப்படையில் வரும் தேவைகள், பாதுகாப்புத் தேவைகள், சமூகத் தேவைகள், மதீப்பிட்டுத் தேவைகள், சுயசாதனைத் தேவைகள் எனத் தொடர்ந்து வருவதைக்

காணலாம். இது தனிநபர்த் தேவையில் தொடங்கி, இறுதியாகச் சமூகத் தேவைகள் என வந்து முடியும். தாகம், உணவு, காமம் போன்ற உடலியல் தேவைகள் பூர்த்தியானவுடன், உடல், உயிர், சொத்துப் பாதுகாப்பு எனப் பாதுகாப்புத் தேவைகள் மீது கவனம் செலுத்த வேண்டியுள்ளது. இது தாம் வாழும் சமூகம் முழுமைக்கும் பூர்த்தி செய்யப்பட்டால் தான் தனிநபர் சமூக வாழ்வு சிறக்கும். அதனால், அன்பு, பாசம், குடும்பம், உறவு, நட்பு, கடமை போன்றவற்றுள் வீரிய மிகு தேவைகள் உருவாகும். அதனால் போட்டி, பேராட்டம், எதிர்பார்ப்பு, ஆற்றாமை, சாதனை, மதிப்பீடு போன்றவை உருவாக வழி வகுக்கின்றன. இவையே தனிநபர் வீரனாக மாற வழி வகுக்கின்றன' [68] என்பர்.

இதற்கு ஒவ்வொரு மனிதனும் மேற்கொள்ளும் செயல்களே காரணமாக அமைந்து விடுகின்றன. கூடிவாழும் விலங்கான மனிதன், பிறரோடு பழகுகின்ற பொழுது அவர்கள் எப்படி சிந்திக்கிறார்கள் ? எப்படி வாழ்கிறார்கள் ? எப்படி உணருகிறார்கள் ? எப்படிச் செயல்படுகிறார்கள் ? என்பன போன்றவற்றை அறிய வேண்டும் எனும் ஆர்வ மேலீட்டால் பிறருடைய சிந்தனை, செயல்முறை, உறவுமுறை முதலியன எவ்வெவ்வாறு அமைகின்றன என்பதை அறியத் துடிக்கிறான். இந்த ஆர்வத்தின் விளைவாகக் கருத்துப் பரிமாற்றமும், கலந்துரையாடலும், பிணக்கும், பூசலும் தோன்றுகின்றன.

இதனையே,

'ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்
புதுவது அன்றுஇவ் உலகத்து இயற்கை'

- *(புறம் - 76)*

என்று இடைக்குன்றூர் கிழார் பாடினார். இச்சூழலில் வளரும் மறத்தன்மை, அறத்திற்கு மாறாகச் செயல்பட சம்பந்தப்பட்ட மனிதனைத் தயாரித்து

விடுகிறது. அத்தகு மறவர் யாதேனும் ஒரு படையில் பங்கேற்றுச் சமூக நலனுக்கும், தம் நலனுக்கும் போரிட போர்க்களம் போகிறான். [69]

சமூகம், அரசு எனப்படும் பல நிறுவனத்தின் சார்பாகப் போரிடப் போகும் மறவர் தம் உயிரினும் மேலாகக் கருதுபவைதான் புகழ், தறுகண், மானம், வீரம் முதலானவை. இவற்றை நிலைநாட்ட உயிரைத் துச்சமெனக் கருதி கற்ற வீரக்கலையைப் போர்க் களத்தில் வெளிப்படுத்தத் துடிப்பான். போரியலார் இத்தகு வீரர்கள் நிறைந்த படைக் குழாத்தையே பாராட்டி அவர்கள் ஆற்றி வெளிப்படுத்திய போர் திறத்தையே அளவு கோலாகக் கொண்டு மறவர் தம் பெருமையை உலகறியச் செய்வதே இயல்பு எனக் கூறுவர். அடுத்துவரும் போர் மறவர்க்கு இவை வழிகாட்டியாக அமையும் என்ற நோக்கிலேயே விளக்கப்படுகின்றன. சமூகம் அத்தகு வீரவரலாற்றையே விரும்பிக் கேட்கவும், கற்கவும் விரும்பும்.

தொல்காப்பியரும் போரியலாருள் ஒருவராகக் கருதப்படுபவர். புறத்திணையுள் அவர் கூறும் போர்க்களத்து இயல்புகளும், பண்புகளும், நெறிகளும் தமிழ் மண்ணுக்கு உரியது. இதிகாசங்கள் எனப்படும் இராமாயணமும், மகாபாரதமும் ஆரியர்க்குரிய போர் மரபுகளைப் படைத்து விளக்குகின்றன. சாணக்கியர் படைத்த அர்த்த சாஸ்திரம் வடநாட்டை ஆண்ட எல்லா மன்னர்களுக்குத் தேவைப்படும் அரசநீதியை எடுத்துச் சொல்லும் பொழுது போர்க்களத்திற்குரிய நீதிகளையும் எடுத்துச் சொல்வதைக் காணலாம். எல்லாப் போரியலாரும் சமூகத்தை முன்வைத்தே விளக்கம் தந்துள்ளனர்.

**சங்க இலக்கிய கட்டமைப்பு கூறும் சமூகம்**

'யாதும் ஊரே; யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா

நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன
சாதலும் புதுவது அன்றே'

- *(புறம் 192 ; 01-04)*

என்று கணியன் பூங்குன்றனார் சமூகத்தை அறிமுகப்படுத்துவர். சமூகத்தின் இயல்பைச் சுருக்கமாகக் கூறி, அனைவரும் நமது உறவினர் என்றும், அன்னவர்க்கே நம் தொண்டும் கடமையும் உரித்தானது என்றும் குறிப்பிடுவர். சமூகத்தில் அங்கம் வகிப்பார் போற்றவேண்டிய கடமையை,

'ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே ;
சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே ;
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே ;
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே ;
ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்
களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே'

- *(புறம் - பா - 312)*

என்று முறையாக எடுத்துக்கூறி, சமூகத்தின் அடித்தளமாக விளங்கும் குடும்பத்தின் உறுப்பினர்களை வரிசைப்படுத்திக் கூறி, அவர்தம் கடமையையும் சுட்டிக் காட்டுவர். தாய், தந்தை, தொழிலாளி, அரசன், காளை எனச் சமூகக் கட்டமைப்புக்கு இன்றியமையா உறுப்பினர்களை அறிமுகப்படுத்துவர்.

இத்தகு குடும்பங்கள் நிறைந்த சமூகத்தைப் பாதுகாத்து வருபவன் அரசனே என்றும், அவனே அனைவர்க்கும் இறைவனாவான் என்பதை,

'நெல்லும் உயிரன்றே; நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்

அதனால் யானுயிர் என்பது அறிகை
வேல்மிகு தானை வேந்தற்குக் கடனே'

*- (புறம் - 186)*

என்று நயம்படக் கூறுவர்.

சமூகம் போற்ற வேண்டிய நன்னடைகளை நல்கிப் போற்றி வரவேண்டிய மன்னர்க்குத் தொண்டனாக இருந்து பணி புரிபவர்களுள் ஒருவனாகவும் இன்றியமையாதவனாகவும் இருப்பவனே மறவன். அவனே, அரசனின் அணுக்கத் தொண்டனாக இருந்து, எல்லாம் சிறக்கத் தொண்டாற்றி வருபவன்.

'பகைவர் கவர்ந்து சென்ற ஆனிரைச் செல்வத்தை மீட்டுக் கொணர்வதும், பகைவர் தமதாக்கிக் கொண்டதன் நாட்டு எல்லையை மீட்டுத் தன் ஆட்சியை நிலை நாட்டுவதும், தன் அரண், பகைவர் கைப்படா வண்ணம் நின்று காப்பதும், போர் வெறிபிடித்து அலைவானை வென்று அடக்குவதும், அரசர்க்கும், அவர்படையில் பணிபுரியும் ஆற்றல் மறவர்க்கும் கடமைகளாம். ஆதலின், அவர் செயலைப் பாராட்ட வேண்டுவது வேண்டாச் செயலாம்; பிறர் பாராட்டை எதிர் நோக்கி, அவர்கள் அப்பணி புரிந்தாரல்லர் ; பிறர் பாராட்டினாலும், பாராட்டாது போனாலும், அவர்கள் அப்பணி புரிந்தே கிடப்பர்'[70] என்ற திறனாய்வாளர் கருத்தை இங்கு ஒப்பு நோக்கின் மறவர்க்கும், அரசர்க்கும்; மறவர்க்கும் சமூகத்திற்கும் இருந்த உறவு நன்கு புலப்படும்.

'அரசனுக்கு உணர்த்தப்படும் எல்லா நற்பண்புகளும் எந்த ஒரு சாதாரணக் குடிஆளுக்கும் பொருந்துவன வென்று கருதப்பட்டது. சான்றோன் தீய பண்புகளை விடுத்து, வாய்மை, உண்மையான உழைப்பு ஆகிய நற்பண்புகளைக் கடைப்பிடித்தல் வேண்டும். மக்கள் தங்கள் கடமையில்

தங்களுடைய முழுக் கவனத்தையும் செலுத்துதலே அவருக்குப் புகழைத் தரும் பணியாகக் கருதப்பட்டது. மக்கள், கல்வி கற்றற் பொருட்டும், அரசாங்கத் தூதுப் பணிகள் பொருட்டும், தம் குடும்பப் பணியின் பொருட்டும், நாட்டைக் காக்கும் பொருட்டும், பொருளீட்டுதற் பொருட்டும், தான் தத்தம் குடும்பங்களை விட்டுப் பிரிதல் வேண்டும். '[71] எனக் கூறுபவை சங்க இலக்கிய கட்டமைப்புச் சமூகத்தின் அடிப்படைக் கோட்பாடுகளாகவே இருந்தன என்பதைத் தெளிவாகக் காணலாம்.

எனவேதான், பிசிராந்தையாரும்,

'யாண்டுபல வாக நரையில ஆகுதல்
யாங்கா கியர்என வினவுதி ராயின்
மாண்டஎன் மனைவியொடு மக்களும் நிரம்பினர்;
யான்கண் டனையர்என் இளையரும் வேந்தனும்
அல்லவை செய்யான் காக்க அதன்தலை
ஆன்றவிந் தடங்கியகொள்கைச்
சான்றோர் பலர்யான் வாழும் ஊரே'

- (புறம் - 191)

எனப்பாடி நற்சான்றிதழ் வழங்கியுள்ளார் எனலாம்.

'சங்க காலத்து மக்கள் நிலத்தோடு ஒத்த வாழ்வினை நடத்தினர் என்று தொல்காப்பியம் காட்டுகின்றது. நானிலத்துக்கும் ஏற்றவாறு மக்களும் வாழ்ந்தனர், நிலம் இசைவு கொடுத்த தொழிலைச் செய்தனர், உழைத்து வாழ்ந்தனர். உழைப்பை உயர்வாகக் கொண்டனர். எளிமையாக வாழ்ந்தனர். அந்த எளிமையில் இனிமை கண்டனர். விவசாயப் பொருளாதாரத்தை நம்பும் சமூகத்தின் இன்ப வாழ்விது'[72] எனக் கூறுவதையும் காணலாம். எனவே, சங்க

இலக்கிய கட்டமைப்புக் கூறும் சமூகமும் நல்ல கட்டமைப்பில் அமைந்து சிறந்த சமூகமாகத் திகழ்ந்தது எனலாம்.

**சங்ககால சமூக உறுப்பினர்**

'முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறைஎன்று வைக்கப் படும்.

- *(குறள் - 388)*

என்றும்,

'குடிதழீஇக் கோலேச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு.'

- *(குறள் - 544)*

என்றும் கூறப்படுவதால், தமிழக சங்க காலத்துச் சமூகத்தின் முதன்மை உறுப்பினராகக் கருதப்பட்டவர் தான் அரசர் ஆவர். இவர்தம் தலைமையின் கீழ்தான் தமிழகம் இயங்கிற்று என்பதை,

'வண்புகழ் மூவர் தண்பொழில்
நாற்பேர் எல்லை அகத்தவர் '

- *(தொல் ; பொ ;செய் ; நூ - 78)*

எனக்குறிப்பிடுவர்.

'சமுதாயம் என்பது மக்களின் ஒன்றிணைந்த கூட்டுத் தொகுதியாகும். அச்சமுதாயத்தில் பல்வேறுபட்ட மக்களினங்களும் தொழில் வயப்பட்ட பிரிவுகளும் காணப்படினும் அவற்றுள்ளும் சில பிரிவினரே சமுதாய மதிப்பு மிக்கவர்களாகத் திகழ்கின்றனர். பண்டைத் தமிழ்ச் சமுதாயத்தில் சமுதாய மதிப்பு மிக்கவர்களாகத் திகழ்ந்தவர்களுள் அரசர், அந்தணர், முனிவர் ஆகியோர்

குறிப்பிடத்தக்கவர்களாவர். இவர்களின் வாழ்க்கை முறை, சாதாரண மக்களின் வாழ்க்கை முறையிலிருந்து வேறுபட்டுச் சிறப்புடையதாக அமைவதால், பிறர்க்கு வழிகாட்டியாகவும், பாதுகாப்பாகவும் அமைகிறது '[73] என்பர்.

'தனிமனிதனின் வலிமை, திறமை, மனத்திண்மை ஆகிய பண்புகளை அளவுகோலாகக் கொண்டு மனிதன் கணிக்கப்பட்ட நிலையில் இப்பண்புகளில் சிறந்து விளங்குபவன் தலைவனாக உருப்பெற்றான். அவனே, காலப்போக்கில் மக்கள் தலைவலனாகிப் பின்னர் நாட்டின் தலைவனாகக் கருதப்பட்டான் '[74] எனக்கூறும் திறனாய்வாளர்,

'சங்க காலத்தில் கோனாட்சியே மக்களின் நலன் கருதிய குடியாட்சியாக இருந்தது. இதனால் தான், பழந்தமிழ்ப் புலவரும், 'மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்' என விதந்தோதினர். காவலன் அறநெறி பிறழ்ந்தால் இயற்கையும் முறைமை பிறழும் என்ற நம்பிக்கை செல்வாக்குப் பெறலாயிற்று'[75] என்று கூறுவர்.

சமூகத்தின் பொருளாதார வளர்ச்சிக்கு ஆதாரமாக இருந்தது உழவுத் தொழிலே. எனவே, 'உழவன்' அடுத்து மதிக்கப்பட்டு வந்தான். 'சுழன்றும் ஏர்ப் பின்னது உலகம்' என்றும், 'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்' என்றும், 'அலகு உடை நீழலவர்' என்றும் 'பாராட்டப்படுவனே உழவன்' என்று வள்ளுவர் கூறுவர். சங்க இலக்கியப் புலவர்களும் பலவாறு பாராட்டுவர்.

வெள்ளைக்குடி நாகனார்,

'பகடுபுறந் தருநர் பார மோம்பிக்
குடிபுறந் தருகுவை யாயினின்
அடிபுறந் தருகுவ ரடங்கா தோரே.'

*- (புறம் ; 35 ; 32 - 34)*

எனச் சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளி வளவனுக்குக் கூறுவர். அவர் அரசனைப் பார்த்து, 'ஏரைப் பாதுகாப்பாருடைய குடியைப் பாதுகாத்து, அதன் வழி பிறகுடிகளையும் பாதுகாப்பாயாக. அதனால், நின் பகைவரும் உன் அடியைப் போற்றி மதிப்பர்' எனக்கூறி, உழவுத் தொழிலின் இன்றியமையாமையைக் குறிப்பர்.

கோவூர்கிழார், சோழன் நலங்கிள்ளியைப் பாராட்டிப் பாடிய பொழுது, 'உழவுத் தொழில் நன்கு உயர்ந்து அறம் பெருகி மகிழ்ச்சியுடன் மக்கள் வாழும் நாட்டின் தலைவன்' எனக்கூறிப் பாராட்டுகிறார்.

'ஏரின் வாழ்நர் பேரி லரிவையர்
குளக்கீழ் விளைந்த களக்கொள் வெண்ணெய்
முகந்தனர் கொடுப்ப உகந்தனர் பெயரும்
தென்னம் பொருப்ப நன்னாடு'

- *(புறம் ; 33 ; 04-07)*

எனக்கூறுவர். இப்புலவர், 'ஏரான் உழுதுண்டு வாழ்வாரது பெரிய மனையின் கண் மகளிர், குளத்துக் கீழ் விளைந்த களத்தின் கண் கொள்ளப்பட்ட வெண்ணெல்லினை வாரி வழங்க, பெற்றுக் கொண்டோர் மகிழ்ச்சியுடன் திரும்பிச் செல்லும் செழிப்புமிக்க பொதிகை மலையுடைய பாண்டி நன்னாடு' எனக்கூறி, உழவின் செழிப்பு மகளிர் இல்லந்தோறும் இருந்து அறம் செய்யும் சிறப்புப் பெற்றிருந்ததென்பர்.

குடபுலவியனார் என்னும் புலவர், பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனுக்கு அறவுரை கூறும் பொழுது,

'நீரின்று அமையா யாக்கைக்கு எல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே

உண்டி முதற்றே உணவின் பிண்டம்

உணவெனப் படுவது நிலத்தொடு நீரே'

*- (புறம் ; 18 ; 18-21)*

என்று கூறி,

'நிலன்நெளி மருங்கின் நீர்நிலை பெருகத்

தட்டோர் அம்ம! இவண்தட் டோரே!

தள்ளா தோர் இவண்தள்ளா தோரே!'

*- (புறம் : 18-28 - 30)*

என எச்சரிக்கை செய்து உழவின் மேன்மையை எடுத்துரைப்பர்.

உழவைச் சார்ந்து தொழில்கள் பற்பல தமிழக நானிலங்களிலும் பரவலாகப் போற்றப்பட்ட தொழில்கள் எண்ணிறந்தன. அவரவர் தத்தம் தொழில் செய்து பண்ட மாற்று முறையில் தம் தேவைகளைப் பூர்த்தி செய்து நலமாக வாழ்ந்து வருவதற்கேற்ற நல்ல சூழ்நிலையை மன்னர் உருவாக்கித் தந்துள்ளனர் என்பதைச் சங்க இலக்கியம் விரிவாக எடுத்துக் காட்டுகிறது. இத்தகு தொழில் முனைவோர்க்குத் தேவைப்படும் பாதுகாப்பு, ஊர் காவலாலும், நாடு காவலாலும் மன்னர் வழி ஏற்படுத்தப்படும். எனவே, அனைவரும் அச்சமின்றித் தத்தம் பணிகளை நன்கு செய்து போற்றி வந்தனர்.

**சங்க இலக்கியம் சுட்டும் மறவர் பங்களிப்பு**

'வீரநிலைக் காலப் பண்பாட்டின் சிறப்பு, பிற உலக நாடுகளைப் பிடிக்கும் மண்ணாசையால் தோன்றுவது அன்று. ஓர் இனம், தான் தோன்றிய மண்ணில், வாழ்க்கை - சமயம் அரசியல் ஆகிய முத்துறைகளிலும் வீரத்தை மையமாக வைத்து - இம்மைக்கும் மறுமைக்கும் வீரத்தைப் பாலமாகக் கருதி

வாழ்ந்தால், அந்த இனத்தை வீர நிலைக்காலப் பண்பாட்டில் ஊறி வளர்ந்த இனமாகக் கொள்ளலாம்' [76] என்பதற்கேற்ப சங்க காலம் வீரநிலைக் காலப் பண்பாட்டில் ஊறி வளர்ந்த காலமே என உறுதிப்படக் கூறலாம்.

'ஒல்காப் புகழ்த் தொல்காப்பியர் களங்காணும் வீரம் பெருமிதத்திற்கு உரிய வாழ்க்கையை நல்குகிறது எனும் கருத்தை உடையவர். அவர் களங்காணும் பெற்றியைத் தறுகண் என்பர். 'பேராண்மை என்ப தறுகண்' என அமர்க்களத்தில் வீரம் நிலை நாட்டப்படுதலைப் 'படைச் செருக்கு' எனும் அதிகாரத்தில் குறிப்பர் வள்ளுவர். மறவர் வாயிலாக வள்ளுவர் விடும் எச்சரிக்கை, விரைவாக எதிர்க்கும் சிறப்பு, பேராண்மை, அஞ்சாநெஞ்சத்தின் அமர்முறை, வீரத்தில் விழித்த கண், விழுப்புண், புகழ், உயிர் அஞ்சா உயர்வு, சூள், காக்கும் கடமை ஆகியவை பழந்தமிழர் வீரத்தின் பண்பாக உணர்த்தும் குறிப்புக்களாகும்' [77] எனக் கூறுவதையும் இங்குக் கவனிக்கத் தக்கது. இத்திறனாய்வாளர் தமிழர் தம் வீரநிலையும் பண்பாடும் சமூகம் சார்ந்த ஒன்று என்பதைத் தெளிவாகச் சங்க இலக்கியங்களின் துணைகொண்டு நிறுவமுற்பட்டு வெற்றியும் கண்டார்.

'பழந்தமிழர் வீர நிலைக் காலப் பண்பாட்டின் வளர்ச்சியைப் பற்றி எண்ணுங் காலத்துப் பழந்தமிழில் அகப்பாடல்கள் மிகுதியாகக் காணப்படுதலை மறைக்கவோ மறுக்கவோ இல்லை. இவைகளும் வீரநிலைக் காலப் பண்பாட்டின் விளைநிலத்தில் விளைந்த பயிர்களே ஆகும். காதற்பாடல் உணர்த்தும் பாலுணர்வில் தமிழன் திளைத்துப் பிறவற்றைப் புறக்கணித்து வாழ்ந்தான் என்று எண்ணி விடுதல் கூடாது.

ஆடவர் ஓதல், உழவு, வாணிபம் போன்ற தொழில்களில் ஈடுபட்டனர். ஆனால், வீரத்திற்காகவும், விழுப்புகழுக்காகவும், அரசனுக்காகவும் அமரில் ஈடுபடல் அவர்தம் உள்ளத்தில் ஊறிய குருதியில் கூடிய செயலாகும்' [78] எனக் கூறுவர்.

தலைவியை, அவள் காதலன் வரைந்து கொள்ள வந்தானென்ற செய்தியைத் தோழி தலைவியிடம் சென்று சொல்லுகிறாள். அப்படிச் சொல்லும் போது, 'தலைவன் சிறந்த மறவனாக இருந்ததாலேயே தம் வாக்கை நிறைவேற்ற மணம் பேசி முடிக்க வருகிறான் ' என்று கூறுகிறாள். இங்கே காதல் வாழ்விலும் ஆடவர் பண்பாடு நிறைந்த வீர வாழ்வையே விரும்புகின்றனர் என்பதை நிலைநாட்ட வீரவரலாற்று நிகழ்ச்சி கூறப்பட்டு விளக்கம் பெறுகிறது. இத்தகைய அகப்பொருள் பாடல் ஒன்று குறுந்தொகையில் இடம் பெற்றுள்ளது. கொல்லிக் கண்ணன் என்னும் புலவர் பாடியதாகக் கூறப்படும் இப்பாடலில் காதலும் வீரமும் இணைந்து நடைபோடுவதைக் காணலாம்.

'ஒறுப்ப ஓவலர் மறுப்பத் தேறலர்
தமியர் உறங்கும் கௌவை இன்றாய்
இனியது கேட்டுஇன் புறுக இவ்வூரே !
முனாஅது யானையங் குருகின் கானலம் பெருந்தோடு
அட்ட மள்ளர் ஆர்ப்பிசை வெரூஉம்
குட்டுவன் மாந்தை அன்னஎம்
குழல்விளங்கு ஆய்நுதற் கிழவனும் அவனே !'

- (குறுந்தொகை - *34)*

என்ற பாடல், 'பகைவரைக் கொன்றொழித்து வெற்றி கொண்ட வீரரது ஆர்ப்பொலியைக் கேட்டு அஞ்சுதற்குக் காரணமாக குட்ட நாட்டை உடையானது மாந்தை யென்னும் பட்டினத்தைப் போன்று நமக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது' எனக் கூறப்படுகிறது.

கலித்தொகையில் ஒரு பாடல். தோழியும், தலைவியும் வள்ளைப் பாட்டு பாடிய வண்ணம் இருக்கின்றனர். அப்பாட்டில் தலைவி காதலித்த தலைவனும்

ஒரு சிறந்த வீரனே! என்பதைச் சுட்ட, அவன் எறிந்த கவண்கல் பற்றிப் பாடி மகிழ்கின்றனர். 'மறவர் கவண்கல் எறிந்து வில் எறியத் தக்க பயிற்சி பெறுவதுண்டு. அத்தகைய ஒரு மறவன் எறிந்த கவண்கல் வேங்கைப் பூவை உதிர்த்து, ஆசினிப் பழத்தைத் தாக்கி, தேன் கூட்டில் பட்டு, சிதைத்து, மாமரப் பூங்கொத்தை உதிர்த்து, வாழையிலையைக் கிழித்து, பலாமரப் பழத்தில் புதைந்து கிடந்தது. இளம் மறவனின் எழுச்சி மிக வீரப்பண்பை இவ்வாறு சுவைபடப் பாடுகிறார் கபிலர்.

'கடுவிசைக் கவணையிற் கல்கை விடுதலின்
இறுவரை வேங்கையின் ஒள்வீ சிதறி
ஆசினி மென்பழம் அளிந்தவை உதிராத்
தேன்செய் இறாஅல் துளைபடப் பாகி
நறுவடி மாவின் பைந்துணர் உழக்கிக்
குலையுடன் வாழைக் கொழுமடல் கிழியாப்
பலவின் பழத்துள் தங்கும் .........'

- (குறிஞ்சிக்கலி ; பாட 41 ; 10-16)

இதே கபிலர் குறிஞ்சிப் பாட்டில் வரும் ஒரு இளம் மறவனின் வீரத்தை எடுத்துக் காட்டுகிறார். அவர், 'சினங்கொண்ட மறவன் அம்பு எய்தான். தட்டை என்ற கருவியையும் புடைத்தான். காடெல்லாம் கல்லென ஒலித்திட வாயை மடித்துச் சீழ்க்கை யடித்தான். அஞ்சிப் புனத்தை விட்டு ஓடிய மதயானை கார் காலத்து மழையின் போது முழங்கும் இடிபோல ஓசையெழுப்பியபடி, மரங்களை முறித்துக் கொண்டே ஓடியது 'எனக் கூறுவர்.

'கணைவிடு புடையூ கானம் கல்லென
மடிவிடு வீளையர் வெடிபடுத் தெதிர

கார்ப்பெயல் உருமின் பிளிறி சீர்த்தக
இரும்பிணர்த் தடக்கை இருநிலம் சேர்த்தி
சினம்திகழ் கடாஅம் செருக்கி மரம் கொல்பு
மையல் வேழம் . . . . . . . . . . . . . . . '

- (குறிஞ்சிப்பாட்டு ; 354 - 359)

பரணர் மறவர்களை உழவர்களாக உருவகப்படுத்தி சமூகத்தில் மறவர்கள் பெற்ற பெருமையை எடுத்துக் காட்டுவர். போர்க்களத்தை ஏர்க்களத்தோடு ஒப்புமைப் படுத்திக் கூறும் சிறப்பினை ஒரு பாடலில் காணலாம்.

'இருப்புமுகம் செறிந்த ஏந்தெழில் மருப்பின்
கருங்கை யானை கொண் மூவாக
நீண்மொழி மறவர் எறிவனர் உயர்த்த
வாள்மின் னாக வயங்குகடிப்பு அமைந்த
குருதிப் பலிய முரசுமுழக் காக
அரசராப் பனிக்கும் அணங்குறு பொழுதின்
வெவ்விசைப்பரவி வீசுவளி யாக
விசைப்புறு வல்வில் வீங்குநாண் உகைத்த
கணைத்துளி பொழிந்த கண்ணகன் கிடைக்கை
ஈரச் செறுவயின் தேர்ஏ ராக
விடியல் புக்கு நெடிய நீட்டிநின்
செருப்படை மிளிர்ந்த திருத்துறு பைஞ்சால்
பிடித்தெறி வெள்வேல் கணையமொடு வித்தி
விழுத்தலை சாய்த்த வெருவரு பைங்கூழ் '

- (புறம். 369 - 01 - 14)

என்பது பாடல். இதில் உருவகம் அமைந்துள்ள முறையைக் கற்கின் வியப்புமன்று ; அதன் சிறப்பும் வெளிப்படும்; மறவர்தம் மாண்பும் புலப்படும்.

| **மறவர் குழாம்** | **உழவர் குழாம்** |
|---|---|
| யானை | கருமேகம் |
| வாள் | மின்னல் |
| முரசொலி | இடிமுழக்கம் |
| குதிரைகள் | காற்று |
| அம்புகள் | மழைநீர் |
| போர்க்களம் | வயற்களம் |
| தேர்கள் | ஏர்கள் |
| படைகள் | ஏர்சால் |
| வேலும், அம்பும் | விதைகள் |
| தலை, மூளை, நிணம் | பயிர்கள் |

ஒவ்வொரு படையிலும் மறவர்கள் எண்ணிறந்தவர்களாக இருந்தனர் என்பதையும் புறநானூறு சுவைபட விளக்குகிறது. ஆலத்தூர்கிழார் சோழன் நலங்கிள்ளியின் படையின் பெருமையை உயர்வு நவிற்சியணியாகக் கூறி, மறவர்தம் அளப்பரிய படையை அறிமுகப்படுத்துகிறார். அவனது படை புறப்படுங்கால் முன்னே செல்லும் தூசிப் படையிலுள்ளார் பனையின்

நுங்கினைத் தின்னுங் காலமாயின், இடைப்படையிலுள்ளார் அப்பனையிருக்கும் இடம் சேரும் போது பனைநுங்கு முற்றிக் காய்த்துக் கனிந்து விடும். அவர்கள் அதனைத் தின்னக் கூடிய காலமாகும். படையின் கடையிற் செல்வோர் அவ்விடத்தை யடையும் போது பனங்கனியும் போய்ப் பிசிரொடு கூடிய பனங்கிழங்கு பெற்றுச் சுட்டுத் தின்னும் காலமாகும். இத்துணைப் பெரும்படையை வைத்தாளும் பேராற்றல் படைத்தவன் சோழன் நலங்கிள்ளி எனப்புலவர் கூறுவர்.

'தலையோர் நுங்கின் தீஞ்சேறு மிசைய
இடையோர் பழத்தின் பைங்கனி மாந்தக்
கடையோர் விடுவாய்ப் பிசிரொடுசுடு கிழங்குநுகர
நிலமலர் வையத்து வலமுறை வளைஇ'

- (புறம் ; 225 ; 01-04)

போர்க்களத்தில் தனித்து நின்று மறவனொருவன் தம் வீரத்தை நிலைநாட்ட மேற்கொண்ட தீரச் செயல்களை உலோச்சனார் என்னும் புலவர், இவ்வாறு பாடுவர்.

'நீலக் கச்சைப் பூவா ராடைப்
பீலிக் கண்ணிப் பெருந்தகை மறவன்
மேல்வருங் களிற்றொடு வேல்துரந் தினியே
தன்னுந் துரக்குவன் போலு மொன்னலர்
எஃகுடை வலத்தர் மாவொடு பரந்தரக்
கையின் வாங்கித் தழீஇ
மொய்ம்பி னூக்கி மெய்க்கொண் டனனே

- (புறம் ; 275)

'இரண்டு பெருவேந்தர் கடல்போன்ற படையுடன் கைகலந்து தும்பை சூடிப் போருடற்றினர். அப்போரின் கண் மறவனொருவன் இடையிற் கச்சையால் இறுகிய உடையும், தலையில் மயிற் பீலியால் தொடுக்கப்பட்ட கண்ணியும் உடையனாய் வேலேந்தி நின்று கடும் போர் புரிந்தான். அக்காலை அவன்மேற் பெரிய களிறொன்றும் தாக்க வந்தது. உடனே, அவன்தன் கைவேலை அக்களிற்றின் நெற்றியிற் பாய்ந்துருவச் செலுத்தினான்.

அக்கன்று வேலுடனே பிறக்கிட்டுச் சென்று வீழ்ந்துபட்டது. இதற்கிடையே பகைவர் பலர் வேலேந்திப் பரந்து வந்தனர். அவனோ, அவர் செலுத்திய வேலை வாங்கி, மடித்து அவர்தம் தலைவனையும் தோளுறப் பற்றி நிலத்தில் மோதி உயிர் நீங்கிய அவனது உடலைக் கைக்கொண்டு நின்றான்.'

இவ்வாறு, சமூகத்தின் ஒரு குடும்பத்தில் பிறந்து, உறவென்னும் வலையால் பின்னப்பெற்று, வளர்ந்து வரும் பொழுதே கற்க வேண்டியதைக் கற்று, சமூக மயமாக்கலுக்குத் தேவையான எல்லாப் பண்புகளையும் பெற்று, 'வினையே ஆடவர்க்கு உயிர்' என உணர்ந்து வீடு காவல், ஊர்க்காவல், மெய்க்காவல், நாடுகாவல் எனப் பல காவற் பணிகளையும், பிற தொழில்களிலும் ஈடுபட்டு, சந்தர்ப்பம் கிடைத்த பொழுது தம் வீரச் செயல்களைச் செய்து, பிறர் பாராட்டும் வண்ணம் வாழ்ந்த வரலாற்றைச் சங்க இலக்கியங்கள் விரிவாகக் கூறுகின்றன. இவற்றுள் மறவர்தம் சமூகப் பண்பு, தொழில் பண்பு, வீரப்பண்பு போன்றவை விரிவாகக் காணப்படுகின்றன.

## ஆய்வு முடிவுகள்

சங்க இலக்கியம் புலப்படுத்தும் சமூகக் கட்டமைப்பிற்குத் துணை நின்ற நாடு, முப்பொருள் முதலானவை புலவர்கள் கூறிய நெறிகளில்

கண்டறியப்பட்டது. முப்பொருள் துணையோடு அமைந்த தமிழ்ச் சமூகம் பற்றிய செய்திகள் தொகுத்தறியப்பட்டன. குடும்பம், உறவினர், நண்பர், பிற சமூகத்தார் என அமைந்த வற்றின் இடையே வளர்ந்த கூட்டுறவே சமூகக் கட்டமைப்பிற்குப் பெரிதும் துணைநின்றன என்பதைத் தொகுத்து வரையறை செய்யப்பட்டது. சமூகம் தொடர்பான பல்வகைக் கொள்கைகளை உருவாக்கிய பிற இயலாரின் கோட்பாடுகளுடன் ஒப்பிட்டு மதிப்பீடு செய்யப்பட்ட கருத்துக்கள் முறைப்படுத்தப்பட்டன. அரசர் முதலான சமூக உறுப்பினர்கள் பற்றிச் சங்க இலக்கியங்கள் கூறும் கருத்துக்களால் அறியப்பட்ட தனித்தன்மைகள் பட்டியலிட்டுக் காட்டப்பட்டன. இவற்றுள் மறவர் பெற்ற இடம், பெருமை, தனித்தன்மை, ஆற்றிய பணிகள், மேற்கொண்ட பிறதொழில்கள், போர்க்களச் செயல்கள், தறுகண், பெருமிதம் முதலியவற்றால் பெற்ற சமூகப் பண்புகளும், வீரப் பண்புகளும் சான்றாதாரங்களுடன் எடுத்து முன்வைக்கப்பட்டன.

அரசர் முதலான உழவர் ஈறாக உள்ள எல்லாச் சமூக உறவினர்களிடமும் நல்லுறவு கொண்டு மறவர், பிறரைப் போலவே சமூகக் கட்டமைப்பிற்குப் பெருந்துணை புரிந்தவற்றை சங்க இலக்கியம் விளக்கும் சமூகக் கட்டமைப்புகளோடு இணைத்தும், ஒப்பிட்டும் பார்த்துக் கண்டறிந்த முடிவுகள் பட்டியலிடப் பட்டன. ஆய்வின் முடிவில் கண்டறிந்தவற்றைத் தொகுத்துக் கீழ்க்கண்டவாறு அமைத்துக் கொண்டு அடுத்து வரும் இயலுக்கு அடித்தளமாக அமைத்து மேலும் செய்ய வேண்டிய ஆய்வுகளைத் தொடர்ந்து செய்ய முயற்சிக்கப்படுகிறது.

1. சங்க இலக்கியங்கள் எனப்படும் பத்துப்பாட்டும் எட்டுத் தொகையும் தான் ஆய்வுக்குரிய நூல்களாக ஏற்றுக் கொள்ளப்பட்டன.

2. இவற்றிற்கு அடித்தளமாகும் தொல்காப்பியம் பொருளதிகாரம், திருக்குறள் ஆகியவை சான்றாதார நூல்களாகக் கருதப்பட்டன.

3. தமிழ்ச் சமூகத்திற்கு அடிக்கூறாக அமைந்த தனிநபர் - குடும்பம் - சமயம் - அரசியல் - சமூகம் எனச் சங்கிலித் தொடர் உறவுகள் தெளிவாகத் தெரிகின்றன.

4. சமூக அமைப்பிற்கும் கட்டமைப்பிற்கும் உதவும் முப்பொருள்கள் சங்க இலக்கியங்களில் மிகுதியாகவே இடம் பெற்றுள்ளன.

5. சங்க இலக்கியச் சமூகக் கட்டமைப்பு மானுடம் போற்றிப் பல்வினைகளால் உறுதிப்பட நிலைநாட்டியுள்ளன.

6. சமூகவியலார் கோட்பாட்டில் பெரும்பகுதி சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன. காலப் பழைமையால் சில இடம் பெறவில்லை என்பது தெளிவாகத் தெரிகிறது.

7. தற்கால அரசியலார் கோட்பாடுள் இடம் பெற்ற குடியாட்சி முறைக்குரிய எல்லாத் தன்மைகளும் சங்ககால முடியாட்சியில் இடம் பெற்றுள்ளதைத் தக்க வாறு சங்க இலக்கியங்கள் எடுத்துக் காட்டுகின்றன.

8. தற்கால பொருளியல் கோட்பாட்டில் மிகக் குறைந்த ஒற்றுமையே காணப்படுகின்றன. பண்ட மாற்று முறை முதலிடம் பெற்றுள்ளது.

9. வரலாற்றுக் கோட்பாட்டில் முழுமையும் சங்க இலக்கியங்களில் இடம் பெற்று சமூகக் கட்டமைப்பு சிறப்புச் செய்தது போலவே சிறப்பற்ற செயல்களையும் பெற்றுள்ளன எனத் தெரிகிறது.

10. உளநூலார் கோட்பாடு அகப்பொருள் இலக்கியங்களில் இடம் பெற்றுச் சமூகக் கட்டமைப்பு சிறக்கத் தம் பங்கினைச் செலுத்தியுள்ளது.

11. போரியலார் கோட்பாட்டில் பலவற்றைத் தமக்குரியதாக்கிச் சிறந்திருந்தாலும் தமக்கேயுரிய தமிழ் மரபிற்கேயுரிய கோட்பாடு இலக்கியங்களில் மிகுதியாக எடுத்துக்காட்டப் படுகின்றன.

12. கிரேக்கம், ரோமானியம் முதலான பழைமையான சமூகக் கட்டமைப்பு போலவே சங்க இலக்கியங்கள் கூறும் சமூகக் கட்டமைப்புகள் தனித்தன்மைகளுடன் பல சிறப்புகளைப் பெற்று விளங்குகின்றன.

13. சமூகக் கட்டமைப்பின் அடித்தளம் அரசரும், அவர்தம் அரசாட்சியும் தான் என்பது தெளிவாகிறது.

14. உழவர் முதல் மறவர் வரை எல்லாத் தொழிலாளர்களும் தத்தம் மனித வளம் மேம்பாட்டைச் சமூகக் கட்டமைப்பிற்குத் தத்தம் பங்களிப்பாக வழங்கியுள்ளனர்.

15. தற்காப்பு, பாதுகாப்பு, பல்வகைக் காவல், பகை ஒழிப்பு முதலானவற்றின் அடிப்படையில் சமூகக் கட்டமைப்பின் மையப்புள்ளியாகவும், ஆதாரச் சுருதியாகவும் இன்றியமையாக் கூறாகவும் இருந்தவர் மறவர்களே என்பதைத் தெளிவாகவும், உறுதிப்படவும் சங்க இலக்கியங்கள் நன்கு தெளிவுபடுத்துகின்றன.

# அடிக்குறிப்புகள்

1. டாக்டர். மு. நிலாமணி மற்றும் டா. கலா கே.தாக்கர், வர்த்தர்மானன் தமிழ் - தமிழ் அகராதி, நான்காம் பதிப்பு, பக் 794-795.
2. புறநானூறு பாடல் எண் 62 ; ஔவை சு. துரைசாமிப் பிள்ளையின் விளக்கவுரை, மறுபதிப்பு, பக் 160 - 163.
3. டாக்டர். கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும், மறுபதிப்பு, ப - 128.
4. மேற்படி - ப.72.
5. கண்ணகி கலைவேந்தன், பதிப்பாசிரியர், தரணி போற்றும் தமிழர் பண்பாடு, முதற்பதிப்பு , ப-1.
6. டாக்டர். செ.ரா.பரமேஷ், சமூக உளவியல், முதற்பதிப்பு, ப - 08.
7. டாக்டர். கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும், மறுபதிப்பு, ப - 12.
8. டாக்டர். மு. வரதராசன், இலக்கியத் திறன், மறுபதிப்பு, பக் - 208 - 209.
9. முனைவர். ம.ரா.போ. குருசாமி, கபிலம், முதற்பதிப்பு, ப.369.
10. திரு. வே.தி. செல்வம், தமிழக வரலாறும் பண்பாடும், நான்காம் பதிப்பு, ப- 45.
11. மேற்படி - ப - 45.
12. திரு. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், மறுபதிப்பு, பக் - 184 - 185.
13. முனைவர். தாயம்மாள் அறவாணன், தமிழ்ச் சமூகவியல் - ஒரு கருத்தாடல், முதற்பதிப்பு, பக் 3 - 4.

14. முனைவர். அ.அ. மணவாளன், இருபதாம் நூற்றாண்டின் இலக்கியக் கோட்பாடுகள், இரண்டாம் பதிப்பு, ப- 44.

15. திரு. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், மறுபதிப்பு, ப - 26.

16. முனைவர். க.காந்தி, தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைளும், இரண்டாம் பதிப்பு, ப- அணிந்துரை முதற்பக்கம்.

17. மேற்படி - பக் 12 - 16.

18. மேற்படி - பக் 13 - 14.

19. பேராசிரியர். அ.ச. ஞானசம்பந்தன், இலக்கியக்கலை, முதற்பதிப்பு, ப- 97.

20. மேற்படி - பக் - 96

21. மேற்படி - பக் - 285.

22. முனைவர். அ. அ. மணவாளன், இருபதாம் நூற்றாண்டின் இலக்கியக் கோட்பாடுகள், இரண்டாம் பதிப்பு, பக் - 94 - 95.

23. தொல்காப்பியர், தொல்காப்பியம், பொருளதிகாரம், மெய்ப்பாட்டியல், நூற்பாக்கள் - 13 முதல் 18 முடிய.

24. பேராசிரியர். அ.ச. ஞான சம்பந்தன், இலக்கியக்கலை, முதற்பதிப்பு, பக் 263 - 264.

25. மேற்படி - ப- 287.

26. தொல்காப்பியர், தொல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியல், நூற்பா- 03.

'மேலோர் மூவர்க்கும் புணர்ந்த கரணம்
கீழோர்க் காகிய காலமும் உண்டே'

27. மேற்படி - நூற்பா - 04

'பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப.'

28. மேற்படி - நூற்பா - 11 - இதன் தெளிவுரை - ச.வே. சுப்பிரமணியன், தொல்காப்பியம் தெளிவுரை, மூன்றாம் பதிப்பு, ப - 447.

29. மேற்படி - நூற்பா - 12

30. மேற்படி - நூற்பா - 13 மற்றும் 14

31. மேற்படி - நூற்பா - 29 - மற்றும் 30

32. பேராசிரியர். அ.ச. ஞானசம்பந்தன், இலக்கியக்கலை, முதற்பதிப்பு, பக் - 287 - 288.

33. டாக்டர். கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும், மறுபதிப்பு, ப - 129.

34. டாக்டர். அன்னிதாமசு, தமிழர் சமூகவியல், முதற்பதிப்பு , ப - 04.

35. முனைவர். தாயம்மாள் அறவாணன் , தமிழ்ச் சமூகவியல் - ஒரு கருத்தாடல், முதற்பதிப்பு, ப - 16.

36. டாக்டர். செ.ரா. பரமேஷ், சமூக உளவியல், முதற்பதிப்பு , ப- 13.

37. முனைவர். தாயம்மாள் அறவாணன், தமிழ்ச் சமூகவியல் - ஒரு கருத்தாடல், முதற்பதிப்பு, பக் 12-13.

38. சித்தாந்த கலாநிதி, ஒளவை.சு. துரைசாமி, புறநானூறு, 1-200 பாடல்களின் விளக்கவுரை, மறுபதிப்பு, ப - 407.

39. பேராசிரியர். அ.ச. ஞானசம்பந்தன், இலக்கியக்கலை, முதற்பதிப்பு, ப- 30.

40. முனைவர். தாயம்மாள் அறவாணன், தமிழ்ச் சமூகவியல் - ஒரு கருத்தாடல், முதற்பதிப்பு, ப - 13.

41. திரு. பக்தவச்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், மறுபதிப்பு, பக் - 114-115.

42. திரு. ச.வே. சுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வகையும் வடிவும், முதற்பதிப்பு, ப- 07.

43. முனைவர். தாயம்மாள் அறவாணன், தமிழ்ச் சமூகவியல் - ஒரு கருத்தாடல், முதற்பதிப்பு, பக் 13-15.

44. புறநானூறு சுட்டும் அறப்பாடுகள் இடம் பெற்ற பாடல்கள் எண் : 09 ; 27; 34 ; 46 ; 50 ; 74 ; 121 ; 134 ; 182 ; 183 ; 184 ; 186 ; 187 ; 188 ; 189 ; 190 ; 191 ; 192 ; 193 ; 194 ; 195 ; 214 ; 218 ; 312 ;

45. டாக்டர். செ.ரா. பரமேஷ், சமூக உளவியல், முதற்பதிப்பு, பக் 53-55.

46. திரு. வே.தி. செல்வம், தமிழக வரலாறும் பண்பாடும், நான்காம் பதிப்பு, ப - 33.

47. முனைவர். தாயம்மாள் அறவாணன், தமிழ்ச் சமூகவியல் - ஒரு கருத்தாடல், முதற்பதிப்பு, ப - 68.

48. முனைவர். அ.அ.மணவாளன், இருபதாம் நூற்றாண்டின் இலக்கியக் கோட்பாடுகள், இரண்டாம் பதிப்பு, ப - 100.

49. தொல்காப்பியர், தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல் , நூற்பா 51, கற்பியல், நூற்பா - 46 ; பொருளியல் , நூற்பா - 30.

50. திரு. பா.சு. முத்தையா, சங்க கால மறவர், முதற்பதிப்பு, பக் 29 - 30.

51. டாக்டர். ஏ. திலகவதி ஜெகதீசன் மற்றும் எஸ். அன்புக்கொடி நல்லதம்பி, ஒப்பீட்டரசியல், முதற்பதிப்பு, பக் 34 - 35.

52. முனைவர். தாயம்மாள் அறவாணன், தமிழ்ச் சமூகவியல் - ஒரு கருத்தாடல், முதற்பதிப்பு, பக் 44 - 45.

53. டாக்டர். ஏ. திலகவதி ஜெகதீசன் மற்றும் எஸ். அன்புக்கொடி நல்லதம்பி, ஒப்பீட்டரசியல், முதற்பதிப்பு, பக்கங்கள் - 19 ; 20 ; 21 ; 22 ; 78 ;

54. திரு. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், மறுபதிப்பு, பக் 24 - 25.

55. டாக்டர். கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும், மறுபதிப்பு, ப - 50.

56. மேற்படி - ப - 62.

57. கடியலூர் உருத்திரங்கண்ணனார், பட்டினப்பாலை, மறுபதிப்பு, பக் - 04 - 05 ; பாடல் அடிகள் 122 முதல் 141 முடிய.

58. திருவள்ளுவர் , திருக்குறள், பொருட்பால், பொருள் செயல்வகை அதிகாரம், குறள்கள் - 754 ; 755 ; 757 ; 759 ; 760.

59. திரு. வே.தி. செல்வம், தமிழக வரலாறும் பண்பாடும், நான்காம் பதிப்பு, பக் 10 - 16.

60. முனைவர். ம.ரா.போ. குருசாமி , கபிலம், முதற்பதிப்பு, ப - 369.

61. டாக்டர். கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும், மறுபதிப்பு, ப - 72.

62. மேற்படி - ப - 74.

63. மேற்படி - ப - 82.

64. மேற்படி - ப - 26.

65. டாக்டர். செ.ரா. பரமேஷ், சமூக உளவியல், முதற்பதிப்பு, பக் - 29 - 35.

66. திரு. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், மறுபதிப்பு, ப - 229.

67. மேஜர். கதிர்மகாதேவன், 'பழந்தமிழர் வீரப்பண்பாடு ', முதற்பதிப்பு, பக் 28 - 29.

68. டாக்டர். இரா. பாஸ்கர சேதுபதி, நிருவாகவியல் சிந்தனையாளர்கள், 2 ஆம் பதிப்பு, பக் 37 - 39.

69. (1) திரு. தி.சு. அவினாசிலிங்கம், கலைக் களஞ்சியம், தொகுதி ஏழு, முதற்பதிப்பு, பக் - 730 - 732.

(2) Mr. V.R. Ramachandra Dikshitar - The Art of War in Ancient India - P - I; மேற்கோளாகக் காட்டியவர் : மேஜர். கதிர்மகாதேவன், பழந்தமிழர் வீரப்பண்பாடு, முதற்பதிப்பு, ப - 94.

(3) Dr. Rajkumar, Military System in Ancient India, First Edition, PP - I - 22.

70. புலவர்.கா. கோவிந்தன், பண்டைத் தமிழர் போர் நெறி, முதற்பதிப்பு, ப - 270 - 271.

71. முனைவர். பா. சூரியநாராயணன், தமிழ்நாட்டு வரலாற்றில் இலக்கிய ஆதாரங்கள் கி.மு. 200 - கி.பி. 300, முதற்பதிப்பு , பக் - 271 - 274.

72. வே.தி. செல்வம், தமிழக வரலாறும் பண்பாடும், நான்காம் பதிப்பு, ப - 116.

73. முனைவர். க. காந்தி, தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும், 2 ஆம் பதிப்பு, ப - 333.

74. மேற்படி - ப - 333.

75. மேற்படி - பக். 333 - 334.

76. மேஜர். கதிர்மகாதேவன், பழந்தமிழர் வீரப்பண்பாடு, முதற்பதிப்பு, ப-08.

77. மேற்படி - ப - 94.

78. மேற்படி - ப - 106.

# இயல் இரண்டு

## சங்க இலக்கிய பன்முக அமைப்புகள்

சங்க இலக்கிய பன்முக அமைப்புகள் என்ற இவ்வியல், 'சங்க இலக்கிய பன்முக அமைப்பு, இலக்கிய மாந்தர் பன்முக அமைப்பு, சங்ககாலச் சமூகக் காப்பும் - வளர்ச்சியும், வளர்ச்சியும் - மாற்றமும், சமூகமாற்றம், சேர மன்னர், சோழ மன்னர், பாண்டிய மன்னர், மானுடம் போற்றும் நெறிகள், பொறுப்புகள் - கடமைகள் - தொழில்கள், தனி நபர் உரிமைகள், சமூகக் கலைகளும், நுண் கலைகளும், சமூகஇயக்கமும், மன்னரும்-சான்றோரும், மன்னரும்-புலவர்களும், மன்னரும்-மறவர்களும், மறவர்கள் பங்கும்-பணிகளும், மறவர்களின் சமூக உறவுகள் என்ற தலைப்புகளில் சங்க இலக்கிய அமைப்புகளை ஆய்வு நெறியோடு மதிப்பீடு செய்து மறவர்களோடு தொடர்புடைய செய்திகளை முறைப்படுத்திக் கூறுகிறது.

சங்க இலக்கிம் சிறப்பிக்கும் மறவர் தம் பயனுள்ள செய்திகளைக் கண்டறிய சமூகக் கட்டமைப்பு உதவுவது போல, சங்க இலக்கியம் தம்முள் கொண்டிலங்கும் பன்முக அமைப்புகளும் பெருந்துணை புரியும். அகம், புறம் என்ற கோட்பாட்டிலக்கியங்களுள் வெளிப்படுத்தப்படும் சுவைமிக்க கருத்துக்கள் வெற்றெனத் தொடுக்கப்பட்டவையன்று ; சமூகப் பயன் கருதி சங்க இலக்கியத் தமிழ்ச் சமுதாயம் போற்றிப் புரந்த பலதரப்பட்ட அமைப்புகளையும், அவற்றுள் பின்பற்றப்பட்ட நெறிகளையும் இலக்கிய இயக்கமாக உருப்பெறச் செய்து புலவர்கள் படைத்துள்ளனர். 'இலக்கியம் ஒரே நிலையில் இருப்பதன்று. வளர்ச்சி எய்தும் தன்மை வாய்ந்தது. தனக்கு முன்பு தோன்றிய உயர்தர இலக்கியங்களை மாதிரியாகக் கொண்டு அவை போலவே அதுவும் படைக்கப்படுவது அன்று. உயிரோடு வாழும் மனிதர்களையும் அவர்தம் செயல்களையும் அது குறிப்பதாகும்.

சமுதாயம், அரசியல், சமயம், பொருளாதாரம் ஆகியவற்றின் நிலைகள் காலந்தோறும் மாறிக் கொண்டு வருகின்றன. இங்ஙனம் மாறி வரும் நிலைகளைத் தக்க முறையில் உருவாக்கிக் காட்டும் பொருட்டு இலக்கியமும் அதற்கேற்ற வகையில் மாற்றம் அடைவதாகும்'[1] என்று கூறிய திறனாய்வாளரின் கருத்திற்கேற்ப சங்க இலக்கியம் நல்ல வளர்ச்சி பெற்றுப் பலமாற்றங்களைத் தம்முள் இடம் பெறச் செய்து பொற்காலமாகத் திகழ்ந்த சங்ககால வாழ்வியல் கண்ட அனைத்தையும் உள்ளடக்கி இலக்கிய இயக்கங்களின் உறைவிட மாக்கிப் படைத்துள்ளதைக் காணமுடிகிறது. இந்த இயக்கங்களுள் சிறப்பாகக் கருதப்படும் இயற்கையியல், நடப்பியல், மனச்சாயலியல், வெளிப்பாட்டியல், அடிமன இயல்பியல், படிமவியல், குறியீட்டியல் முதலானவை போற்றப்பட்டுப் பன்முக அமைப்பில் சிறப்படைந்துள்ளதைக் காணலாம்.

சங்க இலக்கியங்கள் பெற்ற கருத்துக்கள், அவற்றைப் வெளிப்படுத்திய புனைந்துரைகள், அவற்றுள் இடம் பெறுமாறு செய்த உணர்வுகள் மற்றும் மெய்ப்பாடுகள், அதனடிப்படையில் உருவான வடிவங்கள் எனக் கையாளப்பட்டவற்றை மதிப்பீடு செய்வார்க்கு இந்த இயக்கங்களே பல்வேறு அமைப்பில் இடம் பெற்று, நன்கு அமையப் பெருந்துணை புரிந்தன எனலாம். எனவேதான், பலர் இலக்கண வரம்புகளையும் மீறி, சங்க இலக்கியம் படைக்கத் துணிந்தனர் எனலாம்.

'நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கும்
கலியே பரிபாட் டாயிரு பாங்கினும்
உரிய தாகு மென்மனார் புலவர்'

- (தொல் ; பொ ; அகத் ; நூற்பா 53 )

என்ற தொல்காப்பியரின் யாப்பிலக்கணக் கொள்கை, காலத்தின் தேவைக்கேற்ப மாற நேரிட்டதைச் சங்க இலக்கியங்களில் காணலாம். இந்த மாற்றத்தின் புதிய இயக்கத்தை, சோ. ந.கந்தசாமி தம் நூலில் நன்கு புலப்படுத்துவர். [2]

தமிழர்க்கே உரித்தான அகம், புறம் என்ற இலக்கியக் கோட்பாட்டின் கருத்துக்களை அப்படியே ஏற்றுக்கொண்டு காலத்தின் தேவைக்கேற்ப மாற்ற வேண்டியதை மட்டும் மாற்றிப் பழைமைக்குப் பெருமை சேர்த்த நூல்களே சங்க இலக்கியங்கள். அங்கொன்றும், இங்கொன்றுமாக கருத்தில் சில மாற்றங்கள் ஏற்பட்டிருப்பதையும் காணமுடிகிறது. ஆயினும், அவை மிக்ககுறைவே எனலாம். பழையன கழிந்து, புதியன புகுத்த முற்பட்ட சங்கப்புலவர்கள் தமிழர்க்கே உரிய அடிப்படை வாழ்வியல்களுள் மாற்றம் ஏற்படாததால், அவற்றை அப்படியே கையாண்டுள்ளனர்.

மாற்றம் பெறவேண்டியவற்றுள் மாற்றம் செய்து பாடல்களைப் படைத்தால்தான் பன்முக அமைப்புகள் நன்கு இடம் பெற்றுத் தனித்தன்மையோடு உலகம் உள்ள வரை நிலைத்திருக்கும் என உறுதியாகக் கூறலாம். இத்தகு பன்முக அமைப்புகளில் சமூக கட்டமைப்பிற்கு மறவர் பங்கு எவ்வாறு சிறப்பாக அமைந்திருக்கின்றது என்பதைப் படிப்படியாகக் காண்பது நன்று.

## சங்க இலக்கிய பன்முக அமைப்பு

சமூக அமைப்பே அடித்தளமாக அமைந்துள்ளது. அதனுள் வரலாற்றமைப்பு ; அரசியலமைப்பு ; பொருளமைப்பு ; உளக்கூற்றமைப்பு ; புவியியலமைப்பு; சுற்றுச் சூழலமைப்பு; அறக்கோட்பாட்டமைப்பு; போரியலமைப்பு முதலானவை தேவைப்படும் இடங்களில் அதன் இன்றியமையாமைக்கேற்ப அமைக்கப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது.

ஒன்றனுள் ஒன்றும் ; ஒன்றினைத் தொடர்ந்து மற்றொன்றும்; ஒன்றைச் சுற்றி மற்றொன்றும்; ஒன்றும் பலவுமாகவும் இத்தகு அமைப்புகள் அமைந்துள்ளதைக் காணலாம். மூன்றே அடிகள் கொண்ட சின்னஞ்சிறிய பாவில் கூட இது நுணுக்கமாக அமைய புலவர்களால் தனிக்கவனம் செலுத்தப்பட்டிருப்பதைத் தெளிவாகக் காணலாம்.

'நன்றே காதலர் சென்ற வாறே
அணிநிற இரும் பொறை மீமிசை
மணிநிற உருவின தோகையு முடைத்தே.'

*- (ஐங்குறுநூறு ; 431)*

'வினையே ஆடவர்க்கு உயிர் ' என்ற கொள்கையிற் பற்றுடைய தலைவன் ஒருவன் கார்காலம் என அறிந்தும், தலைவியைப் பிரிந்து செல்ல நேரிட்டது. விருப்பமின்றிவிடை கொடுத்தனுப்புகிறாள். தலைவன் சென்ற பிறகு வருந்துகிறாள். செல்லும் வழி எத்தகையதோ? என வினவி வருத்தம் மேலிடப் புலம்புகிறாள். அருகில் உள்ள தோழி, 'வேனிற்காலம் கழிந்துவிட்டது ; கார்காலம் தொடங்கிவிட்டது ; வழியில் எந்த இடுக்கணும் தோன்றாது ; தம் அழகிய தோகையை விரித்து மயில் குன்றில் நின்றாடும். அது கண்டு, அவர் நின்னை நினைத்தவாறே வருத்தமின்றிச் சென்று மீள்வர். வருந்தாதே ' என்கிறாள். இதில் இடம் பெற்றவை :

| | |
|---|---|
| (அ) சமூக அமைப்பு | முல்லைத்திணை; இருத்தலும் இருத்தல் நிமித்தமும். |
| (ஆ) வரலாறு | பொருள் வயிற்பிரிதல் அற்றைய ஆடவர்க்குரிய தலையாய பணி. |
| (இ) பொருளமைப்பு | வாழ்க்கைத் தேவைகளை நிறைவேற்ற பொருளீட்டல் ஒவ்வொரு ஆண் மகனுக்கும் உரிய கடமை. |

| | |
|---|---|
| (ஈ) உளக்கூற்றமைப்பு | சென்று வருக என வழியனுப்பிய தலைவி, பிரிவு தாங்காது வருந்துதல். |
| (உ) புவியமைப்பு | காடு - காடு சார்ந்த இடம் ; கார்காலம் ; செழிப்புடைய காலம். |
| (ஊ) சுற்றுச்சூழல் | கார்காலம் ; மேகமூட்டம் ; மயில்தோகை விரித்தாடுவது நல்ல சூழலமைப்பு. |
| (எ) அறக்கோட்பாடு | ஆற்றியிருத்தல் தலைவிக்கு வேண்டப்படும் ஒன்று ; தோழி அமைதிப்படுத்துதல். |

இவ்வாறு சங்க இலக்கியங்களில் பன்முக அமைப்புகள் இயல்பாகவே அமைந்துள்ளன.அவை, எந்த அளவிற்குச் சமூகத்தையும், சமூகப் பணிகளையும், சமூகமாந்தர்களையும் தாக்கிப் பிரதிபலிக்கிறது என்பதை அறிந்தால், சமூக மாந்தருள் ஒருவரான மறவர்தம் சீரிய பண்புகள் நன்முறையில் மதிப்பீடு செய்து வெளிப்படுத்த இயலும்.

இங்கு ஐயம் எழக்கூடும். 'பழந்தமிழ் இலக்கண, இலக்கிய நெறிகளைப் போற்றி எழுதப்பட்டவையே சங்க இலக்கியப் பாடல்கள். அவற்றுள் எல்லாம் சிறக்க நிறைவாக இருக்கின்றன. அதனை யாரும் மறுத்துரைக்க முன்வாரார். அத்தகு சூழ்நிலையில் 'பன்முக அமைப்பு' என்ற கோணத்தில் காணவேண்டிய இன்றியமையாமை என்ன? ஆய்விற்குத் தேவையான ஒன்றா?' என்று அடுத்தடுத்து ஐயங்கள் எழக்கூடும். அதற்குத் தகுதி வாய்ந்த பதில்கள் கூறப்பட வேண்டும். அவை :

1. புதிய ஆய்வு நெறிக்குட்பட்டும் சங்க இலக்கியம் சிறப்புற்று விளங்குகின்றன என்பதை நிலை நாட்ட இயலும்.

2. இலக்கியம் சமூகத்திற்கு எந்த அளவிற்கு வழிகாட்டியாகத் திகழ்கிறது என்பதைச் சுட்டிக் காட்ட இயலும்.

3. சமூக மாந்தர்களை மையமாக வைத்தே இலக்கியம் படைக்கப்படுகிறது என்பதைத் தெளிவுபடுத்த இயலும்.

4. சமூக மாந்தருள் ஒருவரான 'மறவர்' சமூகத்தின் எல்லா அடுக்கமைவுகளிலும் இடம் பெற்று வாழும் ஒரு சமூக உறுப்பினரே என்பது தெளிவாகும்.

5. பிறரைப் போன்றே மறவர்தம் பணிகளும் செம்மையுற வெளிப்படுவதால், பழந்தமிழ்ச் சமூகம் வீரயுகம் என்றும், வீரநிலைப் பண்பாடு பெற்ற சமூகம் என்றும் நிலை நாட்ட முடியும்.

## இலக்கிய மாந்தர் பன்முக அமைப்பு

சங்க இலக்கியங்களில் எண்ணிறந்த மாந்தர்கள் வலம் வருகின்றனர். அவர்களை மூவகைப்படுத்திக் கூறலாம். அவை :

(1) முதன்மை மாந்தர்

(2) துணைமை மாந்தர்

(3) பங்குறு மாந்தர்.

தலைவன், தலைவி, தோழி, செவிலித்தாய், நற்றாய், அரசர், அமைச்சர், புலவர், மறவர், உழவர், கலைஞர்கள் எனப்பல மாந்தர்கள் முதன்மை மாந்தர்கள் எனலாம். பாடற் கருத்துகள் இத்தகு மாந்தரை மையமாக வைத்தே புனையப்படும். ஒருவரோ அல்லது இருவரோ இடம் பெறுவர். எனவேதான், நாடகப் பாங்கில் பாடல்கள் அமைந்துள்ளன. வேறுசில மாந்தர் கூட முதன்மை மாந்தராய் வருவதுமுண்டு. பாடற்கருத்திற்கேற்ப மாந்தர் முதன்மைத் தன்மை பெறுவர்.

'அகவன் மகளே! அகவன் மகளே!
மனவுக் கோப்பன்ன நன்நெடுங் கூந்தல்
அகவன் மகளே! பாடுக பாட்டே!
இன்னும் பாடுக பாட்டே அவர்
நன்நெடுங் குன்றம் பாடிய பாட்டே !'

- (குறுந்தொகை : பா - 23)

இப்பாடலில் 'அகவன் மகள்' தான் முதன்மை மாந்தர். தலைவி அல்லள்; மேற்கொள்ளும் பணியின் நிமித்தம் அவள் முதன்மை பெறுகிறாள். இப்படியும் பாடல்கள் படைப்பதுண்டு.

துணைமை மாந்தர் எனப்படுவோரும் பலராவர். பாணன் ; பாடினி ; இளையோர் ; தேர்ப்பாகன் ; பார்ப்பான், கூத்தர், விறலியர், அறிவர், கண்டோர் எனப்பலர் இதில் அடங்குவர். இவர்கள் உருவாகும் நிகழ்ச்சிச் சூழலுக்கேற்ப தலைவி, தலைவன், அரசன் முதலான முதன்மைப் பாத்திரங்களோடு உறவு கொண்டு கூற்று நிகழ்த்த நேரிடும்.

'அளிதோ தானே பேரிருங் குன்றே!
வேலின் வேறல் வேந்தர்க்கோ அரிதே ;
நீலத்து இணைமலர் புரையும் உண்கண்
கிணைமகட்கு எளிதால் பாடினள் வரினே'

- (புறம் - 111)

'பாரியை யாராலும் வென்று நாட்டைக் கைப்பற்ற இயலாது. ஆனால், விறலியர் எளிதாக வந்து பாரியைப் புகழ்ந்து பாடி, நாட்டை எளிதாக அடைய இயலும்' என்ற கருத்துடைய இப்பாடலில் பாரியின் பெருமை, வீரம், ஈரம் ஒரு விறலியின் துணையால் விளக்கப்படுகிறது.

பங்குறு மாந்தர் இன்னார் என வரையறை செய்வதற்கில்லை, பாடலின் கருத்தை விளக்கத் துணைபுரியும் யாரேனும் ஒரு மாந்தர் பங்குறு மாந்தராகப் பயன்படுகிறார். இப்பாடலில் 'தெவ்வர்' மற்றுமொரு பங்குறு மாந்தராவர்.

'கலைஞர் தம் அனுபவத்தைப் பிறரும் உணருமாறு செய்தலை முதல் கடமையாக்கிக் கொள்கின்றனர். இவ்வாறு உணர்த்தி உணர்த்திப் பயின்ற பயிற்சியில் அவர்கள் பெறும் திறமையே கலையாகிறது. இந்தக் கலைத்திறன் பண்படப் பண்படப் கலைஞர்க்குக் கலையைப் படைக்கும் ஆற்றலும் வளர்கிறது. பிறர்க்கு உணர்த்தும் வேட்கையும் வளர்கிறது.'[3] என்ற திறனாய்வாளர் கருத்தை இங்கு ஒப்பு நோக்கின் கலைஞராகிய புலவர்க்குப் பங்குறு மாந்தர்கள் எவ்வாறெல்லாம் பாடலைப் படைக்கத் துணைபுரிகின்றனர் என்பதை அறியமுடியும்.

சமூகத்தில் உலவும் மாந்தர்களே இலக்கியங்களில் இடம் பெற்றால் தான் இத்தகு இலக்கிய இன்பம் வெளிப்பட்டு, கற்பாரின் சிந்தனையையும் வளர்க்கத் துணைபுரியும் எனலாம்.

இத்தகு இலக்கிய மாந்தர்களுள் ஒருவரே 'மறவர்' எனும் மாந்தர் ஆவர். இவர்கள் சமூகத்தின் இன்றியமையா மாந்தர்களாகக் கருதப்படுகின்றனர். குடும்பத்தில் தலைவராக விளங்கும் ஒரு தனிநபர், சமூகத்தில் இன்றியமையாப் பணிகளுள் ஒன்றாகக் கருதப்படும் காவற்பணியில் பொறுப்பேற்கும் பொழுது 'மறவர் ' எனச் சிறப்புப் பெயரால் அழைக்கப்பெற்றுப் பெருமை பெறுகிறார். சமூகம் இத்தகைய மறவர்கள் மீது நம்பிக்கை வைத்து அச்சமின்றி வாழ்கின்றது. சமூகத்தேவைகளுள் பாதுகாப்பு முதன்மைத் தேவையாவதால் இத்தகைய மறவர்க்குத் தனிச் செல்வாக்கு உருவாகிறது.

இத்தகு மறவர்கள் புறப்பாடல்களில் மட்டுமன்று ; அகப்பாடல்களிலும் இடம் பெறுவதைக் காணலாம். சமூகத்திலுள்ள அனைவரையும் தம் பால் ஈர்க்கும் வீரதீரச் செயல்களால் தம்மை மேம்படுத்திக் கொள்ளும் மறவர், தாம் மேற்கொண்ட பணியில் அதிக ஈடுபாடு கொண்டு செயல்படுவதால், அவர்க்கு நற்புகழ் இயல்பாகவே கிடைக்க வாய்ப்பேற்படுகிறது. இத்தகு மறவர்கட்குப் புறத்திணை ஒழுக்கங்களில் வெற்றிகாண உரமாக அமைவது அகத்திணை வாழ்வேயாகும். இல்லறம் சிறப்புற்றுச் சுற்றத்தாரோடு மனநிறைவாக வாழும் மறவர்கள் தத்தம் கடமைகளில் வெற்றிவாகையை இயல்பாகவே பெறுவர்.

'புகழ்தேடும் ஆர்வம் மீதூர்ந்த அக்காலத்து வாழ்ந்தோர் தம்வீரம், தீரம், அஞ்சா நெஞ்சம், வீறார்ந்த நற்பண்புகள் ஆகியவைகளை வினைநவில் கவிதைகளில் பாடுபொருளாகக் காண விழைந்தனர். மனித முனைப்பு உணர்ச்சிகளின் உண்மையான தேவையை நிறைவு செய்யும் இவ்வீர நிலைக் கவிதைகள் உலகில் பல இடங்களில் இன்றும் பாடப் படுகின்றன ; அன்றும் பாடப்பட்டன ' [4] என்று கூறுவதை நினைவிற் கொள்ள வேண்டும்.

சங்க இலக்கியத்திற்குரிய தனித்தன்மைகளுள் ஒன்று, அகப்பொருள் பாடல்களும் மறவர்தம் வீரச் செயல்களும், போர்க்களக் காட்சிகளும் தலைவி மற்றும் தோழியர் கூற்றில் இடம் பெறுவதேயாம்.

'மயங்குமலர்க் கோதை குழைய மகிழ்நன்
முயங்கிய நாள்தவச் சிலவே ; அலரே,
கூகைக் கோழி வாகைப் பறந்தலைப்
பசும்பூட் பாண்டியன் வினைவல் அதிகன்
களிறொடு பட்ட ஞான்றை
ஒளிறுவாட் கொங்கா ஆர்ப்பினும் பெரிதே !

*- (குறுந்தொகை ; 393)*

தலைவி, தலைவனோடு களவுப் புணர்ச்சி கொண்டு வாழ்ந்ததை ஊரார் அறிந்து, அலர் பரப்ப, அது தீப் போல் பரவி, வீட்டை விட்டுத் தலைவி வெளியே வரமுடியாமல் தவித்துக் கொண்டிருக்கிறாள். தலைவன் எப்படியாகிலும் தலைவியைச் சந்தித்து விடவேண்டுமென்ற அவாவுடன் வந்து, ஓரிடத்தில் மறைவாக நிற்கிறான். அது கண்ட தோழி, தலைவியிடம் கூறுவது போல, தலைவன் காதில் விழுமாறு ஊர்அலர் பற்றிக் கூறி, விரைவில் மணம் முடித்து அழைத்துச் செல்லுமாறு குறிப்பாக உணர்த்துகிறாள். அப்பொழுது, ஊர் அலரானது, 'வாகைப் பறந்தலைப் போர்க்களத்தில் பாண்டியனின் படைத்தலைவன் அதிகன் கொங்கர்களோடு போரிட்டு வீரமரணம் எய்தி, தோற்க நேரிட்டது. கொங்கர், வாகை மாலைசூடி வெற்றி ஆரவாரம் செய்தனர். அந்தப் போர்க்கள ஆரவாரத்தை விட அதிகமாக ஊர் அலரால் எழுந்த ஆரவாரம் நாலாபக்கமும் எதிரொலித்தது எனக் கூறுகிறாள்.

சங்க காலத்துப் பெண்டிரும் போர்க்களச் செய்திகளை அவ்வப்பொழுது கேட்டறிந்து தத்தம் பேச்சில் அதுபற்றிக் கூறிவருவது வழக்கம் என்பதைப் பல அகப்பாடல்களின் தோழி மற்றும் தலைவியரின் கூற்றில் இடம் பெற்ற வீர நிகழ்ச்சிகள் மூலம் உறுதிப் பட அறிய முடிகிறது. பொதுவாகத் தமிழகப் பெண்டிர் வீராங்கணையாக வாழ்ந்து வருவதை இன்றும் பலர் கூறிப் பாராட்டுவதைக் கேட்கலாம்.

'தமிழ்ப் பண்பாட்டில் மகளிர் வீரத்திற்குத் தனி இடம் அளிக்கப்படுதல் வீர உலகில் குறித்துக் கொள்ளக் கூடிய பண்பாடாகும். களத்தைக் கண்டு பாடிய பெண்டிரும், அமர்க்களத்திற்குச் சென்று பாடிய மகளிரும், பகைவர்களுக்குப் பகைக்களத்தில் எச்சரிக்கை விடுத்த பெண்பாற் புலவர்களும், பழந்தமிழகத்தில் காணப்படுகின்றனர். பழந்தமிழர் வீரநிலைக் காலத்தில் பெண்பாற் புலவர்கள்

முப்பதின்மர் உளர். அவர்களுள் செம்பாதி மகளிர் வீரத்தைக் கண்டு ஏத்தினர் '[5] என்று அறிஞர் கூறும் கருத்துகள் இதற்கு அரண் செய்கின்றன.

'ஈன்ற வயிறோ இதுவே
தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே'
என்று கூறிய காவற்பெண்டும்,
'ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்
களிறுஎறிந்துபெயர்தல் காளைக்குக் கடனே'

என்று கூறிய பொன்முடியாரும் பெண்பாற்புலவர்களே என்பதை யாவரும் அறிவர். ஒக்கூர் மாசாத்தியார் ஒரு வீரத்தாயின் தறுகண் நிறைந்த வீரச் செயலைக் கண்டு வியந்து, பெருமிதமுற்று பாடிய பாடல் அக்காலத்து மகளிர் ஒவ்வொருவரும் மறவர்க்கேற்ற மறத்தியராகவே வாழ்ந்துவந்ததை நிலை நாட்டுகிறது. 'கெடுக சிந்தை கடிதிவள் துணிவே, மூதின் மகளிர் ஆதல் தகுமே' என்று பாராட்டி வியந்து நிற்கிறாள்.[6]

மூதின் மகளிர் என்ற சொல்லுக்கு உரையாசிரியர் ஒளவை சு. துரைசாமிப் பிள்ளை கூறும் விளக்கத்தை நினைவிற் கொள்ளவேண்டும். அவர், 'முதிய மறக்குடியிற் பிறந்த பெண்டிர் என்பதைச் சுட்டுவதே 'மூதின் மகளிர்' ஆகும். இவர்கட்குத் துயர் தருவது மறமானங்களின் இழப்பே தவிர உயிரிழப்பன்று. மானமுடைய மறக்குடியிற் பிறந்தவர், உணர்வில்லாத விலங்காகுமென்று கருதி யானையைக் கொல்வதும், பிறரால் தாக்குண்டு மிச்சிற்பட்டாரென்ப போர்ப்புண்பட்ட வீரரை வெல்வதும், ஒத்த மாறுபாடு இல்லாதவரென்று நினைந்து தமக்கு இளையவரை வெல்வதும், தம்மின் மூத்தவரொடு பொருவது போர் நெறியன்றென எண்ணி அவரை வெல்லதும், மறத்திற்கு இழிவு என்று கருதுவர்.'[7]

சங்க இலக்கிய மாந்தர்களுள் முதன்மையாகக் கருதப்படும் மறவர்கள் பெற்ற பன்முக ஆற்றல், அவர்தம் சிறப்பிற்கும் புகழுக்கும் வழிவகுத்தன. சங்கத் தமிழ்ச் சமூகத்தின் உயிர் நாடியாகத் திகழ்ந்ததால் தான், எல்லாநிலையிலும் அவர்கள் பாராட்டப் பெற்றுப் புலவர்களால் பாடப்பட்டுள்ளனர்.

## சங்ககாலச் சமூகக் காப்பும் வளர்ச்சியும்

சமூகக் காப்பும் வளர்ச்சியும் பற்றி ஆய்வதற்கு அடித்தளமாக அமைபவை மூன்று. அவை

(1) சமூக அமைப்புகள்

(2) சமூக மதிப்புகள்

(3) சமூக நெறிகள்

சமூக அமைப்புகள் சமூக இலட்சியத்தை அடைவதற்கு வழிவகுப்பவை. மேலும், சமூக அமைப்புகள், குடும்பம், சமூகம், அரசு முதலானவை மேற்கொள்ளும் பணிகளை மரபுரீதியாகவும், மரபுரீதியற்ற விதிமுறைகளையும், ஒழுங்கு முறைகளையும் தம்முள் கொண்டு செயற்படும் நிறுவனங்கள் எனலாம். ஒவ்வொரு குடும்பத்திற்கும் இன்றியமையாத் தேவைகளை நிறைவேற்றி வைக்க இத்தகு சமூக அமைப்புகள் உதவுகின்றன. ஊராட்சி, கல்விக்கூடம், தொழில்துறை, சமயம் முதலானவை இந்த அமைப்புகளில் இடம் பெறும். ஒட்டு மொத்த சமூகத்திற்குத் தேவைப்படும் அனைத்தையும் நகராட்சி, அரசுத்துறைகள், கல்வித்துறைகள், தொழில் துறைகள், குடும்ப நலத்துறைகள், காவல் துறைகள் எனப்பல அமைப்புகள் உருவாக்கப்பட்டு செயல்படுமாறு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன. இவையனைத்தையும் மேற்பார்வையிட்டு, கட்டுப்படுத்தி, நெறிப்படுத்தும் அமைப்பே அரசமைப்பாகும்.

இந்தச் சமூக அமைப்புகள் மக்களின் வாழ்வாதாரங்களுக்கு உதவும் அனைத்தையும் கண்டறிந்து மக்கள் தடையின்றிப் பெற்று வர ஏற்பாடு செய்யும் பொழுதும், அவற்றை அடைய நெறிமுறைகளை உருவாக்கிப் பின்பற்ற ஏற்பாடு செய்யும் பொழுதும் சமூக மதிப்புகள் உருவாகின்றன. எல்லார்க்கும் எல்லாம் கிடைக்க வழிவகை செய்யும் பொழுது எல்லாப் பொருள்கட்கும், நெறிமுறை கட்கும், மானுட வாழ்விற்கும் இயல்பாகவே சமூக மதிப்புகள் உருவாகின்றன. இவற்றையே சுருக்கமாக சமத்துவம், சுதந்திரம், பகுத்தறிவு, நுகர்பொருள் எனக் கூறுவர். இவையே வாழ்க்கையின் முக்கிய ஆக்கக்கூறுகளாகும். சமூக உறவுகளின் உள்ளடக்கத்தை இவை வழங்குகின்றன. சமூக ஒருங்கிணைப்பிற்கு இன்றியமையாதவையாகக் கருதப்படுகின்றன.

சமூக அமைப்புகள் நன்கு செயல்பட, சமூக மதிப்புகள் நிலைத்து நிற்க, சமூக நெறிகள் வழிவகுக்கின்றன. மனிதர்கள் தங்கள் சமூக வாழ்க்கையில் முற்றிலும் தங்களது வசதிக்கேற்ப நடந்து கொள்வதில்லை; நடந்து கொள்ளக்கூடாது. அவர்கள் பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்ட சில குறிப்பிட்ட ஒழுக்க முறைகளையும், பழக்க வழக்கங்களையும், பாரம்பரியங்களையும், மரபுகளையும், நெறிமுறைகளையும் கடைப்பிடிக்கின்றனர். இந்தச் சமூக நெறிகளின் காரணமாகவே ஒரு சமுதாயத்தின் உறுப்பினர்களிடையே பரஸ்பர ஒத்துழைப்பும், உறவுகளும் நிலவுவதும், ஒழுங்கு நிலை நாட்டப்படுவதும் சாத்தியமாகிறது. இந்த நெறிகளையே சமூக நெறிகள் என அழைக்கின்றனர். சமுதாய உறுப்பினர்கள் பரஸ்பரம் ஒருவருக்கு ஒருவர் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பதற்கு இந்த நெறிகள் வழிகாட்டும் நெறிகளாக அமைந்து விடுகின்றன.

இந்த மூன்றும் சமூகம் எதிர்பார்க்கும் அளவிற்கு நிறைவாக அமைந்துவிடும்பொழுது, சமூகக் காப்பு முறையாகவும், முழுமையாகவும்

உருவாகி, அதுவே, சமூக வளர்ச்சிக்கு நல்ல வழிகளை வகுத்துவிடும். மாறுபடின் முதலில் பாதிக்கப்படுவது சமூகக் காப்பு ஆகும். மக்களிடையே குழப்பம், அச்சம், வெறுப்பு, பகைமை முதலானவை தோன்ற வழிவகுத்துவிடும். அதனால், சமூக வளர்ச்சி பாதிக்கப்படும்.

சங்க காலத்தில் இவை மூன்றும் நன்கு அமைந்து செயல்பட அரசர், சான்றோர், புலவர், கணக்காயர் முதலானவர்கள் அவ்வப்பொழுது தத்தமக்குத் தெரிந்த நல்வழிகளைப் போற்றி வருவதோடு, பிறர்க்கும் எடுத்துக் கூற விழைந்தனர். சமூகத்தார், கல்வியறிவுடையவராக இருத்தல் இன்றியமையாததென எல்லோரும் கூறியதற்கு இதுவே காரணமாகும். மானுட சிந்தனை வளர, பகுத்தறிந்து செயல்பட, நல்லது கெட்டது உயர்வு தாழ்வு அறிந்து போற்ற கல்விதான் துணைபுரியும். திருவள்ளுவர் கல்வி, கல்லாமை, கேள்வி என முக்கோண நிலையில் எடுத்துக்கூறி இதனை உணர்த்துவர்.

'விலங்கோடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோடு ஏனை யவர்.'

*- (குறள் 414)*

என்றும்,

'எவ்வது உறைவது உலகம் உலகத்தோடு
அவ்வது உறைவது அறிவு' *- (குறள் 426)*

என்றும் கூறியிருப்பது சமூக நோக்குடன் தான்.

ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் மிகச் சிறந்த அரசன். சமூக நோக்கில் அவன் பாடிய பாடலொன்று கல்வியின் சிறப்பை எடுத்துக் கூறுவதையும், எல்லாரும் எப்பாடுபட்டேனும் கல்வி கற்றேயாக வேண்டும் என வற்புறுத்துவதும் அவ்வரசனின் சால்பை நமக்குப் புலப்படுத்துகிறது.

'வேற்றுமை தெரிந்த நாற்பால் உள்ளும்
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேற்பால் ஒருவனும் அவன்கண் படுமே'

*- (புறம் ; 183; 8 - 10)*

எனக்கூறி எல்லோரும் கற்றவராயின் சமூகக் காப்பும், வளர்ச்சியும் எழுச்சியுற சமூக அமைப்புகள், சமூக மதிப்புகள், சமூக நெறிகள் நன்கு போற்றப்படும் எனத் தெளிவுபடுத்துகிறார்.

'சங்க காலத் தமிழர்கள் வாழ்வின் இன்பத்தையும் துன்பத்தையும் அதன் ஏற்றத்தையும் இறக்கத்தையும் நன்றாக உணர்ந்தவர்கள். பல விதமான மன ஓட்டங்கள் கொண்ட மனிதர்களை ஒரு சமுதாயமாக இணைத்து வைக்க வேண்டும் என்றால், இல்லறமாகிய மெல்லிய கயிற்றால் தான் அத்தனை பேரையும் ஒருங்கிணைக்க முடியும் என்று அவர்கள் கண்டறிந்தார்கள்'[8] எனத் திறனாய்வாளர் கூறுவது சங்க இலக்கியத்தில் மிகுதியாக உள்ள அகப்பொருள் இலக்கியங்களைக் கற்பார்க்கு உள்ளங்கை நெல்லிக்கனியென விளங்கும்.

'நல்லோள் கணவன் இவன்எனப்
பல்லோர்கூற யாஆம் நாணுகம் சிறிதே'

*- (குறு - 14 ; 05 - 06)*

என்றும்,

'செம்புலப் பெயல்நீர் போல
அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே'

*- (குறு - 40 ; 04 - 05)*

என்றும்,

'இம்மை மாறி மறுமை ஆயினும்,

நீஆகியர் என் கணவனை

யான்ஆ கியர்நின் நெஞ்சுநேர் பவளே'

- *(குறு - 49 ; 03 - 05)*

என்றும்,

'இருவேம் ஆகிய உலகத்து

ஒருவேம் ஆகிய புன்மையாம் உயற்கே!'

- *(குறு - 57 ; 05 - 06)*

என்றும்,

'நறிய நல்லோள் மேனி

முறியினும் வாய்வது; முயங்கற்கும் இனிதே'

- *(குறு 62 ; 04 - 05)*

என்றும் பற்பல கூற்றாக அமைந்திருப்பதைக் காணலாம்.

'இல்வாழ்க்கையின் அடிப்படையே மனிதநேயமாக அமைந்து விடுவதால் அந்த வாழ்க்கையின் நடைமுறை ஒவ்வொன்றும் மனிதநேயத்தின் அடிப்படையில் மலர்ந்து கமழும் மணிநெறியாகவே உயர்கிறது.

'நெடிய மொழிதலும் கடிய ஊர்தலும்

செல்வம் அன்று தன்செய்வினைப் பயனே

சான்றோர் செல்வம் என்பது சேர்ந்தோர்

புன்கன் அஞ்சும் பண்பின்

மென்கட் செல்வம் செல்வம் என்பதுவே'

- *(நற் - 210 ; 05 - 09)*

எனவரும் நற்றிணைப் பாடற் பகுதி மனிதனின் வாழ்க்கை நோக்குக்கே அரியதோர் அடிப்படை இலக்கணத்தை வகுத்துத் தருகிறது. இதில் குறிப்பிடப்படும் 'செல்வம்' என்ற சொல், பொருட் செல்வத்தையோ, புகழ்ச் செல்வத்தையோ குறிக்கும் அளவாக ஒடுங்காமல் மனித வாழ்வின் ஒட்டுமொத்தமான பெரிய பெருமை என்னும் அளவுக்கு விரிகிறது. 'நெடிய மொழிதலும் கடிய ஊர்தலும் செல்வமன்று என்னும் ஒரே தொடருக்குள் மிக விரிவான வாழ்க்கை நிகழ்ச்சிகளின் ஒரு பெரிய பன்முகத் தொகுப்பே அடங்கியுள்ளது' [9] என்ற சமுகச் சிந்தனையாளர் கருத்தையும் இணைத்துப் பார்த்தால், மேலே குறிப்பிட்ட சமூகக் காப்பிற்கும், வளர்ச்சிக்கும் ஏற்ப அந்த மூவகை அமைப்புகள் சங்க காலத்துத் தமிழ்ச் சமூகத்தில் சிறப்பாகச் செயல்பட்டன என்பதை உறுதியாகக் கூறலாம்.

## வளர்ச்சியும் மாற்றமும்

சமூக வளர்ச்சி என்பது மாற்றங்களுடன் சற்றேனும் உயர்ந்து செல்வது. இது எல்லா நிலையிலும் உருவானால்தால் நல்ல சமூகம் என்றும், நல்ல வளர்ச்சி என்றும் கருதப்படுகிறது. இற்றைய சமூகவியலார், 'சமூக மாற்றம் என்பது ஓர் ஒருங்கிணைந்த சமூக இயக்க நிகழ்வாகும். வளஆதாரங்கள், அதிகாரம், செல்வாக்கு, வாய்ப்பு நலன்கள், சலுகைகள் போன்றவற்றில் ஆதிக்கம் செலுத்துவதில் சமூக வர்க்கங்கள் ஏற்றத் தாழ்வான நிலைமையில் உள்ளன. முன்னோக்கிய சமூக மாற்றத்துக்கான வாய்ப்புகள் மிகவும் குறைவாக இருக்கும்போது, தொழிலாளி வர்க்கத்தினர் தமது அவல நிலையை உணரும்போது முதலாளி வர்க்கத்தின் பால் அவர்களுக்குப் பெருவெறுப்பும், வன்மமும், காழ்ப்பும் ஏற்படுகின்றன'[10] என்று கூறுவர். இச்சூழல் ஏற்படா

வண்ணம் அரசர்களும், சான்றோர்களும், அமைச்சர்களும், புலவர்களும் பார்த்துக் கொண்டனர். மக்களிடையே எழும் மனக்கசப்பு, வெறுப்பு, முரண்பாடு போன்றவற்றை நேரில் அதிக அளவில் கண்ட புலவர்கள் சந்தர்ப்பம் ஏற்படும் பொழுதெல்லாம் மன்னர்க்கு நன்மொழியால் அறிவுறுத்தித் திருத்தம் பெறச் செய்துள்ளனர். சமூக முரண்பாட்டின் மொத்த வடிவாகக் கருதப்பட்டது கொடுங்கோலாட்சியே. அதனை, வெளிப்படையாகவே மன்னரிடம் கூறித் திருத்தமுயன்ற நிகழ்வுகளும் உண்டு. மன்னர்களே உணர்ந்து, தம்மைப் போன்ற பிறமன்னர்க்கும் அறவுரை கூறுவதும் உண்டு.

செங்கோன்மையால் சிறப்புற்று விளங்கிய தொண்டைமான் இளந்திரையன் என்பான், தம்மை நாடிவரும் சிற்றரசர்கட்கு அவ்வப்பொழுது அரசியலின் செம்மை குறித்து சில அறிவுரைகள் கூறுவதும் உண்டு. அவற்றுள் பல, தீந்தமிழ்ப் பாடல்களாக வடிவெடுத்து ஏட்டில் நிலைத்துள்ளன. ஒரு புறப்பாட்டு, 'அரசியலை ஒரு சகடமாக உவமித்து, சகடத்தை உகைப்பவன், உகைக்குந் திறத்தை மாண்புற அறிந்தானாயின், அஃது இடையூறு சிறிதுமின்றி இனிது செல்லும் அத்திறம் அறியானாயின், நெறியல்லா நெறியிற் சென்று சேற்றில் அழுந்தி மிக்க துன்பத்துக்குள்ளாவான். அவ்வாறே, அரசியலை நடத்தும் வேந்தன் அரசியல் முறையைத் திறம்பட அறிந்தானாதல் வேண்டும் ; அதனால், நாடும் நலம் பெறும் ; அவனும் சீர்பெறுவான் ; அறியானாயின் உட்பகை புறப்பகைகளாகிய சேற்றில் அழுந்திக் கெடுவன் ' [11] என்று கூறுகிறது.

'கால்பார் கோத்து ஞாலத் தியங்கும்
காவற் சாகா டுகைப்போன் மாணின்
ஊறின் றாகி யாறினிது படுமே
உய்த்த தேற்றா னாயின் வைகலும்

பகைக்கூ ழுள்ளற் பட்டு

மிகப்பஃ றீநோய் தலைத்தலைத் தருமே'

-(புறம் ; பாடல் - 185)

இத்தகு சமூக ஒழுக்கம் வேண்டுமென்பதை வலியுறுத்தும் பாடல்கள் பல புறநானூற்றில் உள்ளன.

'வல்லாராயினும், வல்லுநராயினும், வருந்தி வந்தோர், மருங்கு நோக்கி, அருளவல்லை யாகுமதி',

'ஒரு பிடி படியுஞ் சீறிடம், எழுகளிறு புரக்கு நாடு கிழவோயே' ;

'பொது நோக் கொழிமதி புலவர் மாட்டே' ;

'சான்றோர் சென்ற நெறியென ஆங்குப்பட்டன ' ;

'தமக்கென முயலா நோன்தாள், பிறர்க்கென முயலுநர் உண்மையானே';

'வரிசையறியாக் கல்லென் சுற்றமொடு, பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின், யானை புக்க புலம் போலத்தானும் உண்ணான் உலகமும் கெடுமே' ;

'மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம் ';

'எவ்வழி நல்லவர் ஆடவர், அவ்வழி நல்லை வாழிய நிலனே';

'ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர் பலர்யான் வாழுமூரே';

'மாட்சியிற் பெரியோரை வியத்தலு மிலமே, சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே';

'நல்லாற்றுப் படூஉ நெறியுமா ரதுவே' ;

'சான்றோர் சான்றோர் பாலராப, சாலார் சாலார் பாலர் ஆகுபவே' - [12]

முதலான சில தொடர்களைச் சான்று காட்டலாம். மேலும் பற்பல உள.

## சமூக மாற்றம்

'சமூக மாற்றத்தின் மூன்று முக்கிய வகைகள் உள்ளன. அவை :

*(1) சமநிலை மாற்றம்*

*(2) செங்கோட்டு நிலைமாற்றம்*

*(3) வம்சாவழி மாற்றம்*

ஆகும். ஒருவர் ஒரு சமூக அமைப்பில் ஏற்பட்ட தம் நிலையிலிருந்து அதற்குச் சமமான இன்னொரு சமூக அமைப்பின் நிலையை அடைய நேரிட்டால் அது சமநிலைச் சமூக மாற்றம் எனலாம். ஒருவர் தமது சமூக அமைப்பில் பெற்றிருந்த நிலையைக் காட்டிலும் உயர்ந்தோ அல்லது தாழ்ந்தோ மாற்றம் பெறின் செங்கோட்டு நிலை சமூக மாற்றம் எனலாம். ஒரு குடும்பத்தில் தாம் பெற்ற மரபுவழி நிலையைத் தம் முயற்சியால் மாற்றியமைத்து அதனினும் சிறப்பான உயர்நிலையை அடையும் பொழுது வம்சாவழி மாற்றம் எனலாம்.'[13] இத்தகு மாற்றங்களே சமூக வளர்ச்சிக்கு வழி வகுக்கின்றன எனலாம்.

## சேரமன்னர்

அக்காலத்துத் தமிழ்ச் சமூக மக்களிடையே ஏற்பட்ட இத்தகு மாற்றங்களைக் கண்டறிய உறுதியான நம்பத்தகுந்த சான்றுகள் இலக்கியங்களைத் துணைக் கொண்டு கண்டறிய முடியவில்லை. ஆனால், மன்னர்கள் மரபில் உருவான ஆட்சி மாற்றங்கள், செங்கோல் ஆட்சி, போர் நிகழ்ச்சி, அறச் செயல் முதலானவை கண்டறிய பல சங்க இலக்கிய நூல்களின் துணைக் கொண்டு கண்டறிய முடிகிறது. அவற்றைக் கொண்டு சமூகம் எல்லா மாற்றங்களுக்கும் இடங்கொடுத்து நன்கு வளர்ச்சியுற்றிருக்க வேண்டுமெனத் துணிந்து கூற இடமேற்படுகிறது. சேர மன்னர்களின் ஆட்சி முறைகளைப்

பதிற்றுப்பத்துக் கருத்துக்களின் துணைக் கொண்டு ஆராயும் பொழுது 'சமநிலைச் சமூக மாற்றம்' ஏற்பட்டிருப்பதைக் காணமுடிகிறது. இதனைப் பதிற்றுப்பத்துக் கூறும் கருத்துக்களைக் கொண்டே நிலை நாட்ட முடிகிறது. பிற நூலில் கூறப்படும் கருத்துக்களை முறைப்படுத்த இயலவில்லை. அவை தொடர்ச்சி யற்றுக் காணப்படுகின்றன.

பதிற்றுப்பத்தில் சேரமரபைச் சார்ந்த இரு பிரிவினரின் மரபாட்சித் தெளிவாகத் தென்படுகிறது. அவை:

1. உதியஞ் சேரல் மரபினர்
2. அந்துவஞ் சேரல் இரும்பொறை மரபினர்.

வஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்த ஐந்து மன்னர்கள் உதியஞ்சேரல் மரபினர் ஆவர். அவர்கள்

1. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்
2. பல்யானை செல்கெழுகுட்டுவன்
3. களங்காய்க் கண்ணிநார் முடிச்சேரல்
4. கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவன்
5. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்

இவர்கள் வாழையடி வாழையாக ஆட்சியுரிமையைப் பெற்றுச் சமநிலைச் சமூக மாற்றத்திற்கு வழி வகுத்துள்ளனர். புலவர் குமட்டூர்க் கண்ணனார் ; பாலைக் கௌதமனார் ; காப்பியாற்றுக் காப்பியனார் ; பரணர் ; காக்கைப் பாடினியார் ; நச்செள்ளையார் ஆகியோர் அரசர்களுக்குமட்டுமன்று, மக்கள் சமூகத்திற்கும், அதாவது, சேரநாட்டு மக்கள் சமூகத்திற்கும் பிரதிநிதியாக இருந்து சமநிலைச் சமூக மாற்றம் ஏற்பட்ட விதத்தையும், அதனால் உருவான வளர்ச்சியையும் பதிற்றுப் பத்துப் பாடல்கள் மூலம் கண்டறிய பெருந்துணைப் புரிந்துள்ளனர் எனலாம்.

பாடல்கள் சேர மன்னர்களைப் புகழ்ந்து பாடப்பட்டிருப்பினும் சமூகத்தையே மையமாகக் கொண்டுதான் நிகழ்ச்சிகள் விளக்கப்படுகின்றன. சமூக மக்களின் பிரதிநிதிகள் பலர் இடம் பெற்றுச் சேரமன்னர்களது புகழ், வீரம், கொடை முதலானவற்றை எடுத்தியம்பத் துணைபுரிந்துள்ளனர் எனலாம்.[14]

'பைம்பொற் றாமரை பாணர்ச் சூட்டி
ஒண்ணுதல் விறலியர்க் காரம் பூட்டிக்
கெடலரும் பல்புகழ் நிலைஇ நீர்புக்குக்
கடலொ டுழந்த பனித்துறைப் பரதவ
ஆண்டுநீர்ப் பெற்ற தாரம் ஈண்டிவர்
கொள்ளாப் பாடற் கெளிதினின் ஈயுங்
கல்லா வாய்மைய னிவனெனத் தத்தங்
கைவ லிளையர் நேர்கை நிரப்ப

*- (பதிற் ; 05 பத்து ; எட்டாம் பாடல் ; 01 - 08)*

என்றும்,

'நின்மலைப் பிறந்து நின்கடல் மண்டு
மலிபுனல் நிகழ்தருந் தீநீர் விழவிற்
பொழில்வதி வேனிற் பேரெழில் வாழ்க்கை
மேவரு சுற்றமோ டுண்டினிது நுகருந்
தீம்புன லாய மாடுங்
காஞ்சீயம் பெருந்துறை மணலினும் பலவே'

*- (பதிற் ; 05 பத்து ; 08 பாடல் ; 13 - 18)*

என்றும்,

'யாமுஞ் சேறுகம் நீயிரும் வம்மின்

துயலுங் கோதைத் துளங்கியல் விறலியர்

கொளைவல் வாழ்க்கைநுங் கிளையினி துணீஇயர்'

- (பதிற் ; 05 பத்து ; 09 பாடல் ; 01-03)

என்றும் சுட்டப்பட்டுள்ளதைக் காணலாம்.

தொண்டியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்த அந்துவஞ்சேரல் இரும்பொறை மரபினர் மூவர் ஆவர். அவர்கள் :

1. செல்வக் கடுங்கோ வாழியாதன்
2. தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை
3. இளஞ்சேரல் இரும்பொறை

கபிலர், அரிசில் கிழார், பெருங்குன்றூர்க் கிழார் ஆகியோரால் பாடப் பெற்ற முப்பது பாடல்களின் வாயிலாக, இவர்தம் ஆட்சிக்குட்பட்ட சமூக நிலையை நன்கு சுட்டிக் காட்டி விளக்கந் தந்துள்ளனர். இவர்களுள் கபிலர் கூறிய சமூக அமைப்புப் பல வரலாற்றுச் சான்றுகளை நமக்கு எடுத்துக் காட்டுகின்றன எனலாம். [15]

'புல்லுடை வியன்புலம் பல்ஆ பரப்பி

வளனுடைச் செறுவின் விளைந்தவை உதிர்ந்த

களனறு குப்பை காஞ்சிச் சேர்த்தி

அரியல் ஆர்கை வன்கை வினைநர்'

- (பதிற் ; 07 பத்து ; 02 பாடல் ; 13-16 )

என்றும்,

'உரவுக் களிற்றுப் புலாஅம் பாசறை

நிலவின் அன்ன வெல்வேல் பாடினி

முழவில் போக்கிய வெண்கை

விழவின் அன்ன நின்கலி மகிழானே'

- (பதிற் ; 07 பத்து ; 01 பாடல் ; 15-18)

என்றும் பாடியிருப்பதைக் காணலாம்.

மூவேந்தர்களுள் முதல்வராகக் கருதப்படும் சேரமரபினர் ஆண்ட பகுதிகள் மலைநாடுகள் மற்றும் கடற்கரைப் பட்டினமே ஆகும். இவர்கள் தம்முடைய சமூக அமைப்புச் சிறக்க எல்லா வழிகளிலும் துணை நின்றதால் தான், சமநிலைச் சமூக மாற்றம் ஏற்பட்டு நல்ல வளர்ச்சிக்கு வித்திட்டது. களப்பிரர் காலத்திற்கு முன்பே இவர்கள் ஆரிய மரபின ரோடு அதிகம் இணைப்பும், பிணைப்பும் கொண்டு தனித்தன்மையோடு சமநிலைச் சமூக மாற்றத்திற்கு வழிவகுத்துத் தனித்துப் பிரிந்து 'கேரளம்' எனப்புதிய மரபு தோன்ற வழி வகுத்து வெற்றி கண்டனர். 'பதிற்றுப் பத்து' மட்டுமின்றி பிற நூல்களில் கூறப்பெற்ற சேர மன்னர்களின் வரலாறும் இந்த உண்மையை நிலை நாட்டியுள்ளன. [16]

## சோழ மன்னர்

இவ்வாறே, சோழர் மரபைச் சார்ந்த மன்னர்கள் பலர் சமநிலைச் சமூக மாற்றத்திற்கு வழி கோலினர். அவர்களுள்,

1. சோழன் கரிகாற் பெருவளத்தான்
2. சோழன் நலங்கிள்ளி
3. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்
4. கோப்பெருஞ்சோழன்
5. சோழன் நல்லுருத்திரன்
6. சோழன் செங்கண்ணான்

முதலானோர் சிறப்பாகக் கருதப்படுகின்றனர். இவர்களுள் மிகச் சிறந்த மாமன்னனாகக் கருதப்பட்டவன் தான் சோழன் கரிகாற் பெருவளத்தான். இவன் சமூக மாற்றத்தின் மூவகைக்கும் சான்றாகத் திகழ்கிறான். இவனது வாழ்க்கை வரலாறு மிக விரிவாகச் சங்க இலக்கியங்களில் கூறப்படுகிறது.

இளமையிலேயே பெற்றோரை இழந்ததால் பங்காளிகளாலும், பகைவர்களாலும் துன்பமடைந்து, சிறைவாசமடைந்து, மனத்திண்மையால் அனைத்தையும் கடந்து வெற்றி பெற்று அரச பதவியைப் பெற்றவன். இஃது சமூக மாற்றங்களில் ஒன்றாகக் கருதப்படும் செங்கோட்டு நிலை மாற்றத்திற்கு நல்ல சான்றாகும். எல்லாப் பகைவர்களையும் போரிட்டு வென்று மாமன்னனாகப் பெறுப்பேற்று புகழ், வீரம், கொடை, தண்ணளி போன்றவற்றால் சிறந்து, எல்லாப்புலவர்களும் பாராட்டும் வண்ணம் ஆண்டு சாதனையாளனாகத் திகழ்ந்தான். இஃது சமூக மாற்றங்களில் மற்றொன்றாக ஒப்படும் வம்சா வழி மாற்றத்திற்கு நல்ல சான்றாகும். இவனைப் போல எவரும், மாமன்னனாகத் திகழவில்லை என்பதை வரலாறு பகரும்.

'கரிகாலனுடைய செயல்பாடுகள் நிறைந்த வாழ்க்கை இந்திய வரலாற்றில் அசோகர், ஷெர்ஷா, அக்பர் போன்ற பேரரசர்களுடைய சிறந்த வாழ்க்கைகளை நினைவு படுத்துகிறது. வாழ்க்கைக்கு ஒரு பாராட்டுக்குரிய நோக்கமும் இருந்து, இந்நோக்கத்தை நிறைவேற்றுதற்கு உண்மையான முயற்சியும் மேற்கொள்ளப்படுமானால், அத்தகைய வாழ்வு வாழத்தக்கதே என்ற நெறியைக் கரிகாலனுடைய வாழ்க்கை விளக்குகிறது ' [17] என்ற வரலாற்றுத் திறனாய்வாளர் கருத்தை இங்கு நினைவு கூர்தல் நன்று.

கரிகாலன் சமூக சமநிலை மாற்றத்திற்காக மேற்கொண்ட பணிகள் எண்ணிறந்தவை. சிறியவனாக இருந்த பொழுதே அரச பொறுப்பை ஏற்று,

சான்றோர், அமைச்சர், புலவர் போன்றோரின் அறவுரை கேட்டு நல்லாட்சி செய்து பெரும்புகழ் பெற்றவன். ஒரு வீரனாகக் கரிகாலன் நிகழ்த்திய போர்களும், அருஞ்செயல்களும், புலவர்களின் புரவலனாக அவன் தேடிய புகழும், முடத்தாமக் கண்ணியார் இயற்றிய பொருநராற்றுப் படையிலும், கடியலூர் உருத்திரங்கண்ணனார் இயற்றிய பட்டினப்பாலையிலும் சிறப்பாக விளக்கப்படுகின்றன.

'சாலி நெல்லின் சிறைகொள் வேலி
ஆயிரம் விளையுட் டாகக்
காவிரி புரக்கும் நாடுகிழ வோனே'

- (பொருநராற்றுப்படை ; 246 - 248)

என்றும்,

'காடுகொன்று நாடாக்கிக்
குளந்தொட்டு வளம்பெருக்கிப்
பிறங்குநிலைமாடத் துறந்தை போக்கிக்
கோயிலொடு குடிநிறீஇ'

- (பட்டினப்பாலை ; 283-286)

என்றும் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

'பணி, தற்சார்பு என்ற இரு இயல்புகளை உடையது கரிகாலன் வாழ்க்கை. பணி செய்தல் என்ற வாழ்க்கையின் குறிக்கோளை எடுத்து, அவன் காட்டுகிறான். அக்குறிக்கோளுக்காக அவன் உளமார உழைத்தான். அவனுடைய போர்த்திறனால் நிறுவப்பட்ட பேரரசு அவனுடைய மறைவுக்குப் பின் மறைந்தது. ஆயினும், காவிரியின் குறுக்கே ஓரணை அமைத்தல் வேண்டும் என்று அவன் கண்ட நோக்கமும், அதனை நிறைவேற்றுவதற்கு அவன் எடுத்துக்

கொண்ட உண்மையான உழைப்பும் அவனுக்கு ஓர் ஆக்கத் திறனுள்ள அரசியலறிஞனென்ற சிறப்பைத் தருகின்றன. புலவர்களை ஆதரித்தல், வேளாண்மைக்கு ஊக்கமளித்தல், ஆகிய குறிக்கோள்களின் உயர்வை அவன் நன்கு உணர்ந்திருந்தான். தொன்று தொட்டுத் தமிழ் நாட்டு மக்களின் முக்கிய தொழிலாக இருந்து வரும் வேளாண் தொழிலுக்கு அவன் பேரூக்கம் அளித்தான். இவ்வகையில் அவன் பிற்கால அரசர்களான ஷெர்ஷாவையும், அக்பரையும் ஒத்து விளங்குகின்றான். நீதி உணர்விலே அவன் மௌரியப் பேரரசர் அசோகரை நினைவுபடுத்துகிறான்.'[18] என்ற பாராட்டுரை உண்மையே; புனைந்துரையன்று என உறுதிப்படக் கூறலாம். இவ்வாறே, பிற சோழ மன்னர்களும் சமூக மாற்றத்திற்கும், வளர்ச்சிக்கும் நற்பணிகள் மிகுதியாகச் செய்துள்ளனர் என்பதைத் தெளிவாகக் காணமுடிகிறது. இத்தகு சோழ மன்னர்களால் சோழநாட்டுச் சமூகம் நல்ல பாதுகாப்புடன் சிறந்த வளர்ச்சியும் பெற்றது என்பது வரலாற்று உண்மை.

**பாண்டிய மன்னர்**

பாண்டிய மன்னர்களும் மிகச் சிறந்தவர்களாகக் கருதப்படுபவர்கள்,

1. பாண்டியன் அறிவுடை நம்பி
2. ஆரியப்படை கடந்த பாண்டியன் நெடுஞ்செழியன்.
3. தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்.
4. பாண்டியன் நன்மாறன்
5. ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்
6. கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி
7. முடத்திருமாறன்

முதலியோர் ஆவார்.

பாண்டியன் நன்மாறனின் மகனே தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன். இவனது வாழ்வும், அரசாட்சியும் இவன் சமூகவம்சா வழிமாற்றத்திற்கு நல்ல சான்றாகத் திகழ்பவன் என ஆராய்ச்சியாளர் கூறுவர். இளம்வயதிலேயே அரசு கட்டிலேறி சான்றோர், அமைச்சர், புலவர் அறவுரைப்படி ஆட்சி செய்து பெருமை பெற்றவன்.

புலவர் நக்கீரர் நெடுநல்வாடையிலும், புலவர் மாங்குடி மருதனார் மதுரைக் காஞ்சியிலும் இம்மன்னரைப் பற்றிய எல்லாச் செய்திகளையும் இடம் பெறச் செய்துள்ளனர். இம்மன்னன் காலத்தில் பாண்டிய நாடும், மக்களும், சமூகமும் எல்லாச் சிறப்புகளையும் பெற்று விளங்கிற்று எனக்கூறி, சமூக சமநிலை மாற்றத்திற்கு நல்லவழி வகுத்தான் எனப் பாராட்டிக் கூறுகிறது. அரசியலிலும், ஆட்சியிலும் அவன் போற்றிய நற்செயல்களும், ஐந்து நிலங்களிலும் மக்கள் பின்பற்றிய தொழில்கள் சிறக்க, செய்து கொடுத்த வசதி வாய்ப்புகளும், மக்களது நற்செயல்களும், நல்வாழ்வும், மதுரை மாநகரின் சமூக வாழ்க்கை பெற்றிருந்த வசதிகளும், பெருமைகளும் மிக விரிவாகக் கூறப்படுகின்றன.

'நன்றுந் தீதுங் கண்டாய்ந் தடக்கி
அன்பும் அறனும் ஒழியாது காத்து
பழியொரீஇ உயர்ந்து பாய்புகழ் நிறைந்த
செம்மை சான்ற காவிதி மாக்கள்'

- *(மதுரைக் காஞ்சி ; 496-499)*

என்றும்,

'தொல்லாணை நல்லாசிரியர்
புணர்கூட் டுண்ட புகழ்சால் சிறப்பின்

நிலந்தரு திருவின் நெடியோன் போல
வியப்புஞ் சால்புஞ் செம்மை சான்றோர்
பலர்வாய்ப் புகரறு சிறப்பிற் றோன்றி
அரிய தந்து குடி யகற்றிப்
பெரிய கற்று இசை விளக்கி '

- (ம - கா ; 761 - 767)

என்றும் கூறுவர்.

## மானுடம் போற்றும் நெறிகள்

'சமூகம் என்பது இணைந்து வாழும் மக்கட் தொகுதியைக் குறிக்கும். தனிமனிதர், குடும்பங்களாக, குழுமங்களாக, குழுக்களாக, குடிகளாகச் சேர்ந்து, ஒருவரையொருவர் வாழ்வுக்காகவும், பாதுகாப்புக்காகவும், வளர்ச்சிக்காகவும், பெருக்கத்திற்காகவும் சார்ந்தும் சேர்ந்தும் வாழும் போது சமுதாயம் உருவாகிறது. ' [19]

இதனடிப் படையில் தான் மானுடம் போற்றும் நெறிகள் தோற்றம் பெறத் தொடங்கின எனலாம். தம்மைச் சார்ந்து வாழ்வோர்க்குத் தாம் யாதேனும் ஒன்றைச் செய்ய முற்படும் பொழுது, தம் தேவை நிறைவேற பிறர் உதவியும் கிடைக்கும் என எண்ணத் தலைப்பட்ட காலத்தே இத்தகு மானுடம் போற்றும் நெறிகள் தோன்றி, வளரத் தொடங்கின எனலாம்.

இதனை, 'தன்னுடைய தேவைகளுக்காகவும், பாதுகாப்புக்காகவும், சுகத்துக்காகவும், நலத்துக்காகவும், வாழ்க்கை ஏந்துகளுக்காகவும், வாழ்க்கை வசதிக்காகவும், பிறதேவைக்களுக்காவும் ஏனைய மனிதர்களோடு சேர்ந்து வாழ

வேண்டிய கட்டாயம் அவனுக்கு இருக்கிறது ' [20] என்ற திறனாய்வாளர் கருத்தும் உறுதி செய்கிறது.

மனித நேய நெறிகள் வாழ்க்கைச் சூழல்களுக்கேற்ப அதில் பங்கு பெறும் மக்களாலேயே தேவைக்கேற்ப அவ்வப்பொழுது உருவாக்கப்பட்டு, அறிவிக்கப்படாமலேயே பின்பற்றப்பட்டு வந்துள்ளன. நாகரிகம் வளரவளர அவையும் வளர்ந்தும், போற்றப்பட்டும், பின்பற்றப்பட்டும் வந்ததால் தான் இல்லறம் மற்றும் சமூகம் சிறப்படைய நன்னெறிகளாக நிற்கத் தொடங்கின. அவற்றையே மனித நேய நெறிகள் எனக்கூறுவர்.

'மனிதநேயம் என்பது மனிதருக்கு மனிதர் இருக்கவேண்டிய தொடர்-புறவுபற்றிய ஒரு விதமான மனநிலை ; அந்த மனநிலையினால் தூண்டப்பட்டு நடைபெறும் செயல்நிலை. இந்த மனநிலையையும் அதன் விளைவான பல்வேறு செயல்நிலைகளையும் அடிப்படையாகக் கொண்டு உருவாகும் வாழ்க்கை நோக்கம் தான் மணிநெறி ' [21] எனக்கூறுவர். இவற்றைத் தமிழ்ச் சமூகத்தின் இன்றியமையாமைக் கேற்ப போற்றி வந்த சான்றோர் பதிவுகளாகப் பதித்து வைத்தவற்றையே சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது.

அகவாழ்விற்கும், புறவாழ்விற்கும் தேவைப்படும் பக்தி உணர்வைப் பாடல்களுக்கிடையே பதிய வைத்துப் போற்றியது போலவே, தனித்தும் நூலாகப் படைத்தனர் என்பதைப் பரிபாடலும், திருமுருகாற்றுப் படையும் எடுத்துக் காட்டுகின்றன.

'மாயிருள் ஞால மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன் றொருமுகம்; ஒருமுகம்
ஆர்வலர் ஏத்த அமர்ந்தினி தொழுகிக்
காதலின் உவந்து வரங்கொடுத் தன்றே'

எனத் திருமுருகாற்றுப்படை கூறுவதைக் காணலாம்.

'மன்ற மராஅத்த பேஎம்முதிர் கடவுள்
கொடியோர்த் தெறூஉம் என்ப யாவதும்
பசைஇய பசந்தன்று நுதலே
ஞெகிழ ஞெகிழ்ந்தன்று தடமென் தோளே !'

- (குறுந்தொகை ; பாடல் 87)

என்று பாடப்பட்டிருப்பதையும் காணலாம்.

பதிற்றுப்பத்தில் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனை முருகனுக்கு ஒப்பாகப் புகழ்ந்து பாராட்டி, மாமரமாகநின்ற சூரபதுமனை முருகன் வெட்டி வீழ்த்தி உலகைக் காத்தது போல நெடுஞ்சேரலாதன் பகைவர்களை வீழ்த்தி மக்களைப் பாதுகாத்தான் எனக்கூறுவதைக் காணலாம்.

மக்களுக்கு இன்றியமையா உணவு, உடை, உறையுள் தக்கவாறு சென்று சேர வேண்டுமென்பதில் அதிகம் கவனம் செலுத்தி வந்துள்ளதையும் பரவலாகக் காணமுடிகிறது.

'அருளும் அன்பும் நீக்கி, நீங்கா
நிரயம் கொள்பவரோடு ஒன்றாது, காவல்,
குழவி கொள்பவரின் ஓம்புமதி !
அளிதோ தானே அது பெறல் அருங்குரைத்தே '

- (புறம் - 05)

'வாழ்வைச் செம்மைப் படுத்தும் கருவியாக இலக்கியம் செயல்பட வேண்டுமென்பது **'கென்னித் பர்க்கின்'** வேண்டுகோள். இலக்கியத்திற்காகவே இலக்கியம் அல்லது தூய இலக்கியம் எனும் கோட்பாட்டை அவர் ஏற்கவில்லை. இலக்கியம் துன்பமுற்றவரைத் தேற்றல், இடித்துரைத்தல்,

நலிந்தாரை ஊக்கமுறச் செய்தல், எதிர்காலம் உரைத்து எச்சரித்தல் போன்ற மனித நல மேம்பாட்டுப் பணிகளை மேற்கொள்ள வேண்டுமென்பார் பர்க். யதார்த்தத்திற்காக யதார்த்தம் எனும் கருத்தையும் விரும்பாத அத்திறனாய்வாளர் அறிவுறுத்தலும் நம்பிக்கை யூட்டலும் கண்டித்தலும் மனவமைதி தரலும் தேற்றலும், இடித்துரைத்து ஒழுக்கம் உரைத்தலும் இலக்கியப் படைப்பாளனின் கடமைகள் என்று கருதினர்' [22] என்ற திறனாய்வுக் கருத்தும் மானுடம் போற்றும் நெறிகளையே நினைவுப்படுத்துகிறது. இதற்குச் சங்க இலக்கியங்களுள் மிகுதியாகச் சான்றுகள் உள்ளதையும் காணமுடிகிறது.

'எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே '

- *(புறம் 187)*

'யாதும் ஊரே
யாவரும் கேளிர் '

- *(புறம் 192)*

'தமக்கென முயலா நோன்றாள்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே '

- *(புறம் 182)*

'நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்
அல்லது செய்தல் ஓம்புமின் அதுதான்
எல்லாரும் உவப்பது; அன்றியும்
நல்லாற்றுப் படூஉம் நெறியுமார் அதுவே'

- *(புறம் 195)*

'நல்ல போலவும் நயவ போலவும்
தொல்லோர் சென்ற நெறியே போலவும் '

- *(புறம் 58)*

'அறநெறி முதற்றே அரசின் கொற்றம்
அதனால் நமரெனக் கோல் கோடாது
பிறரெனக் குணம் கொல்லாது '

- *(புறம் 55)*

'ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர்யான் வாழும் ஊரே '

- *(புறம் 191)*

புலவர் பெருஞ்சித்திரனார் குமணனைப் பாடிப் பரிசில் கொணர்ந்து தம் மனைவியிடம் கூறும் கூற்று மானுடம் போற்றும் நெறிக்கு மிகச் சிறந்த உயர்ந்த சான்றாகக் காட்டலாம். அவர், பரிசில் பெறக் குமணனைச் சந்தித்த பொழுது தம்மைப் பற்றித் துன்புறுத்தும் வறுமை நோய் பற்றி நீண்டதொரு பட்டியலைப் படைத்து அவன் முன் வைப்பர். 'வாழுநாளோ டியாண்டுபல வுண்மையின்' எனத் தொடங்கும் **159** ஆம் புறப்பாடல் இதனை எடுத்துக்கூறும். இப்பாடலோடு கீழே குறிப்பிட்ட பாடலையும் ஒப்பிட்டால் இந்த உண்மை புலப்படும். வறுமையிலும் செம்மை போற்றும் பண்பு பெருஞ்சித்திரனாரிடம் இயல்பாகவே அமைந்திருந்த தென்பதை வெள்ளிடை விளக்கெனக் கண்டு இன்புறலாம்.

'நின்னயந் துறைநர்க்கும் நீநயந் துறைநர்க்கும்
பன்மாண் கற்பினின் கிளைமுத லோர்க்கும்
கடும்பின் கடும்பசிதீர யாழநின்

நெடுங்குறி யெதிர்ப்பை நல்கி யோர்க்கும்
இன்னோர்க் கென்னா தென்னொடுஞ் சூழாது
வல்லாங்கு வாழ்து மென்னாது நீயும்
எல்லோர்க்குங் கொடுமதிமனைகிழ வோயே
பழந்தூங்கு முதிரத்துக் கிழவன்
திருந்துவேற் குமண னல்கிய வளனே '

*- (புறம் 163)*

என்பது பாடல். புலவர் தம் மனைவியைப் பார்த்து, 'என் மனைக்கு உரியவளே! நின்னை விரும்பும் மகளிர்க்கும், நீ விரும்பும் மகளிர்க்கும், நின் உறவினரில் கற்புடைய மூத்த மகளிர்க்கும், நம் குடும்பத்தின் பசிநீங்க நெடுநாளும் கடன் தந்து உதவியோர்களுக்கும், மற்றும் இன்னாரென்று கருதாதும், என்னோடுங்கேளாதும் வளமுடன் வாழலாமென்று பத்திரப்படுத்தி வைத்துக் கொள்ள நினையாதும், முதிரமலைத் தலைவனான குமணன் நல்கிய இப்பெருஞ் செல்வத்தை, நீயும் அனைவருக்கும் வாரி வழங்கு வாயாக ' என்று கூறும் கருத்து மன்னரும் புலவரும் போற்றும் மானுட நெறியின் மாண்பு புலப்படுகிறதெனலாம்.

## பொறுப்புகள் - கடமைகள் - தொழில்கள்

மனித வாழ்க்கை என்பது தலைமுறைகள் ஒன்றையொன்று தொடர்ந்து வரும் ஒரு நெடுங்கதை. நெடுங்கதையின் தொடக்கம் போகப் போக வளர்ந்து விரிந்து முழுமை பெறுவது போல, மனித இனத்தின் ஒவ்வொரு தலைமுறையும் முந்திய தலைமுறையை விட வளர்ச்சி பெற்றதாகவும் உயர்வு பெற்றதாகவும் விளங்க வேண்டும். வளர்ச்சியையே நோக்கமாகக் கொண்ட மனிதனின்

வாழ்க்கை வரலாற்றில் தளர்ச்சிக்கோ ஏற்கனவே வளர்த்து வைக்கப்பட்டதைத் தகர்ப்பதற்கோ இடமே கிடையாது. அப்படிச் செய்கிறவர்கள் மனிதர்களாகவே கருதப்பட மாட்டார்களாகையால், பாட்டன் தந்தை முதலியவர்கள் தேடி வைத்த பொருள், புகழ் போன்றவைகளை அழித்துவிடாமல் அவைகளை மேன்மைப்படுத்தி மிகுதிப்படுத்துவதே சிறந்த வாழ்க்கை. [23]

இத்தகு சிறந்த வாழ்வைப் பெற பொறுப்புகள், கடமைகள் முதலானவை வழிவகுக்கின்றன. தாம் மேற்கொள்ளும் தொழிலுக்கு ஏற்ப செய்வன செய்தேயாக வேண்டும் என்ற விடத்துப் பொறுப்பும், கடமையும் முந்துறுகிறது. சமூகத்தில் உயர்ந்தவர் என அக்காலத்தில் கருதப்பட்ட அரசர் முதல் வறுமையால் வாடும் பாமரன் வரை பொதுவாக அமைய வேண்டியவை இவை. இவற்றைத் தட்டிக் கழிப்பார் புறந்தள்ளப்பட்டுச் சமூகத்தின் கடைக் கோடிக்குச் சென்று புலம்பி அழிய நேரிடும். எனவே, அனைவர்க்கும் உள்ள பொறுப்புகளை உணர்ந்து தத்தம் கடமைகளை ஆற்ற வேண்டும். சங்க காலத் தமிழர்கள் இவற்றை நன்கு பேணி வந்தனர்.

மன்னர்களுக்குரிய பொறுப்பு இதுவெனச் சுட்டிக் காட்ட விழையும் மோசிகீரனார்,

'நெல்லும் உயிரன்றே நீருமுயி ரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்
அதனால் யான்உயிர் என்பது அறிகை
வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே.'

- (புறம் 186)

மன்னர்க்குரிய பொறுப்பு, கடமை, தொழில் மூன்றும் ஒருங்கே விளக்கம் பெற்ற மிகச்சிறந்த பாடல். இதன் சிறப்பை உரையாசிரியர்கள் மிகச் சிறப்பாக எடுத்துக் காட்டியுள்ளனர்.

'பல்வகைச் சிறப்பமைந்த மோசிகீரனார் தம்மோடொத்த சான்றோர் சூழ வேந்துடை யவையத் திருந்த காலை அரசர்க்கும் அவர் குடைநிழல் வாழும் குடிகட்குமுள்ள தொடர்பு பற்றி ஓர் ஆராய்ச்சி நிகழ்ந்தது; உயிர்க்கும் உடம்புக்குமுள்ள தொடர்பே அரசர்க்கும் அவன் நாட்டிற்கும் உள்ள தொடர்பு என்பது அவ்வாராய்ச்சியின் முடிபாயிற்று. ஆகவே, உடம்பின் நலத்துக்கும் கேட்டுக்கும் உயிரினது உண்மையும் இன்மையுமே ஏதுவாதல் போல வேந்தன் உளனானால் நாடு நலமுறுதலும் இலனாயின் கெடுதலும் ஒருதலை என்றனர் ஒரு சாரார். உடம்பின் நலத்துக்கு நெல்லும் நீரும் ஏதுவாம் ; அவையுள் வழியே உயிருண்மையும் அரசுண்மையும் காணலாம். ஆகவே, நெல்லும் நீரும் உலகிற்கு உயிராவன என்றனர் பிறிதொரு சாரார். இவ்வாறு நாட்டிற்கு அரசே உயிரென்பாரும் பொருளே உயிரென்பாரும் சான்றோர் இருதிறத்தராகவே, ஆங்கிருந்த மோசிகீரனார், 'நாடாளும் வேந்தனாவான், இவ்வுலகிற்கு யானே உயிர், ஏனை நெல்லுமன்று; நீருமன்று என்பதை அறிந்தொழுகும் அரசுமுறை உயிர்நிலையாம்' என்று உணர்த்த இப்பாடலைப் பாடினார்'[24] என்று ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை சிறப்பித்துக் கூறுவர்.

இவ்வாறே, இம்மூன்றினையும் ஒருங்கே ஏற்றுச் சிறப்புச்செய்யும் உழவனைப் பற்றிய செய்தியும் மிகுதியாகக் கூறப்பட்டுள்ளன.

'வானுறை வாழ்க்கைக் கதநாய் வேட்டுவன்
மான்றசை சொரிந்த வட்டியு மாய்மகள்
தயிர்கொடு வந்த தசும்பு நிறைய

ஏரின் வாழ்நர் பேரி லரிவையர்

குளக்கீழ் விளைந்த களக்கொள் வெண்ணெய்

முகந்தனர் கொடுப்ப வுகந்தனர் பெயரும்

தென்னம் பொருப்ப னன்னாடு - - - ' - *(புறம் ; 33 ; 01-07)*

ஒருகால் சான்றோர் கூட்டத்திடையே போர் நிகழ்ச்சி பற்றியும், அதன்கண் மக்கள் ஈடுபட்டுப் போர் செய்வது பற்றியும் பேச்சுக்கள் நிகழ்ந்தன. அக்கூட்டத்துச் சான்றோருள் பொன்முடியாரும் ஒருவர். அவர் மறக்குடியில் பிறந்து நல்லிசைப் புலமை பெற்ற புலவர் பெருமாட்டியராதலால், மக்கள் நன்னடையுடையராய் இருத்தல் வேண்டுமென்ற நோக்கங்கொண்டு அளியும் தெறலும் புரிவது வேந்தர்க்குக் கடன். தெறல் குறித்துப் போர் உளதாமாகலின், அப்போர்க்குச் சென்று வென்றியுறப் பொருது மேம்படுவது காளையர்க்குக்கடன் ; அவர்களைப் பெற்று வளர்ப்பது தாயர் கடன்; வளரும் மக்கள் அறிவாலும் ஆண்மையாலும் சான்றோராகச் செய்வது தந்தைக்குக் கடன் என எடுத்துரைத்தார் அவர் கூறியது ஏனைச் சான்றோரனைவர்க்கும் பெருமகிழ்ச்சியை விளைவித்தது. அதுபலர்க்கும் பயன்படுமாறு பொன்முடியார் மறக்குடி மகளொருத்தியின் கூற்றில் வைத்து ஒரு பாடலைப் பாடியுள்ளார் .[25] அஃது,

'ஈன்றுபுறந் தருத லென்றலைக் கடனே

சான்றோ னாக்குத றந்தைக்குக் கடனே

வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே

நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே

ஒளிறுவா ளருஞ்சம முருக்கிக்

களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே.' - *(புறம் ; 312)*

என்ற பாடலாகும். இங்கு தொழில் சுட்டப்பட்டு, கடமை யாது என நினைவுபடுத்தி, பொறுப்பு எத்தகையது என் விளக்கம் பெறுவதைக் காணலாம். யார் யாருக்கு என்னென்ன பொறுப்பு என்பதைத் தெளிவுபடுத்தும் முறை நன்கு அமைந்துள்ளதைக் காணலாம். தாய்க்கு மகனைச் சுமக்கும் பொறுப்பு முதல் காளையர்க்கு விழுப்புண் சுமக்கும் பொறுப்பு வரை கூறப்பட்டுள்ளதைக் காணலாம்.

## தனிநபர் உரிமைகள்

தத்தமக்கெனச் சமூகம், பொறுப்புகளை ஒப்படைத்துக் கடமையற்ற முன்வரும் தனிநபர் அதனால் ஒரு சில நல்லுரிமைகளையும் பெறும் தகுதியைப் பெற்று விடுகிறான். அத்தகு தனிநபர் உரிமைகளுள் அவரவர் வாழ்விற்குரிய உரிமை என்பவை நீங்கலாகச் சமூக உறவு கொள்ளும் பொழுது பெறும் உரிமை வேறாக நின்று சமூகக் கட்டுக் கோப்பு நிலைத்திருக்க அடித்தளம் அமைப்பதைக் காணலாம். காதல் வாழ்வு வாழ, இல்லறம் ஏற்க, மக்களைப் பெற்று இன்புற எவ்வாறு தனிநபர் உரிமைகள் இடமளிக்கின்றனவோ, அவ்வாறே சமூக உரிமைகளையும் பெறும் தகுதிகளையும் எல்லோரும் பெற்று வாழ்ந்திருப்பதைச் சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது. இத்தகு உரிமைகள் சமூகநலம் பேணுவதற்குத் தடையாக இருக்கக் கூடாது. பிறர் உரிமைகள் பாதிக்கும் வண்ணம் தம் உரிமையைத் தவறாகப் பயன்படுத்தக் கூடாது. அத்தகு உரிமைப் பிரச்சனை வரும் பொழுது மன்னரையும் இடித்துரைத்து உணர்த்தும் உரிமையைச் சான்றோர்களும், புலவர்களும் பெற்றிருந்தனர். இதனையே, 'அறத்தாறு நுவலும் பூட்கை' என்றனர்.

'வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி
நெடிய வென்னாது சுரம்பல கடந்து

வடியா நாவின் வல்லாங்குப் பாடி
பெற்றது மகிழ்ந்து சுற்ற மருத்தி
ஓம்பா துண்டு கூம்பாது வீசி
வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கை
பிறர்க்குத் தீதறிந் தன்றோ வின்றே '

*- (புறம் ; 47; 01-07)*

என்று புலவர்க்குரிய உரிமைகள் கூறப்பட்டன. தமது உரிமை பெற்று வாழ முயலும் பொழுது பிறர்க்கு அதனால் தீது தோன்றக் கூடா தென்பர்.

பிசிராந்தையார், மக்கள் தம் தனிஉரிமைகளைப் பெறாதவாறு தடுத்துத் துன்புறுத்திய பாண்டியன் அறிவுடை நம்பிக்குத் தக்கவாறு இடித்துரைத்துத் திருத்தும் முயற்சியாகப் படைத்த பாடல் ஒன்றையுங் கூட இத்தகு உரிமைப் பிரச்சனைக்குச் சான்று காட்டலாம். இப்பாண்டியன் தன்குடிகளிடத்து இறை (வரி) வாங்கும் நெறியிற் பெருந்தவறு செய்தான். இவன்பால் சூழ்ந்த அரசியற் சுற்றத்தார் இவனை இடித்துரைத்து நெறிப்படுத்தும் நேர்மையின்றி, நீர் போகும் வழிப் புல்சாய்ந்து கொடுப்பது போல, இவன் விழைந்த வழியெல்லாம் நுழைந்து கொடுத்து அரசியலில் வாழும் மக்கட்குத் துன்பமுண்டாக்கினர். மக்கள் பால் வேந்தனுக்கு அன்பு சுருங்கியதாயிற்று. குடிகளை மிக வருத்தி இறைவாங்குவதில் அவ்வேந்தன் விருப்புடையனாயினான். அதனைக் காணப் பொறாத சான்றோர் பிசிராந்தையாரை அரசன்பால் விடுத்து நல்லறிவு கொளுத்துமாறு வேண்டினர். அவரும் அரசன் செயல்களைத் தாமே ஆராய்ந்தார். குற்றங்கள் மலிந்த சூழலில் கொடுங்கோலாட்சிக்கு வித்திட்ட வண்ணம் இருந்ததைக் கண்டான்.

மன்னரைப் பார்த்து, இப்பாடலைச் செவிமடுத்துக் கேட்குமாறு செய்து, தவறுகளை உணர்ந்து திருந்துமாறு வேண்டிக் கொண்டான்.

'காய்நெல் லறுத்துக் கவளங் கொளினே
மாநிறை வில்லதும் பன்னாட் காகும்
நூறுசெறு வாயினும் தமித்துப்புக் குணினே
வாய்புகு வதனினுங் கால்பெரிது கெடுக்கும்
அறிவுடை வேந்த னெறியறிந்து கொளினே
கோடி யாத்து நாடுபெரிது நந்தும்
மெல்லியன் கிழவ னாகி வைகலும்
வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப வெடுக்கும் பிண்ட நச்சின்
யானை புக்க புலம்போலத்
தானு முண்ணா னுலகமுங் கெடுமே.'

*- (புறம் 184)*

பிசிராந்தையார் பாண்டியன் அறிவுடை நம்பியிடம், 'களிற்றி யானைக்கு உணவாகும் நெல், அது விளையும் நிலத்திலிருந்து கொணரப்பட்டுக் கவளங் கவளமாகப் கொள்ளப்படுமாயின், விளைநிலம் ஒருமா அளவினும் குறைந்ததாயினும் பல நாட்கள் அக்களிற்றுக்கு உணவு தரவல்லதாம்; யானைக்கென்று நூறுமா நிலத்தை விட்டு நெல் விதைப்ப, அது விளைந்து சாய்ந்து கிடக்கையில் அதனைத் தனியே மேயவிடின், அதன் வாய்புகுமளவினும் கால்களால் கெடுவது மிகுதியாகும் ; இவ்வாறே வேந்தனும் தான் பெறுதற்கரிய அரசிறையை நெறியறிந்து முறையே கொள்வானாயின், நாடு பெருவளம் படைத்துச் செல்வத்தாற் புகழ் பெறும்; அவ்வேந்தன், நாடோறும் வரிசையறியும் திறமில்லாச் சுற்றம் சூழத்தானும் மெல்லியனாய்க் குடிகள் பால் அன்பின்றி மிக்க இறையை வாங்கலுறு வானாயின், யானைபுக்க விளைநிலம் போல,

அவற்கும் பொருள் சேராது ; நாடும் கெட்டழியும் ' என்று கூறிச் சிந்திக்குமாறு செய்தான்.[26]

### சமூகக் கலைகளும் நுண்கலைகளும்

மனித வாழ்க்கைக்குப் பயன்படுகிற எல்லாத் தொழில்களும் கலைகளே. உழவு, வாணிகம், நெசவு, மருத்துவம், உணவு சமைத்தல், தச்சுத் தொழில், மட்பாண்டம் செய்தல், கன்னாரத்தொழில், கருமான் தொழில், மீன்பிடித்தல், ஆடுமாடு வளர்த்தல், தையல்வேலை, சலவைத் தொழில், சவரத்தொழில் முதலான தொழில்கள் எல்லாம் கலைகளே. ஆனால், இந்தக் கலைகள் பொதுக்கலைகள்; இவை நுண்கலைகள் ஆகா.[27] இவற்றையே சமூகக் கலைகள் எனலாம்.

'ஈரச் செவ்வி யுதவின வாயினும்
பல்லெருத் துள்ளு நல்லெருது நோக்கி
வீறுவீ றாயும் உழவன் போல'

*- (புறம்; 289 ; 01-03)*

'துறைநணி மருத மேறித தெறுமார்
எல்வளை மகளிர் தெள்விளி யிசைப்பிற்
பழனக் காவிற் பசுமயி லாலும் '

*- (பதி.பத்து ; 3 ; 7 ; 6-8)*

'பூந்துகில் மரீஇய ஏந்துகோட் டல்குல்
அம்மா சூர்ந்த அவிர்நூற் கலிங்கமொடு
புனையா ஓவியங் கடுப்ப '

*- (நெடுநல் ; 145 - 147 )*

'முல்லை சான்ற கற்பின் மெல்லியல்
மடமா நோக்கின் வாணுதல் விறலியர்
நடைமெலிந் தசைஇய நன்மென் சீறடி
கல்லா இளையர் மெல்லத் தைவரப்
பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
இன்குரற் சீறியாழ் இடவயின் தழீஇ
நைவளம் பழுநிய நயந்தெரி பாலை
கைவல் பாண்மகன் கடனறிந் தியக்க'

*- (சிறுபா ; 30 - 37)*

'இரதி காமன் இவள்இவன் எனாஅ
விரகியர் வினவ வினாவிறுப் போரும்
இந்திரன் பூசை யிவள்அக லிகையிவன்
சென்ற கவுதமன் சினனுறக் கல்லுரு
ஒன்றிய படியிதென் றுரைசெய் வோரும்'

*- (பரிபாடல் ; 19 ; 48 - 52)*

எனப்பல சமூகக் கலைகளின் வளர்ச்சிகளைச் சங்க இலக்கியங்களில் பரவலாக இடம் பெறச் செய்திருப்பதைக் காணலாம்.

நுண்கலைகள் எனக் கூறப்படும் கட்டடக்கலை, சிற்பக்கலை, ஓவியக்கலை, இசைக்கலை, காவியக்கலை அனைத்தும் சங்க காலத் தமிழர்களோடு, அவர்தம் வாழ்வோடு பின்னிப்பிணைந்து காணப்படுவதை இலக்கியங்களில் காணலாம். இவற்றுள் மிகச் சிறந்ததாகக் கருதப்படுவது காவியக்கலையே என்று கூறுவர்.

'கவிஞர்களும், காவியப் புலவர்களும் கவிதைகளையும், காவியங்களையும் இயற்றுகிறார்கள். சிறந்த கவிதைகள் படிப்பவருக்குப் பெருமகிழ்ச்சியை அளிக்கின்றன. சிற்பக்கலைஞர், ஓவியக் கலைஞர்களின் சிற்ப ஓவியங்கள் கண்ணைக் கவர்ந்து மனத்துக்கு மகிழ்ச்சியைத் தருவது போலவே, கவிஞர்களும் காவியப் புலவர்களும் பாடித் தருகிற எழுத்தோவியங்கள் படிப்பவர் மனத்தைக் கவர்ந்து மகிழ்ச்சியூட்டுகின்றன' [28] எனக்கூறும் பேரறிஞர் மயிலை சீனி வேங்கடசாமியின் நற்கருத்துக்கள் இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

கபிலர் அகநானூற்றில் குறிஞ்சித் திணைக்கெனப் பாடிய பாடலென்று இடம் பெற்றுள்ளது. அதில் கபிலர் இயற்கைக் காட்சிகளை வருணிக்கும் பொழுது ஓர் இசைக் குழாத்தையே நமக்கு அறிமுகப்படுத்தி மாதவியன்ன மயிலாடும் ஆடற்காட்சியையும் கண்டு களிக்குமாறு செய்துள்ளார். இது காவிய நுண்கலைக்கு நல்ல எடுத்துக்காட்டாகும்.

'ஆடமைக் குயின்ற அவிர்துளை மருங்கிற்
கோடை யவ்வளி குழலிசை யாகப்
பாடின் னருவிப் பனிநீ ரின்னிசை
தோடமை முழவின் துதைகுர லாகக்
கணக்கலை யிகுக்குங் கடுங்குரல் தூம்பொடு
மலைப்பூஞ் சாரல் வண்டு யாழாக
இன்பல் இமிழிசை கேட்டுக் கலிசிறந்து
மந்தி நல்லவை மருள்வன நோக்கக்
கழைவளர் அடுக்கத்து இயலில் ஆடுமயில்
விழவுக்கள விறலியிற் தோன்று நாடன்'

- *(அகம் ; 82; 01-10)*

**சமூக இயக்கம்**

மனிதன் தம்மையொத்த மனிதர்களோடு மட்டுமின்றி, பிற உயிரினங்களோடும் கூடி வாழும் கட்டாயத்திற்கு ஆளாகி வாழும் கூட்டுறவு வாழ்வின் அமைப்பையே சமூகம் என்பர். இத்துடன் தம்மைச் சூழ்ந்துள்ள இயற்கைச் சூழல்களுக்கும், தட்ப - வெட்ப நிலைகளுக்கும் ஏற்ப அவன் வாழ வேண்டியிருக்கிறது. எனவே, வாழ்வின் இயக்கம் தனி மனிதரின் விருப்பு வெறுப்பிற்கேற்ப அமைவதோடு நின்று விடாமல், சமூக அமைப்பிற்கேற்ப, அதன் தேவைக்கேற்ப, அதன் கட்டளைக்கேற்ப, அதன் பாதுகாப்பிற்கேற்ப மனிதனின் இயக்கம் அமைய வேண்டும். ஒவ்வொருவரும் தாமாகத் தம் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள தம்மைத் தாமே இயக்கிக் கொள்வது போல, சமூக நலம் பேணும் காரணகாரியத்தோடு பிறராலும் இயக்கப்படுகிறான் என்பதையும் நினைவிற் கொள்ள வேண்டும். இவை, இரண்டும் இணைந்தவையே சமூக இயக்கம் எனக் கருதப்படுகிறது. எனவேதான், 'மனிதர்கள் எவ்வாறு நடந்து கொள்ளவேண்டும் என்பது சமூக எதிர்பார்ப்பு. இச்சமூக எதிர்பார்ப்பை ஒட்டி நடந்து கொள்வதுதான் சமூக ஒழுகலாறு '[29] எனச் சமூக இயக்கத்திற்கான இன்றியமையா அடிப்படைகளாக ஆய்வாளர் கூறி விளக்கம் தருவர்.

சமூக இயக்கத்திற்கேற்ப மனிதனை நெறிப்படுத்தும் அதிகாரம் சமூகத்திற்கே உண்டு எனப் ஃபிரஞ்சு சமூகவியல் அறிஞர் எமில்துர்கேம் கூறுவர். 'கூட்டாக நடவடிக்கைகளில் ஈடுபடுதல், சிந்தித்து உணர்தல் என்பன தனி மனிதரிடமிருந்து தோன்றினாலும் அவர்களில் இருந்து வேறுபட்டு வெளியே அவை நிற்பதாலும், அவை தனி மனிதனைக் கட்டுப்படுத்தி

வைத்திருப்பதாலும் சமூகமே அதிகார மையத்தின் அடிப்படையாகும்' [30] என்று அவர் கூறுவர்.

சமூகம் இயங்கவும், இயக்கவும் துணைபுரியும் சமூக அமைப்புகளும், உறுப்பினர்களும் பற்பலவாக உள்ளனர். ஆண், பெண், தலைவன், தலைவி, உற்றார், உறவினர், நண்பர், தொழிலாளர், மறவர், அரசர், அமைச்சர் சான்றோர், துறவியர் என்போர் சமூக உறுப்பினராகக் கருதப்படுகின்றனர். குடும்பம், சிற்றூர், பேரூர், நகரம், அரண்மனை, நானிலம், படைகள், போர்க்களன்கள், கோட்டைகள் எனப் பற்பல சமூக அமைப்புகள் உருவாக்கப்பட்டுள்ளன. இவற்றின் வாயிலாகச் சமூக இயக்கம் முறையாகவும் செம்மையாகவும் நடைபெற வேண்டியது இன்றியமையாப் பண்பு ஆகும்.

'வினையே ஆடவர்க்கு உயிரே; வாள்நுதல்
மனைஉறை மகளிர்க்கு ஆடவர் உயிரென
நமக்குரைத் தோரும் தாமே ! ' - *(குறுந்தொகை ; 135 ; 01 - 03)*

என்ற இல்லற இயக்கத்திற்கு ஆணும் பெண்ணும் அடிப்படை எனக்கூறுவர்.

'அதள் எறிந்தன்ன நெடுவெண் களரின்
ஒருவன் ஆட்டும் புல்வாய் போல
ஓடி உய்தலும் கூடும்மன்;
ஒக்கல் வாழ்க்கை தட்கும்மா காலே ' - *(புறம் ; பாடல் 193)*

என்று சுற்றத்தோடு கூடி வாழும் துன்பம் நிறைந்த இல்வாழ்க்கையே அனைத்து இயக்கத்திற்கும் அடிப்படை எனக்கூறுவர்.

'சினனே காமம் கழிகண் ணோட்டம்
அச்சம் பொய்ச்சொல் அன்புமிக வுடைமை
தெறல்கடு மையொடு பிறவுமிவ் வுலகத்

தறந்தெரி திகிரிக்கு வழியடை யாகும்
தீதுசேண் இகந்து நன்றுமிகப் புரிந்து
கடலும் கானமும் பலபயம் உதவப்
பிறர்பிறர் நலியாது வேற்றுப்பொருள் வெஃகாது
மையில் அறிவினர் செவ்விதின் நடந்துதம்
அமர்துணைப்பிரியாது பாத்துண்டு மாக்கள்
மூத்த யாக்கையொடு பிணியின்று கழிய
ஊழி உய்த்த உரவோர் உம்பல் '

- *(பதிற்றுப்பத்து ; 3 ஆம் பத்து ; 2ம் பாடல் ; 01 - 11)*

என்று சமூக இயக்கத்திற்குத் தேவைப்படும் பண்புகள் பற்றிக் கூறுவர்.

'தமிழர்கள் இனத்தாலும், பண்பாட்டாலும், மொழியாலும் நீண்ட நெடிய தொடர்ச்சியான வரலாற்றைக் கொண்டவர்கள். ஆர்க்கியன் காலத்தில் தோன்றிய இந்தியப் பகுதியில் பழங்கற்காலம் முதல் இன்று வரை பண்பாட்டுத் தொடர்ச்சி காணப்படுவது இப்பகுதிக்கான தனித்தன்மைகளுள் ஒன்று. இம்மண்ணில் காலங்காலமாக நிலவி வந்த திணைப் பண்பாடுகளின் அறுபடாத் தொடர்ச்சியும், அயற்பண்பாடுகளின் பரவலும், இவற்றிற்கிடையிலான கொண்டு கொடுத்தலும் நிகழ்ந்துள்ளன. திணைப் பண்பாடுகளும் அயற்பண்பாடுகளும் தொடர்ந்து உறவாய பன்மைப் பண்பாட்டுச் சூழல் இன்றைய பண்பாட்டு உருவாக்கத்திற்கு அடித்தளமாய் அமைந்துள்ளது.'[31] என்ற மானிடவியல் ஆய்வாளர்கள் கூறும் கருத்தை ஒப்பிட்டுக் காண்பார்க்குச் சங்ககாலச் சமூக இயக்கம் நெறிமுறைப்பட்ட, ஓர் ஒழுங்கான இயக்கத்திற்குட்பட்டே இருந்தது என்பதை முடிந்த முடிபாக ஏற்றுக் கொள்ள இயலும்.

இந்தச் சமூக இயக்கத்தின் மையப்புள்ளியாக, ஆணிவேராக, அச்சாணியாக, உயிரோட்டக் களமாக விளங்குபவன் மன்னன். இவனைச் சுற்றியே அற்றைய தமிழ்ச் சமூகம் இயங்கி வந்தது. நூற்றுக்கணக்கான சிற்றரசர்கள், குறுநில மன்னர்கள், பேரரசர்கள் நிலந்தோறும் தோன்றி தத்தம் சமூகம் நன்கு இயங்க ஆவன செய்து வந்தனர். இதனையே மோசிகீரனார், 'மன்னன் உயிர்த்தே மலர் தலை உலகம்' என்றும், பிசிராந்தையார், 'வேந்தனும் அல்லவை செய்யான் காக்கும் ' என்றும், ஊன்பொதி பசுங்குடையார், 'பாண் கடன் இறுக்கும் வள்ளியோய் ! பூண்கடன் எந்தை ! நீ இரவலர்ப் புரவே ' என்றும், பாடிப் போற்றியுள்ளதைக் காணலாம்.

## மன்னரும் சான்றோரும்

நல்லறிவு, நற்பண்பு, நல்வாழ்வு, நற்செயல், நல்லெண்ணம் கொண்டு வாழும் சான்றோர் எப்பொழுதும் மன்னர்களைச் சார்ந்தே இருப்பர். சமூக நலம் பேணும் கருத்துக்களை அவ்வப் பொழுது மன்னர்க்கு எடுத்துக்கூறி, நாடு நலம் பெற விழைபவர் தான் சான்றோர். இச்சான்றோர்களைக் கண்ணகனார் என்னும் புலவர், 'பொன், துகிர், முத்து, காமருமணி' எனப் பாராட்டு வதைக் காணலாம். இவர்கள் எங்கிருந்தாலும் சான்றோனாகிய மன்னன் அவையில் இடம்பெற்றுச் சிறப்புச் செய்வர். இதனை, 'சான்றோர் சான்றோர் பாலர் ஆப' எனக் குறிப்பிடுவர்.

கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி என்பார் இத்தகு சான்றோர்களை, 'தமக்கென முயலா நோன்தாள் பிறர்க்கென முயலுநர்' எனப்பாராட்டுவர். பிசிராந்தையார், 'ஆன்றவிந் தடங்கிய கொள்கைச் சான்றோர் பலர் யான் வாழும் ஊர்' என்றார். கணியன் பூங்குன்றனார், 'நீர்வழிப் படூஉம், என்பது

திறவோர் காட்சியின் தெளிந்தனம் ஆகலின், மாட்சியின் பெரியோரை வியத்தலும் இலமே, சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே' என்று கூறுவர்.

இத்தகு சான்றோரை மதுரைக் காஞ்சி,

'நன்றுந் தீதுங் கண்டாய்ந் தடக்கி
அன்பும் அறனும் ஒழியாது காத்துப்
பழியொரீஇ உயர்ந்து பாய்புகழ் நிறைந்த
செம்மை சான்ற காவிதி மாக்கள்'

*- (மது.கா; 496 - 499)*

என்று பாராட்டும். இத்தகையோர் கூறும் நல்லுரைகளை ஏற்று நல்லாட்சி புரியும் மன்னர்கள் தான் அதிகம் இருந்தனர். அவர்கள்,

'அரசியல் பிழையா தறநெறி காட்டிப்
பெரியோர் சென்ற அடிவழிப் பிழையாது '

*- (ம.கா; 191 - 192)*

ஆட்சி செய்தனர் என்பதையும் மதுரைக் காஞ்சி குறிப்பிடுகிறது. மற்றோரிடத்தில்,

'பல்சாலை முதுகுடுமியின்
நல்வேள்வித் துறைபோகிய
தொல்லாணை நல்லாசிரியர்
புணர்கூட் டுண்ட புகழ்சால் சிறப்பின்
நிலந்தரு திருவின் நெடியோன்' *- (ம.கா; 759 - 763)*

என்று குறிப்பிடுவதையும் காணலாம். எனவே, மன்னர்கள் தம்மருகே எப்பொழுதும் சான்றோர்கள் இருக்குமாறு பார்த்துக் கொள்வர். அதற்கென

அமைக்கப்பட்ட குழுக்களே ஐம்பெருங்குழு, எண்பேராயம் எனப்படும் குழுக்கள் ஆகும்.

**மன்னரும் புலவர்களும்**

'செறுத்த செய்யுள் செய்செந் நாவின்
வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன் '

*- (புறம் ; 53 ; 11 - 12)*

என்பார் பொருந்தில் இளங்கீரனார்.

'ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் ' *- (புறம் ; 72; 13 - 14)*

என்பார் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்.

'நா நவில் புலவர்' என்று பாலை பாடிய பெருங்கடுங்கோ கூறுவர். பதிற்றுப் பத்தின் பதிகம், 'மறுவில்வாய்மொழி அரிசில்கிழார்' என்று கூறும். நல்லந்துவனார் வையை பற்றிப் புகழ்ந்து பாடும் பரிபாடலில்,

'மாசில் பனுவற்புலவர் புகழ்புல,
நாவிற்புனைந்த நன்கவிதை'

என்பர். புரவலராகவும், இரவலராகவும் திகழ்ந்த மன்னர்களைப் புகழும் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்,

'புலவர் புக்கில் ஆகி, நிலவரை நிலீ இயர்'

என்பர். இத்தகு புலவர்கள் அதிகம் நெருக்கமாக மன்னர்களிடம் பழகியுள்ளனர் என்பதையும் இலக்கியம் பகருகிறது.

புலவர்களின் பன்முகப் பண்புகளாலும், நுழைபுலத் திறன்களாலும், அனுபவ முதிர்ச்சிகளாலும் மன்னர்களுக்கு ஆசிரியர்களாகவும், அமைச்சர்களாகவும், நண்பர்களாகவும், தூதுவர்களாகவும், நல்வழி காட்டிகளாகவும், புகழ்பாடும் பாணர்களாகவும் இருந்து மன்னர்களுக்குப் பெருமை சேர்த்துள்ளனர். இவர்களுள் பெண் பாற்புலவர் பலர் தமக்கே உரித்தான தாய்மைப் பண்போடு மன்னர்களிடம் பழகிப் பயனுள்ள கருத்துக்களைக் கூறி நல்வழிப் படுத்தியுள்ளதையும் காண முடிகிறது. மன்னர்களிடையே புலவர்களுக்கு இருந்த நல்லுறவு, மாண்பு முதலானவற்றைக் கண்டறிய அதியமான் நெடுமான் அஞ்சி செய்த செயலை, ஔவையாரே புகழ்ந்து பாடிப் போற்றியதை யாவரும் அறிவர்.

'. . . . . . . . . . . . . . தொன்னிலைப்
பெருமலை விடரகத்து அருமிசை கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது
ஆதல் நின்னகத்து அடக்கிச்
சாதல் நீங்க எமக்கு ஈத்தனையே '.

- (*புறம் - 91; 07 - 11*)

'நீண்ட நாள் வாழ வைக்கும் அமுதம் எனக்கருதும் நெல்லிக்கனி ஒன்றை அரும்பாடுபட்டு, பெற்றுத் தாம் உண்ணாது, எமக்களித்து எம்மூலம் தமிழ்ப் பணி செய்ய விரும்பியவனே! என்னே உன் மனவெழுச்சி! ' எனப் பாராட்டி,

'நீல மணிமிடற்று ஒருவன் போல
மன்னுக பெரும நீயே '

என வாயார வாழ்த்தியவர் ஔவையார். பகைமை ஒழித்து, சந்து செய்து பேரழிவை நிறுத்த இவர் தூது சென்று அதியமானுடைய படைக்கலச் சிறப்பை

எதிர்மறையாகக் கூறி உணர்த்த, 'பகைவர்க் குத்திக் கோடு நுதிசிதைந்து, கொல்துறைக்குற்றில மாதோ!' என்று பாடியவர்.

சான்றோர்களைப் போலவும், அமைச்சர்களைப் போலவும், தவறிழைத்த காலத்தில் சுட்டிக் காட்டி, இடித்துரைத்துச் சிந்திக்க வைத்த பெருமையும் இந்தப் புலவர்கட்கு உண்டு. இதற்கு இவர்கள் படைத்த பாடல்களே நமக்குச் சான்றுகள் பகருகின்றன. எவரும் தத்தம் புகழை ஆணவத்துடன் எடுத்துக்கூறித் தமக்குத் தாமே புகழ்ந்து பாடிய பாடல்களைச் சங்க இலக்கியத்தில் காண இயலாது. தம் மனக்குறையைப் போக்க முயன்ற பொழுதும், பரிசு கிடைக்காது வருந்திப் பாடிய பொழுதும், தடைகள் பல வந்த போதும் நயத்தக்க நாகரித்தோடு பாடியதைத் தான் காணமுடிகிறது.

உள்ளதை உள்ளவாறு வெளிப்படையாகக் கூறி மன்னரிடம் தம் குறையைக் கூறி, உதவி பெறும் பொழுது கூடத் தம் தனித்தன்மையை வெளிப்படுத்திப் பெருமை பெற்றவர்களைத்தான் காணமுடிகிறது. இதில் பெருஞ்சித்திரனார் குமணனிடம் தம் வறுமை வாழ்வின் ஒரு காட்சியைச் சொல்லோவியமாகத் தீட்டி அதிலும் இலக்கிய இன்பம் காணுமாறு செய்துள்ளார்.

'வாழும் நாளொடு யாண்டுபல உண்மையின்
தீர்தல்செல் லாது என்உயிர் எனப்பல புலந்து
கோல்கால் ஆகக் குறும்பல ஒதுங்கி
நூல்விரித் தன்ன கதுப்பினள் கண்துயின்று
முன்றிற் போகா முதிர்வினள் யாய் '

- *(புறம் 159 ; 01- 05)*

என்று பாடலைத் தொடங்கி வறுமைக்கு விளக்கம் கூறும் சிறப்பைக் காணலாம்.

புலவர் மீது மன்னர்கள் எத்தகைய மதிப்பு வைத்திருந்தனர் என்பதை ஒரு புலவர் கூறும் கூற்று, கேட்பார்க்கு உளம் புளகாங்கிதம் அடையாமற் போகாது என்பது திண்ணம். தமக்குக் கவரி வீசிய காவலனை நமக்கு மோசிகீரனார் அறிமுகப்படுத்தும் பாடலைக் கற்பார், இந்த உண்மையையும், உணர்வையும் பெறுவர். அவர் வறுமையோடு அது போக்க பல தூரம் நடந்து வந்த தளர்ச்சியாலும் அயர்ச்சியாலும் தம்மையே மறந்து சேரமான் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையின் முரசுகட்டிலில் தூங்கிவிட்டார். அதுகேட்டு, ஓடி வந்த மன்னன் அவரை எழுப்பாமல் கவரி கொண்டு வீசி நன்கு உறங்குமாறு செய்ததை ஒரு பாடலில் நயம்பட மனநெகிழ்வோடு பாடியிருப்பதைக் காணலாம்.

'நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை
அறியா தேறிய வென்னைத் தெறுவர
இருபாற் படுக்குநின் வாள்வா யொழித்ததை
அதூஉஞ் சாலுநற் றமிழ்முழு தறிதல்
அதனொடு மமையா தணுக வந்துநின்
மதனுடை முழவுத்தோ ளோச்சித் தண்ணென
வீசி யோயே! '

*- (புறம் 50; 07 - 13)*

எனப்பாடி, தமிழால் தமக்கு மன்னர் மூலம் உருவான சிறப்பை வியந்து போற்றிப் பாடுகிறார்.

### மன்னரும் மறவர்களும்

அரசு - அரசாங்கம் - அரசர் அல்லது மன்னர் என்ற சங்கிலித் தொடர் அமைப்பில் ஓர் இன்றியமையா பொறுப்பாளர்கள் என்ற நிலையில் அறிமுகம்

ஆகுபவர்களே மறவர்கள். மறவர்களுக்கும் மன்னர்களுக்கும் உள்ள தொடர்பு, உறவு, பதவி, பணி, சிறப்பு முதலியவற்றை வரையறை செய்து வெளிப்படுத்துவற்கு அரசு, அரசாங்கம், அரசர் எனப்படும் நிறுவன அமைப்பையும், அதன் இயக்கத்தையும் நன்கு புரிந்து கொள்ள வேண்டும். மறவர்கள் மன்னர்களோடு தொடர்பு கொள்ள வழிவகுப்பதை அரசு மற்றும் அரசாங்கம் ஆகும். இவையிரண்டும் வெவ்வேறானவை. ஆனால், தொடர்புடையவை. ஒன்றினுள் ஒன்று பிணைந்து இயங்குபவை.

'மக்கள் தொகை, நிலப்பரப்பு, அரசாங்கம், இறைமை என்ற நான்கும் சேர்ந்ததே அரசு. சமூகத்தில் இடம் பெற்ற பல்வேறு வகையான கூட்டமைப்புகளில் அரசும் ஒன்று. சட்டரீதியாக ஒரு குறிப்பிட்ட வரையறைக்குள் வாழும் மனிதர்களடங்கிய ஓர் இனமே அரசு எனப்படுகிறது. இதற்கென நிச்சயமானதொரு நோக்கமும், வரையறுத்த உறுப்பினர்களுமுண்டு. ஒழுங்குபடுத்தப்பட்ட இனங்களின் அரசியல் உறவுகளைப் பற்றி மட்டுமே அரசு கவனிக்கிறது. ஆனால், மறுபுறத்தில் சமூகமோ அனைத்து மனிதர்களின் உறவுகளையும் உள்ளடக்கியுள்ளது. சமூகம், அரசியல், பொருளாதாரம், மதக் கருத்துக்கள், பாதுகாப்பு அனைத்தும் இதில் அடக்கம். அரசின் நோக்கம் சமூகத்தின் புறநிலைமைகளைப் பேணிக்காப்பதேயாம். இதன் முதன்மைப் பொறுப்பாளரும் தலைவருமாகக் கருதப்பட்டவரே அரசர் எனப்படும் மன்னர்'[32] ஆவார்.

அரசுக்கும் அரசர்க்கும் இடையே இணைப்பு பாலமாக இருப்பதே அரசாங்கம். அரசின் நான்கு உறுப்புக்களுள் ஒன்றாகக் கருதப்படுவதே அரசாங்கம். எந்த ஓர் அரசும் அரசாங்கமில்லாமல் நிலைபெற முடியாது. அரசாங்கமில்லை யென்றால் குழப்பம் என்று தான் பொருள். மக்கள் அமைதியாக வாழ்ந்து முன்னேற்றமடையவும், செழுமையை அடையவும்

மக்களுக்கு ஓர் அரசாங்கம் அவசியம். அரசாங்கத்தில் நீதித்துறை, சட்டத்துறை, நிர்வாகத்துறை என மூன்று பிரிவுகள் உள்ளன. [33]

அனைத்தையும் குறிப்பிட்ட ஓர் எல்லைக்குள் கட்டுப்படுத்திச் செயல்படுத்த முனைவதற்குத் துணை நிற்பதே அரசியலமைப்பு என்பர். இதில் மக்கள், சமூகம், அரசு, அரசாங்கம், அரசர் அல்லது அதிகாரிகள் எனப்படும் அனைத்தும் இந்த அரசியலமைப்பிற்குக் கட்டுப்பட்டவை மற்றும் இதனுள் அடங்குபவையாகும். ஒரு நாட்டின் அரசியல் வாழ்க்கையை நிர்ணயிக்கும் சட்டங்கள், வழக்காறுகள் ஆகியவற்றின் தொகுதியே அரசியலமைப்பாகும். அரசு யந்திரங்களின் பணிகள் எந்த நோக்கத்திற்காகச் செயல்படுகின்றனவோ அந்த நோக்கங்களை ஒழுங்குபடுத்தும் சட்டத் தொகுப்பிற்கு அரசியலமைப்பு என்று பெயர். [34]

எந்தக் கோட்பாடுகளை வைத்து அரசாங்கத்தின் அதிகாரமும், ஆளப்படுவோரின் உரிமைகளும், அவர்களுக்கிடையேயுள்ள உறவுகளும் நிர்ணயிக்கப்படுகின்றனவோ, அதற்கு அரசியலமைப்பு என்று முத்திரை குத்தப்பட்டுள்ளது.

இந்த அரசியமைப்பில் தான் வள்ளுவர் கூறும் அரசியல், அமைச்சியல், அரணியல், கூழியல், படையியல், நட்பியல், குடியியல் முதலானவை அடங்கியுள்ளன. அனைத்திற்கும் பொறுப்பேற்க வேண்டியவரே அரசர். எனவேதான் வள்ளுவர், 'முறை செய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு இறை என்று வைக்கப்படும்' என அழுத்தந்திருத்தமாகக் கூறுவர். அரசருள் ஆண்சிங்கம் போல உலவ மன்னர்க்கு வேண்டப்படும் ஆறு அங்கங்களுள் முதன்மையாகக் கருதப்படுவது 'படை' என்பதேயாகும். இதற்கு அடித்தளமிட்டுச் சிறப்பாகப் பணியாற்று பவர்களே மறவர்கள். இப்படையின்

மாட்சியை, 'அஞ்சா வெல்படை' என்றும், 'ஊறு அஞ்சாவன்கண் தொல்படை' என்றும், 'ஏமப்படை' என்றும், 'வெல்லும் படை' என்றும் கூறிச் சிறப்பித்தார்.

பேராண்மையும், ஊராண்மையும் கொண்ட மறவர்கள் பலர் இருப்பினும் தானைத் தலைமகன் இல்லையேல் படைக்கு இழுக்கு பல வழிகளிலும் ஏற்படக் கூடும். தளபதிகளுக்கும் தளபதியாக விளங்கும் மன்னர் தான் தானைத் தலைமகனாகக் கருதப்பட்டான். எனவே தான் வள்ளுவர்,

'நிலைமக்கள் சால உடைத்தெனினும் தானை
தலைமக்கள் இல்வழி இல்'

- (குறள் - 770)

என்பர். இதற்கு பரிமேலழகர், 'படைத்தகை இன்மையானும், அரசன் கொடைத் தாழ்வுகளாலும், தலைவர் இன்மையானும் தாழ்வு கூறப்பட்டது' என்று குறிப்பிடுவதால் மன்னரே அனைத்திற்கும் பொறுப்பு என எளிதாக முடிவுக்கு வரலாம்.

'பண்டை நூல்கள் சிலவற்றில் ஐம்பெருங்குழு, எண்பேராயம் ஆகிய கூட்டத்தினரைப் பற்றி அறிகிறோம். மதுரைக் காஞ்சியிலும், பிற்காலத்தைச் சார்ந்த சிலப்பதிகாரம், மணிமேகலை, பெருங்கதை ஆகிய நூல்களிலும் அவை பற்றிக் கூறப்பட்டுள்ளன. மதுரைக் காஞ்சியில் நாற்பெருங்குழுவைப் பற்றிக் கேள்விப் படுகிறோம். இவற்றின் அமைப்பு, பொறுப்புகள், உரிமைகள் பற்றிக் கருத்துவேற்றுமைகள் காணப்படுகின்றன'[35] எனக்கூறும் கே.கே. பிள்ளை, ஐம்பெரு குழுவில், 'படைத்தலைவர், தூதுவர், ஒற்றர் ' எனப்படும் பாதுகாப்புக் குழுவில் இடம் பெற்றோரைக் குறிப்பிடுவர். எண்பேராயம் என்ற குழுவில், 'கடை காப்பாளர் அல்லது அரண்மனை காப்போர், காலாட்படைத் தலைவர், யானைப் படைத்தலைவர், குதிரைப்படைத் தலைவர்' எனப்படும் பாதுகாப்புக் குழுவில் இடம்பெற்றோரைக் குறிப்பிடுவர். இதன் மூலம் பாதுகாப்பின் பிரதிநிதிகளாகிய

மறவர்கட்கு அதிகம் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருந்ததைத் தெளிவாகக் காணமுடிகிறது.

மறம், மறல், மறலி, மறலுதல், மறங்குதல், மறக்குடி, மறவன், மறத்தி, மறவர், மறத்துறை, மறநிலைப்பொருள், மறக்கற்பு, மறக்களம், மறக்கருணை, மள்ளர், மழவன், மழுவன், மல்லர், மல்லன், மல்லாட்டம், மல்லம், மலைவு, பொருநன், பொருநர், பொருந்தலர், போராளன், போர்வீரன், ஏணுற்றார், ஏதிலார், ஏதலன், ஏமப்புணை, ஏமம், ஏமரா, ஏமருதல், ஏமாப்பு, ஏமார்த்தல் முதலான இன்னும் பல சொற்கள் தற்காப்பு, சமூகக் காவல், படைக்காவல், ஊர்க்காவல், போர்ப்படை, மூலப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படை, பாசறைக்காவல், தூது, ஒற்று, விழாக்காவல், தினைப்புனக் காவல் முதலானவற்றோடு தொடர்புடையோர், அவற்றின் பணிகள், அங்கங்கள், பண்புகள் முதலானவை சுட்டப்பெறும் பெயர்ச் சொற்கள் மற்றும் வினைச் சொற்கள் ஆகும். இவற்றுள் பண்புச் சொல்லும், உரிச் சொல்லுங் கூட இடம் பெற்று மறப்பண்பையும் மறச் செயலையும் சிறப்பித்து நிற்கின்றன.

பிறப்பாலும், வளர்ச்சியாலும், பயிற்சியாலும், விரும்பி மேற்கொள்வதாலும், உடல் மற்றும் உள்ள உறுதிகளாலும், உயிரைத் துச்சமென மதித்து உடல் வலிமையாலும், பயிற்சித் திறனாலும் பிறர்தம் பாதுகாப்பிற்குரிய பணிகளை யாதேனும் ஒரு வடிவில் மேற்கொண்டு செயல்படுவோர் அனைவரையும் பழந்தமிழகத்தில் 'மறவர்' என்ற பொதுப் பெயராலேயே அழைத்துள்ளனர்.

இத்தகு மறவர்கட்குச் சிறப்பாக அமையும் பண்புகள் எனச் சிலவற்றை வரையறை செய்து சுட்டிக் காட்டி வந்துள்ளனர். அவை நன்றியறிதல்,

நாட்டுப்பற்று, மானம், தன்மானம், இடுக்கண் அழியாமை, செருக்கு, தன்முனைப்பு, பொறுப்பு, கடமை என மேலும் பலவற்றைச் சுட்டி அவ்வப்பொழுது பாடல்களில் இடம் பெறுமாறு செய்துள்ளனர்.

அனைத்திற்கும் அடிப்படையாகவும், ஆணிவேராகவும் அமையும் பண்பே 'மானம்' என்பதாகும். தொன்று தொட்டு வருகின்ற நற்குடியின் கண் பிறந்தார்க்கு இயல்பாகவே அமைதல் வேண்டும். இதற்கு 'மாசு' மற்றும் 'ஊறு' விளையும் போது, தடுத்தழித்து மானம் காக்க உதவும் பண்பே மறப்பண்பு என்பர். இஃது நிறைந்து வாழ்வோர் மறவர் எனப்படுவர். இவரே 'சீரோடு பேராண்மை வேண்டுபவர்' , 'கவரிமா அன்னார்', 'கல்வி - தறுகண் - இசைமை - கொடை போன்றவற்றால் பெருமிதமானவர் ' எனக்கூறலாம். வீடும் நாடும் வலிமையும் தற்காப்பும் பெற சீரிய கடமையாற்றும் சமூகக் காவலர்கள்.

சங்ககாலத் தமிழ்ச்சமூகம் மன்னர்களை மையமாகக் கொண்டு பல பெரிய அமைப்புகளாகவும் - சிறிய அமைப்புகளாகவும் அரசியலமைப்புகள் அமைந்திருந்ததைக் கண்டறிய சங்க இலக்கியங்கள் துணை நிற்கின்றன. பேரரசர், சிற்றரசர், குறுநில மன்னர் என மூவகையுள் அடக்கி மறவர்கள் இவர்கட்கு எவ்வாறு தொண்டு புரிந்து வந்தனர் என்பதைக் கண்டறிய முடிகிறது. மறவர்கள் தத்தம் இல்லறக் காவலர்களாக இருந்து வாழ்ந்து வருவதின் காரணமாக இயல்பாகவே பெற்ற காவற்காக்கும் பண்பு ஊர், சிற்றூர், பேரூர் என விரிவடைந்து பெரும் பொறுப்பேற்கும் இயல்பை இயல்பாகவே பெற்றிருந்ததைக் காணமுடிகிறது.

தாம் உழைத்துப் பெற்ற ஊதியத்தைச் சேகரிக்கும் ஒவ்வொரு தனி மனிதனும் தம் இல்லத்தைச் சார்ந்தார் அனைவர்க்கும் உணவு, உடை, உறையுள் அனைத்திற்கும் ஏற்பாடு செய்து காப்புடைமைக்கு வித்திடுகின்றனர். பிறகு

சமூக உறுப்பினராகி யாதேனும் தொழிலொன்றை மேற்கொள்ளும் போது அத்தொழிலைக் காக்கக் காப்புரிமை பெறுகின்றனர். இவர்களுள் தறுகணும், மனஉறுதியும், உடல்வலிமையும், விருப்பமும் கொண்டோர் வீரவிளையாட்டில் ஈடுபட்டுச் சமூகம் காக்கும் பணிக்குத் தம்மைத் தயார் செய்து கொள்கின்றனர். வேட்டையாடுதல், ஏறுதழுவுதல், யானையேற்றம், குதிரை யேற்றம், தேர் ஏற்றம், விற்பயிற்சி, வேல் எறியும் பயிற்சி முதலானவற்றில் விருப்பத்தோடு, விளையாட்டாக ஈடுபடுவோர்தான் காலப் போக்கில் வண்மையும் திண்மையும் கொண்ட மறவர்களாக வளர்ந்தனர் என்பதற்கு இலைமறை காயாகி இடம் பெறும் நிகழ்ச்சிகள் சங்க இலக்கியங்களில் காணக் கிடக்கின்றன.

கபிலர் இயற்றிய குறிஞ்சிப் பாட்டில் இத்தகைய காட்சிகளுள் ஒன்றை நயம்பட நமக்குப் படைத்துக் காட்டுவர்.

'கணைவிடு புடையூர் கானங் கல்லென
மடிவிடு வீளையர் வெடிபடுத் தெதிரக்
கார்ப்பெய லுருமிற் பிளிறிச் சீர்த்தக
இரும்பிணர்த் தடக்கை யிருநிலஞ் சேர்த்திச்
சினம்திகழ் கடாஅம் செருக்கி மரம்கொல்பு
மையல் வேழம் மடங்கலின் எதிர்தர '

- (கு. பா ; 160 - 165)

என ஓர் இளைஞன் மகளிரைக் காக்க யானையை வேட்டையாடி விரட்ட முயன்றதை முதலில் கூறுவர். பிறகு,

'.. . . .   . . . .   . . . . வார்க்கோல்
உடுஉறும் பகழி வாங்கி கடுவிசை
அண்ணல் யானை அணிமுகத்து அழுத்தலின்

புண்ணுமிழ் குருதிமுகம் பாய்ந்து இழிதர
புள்ளிவரி நுதல் சிதைய நில்லாது
அயர்ந்து புறங்கொடுத்த பின்னர் .....'

- (கு. பா ; 169 - 174)

எனக்கூறி இளைஞன் வேட்டையாடுதல் முறையைப் பின்பற்றி எப்படி களிறு ஓடுமாறு செய்தான் எனக் கூறுவர்.

முதலில் சினங்கொண்ட வேடன் அம்பு எய்தான். தட்டை என்ற கருவியைப் புடைத்தான். சீழ்க்கையடித்தான். புனம் விட்டு ஓடிய யானை இடி போல முழங்கி சினத்தோடு மரங்களை முறித்தபடி, கூற்றுவனைப் போல அவர்களை நோக்கித் தாக்க ஓடியது. அதுகண்ட இளைஞன் மீண்டும் அம்பு ஒன்றினை அதன் முகத்திலே எய்து அழுந்தச் செய்தான். குருதி கொட்ட அச்சத்துடன் யானை பின்வாங்கி காட்டினுள்ளே ஓடி மறைந்தது, இவ்வாறு கபிலர் இளைஞனின் வேட்டைத் திறனை மருட்கையோடு விளக்கந் தந்து கற்பாரும் அஞ்சும் வண்ணம் வேட்டைக் காட்சியைக் காண்பித்து முடித்தார். இவையெல்லாம் அக்கால இளைஞர்க்கு விளையாட்டாயிற்று.

நல்லுருத்திரனார் கலித்தொகை, முல்லைத் திணைப் பாடல்களில் 'ஏறுதழுவுதல்' பற்றி விரிவாகவும், சிறப்பாகவும் பல பாடல்களில் பாடியுள்ளார். 'ஆயர் ஏறு தழுவி நின்றமையைத் தோழி தலைவிக்குத் தனித்தனியே காட்டிப் பின்னர் அவ் ஏறு தழுவி விட்டுக் குரவையாடுகின்றமையையும் கூறி, ஆண்டு யாமுஞ் சென்று நின்னை ஏறுதழுவிக் கோடற்கு நிற்கின்ற தலைவன் கேட்டு ஏறுதழுவிக் கொள்ளுமாறு நமக்குச் சுற்றத்தார் கூறிக் கிடக்கின்ற முறைமையைப் பாட்டிலே தோன்றப் பாடிக் குரவையாடி வழுதி வாழ்கவென்று தெய்வம் போற்றி வணங்குவோம் ' என்று கூறுவதாகப் பாடல் பாடியுள்ளார்.

ஒரு பாடலில் ஒரு தோழி இதன் தொடர்பாகப் பாடுவதாக அமைந்த பாடல் மிகச் சிறந்ததாகவும் சுவை மிக்கதாகவும் அமைந்துள்ளதைக் காணலாம்.

'கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்
புல்லாளே ஆய மகள்;
அஞ்சார் கொலையேறு கொள்பவ ரல்லதை
நெஞ்சிலார் தோய்தற் கரிய உயிர்துறந்து
நைவாரா ஆயமகள் தோள்;
வளியா அறியா உயிர்காவல் கொண்டு
நளிவாய் மருப்பஞ்சும் நெஞ்சினார் தோய்தற்கு
எளியவோ ஆயமகள் தோள் !'

- *(கலி ; முல் ; 3 ; 63-70)*

என்று நல்லுருத்திரனார் தோழி கூற்றாகப் பாடியுள்ளார்.

## மறவர்கள் பங்கும் பணிகளும்

மன்னர்களுக்கு அணுக்கத் தொண்டர்களாவும், மெய்க் காவலர்களாகவும் வாழ்ந்த மறவர்கள் சமூகப் பணிகளில் அதிகப் பங்கும் பெற்று நல்ல தொண்டாற்றிப் பெருமை பெற்றதின் காரணமாகத்தான் புலவர்கள் மிகுதியாகப் பாடிப் போற்றும் நிலை ஏற்பட்டது. தமக்குரிய பணிகள் இவை எனக் கருதி பணிகளில் ஈடுபட்டாலும், விருப்பமின்றிக் கடனுக்குப் பணிபுரியும் முரண்பட்ட பண்புகளை நீக்கி வாழ்ந்தவர்கள் மறவர்கள் எனப் புலவர்கள் பாராட்டிப் பாடுவதைச் சங்க இலக்கியத்தில் காணலாம்.

'ஒரு வேந்தன் வேறொரு வேந்தனொடு பகைகொண்டு வெட்சி மலைந்து அவன் நாட்டு ஆனிரைகளைக் கவர்ந்து கொண்டான். அதனையறிந்த அவன்

கரந்தை சூடித் தன்னாட்டு ஆனிரைகளை மீட்கும் குறிப்பால் போர்க்கெழச் சமைந்தான். கரந்தைப் போரைத் தெரிவிக்கும் போர்ப்பறை நாடு முற்றும் முழங்கிற்று. நாட்டிலுள்ள வீரர் அனைவரும் திரண்டனர். வேந்தன் தானைத் தலைவர்களைக் கூட்டி உண்டாட்டொன்றினை நிகழ்த்தினான். அப்போது தலைவர் பலரையும் நேரிற் கண்டு அவரவர் நலங்களையும் தெரிந்து சிறப்புச் செய்வது அவன் கடமையாகும். அவரவர் குடிவரவும் பண்பும் எடுத்தோதுவது சொல் நலம் வாய்க்கப் பெற்ற சான்றோர் செயல்.'

'இத்தகைய உண்டாட்டில் ஔவையார் சென்றிருந்தார். தானைவீரர் குடிநிலையும் செயற்றிறமும் எடுத்தோதும் அரும்பணியைச் சான்றோராகிய ஔவையார் மேற்கொண்டார். வீரர் ஒவ்வொரு வரையும் பற்றிச் சான்றோர் எடுத்தோதக் கேட்கும் வேந்தன் மகிழ்ந்து தருவது கூறிப் பொன் வள்ளத்தில் கள்ளேந்தித் தருவன். இவ்வாறு வீரர் குடிநிலையுரைக்கப் புக்க ஔவையார், வீரனொருவன் குடிநிலையைக் கூறுவாராய் இனிய பாட்டொன்றைப் பாடினர்.'

அதன்கண், 'வேந்தே ! இக்கள்ளை, முன்னர் இவர்க்குத் தந்து பின்னர் நீ உண்பாயாக! இவன் தந்தைக்குத் தந்தை நின் தந்தை தந்தைக்குக் கண்ணிமையாது காத்து, ஆர் செறிப்புண்டு நிற்கும் ஆழிக்குடம் போலப் பகைவர் எறிந்த வேல் பாய்ந்து நிற்ப நின்று மாய்ந்தான்; அவன் பெயரனாகிய இவன் கடுமழை காக்கும் பனங்குடை போல நின்னைக் குறித்து மாற்றார் எறிய வரும் வேலைத் தான் இடை நின்றேற்றுக் காத்து நிற்பன்; இவன் வெல்போர் பல செய்து மறப்புகழ் நிறைந்தவன் ' [36] என்று கூறிப் பாராட்டி மகிழ்ந்தார்.

'இவற்குஈந்து உண்மதி! கள்ளே சினப்போர்
இனக்களிற்று யானை இயல்தேர்க் குருசில் !
நுந்தை தந்தைக்கு இவன்தந்தை தந்தை

எடுத்துஎறி ஞாட்பின் இமையான் தச்சன்
அடுத்துஎறி குறட்டின் நின்றுமாய்ந் தனனே
மறப்புகழ் நிறைந்த மைந்தினேன் இவனும்
உறைப்புழி ஓலை போல
மறைக்குவன் பெருமநிற் குறித்துவரு வேலே.'

- (புறம் - 290)

## மறவர்களின் சமூக உறவுகள்

வீரப்பண்பு நிறைந்த மறவர்கள் மன்னர்களின் பிரதிநிதிகளாக சமூகத்தில் உறவு கொள்ளும் சந்தர்ப்பங்கள் அதிகம் ஏற்படுவது இயல்பேயாம். இவர்தம் காவற்பணிகள் பரவலாகவும், பலவிதமாகவும் அமையும் பொழுது மக்களோடு மக்களாக இருந்து பணிபுரியும் சூழ்நிலைகளே அதிகமாகும். அப்பொழுது மன்னரின் செங்கோல் ஆட்சிக்குக் களங்கம் ஏற்படும் பணிகளை மக்கள் செய்வதிலிருந்து விலகியிருக்குமாறு செய்வதோடு, தாமும் அத்தகு முரண்பட்ட செயல்களைச் செய்ய முன்வரார்.

'இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்
துன்பம் துடைத்தூன்றும் தூண்'.

- (குறள் - 615)

என்னும் 'ஆள்வினை உடைமை'க்குறளுக்கு மறவர்கள் தக்கச் சான்றாகத் திகழ்ந்தனரெனலாம்.

மறப்பண்போடு அறப்பண்புகளையும் இயல்பாகவே பெற்றுச் சமூகத்தில் உலவி வந்த பெருமை மறவர்கட்கு உண்டு. அதற்கேற்பவே, அக்காலத்துப் போர் நெறிகளும் வகுக்கப்பட்டன என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன.

'ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
தென்புல வாழ்நர்க்கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மினென
அறத்தாறு நுவலும் பூட்கை மறம்'

- *(புறம் ; 09 ; 01 - 06)*

என்று மறவர் போர் தொடங்குவதற்கு முன்பு பறை சாற்றி அறிவிக்கும் நற்பண்பு அன்று இருந்தது. போர்க் காலத்திலும் பாதுகாக்கப்பட வேண்டியவர் இவர் இவரென அறிந்து பாதுகாப்பான இடத்திற்குச் செல்லுமாறு அறிவித்து, அவரனைவரும் பாதுகாப்பான இடத்திற்குச் சென்ற பிறகே, பிறரோடு போரிடுவர். இத்தகு சமூக ஒழுகலாறுகள் போர்க் காலங்களில் மறவர்களால் போற்றப்பட்டதிலிருந்து அவர்தம் சமூக உறவுகள் எப்படி நிலவி வந்தன என்பதைத் தெளிவாகக் காணலாம். இதற்கு ஒற்றர்களும், தூதுவர்களும் துணை புரிவர்.

சில நேரங்களில் சமூகச் சிதைவு ஏற்படும் சூழ்நிலையும் சமூகத்தில் உருவாகக் கூடும். அப்பொழுது பிற அரசு அலுவலர்களோடு இணைந்து இச்சிதைவுகளைச் சரிசெய்ய மறவர்களும் ஈடுபடுவதுண்டு. தனிமனிதத் தன்னலம், பொது நல விழிப்புணர்வு இன்மை, அடிப்படைத் தேவைகள் நிறைவேறாத சூழல், புறக்கருத்து இடையீடு, வாழ்வியல் மாற்றம், பகைவர்களின் அச்சுறுத்தல், தம்மையும் தம்மைச் சார்ந்தாரையும் பாதுகாத்துக் கொள்ள வேண்டியநிலை போன்ற காரணங்களால் அறவழி புறந்தள்ளப்பட்டு, தத்தம் விருப்பம் போல் செயல்களில் ஈடுபடும் பொழுது இத்தகு சமூகச்சிதைவு

ஏற்படுவது இயல்பு. அப்பொழுது அரசாங்க அலுவலர்களும், சமூகநலம் பேணும் சான்றோர்களும் தத்தம் சக்திக்கேற்ப இச்சமூகச் சிதைவு மேலும் வளராவண்ணம் தடுக்க முயல்வர். அப்பணியில் ஈடுபடுவோர்க்குத் தக்க காவலர்களாக மறவர்கள் ஈடுபடுவதுண்டு.

இதற்குச் சான்றாக அக்காலத்திலிருந்த ஆறலைக் கள்வர் செயல்களைக் குறிப்பிடலாம். இதன் தொடர்பான செய்திகள் கூட சங்க இலக்கியங்களில் அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சுட்டிக் காட்டப்பட்டுள்ளதையும் காணமுடிகிறது. கடியலூர் உருத்திரங்கண்ணனார் இயற்றிய 'பெரும்பாணாற்றுப்படை ' நூலில்,

'அத்தஞ் செல்வோ ரலறத் தாக்கிக்
கைப்பொருள் வெளவுங் களவோர் வாழ்க்கை
கொடியோ ரின்றவன் கடியுடை வியன்புலம் '

- *(பெரும் ; 39 - 41)*

என்ற அடிகளின் வாயிலாக ஆறலைக் கள்வரின் கொடுஞ்செயல் வேதனையோடு விளக்கப்பட்டுள்ளதைக் காணலாம். இதனினும் சற்று வேறுபட்டு நடைபெற்ற நிகழ்வை புறநானூற்றுப் பாடல் ஒன்று,

'ஊரில்ல உயவரிய
நீரில்லா நீளிடைய
பார்வ லிருக்கைக் கவிகண் ணோக்கிற்
செந்தொடை பிழையா வண்க ணாடவர்
அம்புவிட வீழ்ந்தோர் வம்பப் பதுக்கைத்
திருந்துசிறை வளைவாய்ப் பருந்திருந் துயவும்
உன்ன மரத்த துன்னருங் கவலை
நின்னசை வேட்கையின் இரவலர் வருவர்' - *(புற ; 03 ; 17 - 24)*

என்று குறிப்பிடுவதையும் காணலாம். ஆறலைக் கள்வரால் உருவாகும் அச்சமும் துன்பமும் கொடிது எனச்சுட்டுவர். இத்தகு சமூகச் சிதைவு ஏற்பட்ட காலத்துக் காவல்மறவர் நன்கு உதவ முன்வந்ததால், மிகக் குறைவாகவே பாடல்களில் குறிக்கப்பட்டுள்ளன.

சமூகவியலார் இதன் தொடர்பான கருத்துக்களைப் பலவாறு சுட்டிக் காட்டியுள்ளனர். பிரஞ்சு சமூகவியல் மேதை எமில் துர்க்கேம், 'சமூகத்தின் பல பகுதியிடையே ஏற்படும் சமன்பாட்டுக் குலைவும் சமூக மக்களிடையே காணப்படும் ஒற்றுமை உணர்வுக் குலைவும் சமூக ஒழுங்குக் குலைவிற்குக் காரணங்கள் ஆகும்' என்கிறார். சமூகச் சிதைவு எனப்படும். சமூக ஒழுங்குக் குலைவும், அதற்குரிய காரணங்களும் சமூக நோய்கள் எனப்படுகின்றன. இவற்றை இவ்வாறு ஆய்வு செய்து முடிவுக்குக் கொண்டுவர முயல வேண்டும்.

1. சமூகத்தில் உருவாகும் சமூகச்சிதைவுகளுக்குரிய அடிப்படைக் காரண - காரியங்களைக் கண்டறிய முயலவேண்டும்.
2. அதற்குரியவர் யார் யார்? குழுவினர் எவர் எவர் ? மேற்கொள்வோர் எப்படிப்பட்டவர் என்பதைக் கண்டறிய முயலவேண்டும்.
3. இத்தகு சமூகச் சிதைவுகளை வேரோடு அழித்து மீண்டும் தொடராவண்ணம் தக்க நடவடிக்கை எடுக்க முயலவேண்டும். [37]

இத்தகு சிந்தனையும், முயற்சியும் செயலும் சங்ககாலச் சமூகச் சான்றோர்களிடம் நிறைந்திருந்த தென்றும், தக்க சமயத்தில் மன்னர்களிடம் எடுத்துக் கூறித்தக்க நடவடிக்கைகள் எடுக்க முயன்றுள்ளனர் என்பதற்கும் சான்றுகள் உள்ளன.

'பாஅல் புளிப்பினும் பகல் இருளினும்
நாஅல் வேத நெறி திரியினும்

திரியாச் சுற்றமொடு முழுதுசேண் விளங்கி
நடுக்கின்றி நிலியரோ'

- (புறம் 2 ; 17 - 20)

என்று முரஞ்சியூர் முடிநாகராயர் பாடுவதும்,

'அருளும் அன்பும் நீக்கி நீங்கா
நிரயங் கொள்பரோடு ஒன்றாது காவல்
குழவி கொள்பவரின் ஓம்புமதி'

- (புறம் 5 ; 05 - 08)

என்று நரிவெரூஉத் தலையார் பாடுவதும்,

'பாலில் குழவி அலறவும் மகளிர்
பூவில் வறுந்தலை முடிப்பவும் நீரில்
வினைபுனை நல்லில் இனைஊஉக் கேட்பவும்
இன்னாது அம்ம! ஈங்கினிது இருத்தல்'

- (புறம் 44 ; 6 - 9)

என்று கோவூர்கிழார் பாடுவதும், மேலே குறிப்பிட்ட சமூகச்சிதைவு தொடர்பான நிகழ்வுகளைக் கண்டறிந்து, அவற்றை வேரொடு களைந்தழிக்க முயல வேண்டுமென்ற வேண்டுகோள்களே என்பதைத் தெளிவாகக் காணலாம்.

## ஆய்வு முடிவுகள்

1. சங்க இலக்கிய பன்முக அமைப்புகளைக் கண்டறிய முதலில் இலக்கிய மாந்தர்களுள் இடம் பெற்ற முதன்மை, துணைமை, பங்குறு மாந்தர்கள் பற்றிய கருத்துக்கள் சேகரிக்கப்பட்டு பன்முக அமைப்பிற்கு அவர்கள் உதவிய வழிமுறைகளை எடுத்துக் காட்டி விளக்கம் தரப்பட்டது.

2. இவர்கள் சமூகக்காப்பிற்கும், வளர்ச்சிக்கும் எவ்வாறு உதவியுள்ளனர் எனச் சான்றாதாரங்களுடன் எடுத்துக் காட்டப்பட்டது.

3. சங்க காலச் சமூக வளர்ச்சியும் மாற்றமும் எத்திசை நோக்கி எவ்வாறு உருவாயிற்று என்பதையும் கண்டறிந்து நிலைத்த நல்லதொரு சமூக மாற்றம் உருவாகிய விதத்தை விளக்கச் சான்றாதாரங்கள் காட்டி விளக்கம் தரப்பட்டது.

4. இதில், சேரமன்னர், சோழமன்னர், பாண்டியமன்னர் தம் பங்களிப்புகள் விரிவாக ஆய்வு செய்யப்பட்டு எடுத்துக் காட்டப்பட்டது.

5. மன்னர்களின் துணைக்கொண்டு மானுடம் போற்றும் நெறிகள் கண்டறியப்பட்டன. இதற்குப் பழந்தமிழர்கள் மேற்கொண்ட சிறந்த அனுகுமுறைகள் பற்றிய தனி ஆய்வும் செய்து, கிடைத்த முடிவுகள் நிரல் நிறையாக எடுத்துக் காட்டப்பட்டது.

6. இதற்கென சமூக உறுப்பினர்கள் மேற்கொண்ட பொறுப்புகள், ஆற்றிய கடமைகள், மேற்கொண்ட தொழில்கள் ஆகியவை பற்றிய கருத்துக்களும் ஆய்வு செய்யப்பட்டு விளக்கம் தரப்பட்டன.

7. சமூகம் பயனுள்ள பன்முக அமைப்புகளைப் பெற்றுச் சிறக்கத் தனிநபர் கடமைகளும், தொழில்களும், பொறுப்புகளும் அடித்தளமாக அமைவது போலவே, அவர்தம் உரிமைகளும் இதற்கு வழி வகுக்கின்றன என்பதை நிலைநாட்ட, தனிநபர் உரிமைகள் செம்மையுற சமூகம் விரும்பிப் போற்றும் கலைகள், நுண்கலைகள் பலவாறு வளர்ந்து சிறப்புற்று, சமூகம் நன்கு இயங்கத் துணைசெய்த வழிகளெல்லாம் சான்று காட்டி விளக்கப்பட்டன.

8. சமூக இயக்கம் நன்கு நடைபெற மன்னர்களை மையமாகக் கொண்டு சான்றோர், புலவர், மறவர் முதலானோர் எவ்வெவ்வாறெல்லாம் தத்தம்

பங்களிப்பை வழங்கி நற்றொண்டாற்றியுள்ளனர் என்பதைச் சமூகவியலார் கூறும் கருத்துக்களோடு ஒப்பிட்டு ஆய்வு செய்து, கிடைத்த முடிவுகள் முறைப்படுத்திக் காட்டப்பட்டன.

9. ஆய்வின் மூலக்கூறாகிய மறவர்தம் பங்கும் பணிகளும் இந்தப் பன்முக அமைப்பிற்கு எந்தெந்த வழிகளில் உதவி, சிறப்புச் செய்தன என விரிவாகக் கண்டறிந்து, அடுத்து வரும் இயலுக்கு அடித்தளமாக அமைத்து விளக்கம் தரப்பட்டு நிறைவு செய்யப்பட்டது.

# அடிக்குறிப்புகள்

1. டாக்டர். தா.ஏ. ஞானமூர்த்தி, இலக்கியத் திறனாய்வியல், மறுபதிப்பு, ப - 347.
2. திரு. சோ.ந. கந்தசாமி, தமிழ் யாப்பியலின் தோற்றமும் வளர்ச்சியும், முதற்பதிப்பு, ப - 547.
3. டாக்டர். மு. வரதராசன், இலக்கியத்திறன், மறுபதிப்பு, ப - 214.
4. மேஜர். கதிர்மகாதேவன், பழந்தமிழர் வீரப்பண்பாடு, முதற்பதிப்பு, ப - 31.
5. மேற்படி - ப - 03.
6. ஒக்கூர் மாசாத்தியார், புறநானூறு, பாடல் எண் - 279.
7. ஒளவை. சு. துரைசாமிப்பிள்ளை, புறநானூறு 1- 200 பாடல்கள் விளக்கவுரை, மறுபதிப்பு, ப - 57.
8. முனைவர். சாலினி இளந்திரையன், சங்கத் தமிழரின் மனிதநேய மணிநெறிகள், 2ம் பதிப்பு, ப - 63.
9. மேற்படி - பக் 10 - 11.
10. பேராசிரியர். எம்.எஸ். பழனிச்சாமி மற்றும் பலர், சமூக அறிவியலில் ஆயத்தப் பாடத்திட்டம், மறுபதிப்பு, ப - 334.
11. ஒளவை.சு. துரைசாமிப்பிள்ளை, உரையாசிரியர், புறநானூறு 1-200, முதற்பகுதி, மறுபதிப்பு, ப - 404.
12. புறநானூற்றுப் பாடல்கள் எண் : 27 ; 40 ; 55 ; 121 ; 134 ; 182 ; 184 ; 186 ; 187 ; 191 ; 192 ; 195 ; 218.
13. பேராசிரியர். எம். எஸ். பழனிச்சாமி மற்றும் பலர், சமூக அறிவியலில் ஆயத்தப் பாடத்திட்டம், மறுபதிப்பு, பக் - 333 - 334.
14. முனைவர். பா. சூரிய நாராயணன், தமிழ்நாடு வரலாற்றில் இலக்கிய ஆதாரங்கள் - கி.மு.200 - கி.பி. 1300, முதற்பதிப்பு, பக் - 127-129.

15. மேற்படி - பக் - 150 - 152.

16. மேற்படி - பக் - 125 - 129.

17. மேற்படி - ப - 185.

18. மேற்படி - ப - 185 - 186.

19. டாக்டர். அன்னிதாமசு, தமிழர் சமூகவியல், முதற்பதிப்பு, ப - 0I.

20. முனைவர். தாயம்மாள் அறவாணன், தமிழ்ச் சமூகவியல் - ஒரு கருத்தாடல், முதற்பதிப்பு, ப - 04.

21. முனைவர். சாலினி இளந்திரையன், சங்கத் தமிழரின் மனித நேய மணிநெறிகள், 2ம் பதிப்பு, ப - 01.

22. டாக்டர். ப. மருதநாயகம், புதுப்பார்வைகளில் புறநானூறு, முதற்பதிப்பு, பக் 87 - 88.

23. முனைவர். சாலினி இளந்திரையன், சங்கத் தமிழரின் மனிதநேய மணிநெறிகள், 2ம் பதிப்பு, ப - 61.

24. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை, உரையாசிரியர், புறநானூறு, முதற்பகுதி (1-200) மறுபதிப்பு, பக் - 405 - 406.

25. மேற்படி, 2ஆம் பகுதி (201 - 400) , பக் 220 - 221.

26. மேற்படி, முதற்பகுதி (1 - 200), பக் 401 - 402.

27. மயிலை சீனிவேங்கடசாமி, நுண்கலைகள், முதற்பதிப்பு, ப - 09.

28. மேற்படி - ப - 83.

29. முனைவர். தாயம்மாள் அறவாணன், தமிழ்ச் சமூகவியல் - ஒரு கருத்தாடல், முதற்பதிப்பு, ப - 05.

30. மேற்படி - ப - 05.

31. திரு. பக்தவத்சால பாரதி, தமிழர் மானிடவியல், முதற்பதிப்பு, ப - XXXI X *(39)*.

32. முனைவர். A. திலகவதி ஜெகதீசன் மற்றும் பேரா. S. அன்புக்கொடி நல்லதம்பி, ஒப்பீட்டரசியல், முதற்பதிப்பு, பக் *20 - 23*.

33. மேற்படி - *33 - 35*.

34. மேற்படி - *77 - 80*.

35. டாக்டர். கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும், மறுபதிப்பு, பக். *166 - 168*.

36. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை, புறநானூறு *201 - 400* பாடல்கள், இரண்டாம் பாகம், மறுபதிப்பு, ப - *180*.

37. முனைவர். தாயம்மாள் அறவாணன், தமிழ்ச் சமூகவியல் - ஒரு கருத்தாடல், முதற்பதிப்பு, பக் - *68 - 70*.

# இயல் மூன்று

## சங்க இலக்கியம் சிறப்பிக்கும் மறவர்கள்

சங்க இலக்கியம் சிறப்பிக்கும் மறவர்கள் என்ற இவ்வியல், 'மறவர்க்கான சங்க இலக்கிய வரையறை, மறவர்களைச் சுட்டும் சிறப்புப்பெயர்கள், சங்க இலக்கிய மறவர் அறிமுகம், சமூகம் கண்டறிந்த மறவர், சான்றோரும் புலவரும் பாராட்டிய மறவர், மன்னர் கண்டறிந்த மறவர், சமூகக் காவலரான மறவர், போர்க்களம் போற்றும் மறவர், மன்னரும் சான்றோரும் வழிபடும் மறவர், மறவர்தம் வரலாற்றுக் களஞ்சியம்' முதலான தலைப்புகளில் மறவர்க்குச் சிறப்புச் செய்யும் எல்லாச் செய்திகளையும் ஆய்வுநெறி முறையோடு மதிப்பீடு செய்து கண்டறிந்தவற்றை முறைப்படுத்திக் கூறுகிறது.

உலக வரலாற்றில் மறவர் என்றாலே போர்க்களத்தில் போரிட்டு வெற்றி பெறுவது அல்லது மடிவது என்றே குறிப்பிடப்பட்டும், பாராட்டப்பட்டும் வந்துள்ளதைக் காணலாம். ஆனால், சங்க இலக்கியம் 'உலகம் புரப்பான் போல்வது ஓர் மதுகை'[1] என மறவர்களைச் சுட்டி, அவர்கள் எக்காலத்தும் எல்லாச் சமூகப் பணிக்கும் தம்மை அர்ப்பணித்தவர் என்றே நமக்கு அறிமுகப்படுத்தியுள்ளது. மேலும்,

> 'நூல்வழிப் பிழையா நுணங்கு நுண்தேர்ச்சி
> ஊர்க்காப்பாளர் ஊக்கருங் கணையினர்'
>
> - (மது.கா ; 642 - 647)

என்று கூறி மறவர்களைப் பாராட்டுவதையும் காணலாம். இதற்கு உரையாசிரியர், 'காவலர், களிற்றினிரையைப் பார்க்கும் புலிபோல ஒற்றிச் செல்பவர். துஞ்சாமை, அஞ்சாமை, அறிந்தோர் புகழும் ஆண்மை, நூல் வழிப் பிழையாமை, அசைவின்மை, ஆற்றலுடைமை ஆகிய இயல்புகளை உடையவர்.

மக்கள் அச்சம் அறியாது வாழ்வதற்குக் காவலர்களின் அச்சம் அறியாமையே காரணமாகும் ' [2] என உரைப்பர். போரில் பங்கேற்று நாட்டிற்காகப் போரிடுவது மட்டுமன்று தமிழக பழங்கால மறவர்தம் பணி, தத்தம் பன்முகப் பணிகளால் நாடு எக்காலத்தும் நலமாக வாழத் தம்மால் என்னென்ன செய்ய இயலுமோ அத்தனையும் செய்து வாழ்ந்தவர்கள்.

சங்க இலக்கியங்கள் மறவர்களைச் சிறப்பித்துக் கூறுவதற்கான காரணங்களைச் சுட்டிக் காட்டிய பிறகே, அதாவது, இந்த மறவரை இந்தப் பணிக்காக, இவ்வாறு பாராட்டிப் போற்றுகிறது என்று தான் கூறுமே ஒழிய , 'போரில் புறமுதுகு காட்டாது போரிட்டான்' எனவே பாராட்டுகிறோம் எனப்பாராட்டுவது மிகக்குறைவே. ஏனைய சமூகப் பணிக்காகப் பாராட்டிப் போற்றுவதே மிகுதியாக உள்ளன எனலாம். கபிலர் தாம் இயற்றிய அகப்பொருள் பாட்டாகிய குறிஞ்சிப்பாட்டில் தனி நபர் பண்பாகச் சிந்திக்க வேண்டிய ஒன்றை நமக்கு விருந்தாக வைப்பர். சமூக உறுப்பினராக வாழும் தனிமனிதன் யாராக இருப்பினும் அவனுக்கு வேண்டப்படுவது என்ன என்பதை நயம்படக் கூறுவர். அரசராக இருப்பினும், ஆண்டியாக இருப்பினும் அவன் மனிதனே. அவன் மனிதர்க்கு உரிய பொதுப் பண்புகளை நிறைவாகப் பெற்ற பிறகே, தாம் மேற்கொண்ட பணிகளுக்கேற்ற சிறந்த பண்புகளைப் பெறமுயல வேண்டுமென்பர். இல்லையேல் யாதொரு பயனும் தோன்றாதென்பர்.

'முத்தினும் மணியினும் பொன்னினும் அத்துணை
நேர்வரும் குரைய கலம்கெடின் புணரும்
சால்பும் வியப்பும் இயல்பும் குன்றின்
மாசறக் கழீஇ வயங்குபுகழ் நிறுத்தல்

ஆசறு காட்சி ஐயர்க்கும் அந்நிலை

எளிய எண்ணார் தொல்மருங்கு அறிஞர் '

- *(குறி.பா ; 13-18)*

எனப்பாடுவர். 'சிறந்த இலக்கணங்களையுடைய முத்தானும், மாணிக்கத்தானும், பொன்னாலும் பொருந்தியவாறு செய்யப்பெற்ற அணிகலன்கள், கெட்ட வாயினும், அவற்றைச் சீர்செய்து கொள்ள இயலும். அது போலன்றித் தத்தம் குலத்திற்கேற்ற குணங்களின் அமைதியும், மேம்பாடும், ஒழுக்கமும் தம்முடைய பழைய இயல்பினின்றும் கெட்டதாயின், அதனால் பிறந்த அழுக்கை நீங்கும் படிக் கழுவி, விளங்கும் புகழை முன்புபோல நிற்கும்படி நிலைநிறுத்தல், குற்றமற்ற அறிவினையும், தெய்வத்தன்மையையும் உடைய முனிவர்கட்கும் எளிய காரியமன்று எனப்பழைய நூலை அறிந்தவர் கூறுவர் '[3] மறவர்க்கும் இது பொருந்துமன்றோ? சங்ககால மறவர்களும் இத்தகு நற்கருத்துக்களை மனதிற்கொண்டே வாழ்ந்துள்ளனர் என்பதற்குச் சங்க இலக்கியங்கள் மிகுதியான சான்றுகளைப் பகருகின்றன.

பத்துப்பாட்டும், எட்டுத்தொகையும் மறவர்களைச் சிறப்பித்துக் கூற இலக்கண நெறி கூறும் தொல்காப்பியமும், அறநெறி கூறும் திருக்குறளும் துணை நின்று அரண் செய்தன. தொல்காப்பியர், வாகைத் திணைக்கு இலக்கணம் கூற முற்படும் பொழுது,

'தாவில் கொள்கைத் தத்தம் கூற்றைப்

பாகுபட மிகுதிப்படுத்தல் என்ப'

- *( தொல் ; புறம் ; வா ; 02)*

என்று குறிப்பிடுவர். போர்க்களத்தில் போரிட்டு வெற்றி பெறுவதை 'வாகை' எனக்கூறுவர். ஆனால், அதுதவறு. அத்துடன் தத்தம் நற்பணிகளில் வெற்றியை

நிலைநாட்டிப் பெறுவதும் 'வாகை' எனவே அழைக்கப்படும் என்று இந்நூற்பாவாயிலாக ஆசிரியர் கூறுவர். 'வலியும் வருத்தமும் இன்றி, இயல்பாகிய ஒழுக்கத்தானே, தம்முடைய கூறுபாடுகளை இருவகைப்பட மிகுதிப்படுத்தல் என்று கூறுவர்' என்பது இந்நூற்பாவின் பொருள். இதனை மேலும் புரிய வைக்க அடுத்து ஒரு நூற்பா அமைத்து விளக்கஞ்செய்வார். போர்க்கள மறவர்களே வாகை சூடுவர் என்பது ஒரு தலைப்பட்சம் ஆகும். பார்ப்பனர், அரசர், வணிகர், வேளாளர், அறிஞர், துறவோர், வீரர் முதலானோர் தத்தம் நற்பணிகளாலும் வாகை சூடுவர் எனக்கூறுவர். [4] இதன் இறுதியில், 'வாளானும் தோளானும் பொருது வெற்றி பெறலன்றி, மேற்கூறியவற்றால் வெற்றி பெறும் நிலையும் உடையது என அறிவுடையோர் கூறுவர் ' என விளக்கந் தருவர்.

இவ்வாறே, திருவள்ளுவர் தம் நூலில் வீரர்களைப் பற்றியும், படைகளைப் பற்றியும் கூறும் பொழுதும் இதனைக் கூறுவதைக் காணலாம்.

'மறமானம் மாண்ட வழிச்செலவு தேற்றம்
எனநான்கே ஏமம் படைக்கு'

- (குறள் 766)

என்ற குறளுக்கு உரை எழுதிய பரிமேலழகர் 'தறுகண்மையும், மானமும், முன் வீரராயினர்க்கென்ற நன்னெறிக்கண் சேறலும், அரசனால் தேறப்படுதலும் என இந்நான்கு குணமே படைக்கு அரணாவது' எனக்கூறுவர். இங்கே படை என்பது ஆகு பெயராகிப் படைவீரர்களாகிய மறவர்களைக் குறிக்கும் என்பதை யாவரும் அறிவர். இவ்வாறே, மறவர்க்கு இருக்கவேண்டிய பேராண்மையும், ஊராண்மையும் இருக்கவேண்டும் ' [5] என்று கூறுவதைக் காணலாம்.

'பேராண்மைஎன்ப தறுகணொான் றுற்றக்கால்

ஊராண்மை மற்றதன் எஃகு'

- (குறள் - 773)

என்ற நூற்பாவில் பரிமேலழகர் தம் உரையாகக் கூறுவது இங்கே ஒப்பு நோக்கவேண்டும்.

'ஊராண்மை - உபகாரியாம் தன்மை. அஃதாவது இலங்கையர் வேந்தன் போரிடைத் தன் தானை முழுதும் படத் தமியனாய் அகப்பட்டானது நிலைமை நோக்கி, அயோத்தியர் இறை மேற்செல்லாது, 'இன்று போய் நாளை நின் தானையோடுவா' என விட்டாற் போல்வது'[6] எனக்கூறுவதைக் காணலாம். போர்க்களத்திலேயே கண்ணோட்டமும் பிறக்க வேண்டுமென்பர்.

இவ்வாறே, 'பகைமாட்சி' என்றும், 'பகைத்திறம் தெரிதல்' என்றும் இரு அதிகாரங்களைத் தனித்து அமைத்தும் சில கருத்துக்களைக் கூறுவதைக் காணலாம்.

'வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்

பண்பிலன் பற்றார்க் கினிது'

- (குறள் - 865)

எனக்கூறுவர்.

மறவர்க்கு வேண்டப்படாத குற்றங்களாக நான்கைக் குறிப்பிடுவர். 'ஒருவன் நீதி நூலை ஓதாமலும், அது விதித்த தொழில்களைச் செய்யாமலும், தனக்கு வரும் பழியைப் பற்றிக் கவலைப்படாமலும், பண்பற்றவனாக வாழ்ந்தும் தம்மைச் சிறந்த மறவன் எனக் கூறுவதில் யாதொரு பயனுமில்லை. அவன் எளிதில் பகைவரால் வெல்லப்படுவான் ' எனக்கூறுவர். திருவள்ளுவர் மற்றொரு குறளில், அறிவும், நாவன்மையும் உடைய சான்றோர்களைப் பகைத்துக்

கொள்ளக்கூடாது என்பர். அவர்கள் நீதி நூல்களில் கூறியபடியே வாழக்கற்றுக் கொள்ள வேண்டும். 'வல்லான் வகுத்ததே வாய்க்கால் ' என எண்ணி எதற்கும் மறப்பண்பே சிறந்தது என வாழ்பவன் வெற்றி பெற இயலாது என்பர். சான்றோர், 'அத்தகையோர் போரில் வெற்றி பெற்றாலும் பாராட்ட முன்வரார்' என்பது கருத்து. இதனை,

'வில்லேர் உழவர் பகைகொளினும் கொள்ளற்க
சொல்லேர் உழவர் பகை'

- *(குறள் - 872)*

என்ற குறள் வாயிலாக நினைவுபடுத்துவர்.

இவ்வாறு, சங்க இலக்கியங்களின் வாயிலாகவும், தொல்காப்பியம், திருக்குறள் வாயிலாகவும் 'தறுகண் மறவர்'க்கு வீரம் நிறைந்த மறப்பண்பு மட்டும் இருந்தால் போதுமானதாகக் கருதப்பட மாட்டாது ; அவரும் வையத்துள் வாழ்வாங்கு வாழ வேண்டிய சமூகப் பண்புகளைப் பெற்றிருக்க வேண்டும் எனத் தெளிவாகக் கண்டறிய முடிகிறது. இத்தகு சமூக நற்பண்புகளையும் பெற்றுச் சங்ககாலத்து மறவர்கள் வாழ்ந்ததால்தான் சங்க இலக்கியம் அக்கால மறவர்களைப் பலவாறு சிறப்பித்துக் கூறியிருப்பதைக் காணமுடிகிறது.

## மறவர்க்கான சங்க இலக்கிய வரையறை

'மறம்' என்பது மிகுந்த வண்மையையும், போர்ப் பண்பையும் குறிக்கும். இப்போர்ப் பண்பைப் பெற்று வாழ்பவரே 'மறவர்' ஆவர். சங்க காலத்தில் இதனை ஒரு தொழிலாகவே கருதி, இத்தகு போர்த் தொழில் புரிவோர் 'மறவர்' எனத் தனித்து ஓர் இனமாகவே பிரித்துக் காட்டப்பட்டுள்ளது. இதனை, 'மறம்

மிகுதானை ', 'மறம் புகல் மழகளிறு', 'மறப்படைக் குதிரை', என்றும், 'மறவாள்', 'மறவேல்', 'மறம் மிகுவாள்' என்றும் குறிக்கப்பட்டதைக் கொண்டு உறுதிபடுத்திக் கொள்ளமுடிகிறது. [7]

'வீரம்' என்ற சொல்லின் பொருளை 'விறல்' என்ற சொல்லில் காணலாம் என்றும், 'விறல் ' என்ற சொல்லும், 'திறல்' என்ற சொல்லும் 'மறம்' என்ற சொல்லும் பெரும் வேறுபாடின்றி மாறிமாறிப் பயன்படுத்தப்பட்டுள்ளன என்றும் திறனாய்வாளர் கூறுவர். [8] இதற்குச் சான்றாக, 'வினைநவில் விறற்போர்த் தொண்டையர் ' என்பதனையும், 'ஞாயிற்றன்ன வெந்திறல் ஆண்மை' என்பதனையும் குறிப்பிடுவர். [9]

பதிற்றுப்பத்து, 'பகை மறவர்க்கு அஞ்சிப் புறமிட்டு ஓடாத மறச் செவ்வியையும், வீரச் செயல்கள் பொறிக்கப் பெற்ற கழல் விளங்கும் கால்களையும் உடையவரும், பெரும் போர்களை வென்று பகைவரையழித்த சிறப்பினரும், மேலும் போர்க்குச் செல்லுதலையே விருப்பமாகக் கொண்டிருப்போருமாகியவர் நின்படை மறவர்கள்' என்று பாலைக் கௌதமனார், பல்யானைச் செல்கெழுகுட்டுவனைப் பாடிய பாடல் வாயிலாக விளக்குவர்.

> 'ஓடாப் பூட்கை யொண்பொறிக் கழற்காற்
> பெருஞ்சமந்ததைந்த செருப்புகன் மறவர்'

என இதனைச் சுட்டுவர். [10]

ஔவையார், அதியமான் நெடுமான் அஞ்சியைப் புகழ்ந்து பாடிய பாடல் ஒன்றில் மறவர்களை மிகச் சிறப்பாகச் சுட்டிக் காட்டுவர்.

> 'மறம் கந்தாக நல்லமர் வீழ்ந்த
> நீள்கழல் மறவர் செல்வுழிச் செல்க' - *(புறம் ; 93; 09-10)*

எனப்பாடி மறவர் மாண்பை நயம் பட எடுத்துரைப்பர். 'தமது ஆண்மையையே பற்றுக் கோடாகக்கொண்டு நல்ல போரிலே போரிட்டு வீழ்ந்து இறந்த உயர் வீரக்கழல் அணிந்த மறவர்களும் மன்னரும் அமரரானார் ' எனக்குறிப்பதைக் காணலாம். இங்கே ஔவையார் அதியமானை எதிர்த்துப் போரிட்ட மன்னரையும் அவர்தம் மறவர்களையும் புகழ்ந்து கூறுவதைக் காணலாம். மறவர் எவராயினும் பாராட்டப்பட வேண்டியவர் என்பதை இங்கு நினைவு படுத்துகிறார்.

புறநானூற்றின் 257 ஆம் பாடல் ஆநிரை கவரச்செல்லும் மறவன் ஒருவனின் தோற்றத்தை நமக்கு எடுத்துக் காட்டும் விதம் தனிச் சிறப்பு வாய்ந்தது. அவையாவன :

1. பகைவன் மேற்செல்லாதவாறு துன்பம் செய்தலால் செருப்பிடையுற்ற சிறுபரற்கல்லை ஒப்பாவான்.
2. திரண்ட காலையும், அழகிய வயிற்றையும், பரந்த மார்பினையும் பசிய கண்ணினையும் உடையவன்.
3. புல்லின் கற்றை போலத் தொங்கும் தாடியைப் பெற்றவன்.
4. செவியிறந்து முன்னே தாழ்ந்த கதுப்பினையுடையவன்.
5. தம் வில்லின் வலிமையாலே கரந்தை மறவர்களை வென்று ஆநிரைத் திரள்களைக் கொண்டு வந்தவன்.
6. தம்மைச் சார்ந்தார்க்கு அவற்றைப் பகிர்ந்தளித்து மகிழ்பவன் என்று கூறிப் பாராட்டுவர். தமிழர்கள் முருகக் கடவுளையும் மறவர்களுள் ஒருவராகவே கருதிப் போற்றி வணங்கி வந்துள்ளனர். நக்கீரர் தம் திருமுருகாற்றுப் படை வாயிலாக இதனை உறுதி செய்வர். அவர், முருகனை, 'மாற்றோர் கூற்று' என்றும், 'வெற்றி வெல்போர்க் கொற்றவை

சிறுவ' என்றும், 'செருவில் ஒருவ! பொருவிறல் மள்ள ! ' என்றும், 'குன்றம் கொன்ற குன்றாக் கொற்றத்துக் கிழவ !' என்றும் 'சூர்மருங்கு அறுத்த மொய்ம்பின் மதவலி!' என்றும் ' போர்மிகுபொருந !' என்றும் போற்றி வணங்குவதைக் காணலாம்.[11] இதனை, மேஜர். கதிர்மகாதேவன் தாம் இயற்றிய 'பழந்தமிழர் வீரப்பண்பாடு' என்ற நூலில், 'மேலை நாட்டில் கூட முருகனுக்குச் சமமான 'அப்பல்லோ' என்ற கடவுளைப் போர்க் கடவுள் எனக் குறிப்பிடுவர்' எனச் சுட்டி விளக்குவதைக் காணலாம். [12] 'கொற்றவை' கூட போர்க்களத் தெய்வமாகக் கருதிப் போற்றப்படுவதையும் விரிவாகக் காணலாம்.

இதனைத் தொல்காப்பியர்,

'மறங்கடைக் கூட்டிய துடிநிலை சிறந்த
கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே'

- (தொல் ; புற; நுற்பா . 04)

எனக் கூறுவர். இதற்கு நச்சினார்க்கினியர், 'போர்க்களத்து மறவரது மறத்தினைக் கடைக் கூட்டிய துடிநிலையும், அத்தொழிற்குச் சிறந்த கொற்றவைக்குப் பரவுக் கடன் கொடுங்குங்கால் அவளது நிலைமை கூறுதலும் வெட்சிக்குப் புறனடை ஆகும்' [13] எனக் கூறுவர்.

## மறவர்களைச் சுட்டும் சிறப்புப் பெயர்கள்

சங்க இலக்கியத்தில் 'மறவர்' என்ற சொல்தான் அதிகம் இடம் பெற்றுள்ளது. ஆயினும், வேறு பல பெயர்களும் இடம் பெற்றுள்ளதைக் காணமுடிகிறது. அவை :

'அண்ணல் ; ஆடவர் ; ஆடுநர் ; ஆண்மையர் ; இளைஞர் ; ஊர் காப்பாளர் ; ஓடாவம்பலர் ; களமர் ; காளை ; குருசில் ; கூளியர் ; செல்வர் ; தானைச் சான்றோர் ; படைஞர் ; படையோர் உழவர் ; படைவழி வாழ்நர் ; பொருநர் ; மல்லர் ; மள்ளர் ; மழவர் ; மறந்தகை மைந்தர் ; மறமைந்தர் ; மூதிலாளர் ; மெய்க்காப்பாளர் ; வயவர் ; விறலோர் ; விறல்வளவன்' ஆகியவையாகும்.

இவையனைத்தும் அப்படியே வெறுஞ்சொற்களாகப் பயன்படுத்தப்பட வில்லை. மறவர்தம் சிறப்புகளை, பல்வகை அடை மொழிகளை முன்வைத்துச் சுட்டிக் காட்டப்பட்டுள்ளனர். ஆயுதம், செயல், தறுகண், தோற்றம், பண்புகள், வீரவிளைவு போன்றவை அடைமொழியாகப் பயன்படுத்தப்பட்டுப் பெயர்கள் சுட்டப்படுள்ளன.

## 'ஆயுதம்' அடைமொழியானவை

'வெல்கொடி நுடங்கும் படையோர் உழவ ' *(ப.ப ; 13 ; 21)*

'குலையிழிபறியாச் சாபத்து வயவல் '*(ப.ப ; 24 ; 12)*

'வில்லோர் மெய்ம் மறை ' *(ப.ப ; 59 ; 09)*

'சிலையுடை மறவர் '*(ப.ப ; 60 ; 09)*

'கொடுவிற் கூறி கூளியர் ' *(புறம் ; 22 ; 06)*

'படையமை மறவர்' *(புறம் ; 72 ; 05)*

'ஒளிறிலங்கு நெடுவேல் மழவர் ' *(புறம் ; 88 ; 03)*

'வல்வில் மறவர் ' *(புறம் ; 259 ; 03)*

'வாள்தோட் கோத்த வன்கண் காளை ' *(நெடு ; 182)*

'கொடுவிற் கூளியர் ' *(மலை ; 422)*

'கற்றமை வில்லர் ' *(கலி ; 04 ; 02)*

என மறவர் பயன்படுத்திய படை ஆயுதம், வில், வேல், வாள் முதலானவை அடைமொழி ஆகி வந்த பெயர்கள் சுட்டப் பட்டுள்ளதைக் காணலாம். இங்கே சான்றாக ஒரு சில மட்டுமே காட்டப்பட்டன. எண்ணிறந்தவை உள்ளன.

## 'செயல் ' அடைமொழியாக வந்தவை :

'அமர்க்கெதிர்ந்த புகன் மறவர் ' *(ப.ப ; 22 ; 20)*

'ஏவல் ஆடவர் ' *(ப.ப ; 24 ; 03)*

'பரந்த புலம் வளம் பரப்பறியா படைஞர் ' *(ப.ப ; 25 ; 04)*

'கூற்றத் தன்ன நின் திருந்துதொழில் வயவர் ' *(ப.ப ; 26 ; 14)*

'சேஎருற்ற செல் படை மறவர் ' *(ப.ப ; 41 ; 11)*

'வஞ்சினம் முடித்த ஒன்மொழி மறவர் ' *(ப.ப ; 41 ; 18)*

'முன்சமத்து எழுதரும் வன்கண் ஆடவர் ' *(ப.ப ; 52 ; 07)*

'போர்படு மள்ளர் ' *(ப.ப ; 66 ; 14)*

'வேறுபுலத்திறுத்த வெல்போர் அண்ணல் ' *(ப.ப ; 81 ; 18)*

'வெம்போர் மள்ளர் ' *(ப.ப ; 90 ; 44)*

'ஊர் கொள வந்த பொருநன் ' *(புறம் ; 82 ; 05)*

'வெல்போர்க் குரிசில் ' *(மது.கா ; 151)*

'ஊர்காப்பாளர் ஊக்கருங்கணையினர் ' *(மது.கா 647)*

'நல்லெயில் உழந்த செல்வர் ' *(மது.கா ; 731)*

செயல்களை அடைமொழியாகக் கொண்ட தொடர்கள் தான் மிகுதியாக உள்ளன. மிகச்சிறப்புடையவை மட்டும் இங்கே சுட்டிக் காட்டப்பட்டன.

செயல்களை அடிப்படையாகக் கொண்டு தான் மறவர் சிறப்பித்துப் பாராட்டப்படுகின்றனர்.

**'தறுகண் ' அடைமொழியாக வந்தவை :**

*'ஒண்பொறிக் கழற்கால் மாறா வயவர் ' (ப.ப ; 19 ; 03)*

*'ஓடாப்பூட்கை செருப்புகல் மறவர் ' (ப.ப ; 30 ; 41)*

*'மன்னெயில் மறவர் ' (ப.ப ; 40 ; 08)*

*'எஃகுடை வலத்தர் படைவழி வாழ்வர் ' (ப.ப ; 51 ; 30)*

*'வியலுளை அரிமான் மறங்கெழு குருசில் ' (ப.ப ; 88 ; 15)*

*'செந்தொடை பிழையா வன்கண் ஆடவர் ' (புறம் ; 02 ; 20)*

*'நிமிர்தேரு நெஞ்சுடைப் புகன்மறவர் ' (புறம் ; 54 ; 08)*

*'எள்ளி வந்த வம்ப மள்ளர் ' (புறம் ; 77 ; 06)*

*'நல்லமர் வீழ்ந்த நீங்கழல் மறவர் ' (புறம் ; 93 ; 09)*

*'வாள்மிசை கிடந்த ஆண்மையோன் ' (புறம் ; 270 ; 13)*

*'அறிந்தோர் புகழ்ந்த ஆண்மையர் ' (மது.கா ; 645)*

*'மைபடு பெருந்தோள் மழவர் ' (மது.கா ; 686)*

*'ஒன்னார் ஓட்டிய செருப்புகல் மறவர் ' (மது.கா ; 726)*

*'உருத்த கடுஞ்சினத்து ஓடா மறவர் ' (கலி ; 15 ; 07)*

*'வாள் தோட் கோத்த வன்கண் காளை ' (நெ.வா ; 182)*

அஞ்சாமை எனப்படும் 'தறுகண்' அடைமொழியாகக் கொண்டு படைக்கப்பட்டவற்றுள் சில இவை. பல நூல்களில் பரக்கக் காணலாம். வீரத்தின் அடித்தளம் அஞ்சாமை. அதைப் பெற்ற மறவர்கள் பலவாறு பாராட்டப்படுவதைச் சங்க இலக்கியங்களில் காணலாம்.

**'தோற்றம் ' அடைமொழியாக வந்தவை :**

'குவியற் கண்ணி மழவர் ' (ப.ப ; 21 ; 24)

'நெய்த்தோர் தொட்ட செங்கை மறவர் ' (ப.ப ; 49 ; 10)

'வாயில் கொள்ளா மைந்தினர் வயவர் ' (ப.ப ; 81 ; 09)

'நீங்கா மறவர் வீங்குதோள் புடைப்ப ' (புறம் ; 67 ; 13)

'வடுப்பரந்த நின்மற மைந்தர் ' (புறம் ; 98 ; 12)

'பீலிக் கண்ணிப் பெருந்தகை மறவன்' (புறம் ; 274; 02)

'உடம்பிடித் தடக்கை ஓடா வம்பலர் ' (பெ.பா ; 76)

'காய்சின முன்பின் கருங்கட் கூளியர் ' (ம.கா ; 691)

'எறுழ்த்தோள் மறவர் ' (ம.கா ; 729)

முதலான தொடர்கள் மறவர் தோற்றப் பொலிவிற்கு உதவிய உடலுறுப்புகளைப் பாராட்டிப் போற்றிப் புகழ்ந்துள்ளதைக் காணலாம். இவையும் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. ஆயினும், கூறியது கூறல் மிகுதி. குறிப்பிட்ட உடலுறுப்புகளே பாராட்டப்படுகின்றன. கண், தோள், கைகள், மார்பு, கால்கள் முதலானவைதான் மிகுதியாகப் பாராட்டப்படுகின்றன. வீரத்திற்கு அவையே துணை புரிகின்றன எனலாம்.

**'வீரவிளைவு ' அடைமொழியாக வந்தவை :**

'கொள்கை வல்சிக் கவர்காற் கூளியர் ' (ப.ப ; 19 ; 01)

'கடுமா மறவர் ' (ப.ப ; 28 ; 04)

'செருமிகு முன்பின் மறவர் ' (ப.ப ; 36 ; 04)

'ஓடாப் பூட்கை மறவர் ' (ப.ப ; 57 ; 01)

'விறன் மாந்தரன் விறல் மருக ' (ப.ப ; 90 ; 13)

'திறனறி வயவரொடு தெவ்வர்தேய ' (புறம் ; 19 ; 12)

'உடன்று மேல் வந்த வம்ப மள்ளர் ' (புறம் ; 76 ; 09)

'செருப்புகல் மறவர் ' (புறம் ; 174 ; 12)

'தமியன் வந்த மூதிலாளன் ' (புறம் ; 284 ; 04)

'வலம் மிகு மற மைந்தர் ' (மது.கா ; 53)

என வீர விளைவினை அடைமொழியாகப் பெற்ற தொடர்கள் பற்பல உள்ளன. விரிவஞ்சி சுருங்கக் கூறப்பட்டது. புறத்திணையில் கூறப்பட்ட பெரும்பாலான பாடல்கள் போர்க்கள நிகழ்வுகளையும், வீரவிளைவுகளையும் படம் பிடித்துக் காட்டுவனவேயாம். பொருநரும், பாணரும், புலவரும் தாம் கண்ட போர்க் காட்சிகளைப் பாடல்களாகப் படைத்த எல்லாப் புறப்பொருள் பாடல்களிலும் இதனைக் காணலாம். அகப்பொருள் பாடல்களிலும் அங்கொன்றும், இங்கொன்றுமாக வீர விளைவு வெளிப்படும் காட்சிகள் இடம் பெற்றுள்ளன.

**'பண்பு ' அடைமொழியாக வந்தவை :**

இங்கே பொதுப்பண்புகள் பற்றிய செய்திகளும் தொடர்களும் இடம் பெறாது. மன்னர்களைச் சார்ந்து மறப்பண்புடன் வாழ்ந்து வரும் எல்லா மறவர்கள், தங்கள் தொடர்பாகப் பெற்ற பண்புகள் மட்டுமே கூறப்படுகின்றன. அதாவது, வீரம், போர் தொடர்பான பண்புகள் மட்டுமே சுட்டப்படுகின்றன.

'ஒள்ளிழை மகளிரொடு மள்ளர்மேன் ' (ப.ப ; 13 ; 21)

'வாலூன் வல்சி மழவர் ' (ப.ப ; 55 ; 08)

'ஆடுபெற்றறிந்த மள்ளர் ' (ப.ப ; 63 ; 13)

'காஞ்சி சான்ற வயவர் ' (ப.ப ; 65 ; 04)

'வலம்படுவான் கழல் வயவர் ' (ப.ப ; 70 ; 11)

'விரவுமொழிக் கட்டூர் வயவர் ' (புறம் ; 90; 30)

'போரெனிற் புகலும் புனைகழன் மறவர் ' (புறம் ; 31 ; 09)

'ஏமுற்று கழிந்த மள்ளர் ' (புறம் ; 84 ; 05)

' உலைக்கல் லன்ன வல்லா ளன்னே ' (புறம் ; 170 ; 17)

'பெருவிறல் வளவன் ' (புறம் ; 174 ; 14)

'திருவீழ் நுண்பூட் பாண்டியன் மறவன் ' (புறம் ; 179 ; 05)

'இன்னிசை கேட்ட துன்னரு மறவர் ' (புறம் ; 270 ; 09)

'அறவர் அறவன் ; மறவர் மறவன் ; மள்ளர் மள்ளன் .' (புறம் ;399 ; 19-20)

'மள்ளர் மள்ள ; மறவர் மறவ ! ' (பெ.பா ; 455)

'வன்சொல் இளைஞர் ' (ம.கா ; 312)

'கள்ளார் களமர் ' (ம.கா ; 393)

'சுரும்பார் கண்ணிப் பெரும்புகல் மறவர் ' (ம.கா ; 596)

'நல்வழிக் கொடுத்த நாணுடை மறவர் ' (மலை ; 387)

இவ்வாறு தறுகண், வீரம், போர் தொடர்பான பல பண்புகளைச் சுட்டிச் சிறக்கும் தொடர்கள் பரவலாக உள்ளன. மேலே கூறப்பட்ட ஆறு வகைப்பட்ட மறவர் சிறப்புகளைச் சுட்டிக் காட்ட தேவைப்படும் தொடர்களும் சொற்களும் மட்டுமே இங்கு எடுத்துக்காட்டப்பட்டன. தனித்து நிற்கும் இவை பொருள் மயக்கத்தைத் தரக்கூடும். இத்தொடர்கள் இடம் பெற்ற பாடல்களின் முழுப்பொருளைக் கண்டறிந்து ஒப்பிடும் பொழுது இங்குச் சுட்டப்பட்ட பொருளும் சிறப்பும் புலப்படும்.

பல பாடல்கள் இந்த ஆறினையும் ஒருங்கே பெற்றும் சிறப்படைத்துள்ளதையும் காணமுடிகிறது. சான்றாக உலோச்சனார் இயற்றிய புறநானூற்றுப் பாடலைக் காட்டலாம். அப்புறப்பாட்டு தும்பைத் திணைக் குரிய

'எருமை மறம்' என்னும் துறையைச் சார்ந்த தெனக் கூறுவர். ஏழு அடிகள் மட்டும் பெற்று விளங்கும் இப்பாட்டு ஒரு மறவன் மாண்பைச் சுவைபடக் கூறுவது.

'நீலக் கச்சைப் பூவார் ஆடைப்
பீலிக் கண்ணிப் பெருந்தகை மறவன்
மேல்வரும் களிற்றொடு வேல்துரந்து இனியே,
தன்னும் துரக்குவன் போலும் ஒன்னலர்
எஃகுடை வலத்தர் மாவொடு பரத்தரக்
கையின் வாங்கித் தழீஇ
மொய்ம்பின் ஊக்கி மெய்க்கொண் டனனே!'

- *(புறம் ; 274)*

என்னும் புறப்பாட்டிற்கு விளக்கம் கூறும் உரைவேந்தர் ஔவை. துரைசாமி 'பெருந்தகை மறவன்' பெற்ற தறுகண் பற்றிக் கூறும் கருத்துக்கள் சுவை பயப்பனவாக உள்ளன. உலோச்சனார் தாம் நேரில் கண்ட காட்சிகளையே இவ்வாறு பாடலாகப் பாடியுள்ளார் எனக் கூறுவர்.

'இரண்டு பெருவேந்தர் கடல் போன்ற படையுடன் கைகலந்து தும்பை சூடிப் போருடற்றினர். அப்போரின் கண்மறவனொருவன் இடையில் கச்சையால் இறுகிய உடையும், தலையில் மயிற்பீலியால் தொடுக்கப்பட்ட கண்ணியும் உடையனாய் வேலேந்தி நின்று கடும்போர் புரிந்தான். அக்காலை அவன் மேற் பெரிய களிறொன்றும் அடர்க்க வந்தது. உடனே அவன் தன் கைவேலை அக்களிற்றின் நெற்றியிற் பாய்ந்து துருவச் செலுத்தினான். அக்களிறு வேலுடனே பிறக்கிட்டுச் சென்று வீழ்ந்துபட்டது. இதற்கிடையே பகைவர் பலர் வேலேந்திப் பரந்து வந்தனர். அவ்வீரனே, அவர் செலுத்திய வேலை வாங்கி மடித்து அவர் தம் தலைவனையும் தோளுறப் பற்றி நிலத்தில் மோதி உயிர்

நீங்கிய அவனது உடலைக் கைக்கொண்டு நின்றான்' என விளக்கஞ் செய்துள்ளார்.

இப்பாடலில், முதல் இரண்டு அடிகள் மறவனின் தோற்றச்சிறப்பைச் சுட்டுகிறது. மூன்றாவது அடியில் ஆயுதச் சிறப்பு சுட்டப்படுகிறது. அடுத்து வரும் 'தன்னுந்தூக்குவன்' என்ற தொடர் அவனது பண்பின் சிறப்பைச் சுட்டுகிறது. அடுத்த வரியில் கூறப்பட்ட 'கையின் வாங்கித் தழீஇ' என்ற தொடர் வீர விளைவின் சிறப்பை எடுத்துக் காட்டுகிறது. பகைவர் பலரும் வந்து தாக்கமுற்பட்ட பொழுது, தனித்து நின்று போரிட்ட செயல் தறுகண் சிறப்பைச் சுட்டுகிறது. யானையையும், பகைவர் தலைவனையும், பகை வீரர்களையும் தாக்கி மேற்கொண்ட போர்த்திறன் அவனது போர்ச் செயலின் சிறப்பை எடுத்துக் காட்டுகிறது. இவ்வாறு ஆறு சிறப்புகளும் சுட்டப்பட்டு, அந்தப் 'பெருந்தகை மறவன்' மேற்கொண்ட வீர விளையாட்டு விளக்கம் பொறுவதைக் காணலாம்.

## சங்க இலக்கிய மறவர் அறிமுகம்

பெரும்பாலும் மன்னர்களைச் சார்ந்தும், படைத் தலைவர்களைச் சார்ந்தும் தான் மறவர்கள் அறிமுகம் செய்யப்படுகின்றனர். தனித்து மறவர்களை அறிமுகப் படுத்துவது மிகவும் குறைவே. புறநானூற்றுப் பாடல்களில் தான் சில சான்றாகக் காட்டும் அளவிற்கு இடம் பெற்றுள்ளன. அவற்றுள் மன்னர்களைப் பற்றி செய்திகள் இல்லை. மறவர்தம் வீரச் செயல்கள் விளக்கம் பெறுகின்றன. சங்க இலக்கியங்களில் பழந்தமிழக வரலாற்றுச் செய்திகள் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. அவற்றுள் இடம் பெறும் போர் நிகழ்ச்சிகளே மிகுதியாக விளக்கம் பெறுகின்றன. அவற்றுள் இடம் பெறும் மறவர்களின்

போர்ச்செயல்கள் விரிவாக விளக்கம் பெறுகின்றன. மன்னர்கள் அத்தகு மறவர்கட்கு அங்கீகாரம் வழங்கிச் சிறப்பித்து உள்ள செய்திகள் பரவலாகக் காணப்படுகின்றன. மன்னர்களும் மறவர்களுள் ஒருவராகவும், மறவர்கள் தலைவர்களாகவும் சுட்டப்பட்டு பெருமை பெறச் செய்துள்ளனர்.

தமிழக மன்னர்களுக்குரிய நால்வகைப் படைகள் பற்றிய செய்திகள் கூறப்படும் பொழுது மறவர்கள் சுட்டப்பட்டுப் பாராட்டப்படுவதைக் காணமுடிகிறது. மாங்குடி மருதனார் பாடிய மதுரைக்காஞ்சி, தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு வீடு பேற்றின் நிமித்தம், பல்வேறு நிலையாமைகளைச் செவி அறிவுறுத்த முயன்ற பொழுது நால்வகைப் படைகளை அறிமுகப்படுத்துகிறார். அதில், யானை, குதிரை, தேர் முதலானவற்றின் சிறப்பைக் கூறும் பொழுது, மறவர்களின் மாண்பையும் மறைமுகமாகச் சுட்டிக் காட்டுவதைக் காணலாம்.

'விழுச் சூழிய விளங்கு ஓடைய
கடுஞ் சினத்த கமழ் கடாஅத்து
அளறு பட்ட நறுஞ் சென்னிய,
வரை மருளும் உயர் தோன்றல,
வினை நவின்ற பேர் யானை
சினம் சிறந்து களன் உழக்கவும்
மா எடுத்த மலிகுரூஉத் துகள்
அகல் வானத்து வெயில் கரப்பவும்
வாம் பரிய கடுந் திண்தேர்
காற்று என்னக் கடிது கொட்பவும்

வளம் மிகு மற மைந்தர்

தோள் முறையான் வீறு முற்றவும்'

(மது.கா ; 43-54)

எனப் பாடியுள்ளார். முதலில் யானைகளைச் சிறப்பித்தார். அடுத்து குதிரைகளைச் சிறப்பித்தார். தேர்களைச் சிறப்பிக்கும் பொழுதும் அவற்றை ஈர்த்துச் செல்லும் குதிரைகளையும் சிறப்பிக்கிறார். இறுதியாக, 'வளம்மிகு மற மைந்தர், தோள் முறையான் வீறு முற்றவும்' எனக்குறிப்பிட்டு மறவர்களைச் சிறப்பித்துக் கூறுவர். இதற்கு, 'வாட்போர் புரிந்து, தம்முடைய வீரத்தை மிகுத்துக் காட்டும் வீரர்களின் தோளின் வெற்றி, அவர்கள் பகைவர்களை முறையாக வெட்டுவதால் முற்றுப்பெறும் ' எனப் பொருள் கூறுவர். ஏனைய யானை, குதிரை, தேர் முதலான படைகளின் சிறப்பை விளக்குவதன் மூலம், அவற்றைக் கொண்டு செலுத்தும் மறவர்களும் மறைமுகமாக அறிமுகம் செய்யப்பட்டு பாராட்டப்படுகின்றனர்.

புறநானூற்று 55ஆம் பாடலைப் பாடிய மதுரை மருதன் இளநாகனார், பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன் படைகளைச் சிறப்பித்துச் சுட்டும் பொழுது, இவ்வாறே , நாற்படைகளை அறிமுகப்படுத்துவர். 'கடுஞ்சினத்த கொல்களிறும், கதழ்பரிய கலிமாகவும், நெடுங்கொடிய நிமிர்தேரும், நெஞ்சுடை புகல்மறவரும் என நான்குடன் மாண்டது' எனக்கூறுவர்.

நேரிடையாக மறவர்களை அறிமுகப்படுத்தும் பாடல்கள் புறநானூற்றில் தான் உள்ளன. புலவர்கள், பொருநர், பாணர், பாடினியர் மற்றும் விறலியர் அறிமுகப்படுத்தும் மறவர்கள் மிகுதியாகவே உள்ளனர். இலக்கணநூல் கூறும் புறத்திணைகளுக்குரிய துறைகள் பல இடம் பெறும் பொழுது, இத்தகு மறவர்தம் அறிமுகப்பணி சிறப்பாக நடை பெற்றுள்ளதைக் காணலாம். கரந்தைத்

திணைக்கு உரிய துறை 'குடிநிலையுரைத்தல்' என்பது ஒன்றாகும். 'பழமையிலும் மறத்திலும் புகழ் பெற்ற குடியின் வரலாற்றைச் சிறப்பித்துக் கூறுதல் ' என இதற்குப் பொருள் கூறுவர்.

ஔவையார், அதியமான் நெடுமான் அஞ்சிக்கு, அவனிடம் பணிபுரியும் ஒரு மறவனை அறிமுகப்படுத்துவதாக ஒரு பாடல் புறநானூற்றில் அமைந்துள்ளது. அதில், அம்மறவனின் பரம்பரைப் பெருமையை வீரச்சுவை நிறைந்தவாறு பாடியுள்ளதைக் காணலாம்.

'இவற்குஈந்து உண்மதி கள்ளே! சினப்போர்
இனக்களிற்று யானை இயல்தேர்க் குருசில்!
நுந்தை தந்தைக்கு இவன்தந்தை தந்தை
எடுத்துஎறி ஞாட்பின் இமையான்; தச்சன்
அடுத்துஎறி குறட்டின் நின்றுமாய்ந் தனனே!
மறப்புகழ் நிறைந்த மைந்தினோன் இவனும்
உறைப்புழி ஓலை போல
மறைக்குவன் பெரும! நிற்குறித்து வருவேலே!'

- *(புறம் ; 290)*

இப்பாடலில் ஒரு மறவனின் மூன்று தலைமுறைக் கடமையுணர்ச்சி, தியாகம், பெருமை முதலானவை அறிமுகப்படுத்துப்படுகின்றன. ஔவையார் இப்பாடலில், 'வேந்தே ! நின் தந்தையின் தந்தைக்கு, இவனுடைய தந்தைக்குத் தந்தை, படைகளை யெடுத்துப் பகைவர் மேலெறிந்தழிக்கும் போரின் கண் கண்ணிமையாமல், தச்சனால் ஆர்க்காலைச் சேர்த்து எறியப்பட்ட குடம் போலப் பகைவர் எறிந்த படைகளைத் தானேற்று நின்று மாண்டான். மறப்போர் செய்து பெற்ற புகழ் நிறைந்த வலியையுடையனாகிய இவனும், மழை

பெய்யுமிடத்து இடைநின்று நம்மைக் காக்கும் பனையோலைக் குடை போல நின்று நின்னைக் காத்து வருவான் ' எனக்கூறி மறவனின் நன்றியதலையும் நமக்குப் புலப்படுத்துகிறார்.

இவ்வாறு, 'உண்டாட்டு, உவகைக் கலுழ்ச்சி, எருமை மறம், களிற்றுடனிலை, குதிரை மறம், செருமலைதல், செருவிடை வீழ்தல், தலைத்தேற்றம், தானைநிலை, தானை மறம், நல்லிசை வஞ்சி, நீண்மொழி, நூழிலாட்டு, பாண்பாட்டு, பிள்ளைப் பெயர்ச்சி, பூக்கோட்காஞ்சி, மூதின்முல்லை, வல்லாண்முல்லை' முதலான துறைகளில் அமைந்த புறப்பாடல்கள் மறவர்களை, அவர்தம் தறுகண் மற்றும் வீரதீரச் செயல்களோடு நமக்கு அறிமுகப்படுத்துவதைக் காணலாம். மன்னர்களைப் புகழ்ந்து பாடுவதற்குப் பல குறிக்கோள்களும், தேவைகளும் இருக்கக் கூடும். ஆனால், மறவர்களை அறிமுகப்படுத்திப் புகழ்ந்து கூறுவதற்கு ஒரே நோக்குதான் இருக்கக்கூடும். அதுதான், 'தமிழகம் வீரத்தின் விளை நிலம் ' என்பதைச் சான்றாதாரங்களுடன் நிலைநாட்டி நிறுவுதலேயாம்.

## மறவர்க்கான இலக்கணம்

மறவர்கள் எனக் கூறப்படும் பொழுது ஆடவர்களை மட்டுமே குறிக்கும் என்பது வெள்ளிடைமலை எனத் தெளிவாகக் குறிக்கப்படும் ஒன்று. தமிழினத்தைப் பொறுத்தவரையில் எல்லா ஆடவர்களும் மறவர்களே யாவர். தொழிலாலும், பதவியாலும் வேறுபட்டிருந்தாலும் அறத்தை நிலைநாட்ட மறப்பண்பு இன்றியமையாதொன்று என்பது சங்க காலத்தில் நிலைத்த குறிக்கோளாகக் கருதப்பட்டதெனலாம்.

எனவேதான் தொல்காப்பியர்,

'பெருமையும்உரனும் ஆடூஉ மேன '

- (தொல் ; களவு ; நூற்பா 08)

எனக் குறித்துச் சென்றுள்ளார். இதற்கு உரையெழுதும் நச்சினார்க்கினியர், 'அறிவும் ஆற்றலும் புகழும் கொடையும் ஆராய்தலும் பண்பும் நண்பும் பழிபாவம் அஞ்சுதலும் முதலியனவாய் மேற்படும் பெருமைப் பகுதியும், கடைப்பிடியும் நிறையும் கலங்காது துணிதலும் முதலிய வலியின் பகுதியும் தலைவன் கண்ணதாகும் ' என்பர். இவையெல்லாம் மறவர்க்குக் கட்டாயம் இருக்கவேண்டிய ஒன்று.

தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலில் 'பெருமிதம் ' என்னும் மெய்ப்பாடு தோன்றும் நிலைக்களம் நான்கு என்பர். அவை,

' கல்வி தறுகண் இசைமை கொடையென
சொல்லப்பட்ட பெருமிதம் நான்கே'

- (தொ ; மெய் ; நூற்பா 09)

என்பர். 'பெருமிதம் ' என்னும் சொல்லிற்கு 'மேம்பாடு, செருக்கு, களிப்பு, பேரெல்லை' எனப்பொருள் கூறுவர். இந்தப் பெருமிதம் கல்வியால் உண்டாகலாம். 'தறுகண் ' எனப்படும் அஞ்சாமையால் உண்டாகலாம். 'இசைமை ' எனக் கூறும் நற்புகழால் வந்து சேரலாம். கொடையாளியாக வாழ்வதாலும் இந்தப் பெருமிதம் கிடைக்கலாம்.[14] இந்த நான்கினையும் ஒவ்வொரு மறவரும் பெற்று வாழவேண்டும் என்பதையும் வாழ்ந்து வந்தனர் என்பதையும் சங்க இலக்கியம் சான்றுகளை மிகுதியாகவே வழங்கியுள்ளன.

திருவள்ளுவரும், ' படைமாட்சி ' மற்றும் ' படைச் செருக்கு' என்னும் அதிகாரங்களில் தொல்காப்பியர் கூறிய இலக்கண நெறிகளையும், பெருமித நெறியையும் அடிப்படையாகக் கொண்டே மறவர்களுக்குரிய இலக்கணத்தை வரையறை செய்துள்ளார். திருக்குறளில் இடம் பெற்ற பல தொடர்களை இதற்குச் சான்று காட்டலாம். 'உறுப்பமைந்த ஊறஞ்சா வெல்படை '; 'உலைவிடத் தூறஞ்சாவன்கண் ' ; 'மறமானம் மாண்ட வழிச் செலவு தேற்றம் ' ; 'பேராண்மை என்பது தறுகண்'; 'உறினும் உயிர் அஞ்சா மறவர்' முதலானவற்றை ஒப்பிட்டு நோக்கின் மறவர்க்கான இலக்கணம் தெளிவாகத் தெரியும்.

இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் கூறப் புகுந்த தொல்காப்பியர் புறத்திணையியலில் மறவர்க்கான இலக்கண நெறியை, சமூக நெறியாகவும், அறநெறியாகவும் கைக்கொள்ள வேண்டும் என்பதைப் பரவலாகக் கூறுவதைக் காணலாம். இவற்றை வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை முதலான திணைகளில் இடம் பெற்ற துறைகளில் காணலாம். இவற்றிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட துறைகள் தான் புறநானூற்றுப் பாடற் பகுதியில் பல இடம் பெற்றிருக்கின்றன.

'திணை' என்ற சொல்லுக்கு, 'நிலம், குலம், இடம், வீடு, ஒழுக்கம், உயர்திணை, அஃறிணை என்னும் பகுப்பு, தமிழ் நூல்களில் வரும் அகத்திணை, புறத்திணை ஒழுக்கம்' [15] என அகராதி கூறுவதை இங்கு நினைவிற் கொண்டு மறவர் இலக்கணம் பற்றிச் சிந்திக்க வேண்டும். வெட்சித்திணை முதலாக வாகைத்திணை ஈறாகக் கூறப்பட்ட ஐந்திற்கும் போர் தொடர்பான ஒழுக்கங்கள் தனித்தனியாகக் கூறப்படவேண்டும் என்பதற்காகவே பாடல்சான்ற புலனெறி வழக்காக இவற்றைப் பேரறிஞர்கள் படைத்தனர். மறவர்கள் போர்ப் பணியில்

ஈடுபட முற்படும் பொழுது மேற்கொள்ளும் ஒழுகலாறுகள் எல்லாம் அவர்தம் தொடர்பான இலக்கணமேயாகும்.

'துறை' என்ற சொல்லுக்கு, 'இடம், நீர்த்துறை, நியாயவழி, பகுதி, உபாயம், சபைகூடுமிடம், ஆறு, நூல், வரலாறு, அகமும் புறமும் பற்றிய பொருட்கூறு'[16] எனப்பொருள் கூறுவதை முன்வைத்து புறநானூறு பெற்றிருக்கும் பாடல்களில் மறவர் இலக்கணம் எவ்வாறு விளக்கம் பெற்றிருக்கிறது என்பதைப் புரிந்து கொள்ள இயலும். சான்றுகளாகப் பாடல்கள் இருந்தாலும் மறவர் இலக்கணப்படி தான் படைக்கப்பட்டுள்ளன என்பதை உணர வேண்டும். ஏனெனில், இதுவும் பாடல் சான்ற புலனெறி வழக்கு என்பதை நினைவிற்கொள்ள வேண்டும்.

வெட்சித் திணைக்கு இலக்கணம் கூறப்புகுந்த தொல்காப்பியர், 'வேந்தனால் விடப்பட்டு முனைப் புலங்காத்திருந்த தண்டத்தலைவர், பகை நிலத்தே சென்று களவினாலே, ஆநிரைகளைக் கொண்டு போந்து, பாதுகாத்தலைப் பொருந்துதலையுடைத்தாகும் வெட்சித்திணை 'எனக் கூறுவர். இதனை,

வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவின்
ஆதந் தோம்பல் மேவற் றாகும்.

*- (தொல் ; புறத்திணை; நூ - 02)*

என்ற நூற்பாவில் சுட்டுவர். இதற்குச் சான்றாக புறநானூற்று 259 ஆம் பாடலைக் காட்டலாம். இப்பாடலில் இருவகைப்பட்ட மறவர்களை ஆசிரியர் கோடை பாடிய பெரும்பூதனார் நமக்கு அறிமுகப்படுத்துவர். பகைவரது ஆநிரைகளைக் கவர்ந்து வந்து காத்து வரும் வெட்சி மறவர் ஒருபுறம். பசுக்களை இழந்த கரந்தை மறவர் அப்பசுக் கூட்டத்தை மீட்க பகை நாடு நோக்கிப்

புறப்பட ஆயத்தமாயினர். இதுகண்ட சான்றோர் கரந்தை மறவர்களைத் தடுத்து, தற்பொழுது செல்வது நன்றன்று; பயன் தராது' எனக் கூறி பகைமறவர் சிறப்பைக் கூறி, காலம் கனியும் வரை பொறுத்திருக்குமாறு கேட்டுக் கொள்கின்றனர். இதுவே, வஞ்சிப் போருக்கு வழி வகுத்தது எனலாம்.

'ஏறுடைப் பெருநிரை பெயர்தரப் பெயராது
இலைபுதை பெருங்காட்டுத் தலைகரந் திருந்த
வல்வில் மறவர் ஒடுக்கங் காணாய்
செல்லல் செல்லல் சிறக்கநின் உள்ளம்
முருகுமெய்ப்பட்ட புலைத்தி போலத்
தாவுபு தெறிக்கு மான்மேற்
புடையிலங் கொள்வாட் புனைகழ லோயே'

*- (புறம் ; 259)*

## இப்பாடலில் கூறப்பட்ட இலக்கணம்

1. தத்தம் பசுக்களை இழந்த கரந்தை மறவர் கரந்தைப்பூச் சூடி அப்பசுக்களை மீட்கப்போருக்கு உடனே புறப்பட ஆயத்தமாகிறார்.
2. வெட்சிமறவர் தம் போரிடும் இச்சையை எதிரி நாட்டாருக்கு அறிவிக்க யாரும் அறியாவண்ணம் இரவில் வந்து ஆநிரைகளைக் கவர்ந்து தம் நாட்டிற்கு ஓட்டிச் சென்று பாதுகாத்து நிற்கின்றனர்.
3. சான்றோர் கரந்தை மறவர்களைப் பார்த்து, 'மருங்கிலே மிகச்சிறந்த ஒள்ளிய வாளினையும் வீரக் கழலினையும் உடையவர்களே! இப்பொழுது வெட்சி மறவர்களைப் பின் தொடர்ந்து செல்வது நன்றன்று. ஏனெனில், நம்நாட்டு ஆநிரைகளை ஓட்டிச் சென்றோர் காட்டில் மறைந்த வண்ணம்

ஆநிரைகளைக் காத்து வருகின்றனர். அவர்கள் வலிய வில்லை கையில் ஏந்திய படி உம்மை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர். இடமறிந்து, காலமறிந்து வெட்சிமறவரைத் தாக்கப் புறப்பட வேண்டும். அதற்கேற்ற காலம் இதுவன்று எனக் கூறித் தடுத்து நிறுத்தி விட்டனர்.

இவ்வாறு மறவர்க்குரிய இலக்கணங்கள் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளன. பேரரசர், சிற்றரசர், குறுநில மன்னர், வட்டாரக் குழுத்தலைவர் எனப்படுவோர் அனைவரும் மறவர்களே என்பதைத் தெளிவாகச் சுட்டிக் காட்டுவதை இலக்கண நூல்களிலும், இலக்கியங்களிலும் காணமுடிகிறது. 'உலகம் என்பது உயர்ந்தோர் மேற்றே ' என்பது பழமொழி. எனவேதான் மறவர்தம் கருத்துக்கள் அனைத்தும் மன்னரை மையமாகக் கொண்டே விளக்கப்படுகிறது. இதன் தொடர்பான இலக்கண நெறியைச் சுருக்கமாகப் பேராசிரியர். மா. இராசமாணிக்கனார் கூறுவது இதற்கு அரண் செய்வதைக் காணலாம்.[17]

'அரசர் கடவுளின் அவதாரமாவார். அவர் தெய்வீக உரிமையால் ஆட்சி செய்பவராவர். அவருக்கு ஆண்டவர் தந்த அன்பளிப்பே இறைமை ஆகும். ஆண்டவர் தேர்ந்தெடுத்த அவரே ஆட்சி செய்யத் தகுந்தவர். அரசாங்கத் தலைவர், படைகளின் உயர் தலைவர் ; நீதியின் ஊற்று ; சட்டமியற்றும் தனிப்பெரும் தலைவர் ; நாட்டின் அதிகாரத்தின் எல்லை ; அனைத்தும் அவரே. தமக்குப் பரிசளித்த ஆண்டவரைத் தொழுது நன்றி செலுத்தும் கடமை மன்னருக்குண்டு. ஆயின், நாட்டு மக்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் சரிவரச் செய்வதே மன்னர்களுக்குத் தலைசிறந்த வழிபாடாகும்'[18] என்ற கருத்தை மனதிற்கொண்டு மன்னர்களையும், மறவர்களையும் இணைத்தே தான் மறவர்தம் இலக்கணத்தைக் கண்டறிய வேண்டியுள்ளது. இதற்கு மதுரைக் காஞ்சி கூட சான்று வழங்குகிறது.

'வருபுனல் கற்சிறை கடுப்ப இடையறுத்து
ஒன்னார் ஓட்டிய செருப்புகல் மறவர்
வாள்வலம் புணர்ந்த நின்தாள் வலம்வாழ்த்த'

- *(மது. கா ; 725-727)*

மாங்குடி மருதனார், தலையாலங்கானத்துச் செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாராட்டும் பொழுது, 'பெருகி வரும் ஆற்றுநீரைக் கல்லெனத் தடுத்து நிறுத்துவது போல, தம் படையைக் கெடுத்து மிக்கவரும் பகைவர் படையை நடுவே தடுத்து, அப்பகைவர்களை அழித்த போரை விரும்பும் படைத்தலைவர் வாள் வெற்றியை உடைய நினது முயற்சியின் பெருமையை வாழ்த்துவர்' எனக் கூறுவதையும் காணலாம். திருவள்ளுவரும், 'தான்முறை செய்து பிறர் நலியாமற்காத்தலையும் செய்யும் அரசன், பிறப்பால் மகனேயாயினும், செயலான் மக்கட்கு கடவுள் என்று வேறு வைக்கப்படும் என்ற கருத்தை,

'முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப்படும்'

- *(குறள் - 388)*

என்று குறள் வாயிலாக விளக்குவர்.

## சமூகம் கண்டறிந்த மறவர்

சங்ககாலச் சமூகம் மிகச்சிறந்த முறையில் உருவாக்கப்பட்டிருந்த தென்பதையும், அறவழி போற்றி அமைக்கப்பட்டிருந்ததென்பதையும் மரபு பற்றிக் கூறப்பட்டுள்ள செய்திகளைக் கொண்டு கண்டறியலாம்.

'வழக்கு எனப்படுவது உயர்ந்தோர் மேற்றே

நிகழ்ச்சி அவர்கட் டாகலான'

- *(தொல் ; மரபியல் ; 93)*

என்பதை யாவரும் அறிவர்.

இதனை மனதிற் கொண்டுதான், 'எவ்வழி நல்லவர் ஆடவர், அவ்வழி நல்லை' என்றும், 'மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம் ' என்றும், 'ஆன்றவிந்த தடங்கிய கொள்கைச் சான்றோர்' என்றும், 'தமக்கென முயலா நோன்தாள் பிறர்க்கென முயலுநர்' என்றும், 'நல்லது செய்தல் ஆற்றீராயினும் , அல்லது செய்தல் ஓம்புமின்' என்றும், 'அரசியல் பிழையாது அறநெறி காட்டி, பெரியோர் சென்ற அடிவழிப் பிழையாது' என்றும் கூறி நல்லதொரு சமூகம் அமைய சங்கச் சான்றோர் பாடுபட்டனர் எனத் தெரிய வருகிறது. இத்தகு சமூகத்தில் பிறந்து வளர்ந்த மறவர், தத்தம் மறப்பண்புகளால், இத்தகு அறம் நிலைத்து நிற்கவே பாடுபட்டனர் என்பதைத் தெளிவாகக் காணமுடிகிறது.

சங்ககாலச் சமூகம் கண்டறிந்த மறவர்கள் வீரத்தில் மட்டுமன்று, ஈரத்திலும் சிறந்திருந்தனர் என்பதை அவர்தம் சிறுபணியிலிருந்தும், மேற்கொண்ட பெரும் பணிகளின் வாயிலாகவும் கண்டறிய முடிகிறது.

'காடு கொன்று நாடு ஆக்கி

குளந் தொட்டு வளம் பெருக்கி

பிறங்கு நிலை மாடத்து உறந்தை போக்கி

கோயிலொடு குடி நிறிஇ'

- *(பட்டினப்பாலை ; 283-286)*

என்ற பட்டினப்பாலை அடிகள், திருமாவளவன் தம் சமூக வளர்ச்சிக்கேற்ப காடுகளை அழித்து, நாட்டைப் பெருக்கி, எல்லையை விரிவடையச் செய்தான்.

அதற்கேற்ப குளம் வெட்டி நீர்த்தேவையைப் பூர்த்தி செய்தான். நிலவளம் பெருக்கி மக்கள் தேவைகளைப் பூர்த்தி செய்தான். மாடமாளிகை, கூட கோபுரம் விளங்க உறையூர் என்னும் நகரை உருவாக்கி மக்களெல்லோரும் நலத்துடன் வாழ ஏற்பாடு செய்தான். பிறகு ஊர்க்காவல் மற்றும் நாடுகாவலுக்குத் தேவையான ஏற்பாடுகளைச் செய்தான். அதற்குத் தம் சமூகத்தில் வாழ்ந்த மறவர்களையே நன்கு பயன்படுத்திக் கொண்டான் என்பதையும் கண்டறிய முடிகிறது.

திருமகள் நிலைபெற்றுத் தங்கும் பெருஞ்செல்வம் உடைய உறையூரின் மதிலில் பெரிய வாயில்களையும், சிறிய வாயில்களையும் அமைத்து, அம்மதிலின் உச்சியில், மறைந்து அம்பு எய்யும் இடங்கள் தோறும் அம்புக் கட்டுக்களைத் தொகுத்து வைத்தனன். இதற்கு மறவர்கள் உதவி பெரிதும் வேண்டப்படுவது என்பதை யாவரும் அறிவர். அரிமா அன்ன அணங்குடை துப்பின் திருமாவளவன் பகை போக்கி தத்தம் சமூகத்தைக் காக்க மறவர்களைத் தக்கவாறு பயன்படுத்தியுள்ளான்.

'வாயிலொடு புழை அழைத்து
ஞாயில் தொறும் புதை நிறீஇ
பொருவேம் எனப் பெயர் கொடுத்து
ஒருவேம் எனப் புறக் கொடாது
திருநிலைஇய பெருமன் எயில்'

- (ப. பாலை ; 287-291)

எனப் பட்டினப்பாலையில் கடியலூர் உருத்திரங்கண்ணனார் கூறுவர். சங்ககாலச் சமூகத்தில் மறவர் கட்குரிய இன்றியமையா இடங்கள் கிடைத்தன என்பதற்கு இதனைச் சான்று காட்டலாம்.

சமூகத்தில் மறவர்களுக்கென்று தனிக் குடியிருப்புகள் இருந்ததையும் கண்டறிய முடிகிறது. சமூகம் அவர்களுக்கு வழங்கிய அங்கீகாரத்தை இதன் மூலம் அறிய முடிகிறது. 'பரிக்கோற்காரர் நெகிழ்ந்திருக்கும் நேரம் பார்த்துக் கீழே வைக்கப்பட்டிருக்கும், பெரிய யானைக்குரிய, நெய் வார்த்து மிதித்த கவளத்தைக் கடுஞ்சூலையுடைய மந்தி எடுத்துப் போய்த் தின்கின்ற சோலைகள் நிறைந்தது காஞ்சி மாநகரம்' எனக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் கூறுவர். இந்நகரில்தான் அரசன் தொண்டைமான் இளந்திரையன் ஏற்பாட்டில் மறவர் குடியிருப்புகள் பல கட்டப்பட்டன என்பதைக் கண்டறிய முடிகிறது.

'களிறுகதன் அடக்கிய வெளிறில் கந்தின்
திண்தேர் குழித்த குண்டுநெடுந் தெருவில்
படைதொலைபு அறியா மைந்துமலி பெரும்புகழ்
கடைக்கால் யாத்த பல்குடி கெழீஇ'

- (பெரும் ; 396-399)

என மறவர் குடியிருப்புப் பற்றிய விபரம் கூறப்பட்டுள்ளது. 'காஞ்சி மாநகரில் களிற்று யானைகளின் சினத்தை அடக்கி, கட்டப்பட்ட கட்டுந்தறிகள் உள்ளன. திண்மையான தேர்கள் பலகாலும் ஓடுவதால் குழிகள் பரவலாகத் தென்படும் தெருக்கள் போரின் கண் படைக்கு ஓடாத புகழ்மிகுந்த, வலிநிறைந்த, மறவர்களின் குடியிருப்புகள் நிறைந்துள்ளன' எனக்கூறுவர் சங்க காலச் சமூகம் மறவர்க்கு வழங்கிய சிறப்புகள் அரசர்க்கு அடுத்தப்படியாகக் கருதப்பட்டதெனலாம்.

மன்னன் ஒருவன் பாசறையில் தங்கியுள்ளான். இரவில் நெடுநேரம் ஆகியும் உறங்காமல் உள்ளான். அடுத்தநாள் போர் பற்றிச் சிந்தித்த வண்ணம் உள்ள மன்னனின் மனத்திரையில் கடந்த நாட்களின் போர் நிகழ்வுகளை

எண்ணியபடி எண்ணங்களை அசைபோட்ட படி படுக்கையில் இருக்கிறான். இக்காட்சியை நயம்பட காவிரிப் பூம்பட்டினத்து பொன் வாணிகனார் மகனார் நப்பூதனார் தாமியற்றிய முல்லைப் பாட்டில் எடுத்துக் காட்டுகிறார்.

'மன்னன் ஒருகையைப் படுக்கை மேலே வைத்து, கடகம் அணிந்த மற்றொரு கையால் தலையைத் தாங்கிய வனாய்ப் போர்மேற் செல்லும் மிக்க விருப்பத்தால், உறக்கம் கொள்ளாமல் இரவு முழுவதும் போர்க்களக் காட்சிகளை நினைத்தவனாய்ப் படுத்திருக்கிறான் ; போரில் பகைவர் எறிந்த வேல் பட்டமையால் புண்மிகுந்து, தம் பிடியானைகளையும் மறந்து நின்ற களிறுகளை நினைக்கின்றான்; அடிபட்ட பாம்பு துடித்தாற்போன்று துடிக்கும் வண்ணம், களிறுகளின் பெரிய கையினை வெட்டி வீழ்த்தித் தாம் அணிந்த தேன் துளிக்கும் வஞ்சி மாலைக்கு வெற்றியைத் தேடித்தந்து, செஞ்சோற்றுக்கடன் கழித்துப் போரில் வீழ்ந்துபட்ட வீரரை நினைக்கின்றான் ; காவலாய்க் காதோரம் அணிவித்த தோற்பரிசையினையும் அறுத்துக் கொண்டு பாய்ந்த கூர்மையான அம்பு நுனிகள் அழுந்துவதால், தம் செவியைச் சாய்த்துப் புல் உண்ண இயலாமல் வருந்தும் குதிரைகளை நினைக்கின்றான் ; இங்ஙனம் பலவற்றையும் நினைத்து வருந்துவதால் உறக்கம் கொள்ளாமல் தவிக்கின்றான் மன்னன்'[19]

நாட்டிற்குத் தம் இன்னுயிரை ஈந்து அமரரான மறவர்கள் மக்களின் மனதில் நீங்கா இடம் பெறுமாறு மக்கள் நடுகல் நட்டு வழிபட்டுப் போற்றி வருவர். மலைபடுகடாம் என்ற நூலைப் படைத்த பெருங்கௌசிகனார் மிகச் சிறப்பாகக் குறித்துப் பாராட்டுவர்.

'ஒன்னார்த் தெவ்வர் உலைவிடத்து ஆர்த்தென
நல்வழிக் கொடுத்த நாணுடை மறவர்

செல்லா இல்லிசைப் பெயரொடு நட்ட

கல்லேசு கவலை எண்ணுமிகப் பலவே !'

- *(மலைபடு ; 386-389)*

'தம் ஏவலை ஏற்றுக் கொள்ளாத பகைவர் முதுகிட்ட அளவில், தம் வெற்றி தோன்ற ஆரவாரித்தபோது, அதனைப் பொறாமல், இவ்விடம் உயிரைப் போக்கிக் கொள்ள ஏற்ற களமெனக்கருதி, மீண்டு வந்து போரிட்டுத் தம் உயிரைக் கொடுத்த நாணத்தையுடைய மறவர்களின் கெடாத நல்ல புகழையுடைய பெயர்களை எழுதி, நட்ட நடுகற்கள் முதுகிட்டுப் போனவரை இகழ்வனவாய் அமைந்த, எண்ணற்ற பல வழிகள் உள்ளன' என இப்பாடற் பகுதியில் கூறுவர்.

'நல்லமர்க் கடந்த நாணுடை மறவர்

பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்

<u>பீலி</u> <u>சூட்டிய</u> <u>பிறங்குநிலை</u> <u>நடுகல்</u> '

- *(அகம் ; 67; 08-10)*

என்றும்,

'விழுத்தொடை மறவர் வில்லிடத் தொலைந்தோர்

<u>எழுத்துடை நடுகல்</u> '

- *(ஐங் ; 352 ; 01-02)*

என்றும் பிற சங்க இலக்கியங்கள் நடுகல் பற்றிக் குறிப்பிட்டதையும் காணமுடிகிறது.

அரசர்க்கு உறுதுணையாக அமைந்த ஐம்பெருங்குழு, எண்பேராயம் முதலான குழுக்களில் இடம் பெற்று நாடு காவல், பகை ஒழித்தல் முதலான பணிகளைச் சிறப்பாகச் செய்து வாழ்ந்த சங்க கால மறவர்கள், சங்ககாலச்

சமூகத்தார் போன்றோர் நமக்குச் சங்க இலக்கியங்கள் வாயிலாகத்தான் அறிமுகம் செய்யப்பட்டனர் எனலாம்.

## சான்றோரும் புலவரும் பாராட்டிய மறவர்

சங்க இலக்கியங்களுள் சான்றோர் தொடர்பான செய்திகள் அனைத்தையும் புலவர் பெருமக்கள் பலர் தத்தம் பாடல்களில் குறிப்பிட்டுச் சென்றுள்ளனர். எனவே, புலவர்களையும் நாம் சான்றோராகக் கருத இடமேற்படுகிறது. இத்துடன் அந்தணர் மிகச்சிறந்த சான்றோராகக் கருதப்பட்டுள்ளனர். 'ஆன்றவிந் தடங்கிய கொள்கைச் சான்றோர்'தான் மன்னர்களுக்கு அமைச்சர்களாகவும், படைத்தலைவர்களாகவும், தக்க துணைவர்களாகவும் இருந்து பணிபுரிந்துள்ளதையும் காணமுடிகிறது. 'சான்றாண்மை' என்ற அதிகாரத்தில் 'கடனென்ப நல்லவையெல்லாம் கடனறிந்து' எனக்கூறுவர். இந்த அதிகாரத்தில் 'சான்றோர்' என்ற சொல் இரு இடங்களில் சுட்டப்பட்டு, ஓரிடத்தில் 'சான்றவர்' எனக் குறிப்பிடுவர். சங்க இலக்கியத்திலும் சான்றோர் என்பவரை அறிஞர், அறிவுடையார், பெரியோர், மூத்தோர், அந்தணர், முதுவோர், சுற்றம், விழுமியோர், நல்லாசிரியர், ஆன்றோர், அறங்கரைநாவினர், பண்பாளர், முதல்வர், புகழுடையோர், புலவர், ஒளியோர் எனப் பலவாறு குறித்துப் பாராட்டியுள்ளதைக் காண முடிகிறது.

திருவள்ளுவர், சான்றோர்களை நல்ல துணையாக அமைத்துக் கொள்ள வேண்டுமென்பதைப் 'பெரியாரைத் துணைக் கோடல்' என்ற அதிகாரத்தின் வாயிலாகச் சிறப்பித்துக் கூறுவர். அதற்கு உரை எழுதிய பரிமேலழகர், 'மூவிரு குற்றமும் முறைமையின் கடிதலின் காவற் சாகாடு உகைத்தற்கு உரியனாய அரசன், தீ நெறி விளக்கி நன்னெறிச் செலுத்தும் பேரறிவுடையாரைத் தனக்குத் துணையாகக் கோடல் அதிகார முறைமையும் இதனானே விளங்கும் பேரறிவு

உடையவராவார். அரசர்க்கும் அங்கங்கட்கும் மானுடத் தெய்வக் குற்றங்கள் வாராமல் காத்தற்கு உரிய அமைச்சர், புரோகிதர் ' என்பர்.

'தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை'

- *(குறள் - 444)*

என்ற குறளுக்கு, 'பொருள், படை, அரண்களான் ஆய வலியினும் இத்துணை வலி சிறந்தது' என்று கூறுவர். மன்னர்க்குப் பிற வலிமைகளால் உருவாகும் பாதுகாப்பை விட, சான்றோர் வழி உருவாகும் பாதுகாப்பே சிறந்த தென்பர்' உரையாசிரியர்.

'உற்றநோய் நீக்கி உறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்.'

- *(குறள் - 442)*

என்ற குறளுக்கு, 'தெய்வத்தான் வரும் துன்பங்களாவன - மழையினது இன்மை மிகுதிகளாலும் காற்றுத் தீப்பிணி என்று இவற்றாலும் வருவன. அவை, கடவுளரையும் தக்கோரையும் நோக்கிச் செய்யும் சாந்திகளான் நீக்கப்படும். மக்களான் வரும் துன்பங்களாவன - பகைவர், கள்வர், சுற்றத்தார், வினை செய்வார் என்றிவர்களான் வருவன. அவை, சாம, பேத, தான, தண்டங்கள் ஆகிய நால்வகை உபாயத்துள் ஏற்றதனால் நீக்கப்படும். முற்காத்தலாவது தெய்வத்தான் வருவனவற்றை உற்பாதங்களால் அறிந்து, அச்சாந்திகளால் காத்தலும், மக்களான் வருவனவற்றை அவர் குணம், இங்கிதம், ஆகாரம், செயல் என்பனவற்றான் அறிந்து, அவ்வுபாயங்களுள் ஒன்றால் காத்தலும் ஆம். ஆகவே, புரோகிதரையும் அமைச்சரையும் கூறியவாறாயிற்று' என்பர் உரையாசிரியர்.

பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் பாலைக் கௌதமனார் புகழ்ந்து பாடிய பொழுது, 'ஓதலும், வேட்டலும் அவை பிறரைச் செய்வித்தலும், ஈதலும், ஏற்றலும் என்று சொல்லப்படும் அந்தணர்க்கு உரியவரான ஆறு ஒழுக்கங்களைப் புரிந்தவராக ஒழுகி வருகின்ற, அறத்தொடு பட்டவையே விரும்பிச் செய்யும் அந்தணர்களது சொல்லுக்கு, 'அவ்விதமே' என்று கூறி அவ்வாறே நடந்தும் வருவாய்' என்று கூறுவதை இங்கு ஒப்பிட்டுக் காண்பது நல்லது. நாடு நலம் பெற மன்னர் சான்றோர் அறவுரைப் படி வாழ்ந்தனர் என்பதை அறியமுடிகிறது.

'ஓதல் வேட்டல் அவைபிறர்ச் செய்தல்
ஈதல் ஏற்றலென் றாறுபுரிந் தொழுகும்
அறம்புரி அந்தணர் வழிமொழிந் தொழுகி
ஞாலம் நின்வழி யொழுகப் பாடல்சான்று
நாடுடன் விளங்கும் நாடா நல்லிசை'

*- (பதி ; 24 ; 06-10)*

என்று பாடியுள்ளதைக் காணமுடிகிறது. எனவே, சான்றோர் நாடுநலம் பெற மன்னர் வழியாகவும், புலவர் வழியாகவும் செய்வனத் திருந்த செய்து வாழ்ந்துள்ளனர் என அறியமுடிகிறது.

பெரும்பாணாற்றுப்படையில் அந்தணர்களது உறைவிடங்கள் பற்றிய செய்திகள் இதன் காரணமாகவே புலவரால் படைக்கப்பட்டன என எண்ணத்தோன்றுகிறது. பதினான்கு அடிகளில் அவர்தம் உறைவிடம் விளக்கம் பெறுகின்றன.

'அரசியல் பிழையாது அறநெறி காட்டி

பெரியோர் சென்ற அடிவழிப் பிழையாது'

- *(மது.கா ; 191-192)*

நாட்டைக் காத்து வந்ததையும் காணமுடிகிறது.

'ஆன்ற கேள்வி அடங்கிய கொள்கை

நான்மறை முதல்வர் சுற்ற மாக'க்

- *(புறம் ; 26; 12-13)*

கொண்டொழுகி ஆண்டதையும் காணமுடிகிறது.

மறவர்கட்கும் இத்தகைய சான்றோர்க்கும் நேரடியான தொடர்பு இருந்ததில்லை. ஆனால், நாடு நற்காவல் பெற்று நலமாக வாழ மறவர்கள் எண்ணி வாழ்ந்தது போலவே, சான்றோர்களும் நாடு நலம் பெறத் தாமறிந்த நல்வழியை மன்னர்கள் ஆதரவோ செய்து வைந்துள்ளதைக் காணமுடிகிறது. சான்றோர்கள் வாழ்ந்து காட்டி மறவர் கட்கும் பல அறிவுரைகளை உணர்த்தியுள்ளதைக் காணமுடிகிறது. புறாநனூற்றுப் புலவன் இதனை நன்கு படம் பிடித்துக் காட்டுகிறான். அதுவும், மன்னனாக வாழ்ந்து நாட்டை ஆண்ட பொழுத கண்ட உண்மைகளைச் சிறப்பித்துத் தாமே பாட்டாகப் பாடியுள்ளார்.

கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி, 'தமக்கென முயலா நோன்தாள், பிறர்க்கென முயலுநர்' என்றும், 'தமியர் உண்டலும் இலர்'; என்றும், 'துஞ்சலும் இலர்' என்றும், 'பிறர் அஞ்சுவது அஞ்சிப் புகழெனின் உயிருங்கொடுக்குவர் ' பழியெனின் உலகுடன் பெறினும் கொள்ளலர்' என்றும், 'அயர்விலர்' என்றும் கூறுவன மறவர்கட்கும் பொருந்துவதைக் காணலாம். இத்தகையோரைத்தான் சான்றோர் எனக் கூறும் புலவர்கள், இதனடிப் படையிலேயே மறவர்களையும் சான்றோர் என்ற சொல்லால் சுட்டிப் பாராட்டியுள்ளதையும் காணமுடிகிறது.

பதிற்றுப் பத்தில்,

'நோன்புரி தடக்கை சான்றோர் மெய்ம்மறை'

என்றும்,

'ஆன்றோள் கணவ! சான்றோர் புரவல! '

என்றும்,

'ஏந்தெழில் ஆகத்துச் சான்றோர் மெய்ம்மறை'

என்றும்,

'எஃகாடு ஊனம் கடுப்பமெய் சிதைந்து
சாந்தெழில் மறைந்த சான்றோர் பெருமகன்'

என்றும்,

'கொலக் கொலக் குறையாத் தானைச் சான்றோர்'

என்றும் பாடியுள்ளதைக் காணமுடிகிறது.[20] குமட்டூர்க்கண்ணனார், காக்கை பாடினியார், நச்செள்ளையார், கபிலர், பெருங்குன்றூர்க்கிழார் போன்ற புகழ்மிக்க புலவர்கள் தான் மறவர்களைச் சான்றோர் எனக் குறித்துப் புகழ்ந்து பாடியுள்ளது நம்சிந்தனைக்கு விருந்தாக அமைகிறது.

புலவர் பெருமக்கள்தான் இத்தகு சிறப்பு வாய்ந்த, நாடு போற்றிய பலரையும் சான்றோர் என அழைத்துச் சிறப்பித்துள்ளனர். மறவர்களையும் சான்றோர் எனக் குறித்தமைக்குக் கீழ்க்கண்டவற்றைக் காரணமாகக் கூறலாம்.

1. வஞ்சினம் முடித்த ஒன்றுமொழி மறவர்.
2. ஓடாப் பூட்கை மறவர்.
3. போரெனிற் புகலும் புனைகழன் மறவர்
4. நல்லமர் வீழ்ந்த நீள்கழல் மறவர்
5. அறவர் அறவன்! மறவர் மறவன்! மள்ளர் மள்ளன் !

6. ஒன்னார் ஓட்டிய செருப்புகல் மறவர்.

7. பெருஞ்செய் ஆடவர். [21]

மறவர்களைச் சான்றோர் எனப்புலவர் புகழ்ந்து பாராட்ட மற்றொரு காரணமும் கூற இடமளிக்கிறது, ஆயிரக்கணக்கான மறவர்கட்குத் தலைமை தாங்கிப் போர்க்களம் சென்று தாமும் போரிடும் பண்பை இயல்பாகப் பெற்றவர்கள் சங்ககால மன்னர்கள் ஆவர். வீரமும் தீரமும் நிறைந்த மன்னர்களோடு அவர்க்குச் சமமாக நின்று போரிட்டு பெருமை பெறுவோரும், மன்னர் மறுத்தும் கேட்காது, போர்க்களம் புகுந்து போரிட்டு வீரமரணம் அடைந்தோரும், மன்னரைக் காக்கத் தாம் தனித்துநின்று போரிட்டு அமரர் ஆனோரும் பலர் ஆவர். அப்பெருமைமிகு காட்சிகளை நேரில் கண்ட புலவர் அத்தகு மறவர்களை மிக உயர்வாகக் கருதிப் புகழ்ந்து பாராட்டியுள்ளதைப் பரவலாக் காணமுடிகிறது. பரணர் தாம் பாடிய பாடலில் கூட,

'தேர்தர வந்த சான்றோர் எல்லாம்

தோல்கண் மறைப்ப ஒருங்கு மாய்ந்தனரே'. *- (புறம் ; 63 ; 05-06)*

என்று குறிப்பிட்டதைக் காணலாம். புலவர்கள் இவ்வாறு புகழ்ந்து பாடுவதையே பெருமையாக எண்ணி வாழ்ந்த மறவர்களே அதிகம். மன்னர்கள் போர்க்களம் புக முடிவுசெய்து வஞ்சினம் கூறும் பொழுது கூட, தம்மை ஒரு மன்னன் என நினைப்பதை மறந்து, தம்மையும் மறவனாக நினைத்துக் கொண்டே வஞ்சினம் கூறுவதையும் காணமுடிகிறது. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன்,

'நெடுநல் யானையும் தேரும் மாவும்

படைஅமை மறவரும் உடையம் யாமென்று

உறுதுப்பு அஞ்சாது' *- (புறம் : 72 ; 04-06)*

என்று சினந்து கூறி, இம்மறவர்கள் துணைக்கொண்டு பகைவர்களை ஒழிக்காது தோற்றுப் போவேனாயின்,

'ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவனாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்
புலவர் பாடாது வரைக என்நிலவரை'

எனத் தம்மையும் தம்மைச் சார்ந்த மறவர்களையும் இணைத்தே வஞ்சினங்கூறிப் போரிட்டு வென்றான் என்பது வரலாற்றுண்மை.

மாங்குடி மருதனும்,

'வருபுனல் கற்சிறை கடுப்ப இடையறுத்து
ஒன்னார் ஒட்டிய செருப்புகல் மறவர்
வாள்வலம் புணர்ந்த நின்தாள் வலம் வாழ்ந்த'

- *(மது. கா: 725-727)*

என்று புகழ்ந்து பாடியதன் மூலம் மறவர்களையும் மன்னரையும் ஒன்றாகவே கருதிப் போற்றிய உண்மை புலனாகிறது. இதில் மாங்குடி மருதன், 'பெருகி வரும் ஆற்றுநீரைக் கல்லெனத் தடுத்து நிறுத்துவது போல, தம் படையைக் கெடுத்து மிக்க வரும் பகைவர் படையை நடுவே தடுத்து, அப்பகைவர்களை அழித்த போரை விரும்பும் படைத்தலைவர் வாள் வெற்றியை உடைய நினது முயற்சியின் பெருமையை வாழ்த்துவர்' எனக்கூறியதன் மூலம், 'அரசர் - படைத்தலைவர் - படை மறவர்' எனப்படும் முக்கூட்டு பெரு முயற்சியால்தான் தலையாலங்கானத்துப் போர்க்களத்தில் வெற்றி நாட்ட முடிந்தது என்றும், எனவே, மறவர்களும் 'செயற்கரிய செயல்' செய்து பெருமை பெற்றதனால்

'சான்றோர்' என அழைக்கப்படுவது சாலப் பொருந்தும் என்றும் கண்டறிய முடிகிறது.

எனவே, சங்க இலக்கியங்கள் சான்றோர் மறவர்களைப் பாராட்டும் கருத்துக்களையும் தம் கருத்தாகக் கொண்டு பாடி மறவர்களைப் பெருமைப் படுத்தியுள்ளனர் என்பதை ஔவையார்,

'மறப்புகழ் நிறைந்த மைந்தினோன் இவனும்
உறைப்புழி ஓலை போல
மறைக்குவன்பெருமநிற் குறித்துவரு வேலே!'

*- (புறம் ; 290; 06-08)*

எனக்கூறிய கூற்றைக் கொண்டும் அறுதியிட்டு உறுதிப்படுத்திக் கொள்ள முடிகிறது எனலாம்.

## மன்னர் கண்டறிந்த மறவர்

பதிற்றுப்பத்து மற்றும் புறநானூற்று நூல்களில் இடம் பெற்ற பாடல்களுள் மிகுதியானவை, மன்னர்களை அவர்தம் படை மறவர்களோடு இணைத்தே வீரப்பெருமிதத்தை வெளிப்படுத்திய போர் நிகழ்ச்சிகளையே படம் பிடித்துக் காட்டுவதையே காணமுடிகிறது.

'பல்களிற்றுத் தொகுதியொடு வெல்கொடி நுடங்கும்
படையேர் உழவ !'

*- (ப.ப ; 14; 16-17)*

என்றும்,

'குவியற் கண்ணி மழவர் மெய்ம்மறை'

என்றும்,

'வேல்கெழு தானை வெருவரு தோன்றல்
உளைப் பொலிந்த மா
இழைப் பொலிந்த களிறு
வம்பு பரந்த தோ
அமர்க் கெதிர்ந்த புகன் மறவரொடு' - *(ப .ப;36 ; 04)*

என்றும் பதிற்றுப்பத்து சுட்டிக் காட்டுவதைக் காணமுடிகிறது.

'எழுமரங் கடுக்குந் தாடோய் தடக்கை
வழுவில் வன்கை மழவர் பெரும'

- *(புறம் ; 90 ; 10-11)*

என்றும்,

'எழாஅத்தோள் இமிழ் முழக்கின்
மாஅத்தாள் உயர் மருப்பின்
கடுஞ்சினத்த களிறு பரப்பி
விரிகடல் வியன் தானையொடு
முருகு உறழப் பகைத்தலைச் சென்று' - *(மது.கா ; 177-181)*

என்றும் பிற நூல்கள் சுட்டிக் காட்டுவதையும் காணமுடிகிறது.

மன்னர் மறவர்களோடு அதிக நெருக்கமாக இருந்து போர்ப்பணியைப் புரிந்து வந்தனர் என்பதை நெடுநல்வாடை சுவைபட எடுத்துக் காட்டுகிறது. பாசறையின் ஓர் இரவுக் காட்சி! 'வேப்பம் பூ மாலையைத் தலைப் பகுதியில் கட்டிய, வலிய காம்பினைக் கொண்ட, வேலினை ஏந்தியவாறு, படைத்தலைவன் புண்பட்ட வீரர்களை அரசனுக்கு முறையாகக் காட்டிச் சென்றனன். அரசன், தன் இடத் தோளிலிருந்து நழுவிக் கீழே விழும் அழகிய ஆடையைத் தன் இடப்பக்கத்தில் அணைத்துக் கொண்டனன். வாளினைத் தன்

தோளில் சார்த்தியுள்ள, தறுகண்மையுடைய வாள்வீரன் தோளில் தன்னுடைய வலக்கையை இட்டவாறு அரசன், புண்பட்ட வீரர்களின் உள்ளத்தில் மகிழ்ச்சி தோன்றும்படி முக மலர்ந்து நோக்கினான். அவன் நடுயாமத்தும் உறங்கச் செல்லாமல் சில வீரர்களுடன், பாசறையில் புண்பட்டோரின் வருத்தத்தைப் போக்குவதற்காகத் திரிந்த வண்ணம் இருந்தான் ' [22] என்று படைத்துக் காட்டும் நெடுநல்வாடைப் பாடலின் அடிகள் கற்பாரைத் தம்பால் ஈர்த்து அக்காலத்து மறவர்கட்கும் மன்னர்க்கும் இருந்த உறவினை நன்கு புலப்படுத்தும்.

இவ்வாறே, மற்றொரு பாசறைக் காட்சியை முல்லைப்பாட்டு நமக்குப் படம் பிடித்துக் காட்டுகிறது. பாசறையில் உள்ள மன்னன் இரவில் கூடத் தூங்காமல் அடுத்த நாள் போர்க்குரிய ஆயத்தப் பணிகளைச் சிந்தித்த வண்ணம், கடந்த நாட்களில் போரில் ஈடுபட்டுத் துன்புற்ற யானைகளையும், குதிரைகளையும் பற்றி நினைத்து வருத்தியபடி அமர்ந்திருந்தான். 'அடிபட்ட பாம்பு துடித்தாற் போன்று துடிக்கும் வண்ணம், களிறுகளின் பெரிய கையினை வெட்டி வீழ்த்தித் தாம் அணிந்த தேன் துளிர்க்கும் வஞ்சிமாலைக்கு வெற்றியைத் தேடித்தந்து, செஞ்சோற்றுக் கடன் கழித்துப் போரில் வீழ்ந்துபட்ட வீரரை நினைக்கின்றான்' [23] இவ்வாறு, பலவாறு வருந்திய வண்ணம் அரசன் உறக்கம் கொள்ளாமல் தவிக்கின்றான் என முல்லைப்பாட்டு கூறும்.

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், பகைவர்களை அடி பணிய வைத்து, நாடு திரும்புகிறான். தலை நகரில் வெற்றி வாகைத் திருவிழா பெரும் ஆரவாரத்துடன் கொண்டாடப்பட்டு வருகிறது. அரண்மனையில் மகிழ்ச்சியுடன் வீற்றிருக்கும் அரசன், போரில் தத்தம் பணிகளைச் செய்து வெற்றிக்குப் பெருந்துணை நின்ற அனைவரையும் தம்பால் அழைத்து வருமாறு ஆணை பிறப்பிக்கிறான். தம் அருகில் வந்து நிற்கும்

ஒவ்வொருவரையும் பாராட்டிப் பரிசு வழங்கிப் பெருமகிழ்ச்சி கொள்கிறான். அவர்களது வீரதீரச்செயல்களைத் தம் வாயால் கூறிப் பாராட்டி மகிழ்கிறான். அம்மன்னன் யார்யாரை எப்படி அழைத்துப் பாராட்டினான் என்பதை மதுரைக் காஞ்சி மிகச் சிறப்பாகச் சுட்டிச் சிறப்பிக்கிறது.

'வில்லினை மிகவும் வலித்து விடுதலால், அதுதன்னுள் அடக்கிக் கொண்ட அம்பின் விசையைத் தாங்கும் மார்பினையும், குதிரையைச் செலுத்தி வேண்டுமளவில் பிடிக்கும் தோளினையும் உடைய வீரர்களைக் கொண்மின்' [24] என முதலில் ஆணை பிறப்பிக்கிறான். அடுத்து, கல்தரையைப் பொலிந்து செய்யப்பட்ட சிறிய நீர்வரும் வாயினைக் கொண்ட அகழியையுடைய முழு முதல் அரணத்தில் நின்று வருந்திய வீரச் செல்வத்தை உடையவர்களைக் கொணர்மின்'[25] என்கிறான்.

பாண்டியன் செழியனுக்கு உதவிய படைத் தலைவர்களை அழைத்து வருமாறு ஆணை பிறப்பிக்கிறான். அவன், 'மாறுபாட்டை ஏற்று, கொல்லுதல் தொழிலையுடைய ஏற்றின் செவ்வித் தோலை, மயிர்சீவாமல் போர்த்திய பெரிய கண்ணையுடைய முரசம் மாறாமல் ஒலிக்குமாறு, நெருப்பு நடந்தாற் போலப் பகைப் படையின் நடுவே சென்று, பெரிய நல்ல யானைகள் போர்க்களத்தே பட, வெட்டிச் சீரிய புண்ணால் வீழ்ந்த தலைவரைக் கொணர்மின் ' [26] எனக் கூறுகிறான்.

நட்பு கந்தாகக் கொண்டு போரில் உதவ முன் வந்த சிற்றரசர்களைப் பாராட்டி, அவர்களையும் அழைத்து வருமாறு ஆணைப் பிறப்பிக்கிறான். 'முன்னுள்ளோர் நாடு காத்த முறையை, நாளும் மனத்தில் கருதி, நட்பில் குற்றம் தீர்ந்தோர் பொருட்டு, கட்டப்பட்ட பொன்னால் செய்த தும்பைப் பூச்சூட்டி, வீரர்களை ஏவுகையினால், அவர்கள், காம்பில் செருகப்பட்ட வேல், அம்பு ஆகியவற்றுடன் சென்று நிலைகுலைத்தலின் கலங்கிப் பலவாகப் பிரிந்து,

இணைந்த சந்து வாய்களற்ற பழைய நிறம் கொண்ட கவசத்துடன், ஊன்கெட, ஆரக்கால்கள் தைக்கப் பெற்ற வலிய சக்கரத்தின் குறடு போன்ற மார்பினையும் உடையராயினர். அவர்கள், தேவருலகத்தைப் போன்ற செல்வத்தை உடைய ஊர்களை முன்புபோல நட்புக் கொண்ட அகத்துழிஞையோர் ஆளும் படிச் செய்த முயற்சியுடையாரைக் கொணர்மின்' [27] என வேண்டினான்.

கடைசியாகத் தத்தம் படைகளுடன் வந்து போரில் பங்கேற்று வெற்றிக்கு வழி வகுத்த குறுநில மன்னர்களையும் அழைத்து வருமாறு ஆணை பிறப்பிக்கிறான். அவன், 'உயர்ந்த யானைத் திரளின் வரிசையைக் கைக் கொண்ட, பூசிப் புலர்ந்த சந்தனத்தையும், செயல்களையும் உடைய மண்டிலங்களை ஆள்பவரைக் கொணர்மின்' என ஆணையிட்டு, தம்மருகே அடுத்தடுத்து வரும் அனைவர்க்கும் பரிசுகளை வாரி வழங்குகிறான் என்று மதுரைக் காஞ்சி கூறும்.[28]

### சமூகக் காவலரான மறவர்

'தனிமரம் தோப்பாகாது' என்பதைப் போலவே 'தனிமனிதன் சமூகமாக மாட்டான்' என்பதை யாவரும் அறிவர். அரசராயினும், மறவராயினும் சமூகத்தின் ஓர் உறுப்பினனான மனிதனே என்பதை யாவரும் அறிவர். எனவே, தம் வீரத்தையும், தீரத்தையும் அவன் சமூகத்திற்கே அர்ப்பணிக்க வேண்டும். சமூக அங்கீகாரம் பெறாதவர் அரசராகவும் திகழ இயலாது மறவராகவும் வாழ இயலாது. சங்க காலச் சமூகத்தைப் பொறுத்தவரை அரசர் முதல் மறவர் வரை அனைவரும் சமூகக் காவலுக்குரிய தத்தமக்கென ஒதுக்கப்பட்ட பணிகளையும், பண்புகளையும் தவறாது போற்றி வந்துள்ளனர். அதற்குத் தமிழ்ச் சமூகமும், அதன் அமைப்பும், கட்டுப்பாடும் அடித்தளம் அமைத்துக் கொடுத்துள்ளது.

மனிதன் சமூகத்தை உருவாக்குகிறான். அதே நேரத்தில் அவர்களை ஒருங்கிணைக்கும் சமூக உறவுகளுக்கான கட்டமைப்பை அது அவனுக்கு அளிக்கிறது. சமூகம் என்பது சில விதிமுறைகளும் நிபந்தனைகளும் கொண்டுள்ள ஓர் ஒழுங்கு முறையாகும். பரஸ்பர உதவிகள் மற்றும் மனித நடத்தைகளின் மீதான கட்டுப் பாடும் இதில் அடங்கியுள்ளது. தனது சொந்த நலன்களுக்காகவே மனிதன் சமூகத்தை உருவாக்கியுள்ளான். சமூகம் அவனுக்குச் சுதந்திரம் அளிப்பதுடன் சில நெறிகளை, நியமங்களை நிர்ணயிப்பதன் மூலம் அவனது நடத்தைகளைக் கட்டுப்படுத்துகிறது. இதற்குச் சங்க இலக்கியங்களில் பல சான்றுகள் உள்ளன.

ஔவையார், பொன்முடியார், கணியன் பூங்குன்றனார், கபிலர், பிசிராந்தையார் போன்றோர் கூறியுள்ள கருத்துக்கள் சமூகத்திற்கும், தனிமனிதனுக்கும் உள்ள உறவுகள், பெறவேண்டிய நெறிகள், இருக்கவேண்டிய கட்டுப்பாடுகள் பற்றி விரிவாக விளக்கியுள்ளன.

*'எவ்வழி நல்லவர் ஆடவர்*

*அவ்வழி நல்லை வாழிய நிலனே'* - *(புறம் ; 187; 3-4)*

என்ற ஔவையாரின் சமூகக் கோட்பாட்டை நன்கு புரிந்து கொள்ள வேண்டும். 'உலகம் என்பது உயர்ந்தோர் மேற்றே' என்றது போல 'சமூகம் ஆடவர் மேற்றே' என்பது தெளிவு. வையத்துள் வாழ்வாங்கு வாழ்வதென்பது ஆடவர் நல்லவராக வாழ்வதேயாம். நல்லவர்க்குரிய பண்புகள், நெறிகள், கடமைகள் பரவலாகக் பேசப் பட்டுள்ளன. இவ்வாறே, பெண்டிர்க்கும் சமூக நலம் பேணும் உறவு பற்றியும் பேசப்படுகிறது. அங்கே ஆடவரும் கட்டுப்படுத்தப்படுகின்றனர். பாலை பாடிய பெருங்கடுங்கோ ஒரு பாடலில் இச்சமூகச் சிந்தனையை எளிதாக எடுத்துக் காட்டுகிறார்.

'வினையே ஆடவர்க் குயிரே வாணுதல்

*மனையுறை மகளிர்க்கு ஆடவ ருயிர்' - (குறு ; 135 ; 01-02)*

எனக்கூறி, சமூக அடித்தளத்திற்கு ஆடவரும் பெண்டிரும் இன்றியமையாதவர் எனும் சமூகக் கோட்பாட்டை நன்கு புலப்படுத்துகிறார். மனிதனின் உறவுகள் வளர்ச்சி அடையும் போக்கையே சமூகமயமாக்குதல் என்பர். இதனையே, இங்கு புலவர் எளிதாகச் சுவைபடக் கூறுவர்.

குழந்தைப் பருவத்திலிருந்து இதற்குப் பயிற்சி வழங்கப்படுகிறது. அதற்குக் குடும்பம் ஒரு மையமாக இயங்குகிறது. குடும்பம், சமூகத்தின் பிற உறுப்பினர்களோடு உருவாக்கப்பட்ட உறவு மூலமும் பல கற்பிக்கப்படுகின்றன. குடும்பம் மற்றும் சமூகத் தாக்கம் என்பன எல்லார்க்கும், சமூகத்திற்கேற்ப வாழும் வழியைத் தாமே கற்றுக் கொள்ளத் தேவைப்படும் அனைத்தையும் வழங்கி விடுதலேயாம். நல்ல பழக்கவழக்கங்கள், திறமைகள், நம்பிக்கைகள், சீர்த்தூக்கிப் பார்க்கும் தன்மை முதலானவற்றைக் கற்றுக் கொள்கிறார்கள். இவ்வாறு மனித உறவுகளிலிருந்து பிறக்கும் சமூகமயமாக்குதல் மூலம் மனித இனமும் சமூகமும் ஒன்றை ஒன்று நிறைவு செய்யும் களன்களாக அமைந்து விடுகின்றன. இதனடிப் படையில் தான் தமிழ்ச் சமூகத்தில் அன்று, 'அறம், பொருள், இன்பம்' என்ற நெறிமுறை ஏற்பட்டது. 'அறத்தான் வருவதே இன்பம்' என்றும், 'பொருளில்லார்க்கு இவ்வுலகில்லை' என்றும், 'எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது, தான் அமர்ந்து வருஉம் மேவற்றாகும் ' என்ற கொள்கை வழி சமூக நெறிகள் உருவாயின.

அறம் பற்றிப் பேசப்படும் பொழுது சமூகக் கடமைகள் முன் நிற்கின்றன. கடமைகளைச் செய்வதின் வாயிலாகவே அறத்தை நிலை நாட்ட முடியும். பொன்முடியார் வாழ்வியல் அறமாகவே, சிலவற்றை நமக்கு எடுத்துரைப்பர். இன்னின்னார்க்கு இன்னின்ன கடமைகள் உள்ளன என்பதைச் சுருக்கிக் கூறிச்

சமூகமயமாக்குதலுக்கு அடித்தளமிடுகிறார். குடும்பத்திலிருந்து சமூகம்நோக்கி வளர்ந்து போகும் அறக்கடன் தான் சமூகம் வலிமை பெற வழி வகுக்கும். இல்லையேல் விலங்கினங்கள் வாழும் காடாகிவிடும்.

பொன்முடியார்,

(1) தாய் மற்றும் தாய்மை

(2) தந்தை - சான்றாண்மை

(3) கொல்லன் - தொழில்

(4) வேந்தன் - நன்னடை

(5) காளை - காவல்

அற்றைய சமூகத்திற்கு இந்த ஐவரே போதுமானவர்கள் எனப் பொன்முடியார் வரையறுத்துக் கூறிவிட்டார். ஒவ்வொருவரும் தத்தம் நிலையில் சமூகக் காவலர்களாகவே இருக்க வேண்டுமென்பதை ஆணித்தரமாக எடுத்துக் கூறுகிறார்.

தாய் மக்களை இனிதாக ஈன்று வளர்க்காவிடில் சமூக உறுப்பினர்க்கு எங்கே போவது ? மரபு வழி போற்றித் தத்தம் பரம்பரையை வளர்க்கும் பணி தாய்க்கே உரியது. இதனை யாரும் மறுக்க இயலாது. இவள் ஈன்று வளர்த்த குழந்தைகள் தான் சமூக உறுப்பினராகி யாதேனும் ஒரு பொறுப் பேற்று சமூகப் பணி புரிந்து சமூகக் காவலராக எதிர் காலத்தில் திகழ்கின்றனர். இதற்குத் துணை நிற்பவரே தந்தை. தத்தம் மக்களுக்குத் தேவைப்படும் கல்வியை, சமூக அறிவை, மானுடப் பண்பை, சமூகக் கடமையைப் பெற தந்தையே உதவ வேண்டும். இவர்கள் இருவரும் இணைந்து தத்தம் மக்களைச் சமூகமயமாக்குதலுக்குரிய எல்லாப் பணிகளையும் செய்து அறக்கோட்பாட்டை அறிமுகப்படுத்தி விடுகின்றனர்.

சமூகத் தொழில் செய்வோன்தான், அதன் வளர்ச்சிக்கும் எழுச்சிக்கும் தேவைப்படும் அனைத்தையும் ஆக்கிப் படைத்து வழங்க வேண்டும். இதில், 'கொல்லன்' எனப் பணியாளர்களுக்கு ஒரு பிரதிநிதியாகச் சுட்டப்படுகிறான். இதன் உட்கிடக்கை உழைப்பே என்பது தெளிவு. இதை முறைப்படுத்தி அவரவர் கடமைகளையும் பணிகளையும் நெறிப்படுத்திக் கட்டுப்படுத்த வேண்டியவனே மன்னன். ஏனெனில், அவன் தான் அரசின் முதல் பிரதிநிதி. ஐம்பெருங்குழு, எண்பேராயம் துணைக் கொண்டு சமூக நெறிப்படுத்தும் பணியை அரசன் செய்ய வேண்டியவன் என்பதைக் குறிக்கவே 'முறை செய்து காப்பாற்றும்' என்றும், 'கவிகைக் கீழ்த்தங்கும் உலகு' என்றும் கூறப்பட்டது.

மேலே குறிப்பிட்ட நால்வரையும் சூழ்ந்தே சமூகம் இயங்கி வருகிறது. அதில் இடம் பெற்ற எல்லா உறுப்பினர்களையும் கண்ணாகக் காத்து வரும் பணியே காளையர்க்கு வழங்கப்பட்டது. பெருமையும் உரனும் பெற்றவனே காளை எனப்படுபவன். இவனது பெருமைக்குரிய பணி காவலாகும். கவலையின்றி, அச்சமின்றி மக்கள் வாழ காக்கும் காவலால் காளைக்குக் கிடைப்பது பெருமையே. உயர்ந்த வலிமையே காளையர்க்கு உரனாகும். வலிமை மிக்க, உருவத்தால் பெருத்த களிற்றை அடக்கும் ஆற்றல் பெறுவதே உரனாகும். அவனே காளை; அவனே மறவன் ஆவான்.

'புலிசேர்ந்து போகிய கல்லளை போல
ஈன்ற வயிறோ இதுவே
தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே'

*- (புறம் ; 86 ; 04-05)*

என்றும்,

'ஒருமகன் அல்லது இல்லோள்

செருமுக நோக்கிச் செல்கவென விடுமே'!

- *(புறம் ; 279 ; 10-11)*

என்றும்,

'மறப்புகழ் நிறைந்த மைந்தினோன் இவனும்

உறைப்புழி ஓலை போல

மறைவக்குவன் பெரும ! நிற்குறித்து வருவேலே !'

- *(புறம் ; 290; 06-08)*

என்றும் பாடிய மூதின் மகளிர் எனப் போற்றப்படும் பெண் கவிஞர்களே என்பதை மறந்து விடக் கூடாது. எனவே, சமூகக் காவலர்களை நமக்கு நல்கியவர்களும் அவர்களே ; சமூகக் காப்பாளர்களாக மறவர்கள் விளங்கியதும் தாய்த் தெய்வங்களின் வழிகாட்டுதலாலே என்பது தெளிவு.

தினைப் புனங்காத்தல், துன்புற்ற மகளிரைக் காத்தல், இல்லறம் காத்தல், இனங்காத்தல், ஊர்க்காத்தல், நாடுகாத்தலென எண்ணிறந்த காவற் பணிகளைச் செய்து சமூகக் காவலர்களாகத் திகழ்ந்தவர்களே சங்ககாலச் சமூக மறவர்கள் என்பது தெளிவாகிறது.

'பிடியொடு மேயும் புன்செய் யானை

அடிஒதுங்கு இயக்கம் கேட்ட கானவன்

நெடுவரை ஆசினிப் பணவை ஏறி

கடுவிசைக் கவணையில் கல்லை விடுதலின்'

- *(கலி ; 41 ; 07-10)*

என்று கபிலர் தினைப்புனம் காத்த மறவரை அறிமுகப்படுத்துவர். கபிலர், ஆண்யானை, பெண்யானையுடன் வந்து, புன்செய் நிலத்திலே புகுந்து பயிரைத்

தின்னா நிற்கும். அவற்றின் காலடிச் சத்தம் கேட்டகானவன் உயர்ந்த மலையில் ஆசினிப் பலாவின் மேல் இட்ட பரணிலே ஏறினன். ஏறிக்கடிய வேகத்துடன் கவணையிற் கல்லை வைத்து எறிந்தனன் ; அக்கல் வரையிடத்து நின்ற, முறிந்த வேங்கையினது ஒளி படைத்த மலர்களைச் சிதறியது' எனக் கூறுவர்.

'குறிஞ்சி பாட்டு' என்ற இலக்கியத்தில் கபிலர், மகளிர்க்கு உதவும் மறவன் ஒருவனை நமக்கு அறிமுகப்படுத்துகிறார். புலவர், 'நெடியகோலையுடைய, உடுச் சேர்ந்த கடுவிசையையுடைய அம்பை, நன்றாக வலித்துத் தலைமையுடைய யானையின் அழகிய முகத்தே எய்தனன். அவ்யானையின் புள்ளியையும், புகரினையும் உடைய மத்தகம் அழகழியுமாறு, அம்பு பட்டு உருவிய புண்களால் உமிழப்படும் குருதி, அதன் முகத்தே பரவிற்று. முருகனால் வருத்துதல் உற்ற மகளிர்க்கு, மறியறுத்து ஆடும் வெறியயர் களத்தில், குருதி குதிக்குமாறு போலப் பெருகி வெளிப்படலால், அவ்யானை தன்னை மறந்து, ஆண்டு நிற்றலாற்றாது முதுகிட்டுச் சென்றது' என்று கூறி, ஒரு மறவன், மகளிரை யானையிடமிருந்து காப்பாற்றிய நெறியை நன்கு எடுத்துக் காட்டுகிறார். [29]

மறவர்கள் இல்லறத்தை நல்லறமாகக்காக்க மனைவியையும், மக்களையும் போற்றிப் புரக்கும் சிறப்பையும், ஊடலாலும் - கூடலாலும், மேலும் மேலும் இல்லற இன்பம் பெருகுமாறு செய்யும் செயலையும் குறித்துப் பேசும் சங்க கால அகப்பொருள் இலக்கியங்கள் தலைவியர் மற்றும் தோழியர் வாயிலாகத் தத்தம் தலைவராகிய மறவரைச் சிறப்பித்துக் கூறுவதையும் காணலாம். கலித்தொகையில், கபிலர், ஒரு பாடலில், தோழி தலைவிக்குத் தலைவனை அறிமுகப் படுத்தும் பாங்கினைச் சுவைபடக் கூறுவர். அத்தலைவன் எல்லாச்

சிறப்புகளையும் பெற்றுச் சிறந்த இல்லறக்காவலன் எனக் கூறுவதைக் காணலாம்.

'ஒன்று இரைப்பான் போல்எளி வந்தும்சொல்லும் ; உலகம்
புரப்பான் போல்வது ஓர்மதுகையும் உடையன் ;
வல்லாரை வழிபட்டு ஒன்றிஅறிந் தான்போல்
நல்லார்கண் தோன்றும் அடக்கமும் உடையன் ;
இல்லோர் புன்கண் ஈகையின் தணிக்க
வல்லான் போல்வது ஓர்வன்மையும் உடையன்;
அன்னான் ஒருவன் தண்ஆண் தகைவிட்டு என்னைச்
சொல்லும் சொல் கேட்டீ சுடரிழாய் !'

*- (கலி ; 47 ; 01-08)*

தம் இனங்காத்து நிற்கும் பாலை மறவர்களின் சிறப்பை மாங்குடி மருதனார்,

'உவலைக் கண்ணி வன்சொல் இளைஞர்
சிலையுடைக் கையர் கவலை காப்ப'

*- (ம.கா ; 311-312)*

என மதுரைக் காஞ்சியில் கூறுவர். அவர், 'குழையால் வேயப்பட்ட குடில்களில், மான் தோலாலாகிய படுக்கையையும், தழை விரவித் தொடுத்த கண்ணியையும், கடிய சொல்லினையும் உடைய இளையர், வில் ஏந்திய கையராய்ப் பல வழிகளில் நின்று ஆறலைக் கள்வர் வாராமல் காவல் புரிவர்' எனக் கூறுவர்.

கள்வரிடமிருந்து ஊரைக் காக்கும் மறவர்தம் செயலையும் மாங்குடி மருதனார் இந்த மதுரைக் காஞ்சியில் கூறுவர். புலவர், 'களவின் தொழிலை ஆளும் தன்மையுடையவர். நுண்மை செறிந்த களவு நூலின் வழியில் மாறாத

நுண்ணிய ஆராய்ச்சியுடையவர். ஊர்க் காவலில் சிறந்து விளங்குபவர். தப்பக் கருதி முயலும் கள்வர் தப்புதற்கரிய அம்பினை உடையவர். தேரோடும் வீதிகளில், நீர் திரண்டு ஒழுகுமாறு மழை மிகுதியாகப் பெய்யும் நள்ளிரவுப் பொழுதிலும், தம் காவலில் தவறாமல், வெளியே சென்று உலாவி, விருப்பத்துடன் தம் பணியை ஆற்றுபவர் ' எனப் பாராட்டுவர். இதனை,

'நூல்வழிப் பிழையா நுணங்கு நுண்தேர்ச்சி
ஊர்க்காப்பாளர் ஊக்கருங் கணையினர்'

*- (மது.கா ; 646-647)*

எனக் குறிப்பர்.

மறவர்தம் நாடு காத்தலின் பொருட்டு மேற்கொண்ட போர்ச் செயல்களை எண்ணிறந்த பாடல்களின் வாயிலாக எடுத்துக் கூறுவதைக் காணலாம்.

'அடங்கிய புடையல் பொலங்கழல் நோன்தாள்
ஒடுங்காத் தெவ்வர் ஊக்கறக் கடைஇப்
புறக்கொடை எறியார்நின் மறப்படை கொள்ளுநர்
நகைவர்க்கு அரண மாகிப் பகைவர்க்குச்
சூர்நிகழ்ந் தற்றுநின் தானை!'

*- (ப.ப ; 31-35)*

என்று காப்பியாற்றுக்காப்பியனார், களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலின் படைமறவர்களின் தறுகண் பற்றிக் கூறுவர். அவர், 'வேற்படைகள் தம்முள் நெருங்கிய போர்க்களத்தே, ஒடுங்கிய பனம்பூ மாலையினையும் பொற்கழலினையும், வலிய கால்களையும் உடையவரான நின் படைமறவர், அடங்காத பகைவரது ஊக்கம் எல்லாம் அறவே அழியுமாறு, அவர்களைக் களத்தினின்றும் தோற்று ஓடச் செய்வர். அவ்வாறு, அவர்கள் புறங்கொடுத்து

ஓடும் பொழுது, அவர்களின் முதுகின் புறத்தே, தம்கை வேலை நின் மறவர் படைத் தலைவர்கள் ஒரு போதுமே எறிந்து அறிய மாட்டார்கள்' என்று பாராட்டிக் கூறியுள்ளதைக் காணலாம்.

கழாத்தலையார் என்னும் பெயர் பெற்ற புலவர், ஒரு புறநானூற்றுப் பாடலில் வீரமரணம் எய்திய மறவன் பேராற்றலை, அவனது தாயிடம் எடுத்துக் கூறிப் போற்றிப் பாராட்டுவதைக் காணலாம். அப்புலவர், 'தலைநரைத்தவளாகத் தோன்றுகின்ற இளையோரைப் பெற்ற முதுதாயே ! பெருங்குடிப் பெண்டே ! யானும் வருந்துகின்றேன். ஆயினும், நீயே பாராய் ! வெற்றி வேட்கையினரான மறவர் போர்க்கு அழைக்கும் 'உமை' என்னும் பறையோசை கேட்டு, மன்றம் கொள்ளப் போர்க்கு எழுந்து, கடிதாகப் போரிட்ட களத்தினைப் பாராய் ! பெருங்கோடரியால் வெட்டுண்டு வீழ்ந்த பெருமரம் போல, வாள் மேல் வீழ்ந்து கிடக்கின்றானே நின் மகன்! அவன் ஆண்மைக்கு ஓர் இலக்கியமான மறவன் ! அவன் திறத்தைக் காணாய் ! தாயே ! அது கண்டன்றோ, முரசும் களிறும் உடைய முடிவேந்தர் மூவரும் களத்திலே ஒருங்கு கூடிப் பொருதுபட்ட அவனை நினைத்து அன்பால் வருந்தி நின்றனர்.' [30] எனக்கூறி, நம்மையும் வருந்துமாறு செய்துள்ளதைக் காணலாம். இவ்வாறு கடமையைக் கண்ணாகப் போற்றிய மறவர்களையும், பல்வகைக் காவல் போற்றிய மறவர்களையும் சங்க காலப் புலவர்கள் பரவலாகப் பற்பல பாடல்களின் வாயிலாக நமக்கு அறிமுகப்படுத்தியுள்ளனர்.

## போர்க்களம் போற்றும் மறவர்

அறத்தைத் தம் உயிரினும் மேலாகக் கருதி வாழ்ந்த தமிழன், அந்த அறத்தைப் பாதுகாத்துப் போற்றவே மறப்பண்புகளையும் பெற்று

வாழவேண்டிய கட்டாயத்திற்குத் தள்ளப்பட்டான். இடைக்குன்றூர்க்கிழார் எனும் சங்கப் புலவரும் உலகத்து இயல்பு கூறும் பொழுது,

'ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்
புதுவது அன்று இவ்வுலகத் தியற்கை'

- *(புறம் ; 76; 01-02)*

என்று கூறுவதையும் சிந்திக்க வேண்டியுள்ளது. அறத்தின் அடையாளமாகவும், நாட்டின் பெருஞ் செல்வமாகக் கருதப்பட்ட ஆநிரைகளைக் கவர்ந்து பாதுகாக்கும் பணியே போருக்கு அடித்தளமாக அமைவிடுகிறது என்பதையும் காணமுடிகிறது.

சங்க நூல்களைத் திறனாய்வு செய்த அறிஞர்கள் கீழ்க்கண்ட காரணங்களைத் தொகுத்துக் கூறுவதைக் காணலாம்.

1. தமக்குப் பெண் கொடுக்க மறுத்த இனத்தாரோடு பகைமையோடு போரிட முற்பட்டனர்.
2. பகைவர்களோடு போரிட்டாலொழியத்தம் நாட்டையும் தம் மக்களையும் பாதுகாக்க இயலாது என்ற பாதுகாப்பு உணர்வு மீதுறப் போரிட முற்பட்டனர்.
3. மண்ணாசை நிமித்தம் தம் நாட்டின் மீது போரிட வருவாரின் ஆணவத்தை ஒடுக்கப் போரிட முற்பட்டனர்.
4. தம் நாட்டின் எல்லையை விரிவுபடுத்தும் நோக்கோடு போரிட முற்பட்டனர்.
5. தம் படை பலத்தைப் பிற நாட்டார் அறிந்து கொள்ளவேண்டுமெனப் போரிட முற்பட்டவர்களும் உண்டு.

6. புலவர்க்கும், பாணர்க்கும், பாடினியர்க்கும், கூத்தர்க்கும், விறலியர்க்கும், பொருநர்க்கும் வழங்க விரும்பும் பொருள்களின் பற்றாக் குறையைப் போக்கவும் பலர் போரிட முற்பட்டதையும் காணமுடிகிறது.

7. தன்மான உணர்வு மீதுற, அதற்குக் களங்கம் ஏற்பட்ட போது, அதைப் போக்கிக் கொள்ளப் போரிட்ட மன்னர்களையும் காணமுடிகிறது.

வேறு பல காரணங்கள் கூறப்பட்ட போதும் இவையே மிக முக்கிய ஏதுக்களாகக் கருதப்பட்டன.

போருக்குப் பெருந்துணை புரிபவர் அந்நாட்டு வீரர்களாகிய மறவர்களே யாவர். எனவே, மன்னர்கள் நால்வகைப் படைகளை நன்கு உருவாக்கிப் பயிற்சி வழங்கியுள்ளனர். யானைகள் மிகுதியாகத் தமிழகத்தில் கிடைத்ததால் யானைப் படைகள் மிகச்சிறப்பாக அமைக்கப்பட்டிருந்தன. அடுத்து, குதிரைப்படைகள் விளங்கின. தேர்ப்படைகளும், காலாட் படைகளும் மிகுதியாக இருந்ததைக் காணமுடிகிறது. இத்துடன், சில மன்னர்களிடம் கப்பற்படையும் சிறப்பாகப் போற்றப்பட்டு வந்துள்ளதை அறியமுடிகிறது. இதன் காரணமாகவே மறவர்கள் சங்க காலச் சமூகத்தின் இன்றியமையா மக்களாகக் கருதப்பட்டனர். புலவர்களால் படைக்கப் பெற்ற சங்கப் பாடல்களில் மறவர்கள் போற்றும் நெறியும், மறவர்களைப் போற்றும் நெறியும் மிகுதியாகக் காணப்படுவதற்கு இவையே காரணமாயின.

வே.தி. செல்வம், 'தமிழக வரலாறும் பண்பாடும் ' என்ற தமது நூலில் இதன் தொடர்பான கருத்துக்களை இவ்வாறு தொகுத்துக் காட்டியுள்ளார்.

1. வீரமும் போரும் பண்டைத் தமிழரின் வாழ்வின் அடிப்படைகளாகவும், அன்றாட நிகழ்ச்சிகளாகவும், அணிகளாகவும் விளங்கின.

2. போர் அன்றாட வாழ்வியலோடு இணைந்திருந்தது. வீரம் நெறியாகியது. மார்பின் காயம் வீரத்தின் சான்றாகக் கருதப்பட்டது. முதுகின் காயம் கோழைத் தனத்தின் சான்றிதழாகக் கருதப்பட்டது. அதைப் பெற்ற மறவர் நாணி உயிர்நீத்த வரலாறும் உண்டு.

3. அன்று போருக்கென ஒரு சமுதாயப் பிரிவு இருந்ததில்லை. எல்லோரும் போர்க்கருவி தூக்கி வீரம் விளையாட, கனல் கக்கப் போராடினர். வெற்றியின் புன்னகை வீரத்தின் விளை பொருளாகியது.

4. அம்பும், வில்லும், வாளும், வேலும், குந்தமும், கோலும், கைக்கோடரியும், எஃகினால் செய்யப்பட்ட எஃகம், முசலம் முதலிய ஆயுதங்களும் போருக்குப் பயன்பட்டன.

5. உடம்பைப் பாதுகாக்கக் கடுவாத் தோலால் செய்யப்பட்ட கட்டை, இரும்பாலான மெய் மறைகள் போன்றவை பயன்படுத்தப்பட்டன. கையில் பிடிக்கும் கேடயம், உடலில் போர்த்தும் கவசம் மிக முக்கியமாகக் கருதப்பட்டன. [31]

மறவர்கள் போருக்குப் புறப்படும் பொழுது கொம்பு, சங்கு, முரசு, பெரும்பறை முதலிய போரிசைக் கருவிகளை இயக்கியபடிச் செல்வர். தத்தமக்குரிய ஆயுதங்களை ஏந்தித் தத்தமக்குரிய யானை, குதிரை, தேர் முதலியவற்றில் ஏறிச் செல்வர். தமக்குரிய பூமாலையை அணிந்தே செல்வர். நன்னிமித்தம் பார்ப்பர். குடையும், முரசும், மன்னர்க்குரிய பிறவும் அணிவகுத்துச் சென்றபின், அவற்றைத் தொடர்ந்து போர்க்களம் நோக்கிப் புறப்படுவர். போர் வெற்றிக்குரிய கொற்றவை வழிபாடு, போர்க்கு முன்னும், போர் முடிந்த பிறகும் நடைபெறும். மறவர்கள் மிகுதியாக இடம் பெறும் காலாட்படையே அதிகம் கவனத்துடன் முறையாக அமைக்கப்பட்டது.

ஒழுங்கான அமைப்பில் காலாட்படை இயங்கியது. பல சிறுசிறு குழுக்களாக அமைக்கப்பட்டு பெரும்படை அமைக்கப்பட்டது. வாள்படை, வேல்படை, வில்படை எனப்பல பிரிவுகளிருந்தன. முன்னணிப்படை, தூசிப்படை, தார்ப்படை எனவும், பின்னால் வந்த பாதுகாவற்படை 'கழை' எனவும் அமைக்கப்பட்டுத் தனித்தனி பெயரிட்டு அழைக்கப்பட்டன. வாள்படையை மதில் போன்றும், வேல்படையைக் காவற்காடு மாதிரியும், விற்படையைத் தாண்ட முடியாத கிடங்குகள் போன்றும் பயன்படுத்திப் போரிட்டனர்.

காலாட்படை வீரர்கள் வாள், வேல், வில், ஈட்டி முதலான ஆயுதங்களை ஏந்திப் போராடினர். திணைக்கேற்றவாறு போர் வீரர்களின் இனம் அமைந்திருந்தன. அவற்றுள் எயினர், வேடர், மழவர், மள்ளர், மலையர், ஒலியர், பரதவர் போன்றோர் இருந்தனர். கோசர்களும், யவணர்களும் தமிழக மறவர்களோடு இணைந்த போர்க்களம் சென்றதையும் காணமுடிகிறது. போர் வீரர்கள் போரில் மடிவதையே புகழாகக் கருதினர். நடுகல்லாகி நாடு காக்க வணங்கப்பட்டு வந்த காவல் தெய்வங்களாகவே திகழ்ந்தனர். [32]

சங்க காலத் தமிழகத்தை ஆண்ட பேரரசு சேர, சோழ, பாண்டியர் என மூவகைப்பட்டிருந்தது. பற்பல சிற்றரசர்களும் இருந்துள்ளனர். இவர்களே அல்லாமல் குறுநில மன்னர்களும் இருந்துள்ளனர். சிற்றூர் தலைவர்களும், பேரூர் தலைவர்களுங் கூட மன்னர்களுக்குச் சமமாகப் போற்றப்பட்டு வந்துள்ளனர். அனைவரும் தத்தம் பகுதிகளைப் பாதுகாக்க மறவர்களையே நம்பி சிறுபடையெனவும், பெரும் படையெனவும் அமைத்துக் கொண்டனர். ஒருவருக்கொருவர் போரிட்ட காலத்தில் தத்தம் மறவர்களைப் பயன்படுத்தியதோடு, தமக்கு உதவும் பிற சிற்றரசர் மற்றும் குறுநில

மன்னர்களின் படை மறவர்களையும், அவர் தம் போர்க் கருவிகளையும் பயன்படுத்தியுள்ளனர். மன்னர்களுக்கு முதலிடம் எனக் கூறப்பட்டாலும், மறவர்களின் துணையின்றி அவர்கள் ஆண்டதில்லை.

சேர மன்னர்கள் மறவர்களுக்கு எல்லா வகையிலும் முதலிடம் தந்து சிறப்பித்த செய்திகள் பதிற்றுப்பத்தில் பரவலாக இடம் பெற்றுள்ளதைக் காணலாம். மறவர்களைச் 'சான்றோர்' எனப் புகழ்ந்து பாராட்டிய சிறப்பை மிகுதியாகப் பதிற்றுப் பத்தில் தான் காணமுடிகிறது. 'நோன்புரி தடக்கைச் சான்றோர் மெய்ம்மறை' ; 'சான்றோர் புரவல' ; 'ஏந்தெழில் ஆகத்துச் சான்றோர் மெய்ம் மறை' ; 'சான்றோர் பெருமகன்' ; 'கொலக்கொலக் குறையாத் தானைச் சான்றோர்' எனப் பாடப்பட்டிருப்பதைக் காணலாம்.

சோழர்கள் தத்தம் மறவர்களைப் பாராட்டிப் போற்றியதையும் காணமுடிகிறது. 'போர் எனில் புகலும் புனை கழல் மறவர்', 'வார்கோல் கொடுமர மறவர்', 'அஞ்சா மறவர் ஆட்போர்பு', 'மறவர் மலிந்ததன்' எனவும், பாண்டியர்கள் தத்தம் போர்ப் படை மறவர்களை, 'நெஞ்சுடை புகல் மறவர்', 'படை அமை மறவரும் உடையம் யாம்', என்றும் பாராட்டியதைக் காணமுடிகிறது. பிற சிற்றரசர்களும், குறுநில மன்னர்களுங்கூட இவ்வாறே பாராட்டிப் போற்றியதைக் கண்டறிய முடிகிறது. மன்னர் ஆணைப் படி போர்க்கோலம் பூண்டு போர்க்களத்தைப் போற்றிய மறவர் எனக் கூற இரு காரணங்கள் உண்டு. தம் உயிரைத் துச்சமெனக் கருதி போரிட்டு வெற்றிக்கொடி நாட்டத் துணைபுரிந்தவர் என்பது முதற் காரணம். மற்றொரு காரணம் முன்னோர் கற்பித்துச் சென்ற அற வழியில் போரிட்டு வெற்றிக் கொடி நாட்டியது. அதாவது, அறவழியே மற வழிக்கும் துணை என்பதை நிலை

நாட்டியதேயாம். அவர்கள் உயிரினும் மேலாகப் போற்றிய போர்ப் பண்புகளேயாம் !

'சங்ககாலம் மனிதனுக்கு முன்னுரிமையளித்த மனித நேயக் காலக் கட்டமாக விளங்கியிருந்ததை மேல்திசை, கீழ்த்திசை நாட்டு ஆய்வாளர்கள் சுட்டிக் காட்டுகின்றனர். தனிமனிதத் தன்மையிலும், அன்றாட வாழ்விலும், போர்க்களங்களிலும் தனிப்பட்ட ஒழுக்க நெறிகளைக் கடைப்பிடித்திருந்தனர்.

1. போரில் அஞ்சா நெஞ்சம், வீரம், உயிர் துறத்தல் இவை போற்றப்பட்டன.
2. போர் செய்வதை இன்றியமையாக் கடமையாக்கினர். தந்தையையும் கணவனையும் போரில் காணிக்கையாக்கிய பெண், போர் முரசு ஒலிக்கக் கேட்டதும் தன் ஒரே மகனைப் போருக்கனுப்பி மகிழ்ந்த வீரத்தாய் பற்றிய நிகழ்ச்சி இன்றளவும் சமுதாய நினைவில் வைக்கப்பட்டுப் பாராட்டப்படுகிறது.
3. முதுகில் காயம் படுவதைப் பேரிழுக்காகக் கருதி உயிர் துறந்தது.
4. ஆயுதம் இல்லா நிலையில் எதிரி நிலைகுலையும் போது அதை ஒரு வாய்ப்பாகக் கருதித் தாக்குவதைக் கோழைத் தனமாகக் கருதி கைவிட்டனர்.
5. போரில் மடிந்த வீரர்களைப் பெருமைப்படுத்தி நினைவூட்டப் பெருஞ்சோற்று விழா எடுத்தனர்'[33]

எனக்கூறும் ஆராய்ச்சியாளர் கருத்தை இங்கே ஒப்பிட்டு நோக்குவது சாலச் சிறந்தது. இவற்றிற்குரிய சங்கச் சான்றுகளும் சில உள.

மன்னுயிர் காக்கும் அன்புடை வேந்தர்க்கு மறத்துறையிலும் அறமே நிகழும் என்பதற்கு நெட்டிமையார் கூற்றுச் சான்று தருகிறது. 'எம் அம்பு கடி விடுதும், நும் அரண் சேர்மின்' எனக் கூறிய, 'அறத்தாறு நுவலும் பூட்கை,

மறத்தின் கொல்களிற்று மீமிசை கொடி விசும்பு நிழற்றும் எங்கோ!' போற்றிய போர்ப் பண்பேயாகும். தம் மறவர்களை ஏவி, 'ஆக்கள், பார்ப்பனியர், மாக்கள், பெண்டிர், பிணியுடையர், புதல்வரைப் பெறாதவர் அனைவரையும் பாதுகாப்பரண்களுக்கு அனுப்புக' எனக் கட்டளையிட்டதும், அவ்வாறே செய்து, பாதுகாக்க வேண்டியவர்களைப் பாதுகாத்த பிறகே பகை நாட்டிற்குள் சென்று போரிட்டனர். இது ஒரு வரலாற்றுச் சாசனம். என்றும் அழியா சாசனம். மன்னர் ஆணையை மதித்து அறத்தைப் போற்றவும் மறவர் துணை புரிந்தனர் என்பதற்கு இதுவே நல்ல சான்றாகும்.[34]

தம் மறவருடன் பகை நாட்டிற்குள் நுழைந்த கிள்ளி வளவன் தம் விருப்பம் போல் எதிர்ப்பு இன்றி பகை நாட்டின் காவல் மரத்தை வெட்டிய படி இருக்கிறான். போர் என்றால் எதிரிலும் மறவர்கள் இருந்து போரிடவேண்டும். அப்படிஇன்றி, தடுப்பார் யாருமின்றி பகைவரின் காவல் மரத்தை வெட்டி வீழ்த்துவது கோழைத்தனம் எனப் புலவன் கூறிப் போரை நிறுத்துகிறான்.

இதனை,

'கடிமரம் தடியும் ஓசை தன்னூர்
நெடுமதில் வரைப்பின் கடிமனை இயம்ப
ஆங்கு இனிதிருந்த வேந்தனொடு ஈங்குநின்
சிலைத்தார் முரசம் கறங்க
மலைத்தனை என்பது நாணுத்தகவு உடைத்தே'

- *(புறம் ; 36 ; 09-13)*

என்று புலவர் கூறி, சங்க காலத்துப் போர் மரபை நினைவுப்படுத்துகிறார்.

நலங்கிள்ளி என்பவன் ஆவூரை முற்றுகையிட்டான். நெடுங்கிள்ளி தம் கோட்டைக் கதவைத் தாழிட்டுக் கொண்டு போரிட வராமல் உள்ளேயே

பாதுகாப்பாக இருந்தான். இதைக் கண்ட கோவூர்கிழார் அவ்அரசனைப் பார்த்து, 'கோட்டைக் கதவைத் திறக்கச் செய்து போரிடு!' அல்லது சரணடைந்து விடு ! இவ்வாறு கோழையாக உள்ளே இருப்பது அரசனுக்கு அழகன்று' என்று கூறிப் போர் மரபை நினைவு படுத்தினார். அவர் நெடுங்கிள்ளியைப் பார்த்து,

'அறவை யாயின் நினதெனத் திறத்தல்
மறவை யாயின் போரொடு திறத்தல்
அறவையும் மறவையும் அல்லை யாகத்
திறவாது அடைத்த திண்ணிலைக் கதவின்
நீள்மதில் ஒருசிறை ஒடுங்குதல்
நாணுத்தக வுடைத்திது காணுங் காலே'

*- (புறம் ; 44 ; 11-16)*

என்று கூறிப் போர் மரபை நினைவுபடுத்தினார்.

காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார், பாண்டியன் இலவந்திகைப் பள்ளி துஞ்சிய நன்மாறனிடம், 'மாறனே ! பகைவர் நாட்டின் மேல் நீ படையெடுத்துச் செல்லுங் காலத்திலே, விளைவயலை வேண்டுமானாலும் கொள்ளையிடுவாயாக! பேரூர்களையும் எரியூட்டு வாயாக! நின் நெடுவேலால் பகைவரை அழித்துக் கொல்லினும் கொல்லுக! ஆனால், காவல் மரங்களை மட்டும் ஒரு போதும் வெட்டாதிருப்பாயாக !' என்று கூறிப் போர் மரபையும், பண்பையும் சுட்டிக் காட்டி நினைவுபடுத்துகிறார். இதனை அவர்,

'நீயே! பிறர்நாடு கொள்ளும்காலை அவர்நாட்டு
இறங்குகதிர் கழனிநின் இளையரும் கவர்க
நனந்தலைப் பேரூர் எரியும் நைக்க

மின்னுநிமிர்ந் தன்ன நின்னொளிறு இலங்குநெடுவேல்
ஒன்னார்ச் செகுப்பினும் செகுக்க என்னதூஉம்
கடிமரம் தடிதல் ஓம்புநின்
நெடுநல் யானைக்குக் கந்தாற் றாவே'

- *(புறம் ; 57 ; 05-11)*

என்று சுட்டிக் காட்டுவர்.

## மன்னரும் சான்றோரும் வழிபடும் மறவர்

நாடு காக்கும் நற்பண்பைப் பெற்று வாழ்ந்தவர்கள் சங்க காலத்து மறவர்கள். இவர்கள் வலிமையும், போர்த்திறனும் பெற்று வாழ்ந்ததால், 'வல்லான் வகுத்ததே வாய்க்கால்' என்ற கொள்கையை ஏற்காது, மன்னரும் சான்றோரும் காட்டிய நல்வழிகளையே பின்பற்றிப் போர்ப் பணிகளில் ஈடுபட்டனர். ஊர்க்காவலும், நாடுகாவலும் இவர்களால் சிறப்புற்றிருந்தன. மக்கள் கவலையின்றி இரவில் உறங்கத் தேவைப்படும் அனைத்தையும் செய்து நற்காவலுக்கு வழிவகுத்தவர்கள். எனவே, இவர்களை மன்னர்நன்கு போற்றிப் பாதுகாத்து வந்துள்ளதைக் காணலாம். சான்றோர்கள் இவர்களது கடமைகளைக் கண்டு வியந்து மக்களும், மன்னரும் அறியும் வண்ணம் பாடிப் பெருமைப் படுத்தினர்.

வயதும், அனுபவமும் மிக்க மறவர்களைத் தம் மெய்க் காவலர்களாக அமர்த்திப் பெருமை படுத்தியிருப்பதை முல்லைப் பாட்டும், நெடுநல்வாடையும் சுட்டிக் காட்டும்.

'நெடுநா ஒள்மணி நிழத்திய நடுநாள்
அதிரல் பூத்த ஆடுகொடிப் படாஅர்

சிதர்வால் அசைவளிக்கு அசைவந் தாங்கு
துகில்முடித்துப் போர்த்த தூங்கல் ஓங்குநடை
பெருமூ தாளர் ஏமம் சூழ'

- (முல்லை ; 50-54)

என முல்லைப்பாட்டு கூறும்.

'மன்னனுக்கு மெய்காப்பாளராக இருப்பவர்கள், அவன் நம்பிக்கைக்கு உரியவராய், நல்லொழுக்கம் உடையவராய் விளங்க வேண்டும்; எனவே, நீண்டநாள் தம்மிடம் பணியாற்றியவரையே மெய்க் காப்பாளராக நியமிப்பது அரசர்தம் வழக்கம்; அதனால் தான் அவர்கள் பெருமூதாளராய், முதிர்ந்த வயதினராய், விளங்கினர்'[35] என்று உரையாசிரியரும் கூறுவர்.

ரா.பி. சேதுப்பிள்ளை தாமியற்றிய 'தமிழர் வீரம்' என்ற நூலில் மன்னர்களும், புலவர்களும் மறவர்களைப் போற்றிப் பாராட்டியதை பலவாறு சான்றுகளுடன் எடுத்துக் காட்டுவர். போர்க்களத்தில் வெற்றி பெறுதற்குப் புயத்திண்மை மட்டும் போதாது; மனத்திண்மையும் வேண்டும். 'வினைத்திட்பம் என்பது ஒருவரது மனத்திட்பம் ' என்பது வள்ளுவர் வாய்மொழி.

மனத்திட்பமுடைய படைத்தலைவரைத் தமிழ் மன்னர் சிறப்பித்தனர் ஏனாதிப் பட்டமளித்துப் பாராட்டினர். அப்பட்டத்தின் சின்னம் ஓர் அழகிய மோதிரம். அதனை, அரசன் தன் கையால் அணியப் பெற்ற படைத்தலைவர் பெருமதிப்புக்கு உரியவராயினர்.

'. . . . .   . . . . போர்க்கெல்லாம்
தானாதி யாகிய தார்வேந்தன் மோதிரம் சேர்
ஏனாதிப் பட்டத்திவன்'

என்று நாட்டார் ஏத்தும் நலம் பெற்றனர். [36]

போர்க்களத்தில் மறவர்களின் தீர வீரச் செயல்களையும், நன்றிக் கடனையும் நேரில் காணும் புலவர்கள் மன்னிய புகழ் பெற்ற வீரர்களாகத் திகழ வேண்டுமென்ற எண்ணத்தோடு மக்களிடமும் மன்னரிடமும் எடுத்துக் கூறுவர். விரிச்சியூர் நன்னாகனார் பாடல் ஒன்றை இதற்குச் சான்று காட்டுவர்.

*'வேந்தற்கு ஏந்திய தீந்தண் நறவம்*
*யாந்தனக்கு உறுமுறை வளாவ விலக்கி*
*வாய்வாள் பற்றி நின்றனென் என்று*
*சினவல் ஓம்புமின் சிறுபுல் லாளர்!*
*ஈண்டே போல வேண்டுவன் ஆயின்*
*என்முறை வருக என்னான் கம்மென*
*எழுதரு பெரும்படை விலக்கி*
*ஆண்டு நிற்கும் ஆண்தகை யன்னே'*

*- (புறம் ; பாடல் ; **292**)*

'சிறு புல்லாளரே! வேந்தனுக்குத் தயாரித்த இனிய குளிர்ந்த மதுவை, யாம் இவனுக்கு ஏற்ற முறையிலே வளாவித் தருவதற்குள் பொறுக்காது சினந்து, தன் கைவாள் பற்றி நின்றான் இவன் எனச் சினமடையாதீர். இங்கே, நடந்தது போலவே, அவன் விரும்பினால் ,

'என்முறை வருக' என்று அமையாது, தானே விரைந்து சென்று பகைவர் பெரும்படையை விலக்கி அவரை வெற்றி கொண்டு நிற்கும் ஆற்றல் மிக்கவனன்றோ அவன்' எனப் புகழ்ந்து பாராட்டிப் போற்றுவர்.

ஆலியார் என்ற புறநானூற்றுப் புலவர் ஒருவர், 'தெளிந்த கள்ளைத் தான் பருகிச் சுவைமிக்க கலங்களை எமக்கும் தரும் இனிய பண்பினன். இப்போது, பகைவரின் காவலரண்களை முற்றுகையிட்டவனாக, இதழ்களை மடித்து

முழக்கமிட்டு, 'நீ முந்திச் செல்' என்று நம்மை ஏவாது, தானே முற்படச் செல்லுகின்றானே! இதுவோ அவன் வீரத்தின் மாண்பு ? !' எனப்பாடிப் புகழ்கிறார். அவர் பாடிய பாடல் இது :

'எமக்கே கலங்கல் தருமே தானே
தேறல் உண்ணும் மன்னே நன்றும்
இன்னான் மன்ற வேந்தே இனியே
நேரார் ஆரெயில் முற்றி
வாய்மடித்து உரறி 'நீமுந்து' என்னானே'

- *(புறம் ; பாடல் ; 298)*

மன்னரும், புலவரும் இணைந்து இத்தகு மறவர்களை நாடே புகழ்ந்து போற்றுமாறு செய்வது பழைய மரபாகப் போற்றப்பட்டது. வீரமரணம் எய்திய மறவர்கட்கு வீரக்கல்லாகிய நடுகல் நட்டுப் பாராட்டும் மரபு பழந்தமிழரின் பெருமைமிகு மரபாகும்.

'வீரரை வியந்து போற்றிய நாடு தமிழ் நாடு. போர் முனையில் விழுப்புண்பட்டு விழுந்தவர்க்கும், கடும் புலியைத் தாக்கி வென்ற காளையர்க்கும், இன்னோரன்ன வீரம் விளைந்தவர்க்கும் அமரரான பிறகு வீரக்கல் நாட்டிச் சிறப்புச் செய்தனர். வீரருக்கு நாட்டுதற்கேற்ற கல்லை முதலில் தேர்ந்தெடுப்பர்,எடுத்தக் கல்லைப் புனித நீராட்டுவர், வீரனுடைய பீடும் பேரும் அதில் எழுதுவர், உரிய இடத்தில் அதனை நாட்டுவர், மாலையும் மயிற் பீலியும் சூட்டுவர். இவ்வாறு நட்ட கல்லைத் தெய்வமாகக் கொண்டு வணங்கி வருவர்.' [37]

'நல்லமர்க் கடந்த நாணுடை மறவர்
பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்
பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்' - *(அகம் ; 08-10)*

என்று நோய்ப்பாடியார் என்னும் பெயர் பெற்ற புலவர் பாடியுள்ளதைக் காணலாம். போரினால் அழிந்த பகை நாடொன்று பாழ்பட்டு, காடாகி ஆறலைக் கள்வர் நடமாடும் அச்சந்தரும் பாலை நிலமாகியது. அந்நாட்டிற்காக வீரமரணம் எய்திய தறுகண் மறவர்களுக்காக நாட்டப்பட்ட நடுகற்கள் பரவலாக உள்ள அப்பகுதிகள் தற்பொழுது ஆறலைக் கள்வர் வாழுமிடமாகி விட்டது. ஆயினும், அந்த நடுகற்கள் அப்படியே போற்றப்பட்டு வந்தன என்பதை இப்பாடல் வாயிலாக நமக்குப் புலப்படுத்துகிறார். நல்ல போரை வென்று, வீழ்ந்த வீரர்களின் பெயரும் பீடும் எழுதி வழிகள் தோறும் நிறுத்திய மயிலிறகு சூட்டிய உயர்ந்த நடுகற்களின் முன்பு வேலை ஊன்றிச் சாத்திய பலகைகள், பகைவர் போர்க்களம் போன்று தோன்றும் என்கிறார்.[38]

## மறவர்தம் வரலாற்றுக் களஞ்சியம்

பழந்தமிழர் வரலாற்றை அறிய உதவும் பயனுள்ள நூல்களாகக் கருதப்படுபவைதான் சங்க இலக்கியங்கள். நமக்கு இன்று கிடைத்த மிகப் பழமையான நூலாகக் கருதப்படும் சங்க இலக்கியங்களில் அகப்பொருள் பாடல்கள் மிகுதியாகவும், பறப்பொருள் பாடல்கள் குறைவாகவும் உள்ளன. ஆயினும் வரலாற்றுச் செய்திகள் எல்லா நூல்களிலும் பரவலாக இடம் பெற்றுள்ளதைக் காணலாம். சமூக வாழ்வின் தாக்கம் மிகுதியாக அகப் பொருளில் இடம் பெற்றிருந்தாலும், அதன் நோக்கம் இல்லறத்திற்கு அடித்தளமாக அமையும் தூய அன்பு கொண்டோரின் தனித்தளமாக அமையும் தனித்தன்மைகளை எடுத்துக் கூறி, அடுத்துவரும் தமிழர்களுக்கு இல்லறம் சிறக்க 'வழிகாட்டி நூல்'களாக அமைய வேண்டுமென்பதாகும். புறப் பொருளில் முழுமையும் சமூகம் பற்றியே கூறப் பட்டதற்குரிய தலையாய காரணம்

அற்றைய அரசியலமைப்பே சமூகம் சிறக்கத் துணி புரிந்தன என்பதைத் தெளிவுபடுத்தவே. ஒரு பகுதி இல்லறம் சிறக்கக் தேவைப்படும் நெறிகளைக் கூறியதென்றால், மறுபகுதி சமூகம் சிறக்கக் தேவைப்படும் நெறிகளைக் கூறியவை எனக் கொள்ளல் பொருத்தமாகும். ஆனால், அவை அறநூல்கள் அல்ல. வரலாற்று நூல்களே.

வாழ்ந்து காட்டிய பழந்தமிழர்களின் வரலாற்று நிகழ்ச்சிகளை, வாழ்வியல் கூறுகளை, நாடகப் பாங்கில் எடுத்துக் காட்டிய நூல்கள் எனச் சங்ககால இலக்கியங்களை ஏற்றுக் கொள்வதே பொருத்தமுடையதாகும். மன்னர்களைப் பற்றிய செய்திகள் அனைத்தும் புறச்சான்றுகளோடு படைக்கப்பட்ட பாடல்களாகவே நமக்குக் கிடைத்துள்ளன. இவற்றுள் வரலாற்றுச் செய்திகள் மட்டும் இடம் பெறவில்லை. மக்களுக்குத் தேவைப்படும் சமூகம், அரசியல், மானுடம், பொருளாதாரம் தொடர்பான செய்திகளும் இடம் பெற்றுள்ளன. இவற்றுள் கற்பனைக்கு இடம் இல்லை. மாந்தர்களைப் புகழ்ந்து பாடிய பொழுது சில இடங்களில் உயர்வு நவிற்சியணிகள் இடம் பெறுகின்றன என்பதை மறுப்பதிற்கில்லை. இத்தகு கருத்துக்களை நீக்கி விட்டால், கிடைக்கும் பிற செய்திகள் எல்லாம் வரலாற்று உண்மைகளே என்பதை மறுப்பவர் எவருமிலர். ஆராய்ச்சியாளர் நன்கு முயன்று பிறநாட்டு வரலாற்று நிகழ்ச்சிகளோடு சங்க இலக்கியக் கருத்துக்களை ஒப்பிட்டு, அவற்றின் உண்மைத் தன்மைகளைத் தக்க சான்றுகளோடு நிலைநாட்டி விளக்கியுள்ளதை யாவரும் அறிவர். எனவேதான், நாம் சங்க இலக்கியங்களை வரலாற்று நூல்கள் எனத் துணிந்து கூற முடிகிறது.

'சங்கத்தின் காலம் ஏறக்குறைய கி.மு. 300 முதல் கி.பி. 300 என்று சொல்லலாம். இந்த அறுநூறு வருடகாலத் தமிழக வரலாற்றை அறிவதற்குப்

புறநானூறு முதலிய நூல்களே பெருந்துணை புரிகின்றன. கி.பி. முதல் இரண்டு நூற்றாண்டுகளில் தமிழகக் கடற்கரையோரமாக வந்து சென்ற பிளைனி, தாலமி, பெரிபுளூஸ் என்னும் நூலின் ஆசிரியர் எழுதி வைத்துள்ள குறிப்புக்கள் ஓரளவு துணை செய்கின்றன. வடமொழியில் எழுதப்பட்டுள்ள சாணக்கியர் பொருள் நூல், பிற்காலத்தில் எழுதப்பட்ட இலங்கை வரலாற்று நூல்கள் முதலியன சிறிதளவு உதவுகின்றன: தமிழகத்துக் குகைகளில் காணப்படும் பாலிமொழிக் கல்வெட்டுக்களும் மிகச் சிறிதளவு துணை புரிகின்றன. இவையனைத்தையும் கொண்டே சங்க கால வரலாறு துணியப்படும்.'[39] என்று கூறுவது நமக்கு நல்ல துணையாக அமைந்துள்ளது. கிடைத்த புறச்சான்றுகளைக் கொண்டு சங்க இலக்கியம் கூறும் செய்திகளை ஒப்பிட்டுப் பார்ப்பவர்க்கு, இதுவும் வரலாற்று நூல் என ஏற்கத்தக்க எல்லாத் தகுதிகளையும் பெற்று விளங்குகிறது எனத் தெளிவாகத் துணிந்து கூறலாம். இத்தகு வரலாற்று நூல்களாகிய சங்க இலக்கியங்கள் மன்னர்கள் வரலாற்றைக் கூற முற்படும் பொழுது மறவர்களின் வரலாற்றையும் இணைத்தே கூற வேண்டியுள்ளது. எனவேதான், சங்க இலக்கியங்களை 'மறவர்தம் வரலாற்றுக் களஞ்சியம்' எனத்துணிந்து கூறமுடிகிறது. ஒளிவு மறைவின்றிக் கூறப்பட்ட செய்திகள் பல உள்ளன. போற்ற வேண்டிய செய்திகள் மட்டுமன்று. மறுக்க வேண்டிய செய்திகள், மறைக்க வேண்டிய செய்திகள், புறந்தள்ள வேண்டிய செய்திகள், மனம் புண்படுமாறு செய்யும் வருந்தத்தக்க செய்திகள் ஆகியன இடம் பெற்றுள்ளன.

'பல துறைகளின் கருத்துக்களைப் பல தலைப்புகளில் எழுதி அகர வரிசையிட்டு அமைத்துத் தரும் நூல் தொகுதி ' [40] எனக் கலைக் களஞ்சியம் என்ற சொல்லுக்கு அகராதி நூல் பொருள் தரும். இதனடிப்படையில் சங்க நூல்களை மதிப்பிட முனைவார்க்கு, 'இல்லறக்கலை'; 'சமூகக்கலை' ;

'அரசியற்கலை '; 'மானுடக்கலை'; 'போர்க்கலை' பற்றிய செய்திகள் மிகுதியாகக் கூறப்படுவதால் கலைக்களஞ்சியம் என்றும் கூறவும் இட. மேற்படுகிறது. ஒரு புறம் நாட்டின் வரலாற்றைக் கண்டறிய உதவும் சங்க இலக்கியங்கள் மறுபுறம் வாழ்வியற்கலைகள் அனைத்தையும் கண்டறிய துணை புரிகின்றன எனத் துணிந்து கூறலாம்.

மன்னர்களும், புலவர்களும் மறவர்களின் பிரதிநிதிகளாகவே நின்று உறவு கொள்வதைச் சங்க இலக்கியங்களில் காணலாம். புலவர்கள் மன்னர்களையும் மறவர்களாகவே கருதிப் பாடியுள்ளதையும் காணும் பொழுது மன்னர்கள் தம் வரலாற்றுச் சிறப்பிற்குப் பெரும்பங்கு வகித்தவர்கள் மறவர்கள் என்பதைத் தெளிவாக் கண்டறிய முடிகிறது. வீரத்திற்கும் கொடைக்கும் நிலைக்களன்களாகத் திகழும் மன்னர்களுக்கு வீரத்தின் விளை நிலங்களாகத் திகழும் மறவர்கள், அவர்தம் கொடைப் பணிகள் சிறக்க பிறநாட்டுச் செல்வங்களைக் கொணர்ந்து அரண்மனைக் கருவூலத்தை நிரப்பும் பணியையும் செய்கின்றனர்.

பரணர் கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனைப் பாராட்டிப் பாடும் பொழுது,

> 'துய்வீ வாகை நுண்கொடி உழிஞை
> வென்றி மேவல் உருகெழு சிறப்பின்
> கொண்டி மள்ளர் கொல்களிறு பெறுக'

*- (ப.ப ; 43; 23-25)*

எனப் பாடியுள்ளதை இதற்குச் சான்று காட்டலாம். 'மேலே வாகைப்பூவும், நுண்கொடியாகிய உழிஞையின் பூவும் கலந்து சூடுகின்ற, வெற்றி பெறுதலிலே கொண்ட விருப்பும், பகைவர்க்கு அச்சத்தைத் தருகின்ற வலிமைச்சிறப்பும்,

பகைப்புலத்தே சென்று கொள்ளையிடலையுமுடைய வீரர்கள், கொல்லும் களிறுகளைப் பெறுவாராக!' எனக் கூறும் பகுதியில் இடம் பெற்ற 'கொண்டி மள்ளர் ' என்ற கலைச்சொல் நமக்கு அறிமுகப்படுத்தப்படுவதைக் காணலாம். கொண்டி மள்ளர் என்ற சொல்லிற்கு 'பகைநாட்டை வென்ற பிறகு கொள்ளையடித்துத் தம் மன்னரின் கருவூலத்தை நிரப்பும் பணி செய்யும் மறவர்கள்' என்று பொருள் கூறுவர்.

மற்றொரு பாடலில் பரணர், 'நெய்த்தோர் தொட்ட செங்கை மறவர்' எனக் குறிப்பிட்டுள்ளார். இங்கு 'நெய்த்தோர்' என்ற சொல் குருதியைக் குறிக்கும். வேற்படையால் பகைவர்களைத் தாக்கியதால், அவர்தம் மார்பகத்திலிருந்து குருதி ஆறாக ஓடத் தொடங்கியது. தாம் வீசிய வேலை மீட்ட பொழுது அக்குருதி அம்மறவர்தம் கைகளைச் செங்குருதியால் படரச் செய்தது. இதனால் அம்மறவர், 'பகைவர் மார்பில் வெளிப்பட்ட குருதி படிந்து செங்கைகளாகப் பெற்றுத் திகழும் மறவர்' எனப் பரணர் பாராட்டினார்.

காக்கைப்பாடினி நச்செள்ளையார் ஆடு கோட் பாட்டுச் சேரலாதனைப் புகழ்ந்து பாடும் பொழுது, 'மறவர்களின் வாழ்வாதாரமே போர்ப் பணிதான் ' என்பதை நயம்பட உரைப்பர்.

' தாங்குநர் தடக்கையானைத் தொடிக்கோடு துமிக்கும்
எஃகுடை வலத்தர்நின் படைவழி வாழ்நர்'

*- (ப.ப ; 51 ; 29-30)*

எனக்குறிப்பிடுவர். இதற்கு, 'போர்க்களத்தே தம்மை எதிர்த்தாரது பெரிய கைகளையுடைய யானைகளின் தொடியணிந்த கொம்புகளை வெட்டி வீழ்த்தும் வாளினைக் கையிலேந்திய வெற்றி மறவர்கள், நின் படையாக அமைந்து, அதன்

மூலம் வாழ்க்கை நடத்துவோராவர்' எனப் பொருள் கூறுவர். இங்குப் போர் வாளினை 'எஃகு' எனக்குறிப்பர்.

'இடியையொத்த பகைவரைத் தம் வெற்றி முழக்கதாலேயே தாக்கி அழிவடையச் செய்பவர் சேரமானின் படை மறவர்கள். அவர்கள் வெண்மையான பனந்தோட்டினாலே கட்டிய ஒள்ளிய குவளைப் பூ மாலையினை அணிபவர் ; வாளது வாயாலே வடுப்பெற்ற மாட்சி பொருந்திய தழும்புகள் கொண்ட உடலினர். அவர்கள், பகைவரைக் கொல்லுதற்குரிய தத்தம் படைக் கருவிகளை ஏந்தியபடி வருவர். இன்று இனிதான பலவற்றையும் உண்டே மாய் இன்புற்றேம் ஆயினும், இனி நாளைக்கு மண்ணாலே கட்டப் பெற்றுள்ள பகை வேந்தரது கோட்டை மதில்களைக் கைப்பற்றிய பின்னரே யாம் உணவு உண்ணுவோம் என வஞ்சினம் கூறினர்'[41] என்று மறவர்தம் வஞ்சினமொழிகளை நமக்கு எடுத்துக் கூறுவர்.

புறநானூற்றுப் புலவர்களுள் ஒருவர் மதுரை வேளாசான். அவர் பார்ப்பான் ஒருவன் தூது சென்றதால் பெரும்போர் தடுத்து நிறுத்தப்பட்டதென்பர். 'சொல்லிய சொல்லோ சிலவே' என்று கூறித் தூதுவனின் சிறப்பைக் கூறுவர். திருவள்ளுவர் இதைத்தான்,

'கடனறிந்து காலங் கருதி இடனறிந்
தெண்ணி உரைப்பான் தலை'

- (குறள் ; 688)

எனத் தூதுவரின் பெருமையை எடுத்துக் கூறுவர். அத்தகு தூதிற் சிறந்த பார்ப்பான் இரவில் சென்று மன்னனைப் பார்த்துச் சொல்ல வேண்டியதைச் சொன்னான். போர் நின்று விட்டது.

'வயலைக் கொடியின் வாடிய மருங்குல்

உயவ லூர்திப் பயலைப் பார்ப்பான்'

என்று முதலில் பார்ப்பானைப் பற்றிக் கூறுகிறார். 'வயலைக் கொடி போல வாடிய இடையினையும், வருத்தத்தால் ஊர்ந்து செல்வது போலும் நடையினையுமுடைய பார்ப்பான்' எனப்புலவர் கூறுவர்.

'எல்லி வந்து நில்லாது புக்குச்

சொல்லிய சொல்லோ சிலவே . . . . . .'

என்றார்.

அடுத்து,

'அவன் இரவில் வந்து எங்கும் நில்லாது அரண்மனை உள்ளே சென்று மன்னரிடம் சொல்லிய சொற்கள் சிலவேயாகும் ' என்றார்.

பிறகு,

'. . . . . .    . . . .    . . . . அதற்கு

ஏணியுஞ் சீப்பு மாற்றி

மாண்வினை யானையும் மணிகளைந் தனவே'

என்று கூறிப் பாடலை முடித்தார்.

'இளமை நிறைந்த பார்ப்பான் கூறிய சொல்லின் பயனாக, ஏணியையும், சீப்பையும் நீக்கி, போர் பல செய்து மாட்சிமைப்பட்ட யானைகளையும், அவற்றின் பக்கத்தே கட்டப்பட்ட மணிகளையும் நீக்கி விட்டனர். போரும் நின்றது' என முடித்தார்.

மதுரை மருத நிளநாகனார், 'வேளாண் தலைமகன் ஒருவன் தன் மகளை மணக்கவிரும்பிக் கேட்ட மன்னன் வேண்டுகோளை மறுத்துச் சினந்து போருக்கு ஆயத்தமானான். அதனால், அந்த ஊரே அழியப் போகிறது' என

வருந்திப் பாடுகிறார். வேளாண் தலைமகன் போரில் அழிவதும், அதனால் அவன் ஊரும் அழிவதும் உறுதியாயிற்று. அதற்குக் காரணம் அவன் பெற்றெடுத்த மகளின் அழகே, அவள் பிறந்த ஊரை அழிக்கப் போகிறது எனக் கூறி வருந்துகிறார். அவளை, 'அணங்காயினாள் தான் பிறந்த ஊர்க்கே ' எனக் கூறி வருந்துகிறார்.

'நுதிவேல் கொண்டு நுதல்வியர் தொடையாக்
கடிய கூறும் வேந்தே தந்தையும்
நெடிய அல்லது பணிந்துமொழி யலனே!
இஃதிவர் படிவம் ஆயின் வைஎயிற்று
அரிமதர் மழைக்கண் அம்மா அரிவை
மரம்படு சிறுதீப் போல
அணங்கா யினள்தான் பிறந்த ஊர்க்கே'

*- (புறம் ; பாடல் 349)*

என வருந்திப் பாடினார்.

பெண் கேட்டு வந்தவன் அரசன். நெற்றி வியர்வையைத் தம் கைவேலால் துடைப்பவன். சினத்தோடு வேளாண் தலைவரிடம், 'பெண்ணைத் தருவாயா! மாட்டாயா?' எனக்கேட்டான். தந்தையும் சினத்தோடு 'தருவதற்கில்லை' என்றான். அதனால், பேரழகியாகப் பிறந்த வேளாண் தலைவனின் மகளால் அந்த ஊரே பெருமரத்தில் பட்ட சிறுதீ போல விரைவில் அழியப் போகிறது. இவ்வாறு உறுதிபடக் கூறி, 'அப்பெண் மகள் , தான் பிறந்த ஊர்க்குத் துன்பம் விளைவிக்கும் பெண் தெய்வமானாள் என் செய்வது' என வருந்திப் பாடலை முடிக்கின்றார்.

இவ்வாறு, சங்க இலக்கியம் ஒரு வரலாற்று நூலாக மட்டுமல்லாமல், மறவர்களைப் போற்றிப் பாராட்டும் கலைக்களஞ்சியமாகவும், அவர்தம் தொடர்பான அனைத்தையும் அறிந்து கொள்ள உதவும் நிகண்டாகவும், சொற்பொருள் விளக்கந் தரும் பேரகராதியாகவும் விளங்கித் தமிழர்தம் மறப்பண்பைக் கண்டறிந்து வியந்து பாராட்டி மகிழச் செய்வதைக் காணலாம். வீரத்தில் காதலும், காதலில் வீரமும் இரண்டறக் கலந்து பின்னிப் பிணைந்து தமிழர்தம் பண்டைய நாகரிகம் மற்றும் பண்பாடு பற்றி அறியப் பேருதவி புரிகின்றன.

**ஆய்வு முடிவுகள்**

1. ஆய்வின் மையமாக அமைந்த மறவர் பற்றிய நேரிடையான செய்திகள் இந்த இயலில் இடம் பெறுவதற்கேற்ப சங்க இலக்கியங்கள் ஆய்வு செய்யப்பட்டன.
2. சங்க இலக்கிய நூல்களை வரையறை செய்து மறவர்தம் சிறப்புகளை எடுத்துக் காட்ட மேற்கொண்ட அணுகுமுறைகளை எடுத்துக் காட்டி விளக்கம் தரப்பட்டது.
3. சங்க இலக்கியம் மறவரெனத் தனித்துச் சுட்டிக் காட்ட அமைத்துக் கொண்ட வரையறைகள் முறையாக எடுத்துக் காட்டப்பட்டன.
4. மறவர்களைச் சங்க இலக்கியம் எவ்வெப் பெயர்களால் சுட்டி சிறப்பு செய்கின்றன என்பதைப் பட்டியலிட்டு நிரல் நிரையாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.
5. சங்க இலக்கியம் மறவர்களை அறிமுகப்படுத்தும் தனித்தன்மைகளைச் சான்றுகாட்டி, அறிமுகமாகும் மறவர்கள் பற்றிய கருத்துகள் வெளியிடப்பட்டுள்ளன.

6. தொல்காப்பியரின் வழிகாட்டுதலைக் கொண்டு, திருக்குறளின் நெறிமுறையில் சங்க இலக்கியம் வரையறை செய்து குறிப்பிடப்படும் மறவர்க்கான இலக்கணங்கள் முறையாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

7. சங்க காலத் தமிழ்ச் சமூகம் மறவர்களைக் கண்டறிந்த விதம் விளக்கப்பட்டுள்ளது.

8. சமூகச் சான்றோரும் புலவரும் பாராட்டிய மறவர்கள் எதற்காக, எவ்வாறு பாராட்டப் பெற்றனர் எனவும் விளக்கப்பட்டது.

9. தமிழக மூவேந்தர்கள் மட்டுமன்றி சிற்றரசர்கள், குறுநில மன்னர்கள், குழுத்தலைவர்கள், சிற்றூர் மற்றும் பேரூர் இனத் தலைவர்கள் தத்தம் மறவர்களை எவ்வாறெல்லாம அடையாளங் கண்டு பயன்படுத்தி வந்தனர் என்பதும் விளக்கப்பட்டது.

10. மறவர்கள் தான் தமிழ்ச் சமூகக் காவலர்களாகத் திகழ்ந்து பாதுகாத்து வந்தனர் என்பதைத் தக்க சான்று காட்டி விளக்கம் தரப்பட்டுள்ளது.

11. மறவர்கள் தமக்கேயுரித்தான தனித்தன்மைகளோடு தாம் பங்கு பெறும் போர்க்களம் சிறப்புறுமாறு போற்றி வந்த வீரப் பண்புகள் பட்டியலிட்டு முறையாக எடுத்துக் காட்டப்பட்டன.

12. மன்னரும் சான்றோரும் தனித்தும், இணைந்தும் மறவர்க்குச் சிறப்புகள் பல செய்தவற்றைச் சான்று காட்டி விளக்கப்பட்டன.

13. சங்க இலக்கியம் ஒரு வரலாற்று நூல் என்பதை ஆய்வாளர்கள் பல ஆண்டுகளுக்கு முன்பே சான்று காட்டி நிறுவினவற்றை எடுத்துக் காட்டி, அதன் வழி மறவர்தம் வரலாற்றுக் களஞ்சியமாகவும், கலைக்களஞ்சியமாகவும் திகழ்ந்து வருவதற்கான காரண காரியங்களையும் சான்றுகளையும் எடுத்துக் காட்டி விளக்கப்பட்டன.

14. இவ்வாறு ஒன்றோடொன்று தொடர்புள்ள அனைத்தையும் உள்ளடக்கி, சங்க இலக்கியச் சான்றுகளோடு விளக்கம் பெறப்பட்டு, மறவர் மாண்புகள் நிலைநாட்டத் தேவைப்படும் அனைத்தும் எடுத்துக் காட்டப்பட்டன.

# அடிக்குறிப்புகள்

1. கலித்தொகை, குறிஞ்சிக்கலி, பாடல் 47, அடி - 02.
2. முனைவர். வீ. நாகராசன், உரையாசிரியர், பத்துப்பாட்டு, இரண்டாம் பகுதி, மூலமும் உரையும், முதற்பதிப்பு, ப- 152.
3. மேற்படி நூல், ப-244.
4. நச்சினார்க்கினியர், உரையாசிரியர், தொல்காப்பியம், பொருளதிகாரம் முற்பகுதி, மறுபதிப்பு, பக் 207-209.
5. பரிமேலழகர், திருக்குறள் உரை, எட்டாம் பதிப்பு, ப-237.
6. மேற்படிநூல், ப-239.
7. டாக்டர். சு. முத்தையா, சங்க காலமறவர், முதற்பதிப்பு, ப-17.
8. மேஜர். கதிர்மகாதேவன், பழந்தமிழர் வீரப்பண்பாடு, மதுரை, முதல்பதிப்பு, ப-293.
9. அகம் 213; அடி 01 (2) புறம் 55 ; அடி 15
10. புலியூர் கேசிகன், பதிற்றுப்பத்து உரை, மறுபதிப்பு பக் 102 மற்றும் 105.
11. திருமுருகாற்றுப்படை அடிகள் 256-276.
12. மேஜர். கதிர்மகாதேவன், பழந்தமிழர் வீரப் பண்பாடு, முதல் பதிப்பு, பக். 100-101.
13. நச்சினார்ச்சினியர், உரையாசிரியர், தொல்காப்பியம், பொருளதிகாரம் முற்பகுதி, மறுபதிப்பு, பக். 140-141.
14. டாக்டர். ந. சுப்பு ரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, நான்காம் பதிப்பு, பக். 272-274.
15. டாக்டர். மு. நிலாமணி மற்றும் டா. கலா.கே. தாக்கர், வர்த்தமானன் தமிழ்-தமிழ் அகராதி, நான்காம் பதிப்பு, ப-555.

16. மேற்படிநூல் , ப - 597.

17. டாக்டர். மா. இராசமாணிக்கனார், தமிழ்நாட்டு வரலாறு, முதற்பதிப்பு, 2008, பக். 34-35.

18. திரு. பெ. இளவரசு, வீ.கே.டி. பாலனின் தலைமைப்பண்பு, முதற்பதிப்பு, பக். 159-160.

19. முனைவர். இரா. மோகன் (உரையாசிரியர்) பத்துப்பாட்டு முதற்பகுதி, மூலமும் உரையும், மூன்றாம் பதிப்பு, ப.347.

20. பதிற்றுப்பத்து பாடல்களும் அடிகளும் : 14-12 , 55-01, 58-11, 67-17-18, 82-13.

21. மறவர்களையும் சான்றோர்களாக ஏற்கத்தக்க பண்புகளைச் சுட்டுவன, பாடல்களும் அடிகளும், பதி-ப, 41-18, 57-01, புறம் : 31-09, 93-09, 399-19-20, மது-கா - 726, நெடு - 172.

22. நெடுநல்வாடை - பாடலடிகள் - 169-188.

23. முல்லைப்பாட்டு - பாடலடிகள் - 68-76.

24. மதுரைக் காஞ்சி - பாடலடிகள் - 728-729.

25. மேற்படிநூல் பாடலடிகள் - 730-731.

26. மேற்படி நூல் பாடலடிகள் - 732-736.

27. மேற்படி நூல் பாடலடிகள் - 737-743.

28. மேற்படி நூல் பாடலடிகள் - 744-747.

29. குறிஞ்சிப் பாட்டு, பாடலடிகள் - 169-175.

30. புறநானூறு - பாடல் எண் - 270.

31. திரு. வே.தி. செல்வம், தமிழக வரலாறும் பண்பாடும், 4ஆம் பதிப்பு, ப-111.

32. மேற்படி நூல் - பக் 112-113.

33. மேற்படி நூல் - பக் 114-115.

34. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை, உரையாசிரியர், புறநானூறு முதல் பாகம் (1-200 பாட்டுக்கள்) , மறுபதிப்பு, பக் 25-27.

35. முனைவர். இரா. மோகன் (உரையாசிரியர்), பத்துப்பாட்டு, முதற்பகுதி, மூன்றாம் பதிப்பு, ப-343.

36. திரு. ரா.பி. சேதுப்பிள்ளை, தமிழர் வீரம், 12ஆம் பதிப்பு, ப-96.

37. மேற்படி நூல் - ப- 91.

38. திரு. ந.சி. கந்தையா, அகநானூறு, அமிழ்தம் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2003, பக். 45-46.

39. டாக்டர். மா. இராசமாணிக்கனார், தமிழ்நாட்டு வரலாறு, முதற்பதிப்பு, ப-40.

40. திரு. மு. நிலாமணி மற்றும் கலா.கே. தாக்கர், வர்த்தமானன் தமிழ் - தமிழ் அகராதி, நான்காம் பதிப்பு, ப- 312.

41. பதிற்றுப்பத்து, பாடல் எண் 58, பாடலடிகள் 02-08.

# இயல் நான்கு

## சமூகக் கட்டமைப்பில் மறவர்கள்

சமூகக் கட்டமைப்பில் மறவர்கள் என்ற இவ்வியல், 'நாடும் சமூகமும், அரசும் சமூகமும், சமூக நிறுவனங்களும் துறைகளும், மறவர்க்கான பதவிகளும் பணங்களும், அரசாணைகளும் சமூகக் கட்டமைப்புகளும், அரசாணையும் மறவர்பங்கும், சமூக நம்பிக்கைகளும் மறவர்களும், போர்க்கால மறவரும் அமைதிக்காலத்து மறவர்களும், மக்கள் கண்ணோட்டத்தில் மறவர், சமூகக் கட்டமைப்பில் மறவர் பெற்ற பெரும்பங்கு', என்ற தலைப்புகளில் மறவர்களுக்கும் சமூகக் கட்டமைப்பிற்கும் எந்தெந்த வகையில் உறவும் பங்கும் இருந்தன என்பதைச் சங்க இலக்கியங்களில் கண்டறிந்த கருத்துக்களை ஆய்வுநெறியோடு மதிப்பீடு செய்து முறைப்படுத்திக் கூறுகிறது.

சங்க காலத்துச் சமூகக் கட்டமைப்பிற்கு அடித்தளம் அமைத்தது இயற்கையே. அதன் துணைக் கொண்டு தமிழன் தாம் வாழும் இயற்கைச் சூழலுக்கேற்ப தம் வாழ்வியல் தேவைகளுக்கேற்ப தம்மைச் சார்ந்தாரின் வழிகாட்டுதலுடனும், துணையுடனும் செய்த செயல்கள், சாதித்த சாதனைகள் எண்ணிறந்தவை. அவற்றையே சங்க இலக்கியங்கள் நமக்குப் படம் பிடித்துக் காட்டுகின்றன. இயற்கையோடு இயைந்த வாழ்வு வாழத் தொடங்கிய தமிழன், அதனால் உருவாகும் இடர்களையும் கண்டறிந்தான். அவற்றிலிருந்து தம்மைப் பாதுகாத்துக் கொள்ளும் வழிமுறைகளையும், செயல்களையும், உதவும் கருவிகளையும், நிறுவனங்களையும் படிப்படியாகக் கண்டறிந்து அவையனைத்தும் வலுப்பெறுமாறு செய்தான். அனைத்திற்கும் தமிழ்ச் சமூகமே மையமாக அமைந்திருந்ததால், அதன் கட்டமைப்பில் அதிகம் கவனம் செலுத்தினான். இயற்கையிடமிருந்து பெற்றுக் கொள்ள வேண்டியவற்றைப்

பெற்றுக் கொண்டான். தம் அறிவாலும், உழைப்பாலும், அனுபவத்தாலும் உருவாக்கிக் கொண்டவற்றை தம் தேவைக்கேற்ப பயன்படுத்திப் பாதுகாப்புடன் வாழமுயன்று வெற்றி பெற்றான்.

இத்தகு பணிகளைச் சமூக நோக்கில் செய்ய வேண்டிய கடப்பாடு இருந்ததால்தான் தமிழன், 'யாதும் ஊரே ! யாவரும் கேளிர்' என்ற சமூகத்தத்துவத்தை முன் வைத்துச் சிந்தித்துச் செயல்பட முயன்றான். இதற்கு உதவக் கூடியவற்றை முதலில் உற்று நோக்கினான். 'நிலம், நீர், வளி, விசும்போடு, ஐந்தும் கலந்த மயக்கம் உலகம் ' என அறிந்து, அவற்றின் ஆற்றல்களைத் தம் பாதுகாப்பிற்கு முதலில் பயன்படுத்திக் கொண்டான். பிறகுதம் நல்வாழ்விற்கு நல்வழியில் உதவுமாறு அவற்றை ஒழுங்குப்படுத்திக் கொண்டான். அவன் அமைத்துக் கொண்ட ஒழுங்கு முறையைத் தான்,

*'நடுவண் ஐந்திணை நடுவணது ஒழியப்*
*படுதிரை வையம் பாத்திய பண்பே'*

*- (தொ ; பொ ; அகம் ; நூ - 02)*

என்று கூறினர். இவற்றுள்தான் தமிழன் சமூகத்தை உருவாக்கி, அதன் பேருருவான நாட்டையும் அமைத்துக் கொண்டான். சமூகத்திற்கேற்ப நாடுகள் என்பதால் தான் சேரநாடு, சோழநாடு, பாண்டியநாடு என இன்றியமையாமைக் கேற்ப மூன்றாக அமையுமாறு செய்து கொண்டான். எல்லோரும் தமிழர்கள்தான். எல்லாம் தமிழ்ச் சமூகம்தான். ஆனால், இயற்கையால் எல்லாம் ஒன்று போல் அமையாததால் தான் அவற்றின் போக்கிற்கேற்ப மூன்றாக அமைத்துக் கொள்ள வேண்டிய கடப்பாடு உடையவனாயினான். இவையும் தற்பாதுகாப்பை நோக்கியே உருவானவை என்பதை யாவரும் மறுக்க இயலாது.

மக்களால் உருவானது சமூகம் ; சமூகம் தம் பாதுகாப்புத் தேவையைக் கருதியும், நல வாழ்வைக் கருதியும் எல்லை அமைத்துக் கொண்டு உருவாக்கியதே நாடு. எனவே, நாடு என்பது, அதற்குள் இடம் பெற்ற சமூகம் கருதியே, அச்சமூகத்துள் இடம் பெற்ற மக்கள் நலம் கருதியே இவையெல்லாம் அமைத்துக் கொள்ள வேண்டிய தேவை ஏற்பட்டது. இவற்றுள் மறவர் என்போர் முக்கிய உறுப்பினர்களாகக் கருதப்பட்டனர். நாடு கெடுத்து காடாக்கியதுமன்று ; காடு கெடுத்து நாடாக்கியதும் மறவர்தாம் என்பதைச் சங்க இலக்கியம், வரலாற்றுநூல்போல் நின்று நமக்கு விளக்கந் தருகிறது. நாட்டின் அனைத்துப் பணிகளுக்கும் அரசன் முதலாக ஆயிரம் பேர் பொறுப்பேற்க வேண்டியிருந்தாலுங்கூட மறவர் ஏற்றுக் கொண்ட பாதுகாப்பெனும் பொறுப்பே இல்லறத்தைக் காத்தது ; துறவறத்தையும் காத்தது; நாட்டையும் காத்தது. ஏன் ? எப்படி ? என்ற வினாவிற்கு விடை தேடவே சமூகக் கட்டமைப்பைப் பற்றிய தேடல் இன்றியமையாததாகி விட்டதெனலாம்.

## நாடும் சமூகமும்

வடநாடு பெற்ற பெருவாரியான மாற்றங்களைப் போல யாதொன்றும் நடவாது, தமிழ் நாட்டு மக்கள் அமைதியாகத் தம் வாழ்க்கையை நடத்திச் சென்றதற்கும், நெடுங்காலம் அவர்தம் சால்புகளும், சமூக இயல்புகளும் தனித்தன்மைகளோடு சிறந்து விளங்கியதற்கும் பெருந்துணையாக நின்றது தமிழ்நாட்டின் இயற்கை அமைப்பேயாகும் என அறிஞர் கூறுவர். [1] மக்களின் வாழ்க்கைக் கூறுகளை மாற்றியமைக்கக் கூடிய இயல்பு பெருமழைக்கும், வறட்சிக்கும், குளிருக்கும், வெயிலுக்கும் உண்டு.

'காற்றும், மழையும், தட்ப வெப்பங்களும் மக்கள் வாழ்க்கை இயல்புகளை மாற்றக் கூடியவை என்பது விஞ்ஞானங் கண்ட உண்மை. அவ்வாறே மக்களின் இயல்பு அவர்கள் வாழும் இடங்கட்கு ஏற்ப அமைகிறது என்பது உண்மை. அரிஸ்டாட்டில், கோபினோ, போடின், மான்டஸ்கியூ ஆகிய அறிஞர்கள் இவ்வுண்மையில் பெரு நம்பிக்கை கொண்டிருந்தனர். இதற்குச் சார்பாகப் பல சான்றுகள் உலக வரலாற்றிலும் காணக் கிடக்கின்றன'[2]

எனவே, சங்ககாலத்துத் தமிழ்நாடும் இவ்வாறுதான் அமைந்திருந்ததென்றும், இயற்கை ஆணைக்குட்பட்டுதான் எல்லாம் செயல்பட்டனவென்றும் அறியமுடிகிறது. சங்கப் பாடல்கள் பல இயற்கையைத் துணைக் கொண்டு மானுட வாழ்வை மதிப்பீடு செய்யும் நெறியை நயம்படக் கூறியிருப்பதைக் காணலாம்.

'மண்டிணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்பு தைவரு வளியும்
வளித்தலைஇய தீயும்
தீ முரணிய நீரு மென்றாங்
கைம்பெரும் பூதத் தியற்கை போலப்
போற்றார்ப் பொறுத்தலுஞ் சூழ்ச்சிய தகலமும்
வலியுந் தெறலும் அளியு முடையோய் !'

- (புறம் ; பா02 ;01-08)

என்று முரஞ்சியூர் முடிநாகனார் பாடியுள்ளதைக் காணலாம். இவர் சேரமான் பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதனைப் புகழ்ந்து பாடும் பொழுது, 'நிலம், விசும்பு,

காற்று, தீ, நீர் என்ற ஐம்பெரும் பூதங்களின் இயற்கைபோலப் பொறை, சூழ்ச்சி, வலி, தெறல், அளி என்ற ஐந்தும் உடையவன்' எனப் பாராட்டுவர்.

வீரமாயினும், விவேகமாயினும், நன்னெறியாயினும், செந்நெறியாயினும் இயற்கையை முன்வைத்து எளிதாக விளக்கி உணர்த்த வேண்டியதை உணர்த்தும் பேரறிவைப் பெற்றவர்களே சங்கப் புலவர்கள் என்பதற்கு இவ்வாறு நூற்றுக்கணக்கான சான்றுகளைச் சங்க இலக்கியத்தில் காணலாம். நாடு நலம் பெற இயற்கையின் நற்றுணை இன்றியமையாத தெனப் புலப்படுத்த புலவர்கள் முயன்றதற்குரிய ஏதுக்கள் பற்பல வாயினும் அடிப்படை நாடும் சமூகமும் தான் என்பதை யாரும் மறுக்க இயலாது.

'தேய்த லுண்மையும் பெருக லுண்மையும்
மாய்த லுண்மையும் பிறத்த லுண்மையும்
அறியா தோரையும் அறியக் காட்டித்
திங்கள் புத்தேள் திரிதரும் உலகத்து
வல்லா ராயினும் வல்லுந ராயினும்
வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி
அருள் வல்லை யாகுமதி! ........'

- *(புறம் ; பாடல் 27; 11-18)*

என்பதை ஒப்பு நோக்கின், இதில் தெளிவு பிறக்கும். உறையூர் முதுகண்ணன் சாத்தனார் மன்னர்க்குரிய முதல் பாதுகாப்புப் பணி வறுமையில் வாடுவோரைக் கண்ணோட்டத்துடன் உறவு கொண்டு பாதுகாப்பதே எனக் கூறுவர். இதுவே, பாதுகாப்பின் தொடக்கம் என்பதை உணர்த்தவே, இயற்கையைச் சான்றாக்கி விளக்குவர். மன்னர்களும் மறவர்களாகத் திகழ இத்தகு பாதுகாப்பின் உணர்வு இயல்பாக வர வேண்டுமெனப் புலவர் விரும்புகிறார்.

சோழன் நலங்கிள்ளியைப் பார்த்து புலவர், 'அரசே ! விழுமிய குடியிற் பிறந்து அரசு வீற்றிருந்தோர் பலருள்ளும் புலவர் வலவன் ஏவா வானவூர்தி ஏறி விண்ணுலகு செல்வர் என்று அறிவுடையோர் சொல்லக் கேட்டுள்ளேன். வளர்தலும், தேய்தலும், பிறத்தலும், இறத்தலும் உடையது உலகம். இவ்வுலகத்தில் வருந்தி வந்தோர்க்கு வேண்டுவன அருளும் வன்மை தான் வெற்றிக்கு மாண்புதரும். நீ அதனைச் செய்க' எனக்கூறி, 'மறம் போற்ற அறம் போற்றுக !'[3] எனக் கட்டாயப்படுத்துவதைக் காணலாம்.

'தமிழகம் பன்னூறு ஆண்டுகள் பாண்டிநாடு, சோழநாடு, கொங்குநாடு முதலிய அரசியற் பிரிவுகளுக்குட்பட்டு கிடந்ததற்கு அதன் இயற்கையமைப்பு தான் காரணம் என்பது தெளிவு ' எனக்கூறும் திறனாய்வாளர், 'மேற்குத் தொடர் மலைகளும், கிழக்குத் தொடர் மலைகளும் இரு கடற்கரை யோரங்களிலும் அமைந்து தமிழகத்தின் நீலகிரி மாவட்டத்தில் ஒன்றாய் இணைகின்றன. இவ்விரு தொடர்கட்குமிடையே சமவெளி ஒன்று அமைந்துள்ளது ; மேற்குத் தொடருக்கு மேற்கிலும் கிழக்குத் தொடருக்குக் கீழ்ப்புறத்திலும் சமவெளிகள் உள்ளன. நீலகிரிக்குத் தெற்கிலும் சமவெளிகள் உள்ளன. இவையேயன்றிப் பலகுன்றுகளையடுத்தும் சமவெளிகள் அமைந்துள்ளன. இச்சமவெளிகளில் வாழ்ந்த மக்கள் ஆங்காங்கு தனித்தனி நாட்டு மக்களாகவே வாழ்ந்து வந்தனர்' எனக் கூறி, அன்று பற்பல சமூகக் கூறுகள் இயற்கையின் அடிப்படையிலேயே அமைய நேரிட்டதென நமக்குத் தமிழ்ச் சமூகங்களை அறிமுகப்படுத்துவர்.

அவ்வறிஞரே, 'மலைகளும் குன்றுகளும் நாட்டில் பல இடங்களில் குறுக்கிட்டதால் சங்க காலத்திலும் அதற்கு முன்பும் மருதம், முல்லை, குறிஞ்சி, நெய்தல், பாலை என்று நிலப்பாகுபாடுகள் ஏற்பட்டு அவற்றிற்கேற்ப மக்களின் ஒழுக்கமும், பண்பாடுகளும், வாழ்க்கை முறைகளும் அமையலாயின '[4] எனக்

கூறிச் சமூகக் கட்டமைப்பிற்கு எவையெவை, எவ்வாறு உதவி வந்தன என்பதை நமக்குப் புலப்படுத்தியுள்ளனர்.

## அரசும் சமூகமும்

இயற்கையின் பெருங்கொடையால் அமைக்கப் பெற்ற சங்ககாலச் சமூகம் எல்லாவற்றிலும் சிறப்புற்று வளர, வாழ அரசு என்னும் நிறுவனம் அமைக்க நேரிட்டது. 'அரசு' என்ற ஒரு நிறுவனம் சமூகத்தில் அமைந்திராவிடில் சமூகம் எளிதாகச் சீரழிய வழி ஏற்படும். சமூக உறுப்பினர்களாகிய மக்களும் தத்தம் மனம் போன போக்கில் வாழத்தலைப்பட்டு, தாமும் அழிந்து, தம்மைச் சார்ந்த சமூகமும் அழியக் காரணமாகி விடுவர்.எனவே, அனைத்தையும் கட்டுப்படுத்திச் சமூகத்தைக் காத்து வர 'அரசு' என்ற நிறுவனம் இன்றியமையாததாகி விட்டது.

'ஒரு குறித்த எல்லையில் அரசியல் ரீதியாக அமைந்த மக்களின் அரசு எனப்படுவது ஒரு சுதந்திரமான அரசாங்கத்தையுடைய ஒரு நிலப்பரப்பை ஆக்கிரமித்துக் கொண்டுள்ள ஒழுங்கான மக்கள் குழு'[5] எனப் புரூஸ்டர் கூறுவதை இங்கே குறிப்பிட்டு ஒப்பிட்டுக் காண்பது நல்லது. வாஸ்கின் என்பவர் அரசின் முக்கிய கூறுகள் நான்கு என்பர். அவை மக்கள் தொகை, நிலப்பரப்பு , அரசாங்கம், இறைமை எனக் கூறுவர்.[6] இதனை நம் சங்க கால மக்கள் அனுபவ முதிர்ச்சியினால் கண்டறிந்து சமூகம் நலம் பெற, இவற்றைச் சமூகக் கட்டமைப்பாகவே அமைத்துக் கொண்டனர் என்பதைச் சங்க நூல்கள் இயல்பாகவே சுட்டிக் காட்டுவதைக் காணலாம்.

இந்த நான்கின் தொடர்பான செந்நெறிகளைத் திருவள்ளுவர் நீதியாக நமக்குப் புகட்டுவதைத் திருக்குறளில் காணலாம். மக்களைப் பற்றி, 'குடிமை, மானம், பெருமை, சான்றாமை, பண்புடைமை, நாணுடைமை' முதலான

அதிகாரங்களின் வாயிலாகக் கூறுவர். நிலப்பரப்பு பற்றி 'நாடு மற்றும் அரண்' முதலான அதிகாரங்களின் வாயிலாக விளக்குவர். அரசாங்கம் பற்றிய செய்திகளையே மிக விரிவாக அரசியல், அங்கவியல் பகுதிகளில் இடம் பெற்ற பல அதிகாரங்களின் வாயிலாகக் கூறுவர். இறைமை பற்றிய கருத்தை இறைமாட்சியில் அதிக ஆழமாக எடுத்துக் காட்டுவர். 'அரசன், முறை செய்து மக்களைப் பாதுகாத்து வருவதால்தான், மக்களுக்கு இறைவனாகக் கருதப்பட்டு வணங்கப்பட்டு வருகிறான்' என வள்ளுவர் கூறுவதைக் காணலாம்.

மோசி கீரனார், 'நாடாளும் வேந்தனாவான், இவ்வுலகிற்கு யானே உயிர், ஏனை நெல்லுமன்று, நீருமன்று என்பதை அறிந்தொழுகும் அரசுமுறை உயிர் நிலையாம்' [7] என்று கூறுவதையும் காணலாம்.

இறைமை பற்றிக் கூறப்புகுந்த பரணர், 'சமூகத்திற்கு அரசும், அரசர் குழாமும் அறவழிப்பட்ட பாதுகாப்பிற்கும், மறவழிப்பட்ட பாதுகாப்பிற்கும் பொறுப்பாவர்' எனக் கூறுவர்.

'அறுகுளத் துகுத்தும் அகல்வயற் பொழிந்தும்
உறுமிடத் துதவா உவர்நில மூட்டியும்
வரையா மரபின் மாரி போலக்
கடாஅ யானைக் கழற்காற் பேகன்
கொடை மடம்படுத லல்லது
படைமடம் படான்பிறர் படைமயக் குறினே'

- *(புறம் ; பாடல் - 142)*

'வற்றிய குளத்தின் கண்ணே பெய்தும், அகன்ற விளை நிலத்தின் கண்ணே சொரிந்தும், இவ்வாறு குளத்தும் விளை நிலத்தும் பெய்யாது களர்நிலத்தை நிறைத்தும் எவ்விடத்தும் வரையாத மரபினையுடைய மழைபோல, மதமிக்க

யானையினையுடைய கழல் புனைந்த காலையுடைய பேகன், கொடையிடத்துத் தான் அறியாமைப்படுதலல்லது, பிறர் படை வந்து கலந்து பொரின், அப்படையிடத்துத் தான் அறியாமைப் படான்' எனக் கூறி, சமூகத்திற்கும் அரசுக்கும், அரசனுக்கும் இடையே உருவாகியுள்ள திடமான நல்லுறவு அறத்தாலும், மறத்தாலும் அமைந்ததென்பர்.

## சமூக நிறுவனங்களும் துறைகளும்

அரசுக்குத் தேவைப்படும் நான்கு உறுப்புகளுள் ஒன்று அரசாங்கம். இதுவே, சமூகத்தை இயக்கும் நிர்வாக இயந்திரமாகக் கருதப்படுகிறது. இவற்றுள்தான் இடந்தோறும் பிறரைப்போல பல்வகைப் பட்ட மறவர்களும் இடம் பெறுகின்றனர். அரசால் உருவாக்கப்படும் நிறுவனங்களும் துறைகளும் தான் சமூக நிறுவனங்களாகக் கருதப்படுகின்றன.

'மக்களின் ஒன்றுபட்டு வாழும் நோக்கம் ஓர் ஒழுங்கான கட்டுக்குளமைந்த விதிமுறைகளின் படி அமைந்திருந்தால்தான் வளமுறும். அவ்வாறு கட்டுகளை அமைத்து அதன் ஒழுங்கான நடைமுறைகளைப் பரிசீலிக்கும் அங்கமே அரசாங்கமாகும். அனைத்ததிகாரம் உடையது அரசாங்கம்'[6] எனக் கூறுவது இங்கு நோக்கத்தக்கது. நிறுவனங்களும், துறைகளும் நிறைந்த அரசாங்கம் நன்கு செயல்பட அரசியலமைப்புத் தேவைப்படுகிறது. இது ஓர் அரசின் பல்வேறு அங்கங்களின் அதிகார வரம்பைக் குறித்தது. மக்கள் ஒரு புறமும் அதன் அங்கங்கள் மறுபுறமும் இருக்க இவற்றிற்கிடையே உள்ள தொடர்பினைக் குறித்ததே அரசியலைப்பு ஆகும்.

லூயிஸ் என்னும் அரசியலாய்வறிஞர் 'ஒரு சமூகத்திற்குள்ளும் சமுதாயத்திற்குள்ளும் நடைபெறும் இறையாமை அதிகாரத்தின் ஏற்பாடு

பற்றியும், பகிர்வுகள் பற்றியும் கூறுவது அரசியலைப்பு'[9] எனக்குறிப்பிடுவர். இவ்வாறு கூறப்படும் அரசு - அரசாங்கம் - அரசியலமைப்பு எனப்படும் மூன்றும் சிறக்க உதவுபவை தான் நிறுவனங்களும் துறைகளும் ஆகும்.

சங்ககால அரசு, 'மன்னர்கள் அரசு' என அழைக்கப்பட்டது. எல்லா அதிகாரமும் அவரிடமே குவிந்திருந்தன. ஆனால், அங்கே சர்வாதிகாரம் தலைதூக்கவில்லை. மக்களுக்காகவே மன்னர்கள் என்ற கோட்பாடே போற்றப்பட்டு வந்தது. அறிவிலும், பண்பிலும் சிறந்த அமைச்சர்கள் வழிகாட்ட அதன் வழியே அனைத்தும் நடந்துவந்ததைத் தெளிவாகக் காணமுடிகிறது.

'அருளும் அன்பும் நீக்கி நீங்கா
நிரயங் கொள்பவ ரோடொன்றாது காவல்
குழவி கொள்பவரின் ஓம்புமதி'

- (புறம் ; 05; 05-07)

என நரி வெரூஉத் தலையார், சேரமான் கருவூரேறிய ஒள்வாட் கோப் பெருஞ்சேரலிரும் பொறையைப் பாடிய முறை காணின் தெளிவாகும்.

சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னியை ஊன்பொதி பசுங்குடையார் பாடிய பாடலின் கருத்தையும் நோக்குதல் நலம். புலவர் சோழனைப் பார்த்து, 'நின்னை வழிபட்டொழுகு வோரை விரைய அறிவை பிறருடைய குற்றம் சொல்லுவாரது வார்த்தையைத் தெளியாய் நீ மெய்யாக மனத்தான் ஆராய்ந்து அறுதியிடப்பட்ட கொடுமையை ஒருவன் பாற்காணின், அதனை நீதி நூற்குத்தக ஆராய்ந்து, அத்தீமைக்குத் தகத்தண்டம் செய்வை' எனக் கூறிப் பாராட்டுவர்.

'வழிபடு வோரை வல்லறி தீயே
பிறர்வழி கூறுவோர் மொழிதே றலையே

நீமெய் கண்ட தீமை காணின்

ஒப்ப நாடி அத்தக ஒறுத்தி '

- (புறம் ; 10; 01-04)

மதுரை மருதனிளநாகனார், பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனைப் புகழ்ந்து பாடும் பொழுது இவ்வாறே, அவனது நல்லாட்சியை நினைவு படுத்திப் பாராட்டுவர்.

'அறநெறி முதற்றே யரசின் கொற்றம்

அதனால் நமரெனக் கோல்கோ டாது

பிறரெனக் குணங்கொல் லாது

ஞாயிற் றன்ன வெந்திற லாண்மையும்

வானத் தன்ன வண்மையும் மூன்றும்

உடையை யாகி யில்லோர் கையற

நீநீடு வாழிய !'

- (புறம் ; 55; 10-17)

இத்தகு நல்லாட்சிக்கு உதவும் நிறுவனங்கள், துறைகள் ஆகியவை பற்றிய செய்திகள் நேரிடையாகக் கூறப்படாவிடிலும், அவற்றின் செயல்கள் பற்றிய செய்திகள் விரிவாகக் கூறப்படுகின்றன. ஊராட்சி, நகராட்சி, பஞ்சாயத்துக்கள், அமைச்சரவை, படைத்துறை, கல்வித்துறை, உழவுத்துறை, கைத்தொழில் துறை, காவல்துறை போன்றவற்றின் செய்திகள் பரவலாகக் கூறப்பட்டுள்ளதைக் காணலாம். இவற்றுள் ஊர்க்காவல், நகர்க்காவல், நாடுகாவல் தொடர்பான பணிகளும், மறவர்தம் கடமைகளும் பிறபணிகளோடு, பிறபணியாளர்களும் சிறப்பித்துக் கூறப்படுவதையும் காணமுடிகிறது. [10]

'மானிட இனத்தின் நாகரிகக் கூறுகளுள் அரசியலும் ஒன்று. அத்தகைய அரசியல் வழி அறியும் மதிப்புகளைச் சங்கப் பாடல்களால் மிக நன்றாக அறியலாம்' [11] எனப் பேராசிரியர் கூறுவதையும் காணலாம்.

## மறவர்க்கான பதவிகளும் பணிகளும்

'சங்க நூல்கள் தமிழரின் போரையும் போர் முறையையும் பற்றி விரிவாகக் கூறுகின்றன. அக்காலத்து வாழ்ந்த தமிழர் இயற்கையாகவே மறப்பண்பு படைத்தவராக விளங்கினர். அவர்களுடைய பழக்க வழக்கம், தொழில், விளையாட்டு யாவும் போர்ப் பண்புடன் திகழ்ந்தன. தமது பிள்ளைகளின் மார்பில் ஐம்படைத்தாலி அணிந்து இன்புற்றனர். சங்கு, சக்கரம், தண்டாயுதம், வாள், வில் ஆகிய ஐந்து கருவிகளின் உருவங்கள் அமைந்த இத்தகு தாலியைப் பிறந்த ஐந்தாம் நாளில் பிள்ளைகளுக்கு அணிந்தனர். இத்தகு தாலியை அணிந்த சிறு பிள்ளைகளைப் பற்றி, 'பொன்னுடைத் தாலியென் மகன்' என்று அகநானூறும், 'தாலிகளைந்தன்று மிலனே' என்று புறநானூறும் எடுத்துக் கூறுகின்றன. புலியின் பல்லைக் கோத்துச் செய்த தாலிகளையும் இவர்கள் அணிந்திருந்தனர் என்பதை, 'புலிப்பற் றாலிப் புதல்வன்' எனக் குறுந்தொகையும், 'புலிப்பல் கோத்த புலம்புமணித் தாலி' என அகநானூறும், 'புலிப் பற்றாலிப் புன்றலைச் சிறாஅர்' என புறநானூறும் குறிப்பிடுகிறது.

விளையாட்டுக் காலங்களில் சேவற்கோழி, ஆட்டுக்கடா, ஏறு முதலியவற்றைத் தம்முள் ஒன்றோடொன்று மோதிப் போர் செய்யும்படி பயிற்றிப் போர் செய்யவிட்டு, அதனைப் பார்த்து மகிழ்வர். வளவிய இதழை உடைய குளவியும் குறிஞ்சியும் வாடும்படி ஏறுகள் தம்மிற் பொருதுநின்ற ஆரவாரத்தை,

'வள்ளிதழ்க் குளவியுங் குறிஞ்சியுங் குழைய

நல்லேறு பொரூஉங் கல்லென் கம்பலை'

- (மலை ; 334-333)

என மலைபடுகடாம் குறிக்கின்றது. 'ஏறுகள் பொருதுவதனாற் சேறாகும் இடத்தைப் பற்றி பட்டினப் பாலை பாடுகின்றது.'[12] எனத் திறனாய்வாளர் கூறுவதிலிருந்து மறம், மறப்பண்பு, மறவர் என்பது தமிழ் மண்ணிற்கு இயல்பாய் கிடைத்த பெருஞ்செல்வம் எனத்துணிந்து கூறலாம். எனவேதான், தமிழ் மண்ணில் பிறந்த எல்லாரும் மறவர் எனப் போற்றப்பட்டனர். இதனைத் தான் சங்க இலக்கியம் நிலை நாட்ட முயல்கிறது. பெண்களுக்குக் கூட இத்தகு மறப்பண்பு இயல்பாகவே இருந்ததையும் குறிப்பிடுவர். இதனைக் குறிப்பிடவே 'மூதின் மகளிர் ' என்ற பொருள் சார்ந்த சொல்லைப் பயன்படுத்தியுள்ளனர்.

மறவர்களைச் சான்றோர் எனக்குறிப்பிட்டு அழைத்துப் பெருமைபடுத்தியதைப் பதிற்றுப் பத்திலும், புறநானூற்றிலும் காணமுடிகிறது. இதனால், மன்னர்களிடம் இவர்களுக்கு இருந்த பெருமை வெளிப்படுவதோடு, இதன் காரணமாகவே இவர்கட்குப் பதவிகள் பல வழங்கிச் சிறப்பு செய்தனர் எனத் தெரிய வருகிறது. ஐம்பெருங்குழு, எண்பேராயம் போன்ற அரசவைக் குழுக்களில் இடம் பெற்றிருந்தனர். நம்பிக்கைக்குரிய மெய்க்காவலர்களாக இருந்து மன்னர்களைப் பாதுகாக்கும் பெரும் பேறு பெற்றனர். இவர்களுக்கெனத் தனித்துக் காவல்துறை ஒன்றை அமைத்துப் பல பதவிகளை வழங்கி, தெருக்காவல், ஊர்க்காவல், நகர்க்காவல், நாடுகாவல் எனக் கூறப்படும் அனைத்துக் காவல்களுக்கும் மறவர்களே பொறுப்பு எனும் நிலையை மன்னர்கள் உருவாக்கித் தந்தனர். இவையல்லாது பகைநாட்டுப் போரில் பங்குபெறும் போர்ப் பணிகளும் தேவைப்படும் பொழுதெல்லாம்

வழங்கப்பட்டன. இத்தகு பெருமை பெற மறவர்கள் இயல்பாகப் பெற்றிருந்த மறப்பண்பே காரணம் என்பதைப் பரவலாகக் காணமுடிகிறது.

'போரென்று கேட்டால் அதனை விரும்பி ஆரவாரிக்கும் சிவந்த கண்களை உடைய வீரர் தமிழர். ஊரிலுள்ள மன்றின்கண் தூங்கும் முழவினது காற்றெறிந்து தெளித்த ஓசையையுடைய கண்ணின் ஒலியைக் கேட்பின், அது போர்ப் பறையென மகிழ்வர். போரென்று கேட்பின் அது விரும்பும் மறவரை, அரசன் பறவைகள் மூலம் போருக்குக் கூடாத நிமித்தம் கண்டால் பகையிடத்து ஏவான். அதனால், மனம் உடைந்து தம்முடைய பூரித்த தோள்களைத் தட்டி ஒருவரோடொருவர் பொருது மடிய வேண்டுமென்னும் மறப்பண்பு கொண்டு நிற்பர். இவர்கள் போரினைத் தமது பொழுது போக்காகக் கொண்டனர்' [13]

சமூகக் கட்டமைப்பிற்கென இத்தகு மறவர் பெற்ற பதவிகளும் பணிகளும் எல்லோராலும் விரும்பிப் பாராட்டப் பட்டதுமின்றி, அதனால் சமூகம் பெற்ற பயன்களையும், பாதுகாப்பையும் கண்டு மன்னர் முதல் பாமரர் வரை மகிழ்ச்சியடைந்து கவலையின்றி வாழ்ந்ததையும் சங்கப்பாடல் பகரும்.

'தேர்வழங்கு தெருவில் நீர்திரண்டு ஒழுக
மழையமைந் துற்ற அரைநாள் அமயமும்
அசைவிலர் எழுந்து நயம்வந்து வழங்கலின்
கடவுள் வழங்கும் கையறு கங்குலும்
அச்சம் அறியாது கையறு கங்குலும்
மற்றை யாமம் பகலுறக் கழிப்பி'

- *(மது.கா; அடிகள் 648-653)*

எனப் பாடியதற்கு உரையாசிரியர், 'காவலர், களிற்றின்நிரையைப் பார்க்கும் புலிபோல ஒற்றிச் செல்பவர். துஞ்சாமை, அஞ்சாமை, அறிந்தோர் புகழும்.

ஆண்மை, நூல்வழிப் பிழையாமை, அசைவின்மை, ஆற்றலுடைமை ஆகிய இயல்புகளை உடையவர். மக்கள் அச்சம் அறியாது வாழ்வதற்குக் காவலர்களின் அச்சம் அறியாமை காரணமாகும் ' [14] எனக் கூறுவதிலிருந்து இவர்தம் பணி, சமூகக் கட்டமைப்பிற்கு எவ்வளவு இன்றியமையாததெனத் தெள்ளத் தெளிவாக அறிய முடிகிறது.

'வாழ்க்கையின் இலட்சியத் தடங்களான மனித நேய மணி நெறிகளை வலுப்படுத்துவதோடு மட்டும் சங்கத் தமிழர்கள் நின்றுவிடவில்லை. ஊனும் உதிரமும் எடுத்த மனிதன் இயல்பிலேயே பலவீனமானவன் என்பதை உணர்ந்து மனிதநேய வாழ்க்கை நெறிகளுக்குச் சரிவு ஏற்படும் இடங்களில் அவைகளைப் பாதுகாத்து நிலைநிறுத்த வழிவகைகளை வகுத்துச் சொல்லியுள்ளார்கள். சமுதாயப் பொறுப்பு வாய்ந்த இந்த அறிஞர்கள் வகுத்துரைத்த மணி நெறிப் பாதுகாப்பு நடவடிக்கைகளை, அறிஞர்கள் மட்டுமல்லாமல் சாதாரணப் பொது மக்களும் தக்க தருணத்தில் உறுதியாகச் செயல்படுத்தியிருக்கிறார்கள்' [15] என்று கூறும் திறனாய்வாளர் கருத்திற்கு மதுரைக் காஞ்சி சுட்டும் மறவர்தம் சமூகப் பணிகள் நல்ல எடுத்துக்காட்டாக அமைந்திருப்பதைக் காணலாம்.

## அரசாணைகளும் சமூகக் கட்டமைப்புகளும்

அரசாணைகள் என்பது சட்டங்களை நடைமுறைப்படுத்த விடுத்த ஆணை என மட்டும் நினைத்து விடக்கூடாது. அவ்வப்பொழுது சமூக நலங்கருதி, சமூகக் கட்டமைப்பு சிதையாமல் இருக்க வேண்டுமென்ற உயர் எண்ணத்தால் பிறப்பிக்கப்படும் ஆணைகளுக்குத்தான் அதிக வேகமும், பயனும் உருவாகும் என்பது பெரியோரின் அனுபவமுதிர்ச்சி. மனுநீதிச் சோழனின் ஆட்சிமுறைகளையும், அவன் நீதியை நிலை நாட்ட விடுத்த ஆணையும்

இதற்குத் தக்கச் சான்று எனக் கூறலாம். அவன் மிகச் சிறந்த வீரனும் மறவனுமாகத் திகழ்ந்ததால்தான் இத்தகு ஆணையைப் பிறப்பித்துத் தம் ஒரே மகனை இழக்க நேரிட்டாலும், நீதியை நிலை நாட்ட மேற்கொண்ட மறவழிப்பட்ட அறப்பண்பைச் சமூகக் கட்டமைப்பு நன்கு உறுதிப்படுத்தவே மேற்கொண்டான் என்பது தெளிவு. இதைத்தான் திருவள்ளுவர்,

'வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉங் கோடா தெனின் '

*- (குறள் ; 546)*

என்று கூறுவதை இங்கு நினைவிற்கொள்ள வேண்டும்.

அரசாணைகட்கு உட்படுவதில் 'தூது' மிகச் சிறந்த ஒன்று என்பதை யாவரும் அறிவர்.

'இறுதி பயப்பினும் எஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாம் தூது'

*- (குறள் : 690)*

என்ற திருக்குறள், 'அரசரது ஆணைக்குட்பட்டு, வேற்றரசரை நோக்கி தூது செல்லும் பொழுதும், தூதின் கருத்தை உரைக்கும் பொழுதும் அச்சமின்றி மறப்பண்போடு எடுத்துரைக்க வேண்டும். அதுவே, தம் அரசனுக்கு நன்மையும், பெருமையும் சேர்க்கவல்லது' என்று கூறுவதைக் காணலாம்.

தொண்டை நாட்டையாண்ட வேந்தர்க்குத் தொண்டைமான் என்பது பெயர். அதியமான் காலத்தே தொண்டை நாட்டையாண்ட தொண்டைமான், அதியமான் பால் பகைமை கொண்டான். தன்பால் படைவலி மிக்கிருப்பதாக எண்ணி, அவ்வேந்தன் செருக்குற்றான். அவனது, அறியாமையை யறிந்த அதியமான், போரின் கொடுமையையும், அதன்கண், அவன் வலியிழந்து

கெடுவதன் உறுதியையும், அதனால் நாட்டுக்கும் நாட்டு மக்கட்கும் நேரும் கேட்டையும் தெளிந்து கொள்ளுமாறு அறிவித்தற்கு ஔவையாரை அவன்பால் தூது விட்டான். ஔவையார் அவன்பாற் சென்று சேர்ந்தார். தொண்டைமான் தன் படைப் பெருமையை அவருக்குக் காட்ட எண்ணி, அவரைத் தன் படைக் கலக் கொட்டிலுக்கு அழைத்துச் சென்று பல்வேறு படைக்கலங்களைக் காட்டினான். அவன் கருத்தறிந்த ஔவையார் அதியமான் படைக்கலன்களைப் பழிப்பது போலப் புகழ்ந்தும் தொண்டைமான் படைக்கலங்களைப் புகழ்வது போலப் பழித்தும் கூறியுள்ளதைப் புறநானூற்றுப் பாடலொன்றில் காணலாம்.[16]

அரசாணைக்குட்பட்டு ஒற்றர் பணியில் ஈடுபட்டோரும் மறவர்களாகவே கருதப்பட்டனர். அவர்களும் சமூகக் கட்டமைப்பு குலைந்து விடாமல் இருக்கத் தம் பங்கிற்குத் தக்கவாறு பல மறப்பண்புகளைப் பெற்றுச் செயலாற்றி வந்துள்ளதையும் இலைமறை காய் போல சங்க இலக்கியங்களுள் காணமுடிகிறது. ஒற்றர் என்பதால், அவர்தம் பணிகள் வெளிப்படையாகக் கூறப்படவில்லை என்பதையும் காணமுடிகிறது. எனவே, திருவள்ளுவர் கூட 'ஒற்றாடல்' என அதிகாரம் அமைத்து, அதனை அரசர்மேல் ஏற்றிக் கூறினார். பரிமேலழகர், 'பகை, நொதுமல், நட்பு என்னும் மூன்று திறத்தார் மாட்டும் நிகழ்ந்தன அறிதற்கு ஒற்றரை ஆளுதல்' எனக் கூறுவர். திருவள்ளுவரும்,

'வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதார் என்றாங்
கனைவரையும் ஆராய்வ தொற்று'

- *(குறள் : 584)*

என்று கூறுவர். சமூகக் கட்டமைப்புக்கு இஃது பெரிதும் உதவும் என்பதை எண்ணியே இவ்வாறு கூறினார் எனலாம். இதுவும் மறப்பண்பின் ஒரு பகுதியே என்பர்.[17]

**அரசாணையும் மறவர் பங்கும்**

தம் மக்களைப் பலவகைத் தீங்குகளினின்றும் காத்தல் அரசன் கடமையாகும். கள்ளர், கொள்கைக்காரர் முதலியோரிடமிருந்து நாட்டைப் பாதுகாக்க வேண்டியவன் அவன். எனவே, தெருக்காவலை அமைத்தான்; நகரையும், ஊரையும் காவல் செய்வதற்கு காவற்படைகளையும் அமைத்தான். ஊர்க்காவலர் இராக்காலங்களில் ஊரைக் காவல் செய்பவர்கள். நள்ளிரவில் இவர்கள் சூளேந்திய கையுடன் திரிவார்கள். இக்காவலர் நெடிய நாவமைந்த மணிகளை ஒலிப்பதுண்டு. இம்மணிகள், 'காவலை உடைய தலைக்கடை, புழைக்கடை வாயில்களைப் பாதுகாத்துக் கொள்க' எனக் கூறுமாறு போல ஒலிக்கும். மனைகள் தோறும் இக்காவல் மணிகள் ஒலித்த வண்ணம் இருக்கும். இதற்கு முழுப் பொறுப்பேற்றுச் சமூகக் கட்டமைப்பு பாதிக்காவண்ணம் பார்த்துக் கொள்ளும் பெரும் பணியை மறவர்களே செய்து வந்தனர்.

நகரங்களில் உள்ள பற்பல தெருக்களை முறையாகப் பாதுகாத்து வர அரசர்கள் ஏற்பாடு செய்து வர ஆணை பிறப்பிப்பதோடு, தேவைப்படும் வசதி வாய்ப்புகளையும் செய்து கொடுப்பர். இதில் பெரும் பங்கு வைப்போர் மறவர்கள் தான். வழிப்போக்கரை வழியலைக்கும் கள்ளரிடமிருந்து காப்பாற்றுவதே இவர்களுடைய முக்கியமான கடமையாகக் கருதப்பட்டது. இளந்திரையன் நாட்டிலே வழியலைக்கும் கள்ளர் இல்லையென உருத்திரங்கண்ணனார் பாடுகின்றார். அவன் அமைத்த காவலர் படையின் சிறப்பே இதற்குப் பெருந்துணை புரிந்ததெனலாம். இதனால், சமூகக் கட்டமைப்பு குலையாமல், மக்கள் தத்தம் கடமைகளைத் தவறாமல் செய்துவர முடிந்தது.

சிறந்து விளங்கிய உள்நாட்டு வியாபாரத்தின் பாதுகாவலுக்காகச் சந்திகளில் வீரர் நிறுத்தப் பட்டிருந்தனர். கழுதையின் முதுகில் மிளகுப் பொதிகளைக் கொண்டு செல்வோர்க்குத் தக்க காவலர்களாக மறவர்கள் செல்வதைப் பெரும் பாணாற்றுப் படைகூறும். வில்லைக் கையில் ஏந்தியபடி தத்தம் குடியிருப்பை இளைய மறவர் பாதுகாக்கும் பணியை விருப்பத்தோடு செய்வர். நற்றிணை, 'கல்லா மழவர் வில்லிடை விலங்கிய, துன்னரும் கவலை அருஞ்சுரம்' காத்ததைக் குறிக்கும். இவ்வாறு, சமூகத்தை ஒட்டு மொத்தமாகப் பாதுகாக்கும் பணிகளில் பெருங் பங்காற்றி வந்த மறவர்களைப் பற்றிய செய்திகளைச் சங்க இலக்கியங்களில் காணலாம்.

வணிகர்களே தாம் செல்லும் வழிகளைப் பாதுகாக்கும் பொறுப்பை ஏற்றிருந்தனர். அவர்கள் சட்டையும் செருப்பும் அணிந்து, தோளிலே வாளைத் தொங்க விட்டுச் சென்றார்கள். அவர்கள் காலன் போல ஈட்டியை எய்வார்கள். அவர்களுடைய இரு மருங்கிலும் விளங்கிய வரிகள் விரவிய கச்சிலே வாள்கள் கட்டப்பட்டுத் தொங்குவன. அவ்வாள்கள் வெள்ளை நிறப் பிடியை உடையன ; மலையிலூர்ந்து செல்லும் பாம்பைப் போன்றன. அவர்கள் உள்ளங் காலைப் பாதுகாக்கச் செருப்பு அணிந்திருப்பர் ; சட்டைகளும் அணிந்திருப்பர் என்று பெரும் பாணாற்றுப்படை கூறுகின்றது. இவ்வாறு, சமுதாயக் காவலுக்குத் தேவையான ஆணைகள் மன்னர்களால் பிறப்பிக்கப்படுவதும், மறவர்கள் பெரும்பங்கேற்று சமூகக் காவலில் கண்ணுங் கருத்துமாய் இருப்பதும் அன்றாடப் பணிகளாக இருந்தன. [18]

மன்னர் ஆணை கிடைத்தாலும், கிடைக்காவிடிலும், 'இவைதம் பணி' என உணர்ந்து உடன் பங்கேற்று நாடு பகையின்றியும், அச்சமின்றியும் எல்லாக் கட்டுக்கோப்புடனும், கட்டுப்பாட்டுடனும் சிறப்புற்று விளங்க மறவர் பணி

புரிந்தவற்றையும் சங்க இலக்கியம் எடுத்துக்காட்டும். 'வழுவில் வன்கை மழவர்' என்றும், 'செருப்புகல் மறவர்' என்றும், 'மறப்படை நுவலும் அரிகுரற் றண்ணுமை, இன்னிசை கேட்டதுன்னரு மறவர்' என்றும் புகழ்ந்து போற்றப்பட்டனர் எனலாம்.

## சமூக நம்பிக்கைகளும் மறவர்களும்

சங்க மக்களுக்கு இயல்பாகவே பல நம்பிக்கைகள் இருந்ததை இலக்கியம் எடுத்துக் காட்டுகின்றன. அதற்கு முன்னோர்கள் வாழையடி வாழையாக வந்த மரபுகளை மதித்துப் போற்றிய பண்புகளே காரணமாக அமைந்திருந்தன. இறை வழிபாடு, நடுகல்லாகிய மூத்தோரை வழிபடுதல், வெறியாடல், நிலந்தோறும் போற்றப்பட்ட தெய்வங்கட்குரிய பூசைகளை நடத்துதல் முதலானவை அதிக அக்கறையுடன் போற்றப்பட்டன. வெற்றித் தெய்வமாகக் கருதப்பட்ட கொற்றவைக்குத் தனிச்சிறப்பு வழங்கி வழிபடல் மறவர்களுக்குரிய இன்றியமையாக் கடமையாகக் கருதப்பட்டது.

போர் மறவர்கள் சிறப்பாகக் கொண்டிருந்த சமூக நம்பிக்கைகள் பலவற்றைத் தொல்காப்பியர் போர்த் திணைகளுக்குரிய துறைகளாகப் படைத்துக் காட்டியுள்ளதைக் காணமுடிகிறது. பாக்கத்து விரிச்சி, கொற்றவை நிலை, வெறியாட்டயர்தல், பூவை நிலை, பெருஞ்சோற்றுநிலை, கொற்றவள்ளை, முன் தேர்க்குரவை, பின்தேர்க்குரவை, அவிப்பலி, பேய்க்காஞ்சி, மன்னைக் காஞ்சி, வஞ்சினக்காஞ்சி, தொடாக்காஞ்சி, ஆஞ்சிக்காஞ்சி, மகட்பால் காஞ்சி, முதுக்காஞ்சி, தபுதாரநிலை, தாபதநிலை, பாலைக்காஞ்சி, கொடிநிலை, கந்தழி, வள்ளி முதலானவற்றைச் சான்று காட்டலாம். புறத்திணை இறுதியில்,

'நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும்
காலங் கண்ணிய ஓம்படை உளப்பட
ஞாலத்து வரூஉம் நடக்கையது குறிப்பில்
காலம் மூன்றொடு கண்ணிய வருமே'

- *(தொல் ; பொ; புறம் ; பாட ; 36)*

எனத் தொல்காப்பியர் கூறி முடிப்பர். இதற்கு நச்சினார்க்கினியர், 'நாள் நிமித்தத்தானும், புள்நிமித்தத்தானும், பிறவற்றின் நிமித்தத்தானும் பாடாண் தலைவர்க்குத் தோன்றிய தீங்குகண்டு அஞ்சிய அச்சமும், உலகில் தோன்றிய வழக்கினைக் கருத்தில் கொண்டு மூன்று காலத்தோடும் பொருந்துமாறு கருதிப் போற்றுவது' எனக் கூறுவர்.

'கடல் நடுவே நீர்கிழித்துச் செல்லும் கலம் போலப், பகைவர் படைநடுவே களிறுகள் ஊடறுத்துப் பிளந்து செல்லும், அவ்வூடுவழியே வேலேந்திச் சென்ற வீரர், பகைவரைக் கொன்று குவித்து அவர் முரசையும் கவர்வர். அத்துடனும் அமையாது, பகைவர் முடித்தலைகளை அடுப்பாக்கிக் குருதியைப் புனலாகப் பெய்து, பகைவர்தசையையும், மூளையையும் அதனுள் இட்டு, வெட்டிய தோள்களைத் துடுப்பாகக் கொண்டு, துழாவிக் களவேள்வி செய்தனர். இவ்வாறு, களவேள்வி பல செய்த செழியனே! அடுத்து, நான்மறை முதல்வர் சூழ்ந்திருக்க, அடிப்பட்ட மாமன்னர்கள் ஏவல் செய்ய, மறை வேள்வியியற்றிய வாள்வலியும் உடைய செழியனே ! நின் பகைவரும் ஒருவாற்றான் நோன்பு இயற்றிச் சிறந்தவரேயாவர். நின்னுடைய மாற்றார் என்று பெயர் பெற்று, நினக்கு ஆற்றாராய் அவர் மடிந்தாலும், வீர மரணம் எய்திப் புகழ் பெற்றவர்களாகவே கருதப்பட வேண்டியவர்'[19] என மாங்குடி மருதனார் கூறிப் படைத்த புறநானூற்றுப் பாடலை இதற்குச் சான்று காட்டலாம்.

'பிணக்கோட்ட களிற்றுக் குழும்பின்
நிணம்வாய்ப் பெய்த பேய்மகளிர்
இணைஒலி இமிழ்துணங் கைச்சீர்ப்
பிணையூபம் எழுந்து ஆட'

- *(மது.கா ; அடி 24-27)*

எனக் குறிப்பிடும் பாடலடிக் கருத்துக்களையும் ஒப்பிட்டு பார்ப்பார்க்கு, சமூக நம்பிக்கைகளுக்குக் கட்டுப்பட்டவர்களே மறவர்கள் எனத் தெரிந்து கொள்ள முடிகிறது. மறப்பண்பு மிகுந்திருப்பினும் சமூக மரபிற்குக் கட்டுப்பட்டவர்களே எனப்புலவர்கள் சான்றிதழ் வழங்குவதாகக் கருதலாம்.

### போர்க்கால மறவரும் அமைதிக் காலத்து மறவர்களும்

போர்க் கால மறவர்களை, 'மாதிரம் பனிக்கும் மறம் வீங்கு பல்புகழ்'; 'கடுமா மறவர்' ; 'பெருஞ்சமந் ததைந்த செருப்புகல் மறவர்' ; 'வஞ்சினம் முடித்த ஒன்றுமொழி மறவர்' ; 'நெய்த்தோர் தொட்ட செங்கை மறவர்' ; 'முன் சமத்து எழுதரும் வன்கண் ஆடவர்' என்றும் புகழ்ந்து பாடி, அவர்கள் மேற்கொண்ட போர் வினைகளைப் பலநூறு பாடல்கள் வாயிலாகப் பாடிப் புகழ்ந்துள்ளதைக் காணலாம். இத்தகு மறவர்கள் அமைதிக் காலத்தில் கூட தம் மறப்பண்பு மறவாதிருக்க யாதேனும் பணிகளில் தம்மை ஈடுபடுத்தி மகிழ்ந்தவாறு இருப்பர் என்பதையும் காணமுடிகிறது.

தம் இல்லறத்தாரோடு கூடித்திருவிழா நாட்களில் மகிழ்ச்சியுடன் பங்கேற்று வந்திருப்பதை மதுரைக் காஞ்சி குறிப்பிடும். திரட்சி கொண்ட அவுணரை வென்ற பொன்னால் செய்த மாலையையுடைய, கருநிறம் உடைய திருமால் பிறந்த ஓணமாகிய நன்னாளில் ஊரிலுள்ளார் விழா எடுப்பர்.

அவ்விழாவில் மறவர்கள் சேரிப்போர் நிகழ்த்தி மகிழ்வர். யானைகளோடு போர் விளையாட்டு விளையாடிப் பிறர் மகிழ்ந்து ஆரவாரிக்குமாறு செய்வரென மாங்குடி மருதனார் கூறுவர். [20]

இல்லறப் பணியில் ஈடுபடுவதும், உழவுத்தொழிலில் பங்கேற்பதும், வேட்டையாடி மகிழ்தலும் மறவர்தம் பொழுது போக்குகள் எனக் கண்டறியவும் முடிகிறது. இவை நேரிடையாகக் கூறப்படவில்லை. பிற நிகழ்ச்சிகளைக் கூறும் பொழுது இவை மறைகாய்களாகச் சுட்டப்படுகிறது. ஏர்க்களச் சிறப்பைப் போர்க்களச் சிறப்போடும் பாடும் மறப்பண்பு இதன் காரணமாகவே புலவர்கட்கு உருவாயிற்று எனக் கூறவும் இடமேற்படுகிறது. பரணர் புறப்பாடல் ஒன்றின் வாயிலாக இதனை நயம்பட மறப்பண்போடு விளக்குவதைக் காணலாம்.

'உழவுத் தொழிலுக்கு இன்றியமையாத மேகமும், அது கருத்து மழை பெய்யுங் காலத்துச் செய்யும் மின்னலும் உடன் தோன்றும் இடி முழக்கமும், மின்னியிடித்து மழைபெய்யுங்கால் நாற்றிசையும் பரவிப் பொழியுமாறு வீசும் வளியும், இவற்றால் ஈரங் கொண்ட நிலமும், அதனை யுழுதற்கு வேண்டும் ஏரும், உழுதவழியுண்டாகும் படைச்சாலும், அதன் கண் விதைக்கப்படும் வித்தும், அது விளைந்து முற்றிக் கதிர் தலைசாய நிற்றலும், அவற்றையறுத்துப் போரிடுதலும் வயலுழவர் பால் நிகழ்தல் போல, போர்க்களத்தில் இவ்வாறே, கருங்கை யானை மேகமாக, மறவர் எறிதற்குயர்த்த வாள் மின்னலாக, போர்முரசு இடி முழக்கமாக, மிக விரைந்த செலவினையுடைய குதிரை வீசுங் காற்றாக, வல்வில் வீங்கு நாண் செலுத்திய கணைகள் மழைத்தாரையாக, கொலையுண்ட மாக்களின் குருதி தோய்ந்து ஈரமுற்ற போர்க்களம் வயலாக, தேர் ஏராக, ஆயுதமாகிய படைகளால், கீழ்மேலாக மறிக்கப்பட்ட படை

முதலியவற்றின் நிரை படைச்சாலாக, வெள்வேலும் கணையமும் எறியப்பட்டுச் சிதறிவீழ்வன விதையாகத் தென்படுகின்றன '[21] என்று கூறுவர்.

அமைதியான காலத்தில் தத்தம் இருப்பிடங்களில் இருக்கும் மறவர்கள் தம்மைச் சார்ந்தாரோடு கூடி விளையாடி மகிழ்வதைக் கூடப் பட்டினப்பாலை சுவை படச் சுட்டுவதைக் காணலாம்.

'மலர்தலை மன்றத்துப் பலர்உடன் குழீஇ
கையினும் கலத்தினும் மெய்யுறத் தீண்டி
பெருஞ் சினத்தான் புறக்கொடா அது
இருஞ் செருவின் இகல்மொய்ம் பினோர்'

(ப.ட் - பாலை ; அடிகள் 69-72)

'பொழுதைப் போக்க, விளையாட்டினை மேற்கொள்ளும் போது, அவர்களிடையே தோன்றும் மாறுபாடு காரணமாக, வலிமைமிக்குப் பெருஞ்சினங் கொள்வர். அவ்விளையாட்டின் காரணத்தால் பகைத்த வீரர்கள், புறமுதுகிட்டு ஓடாமல், கையால் குத்தியும், படைக்கருவிகளால் வெட்டியும், ஒருவர் உடலுடன் ஒருவர் உடல் பொருந்தியும் போர் புரிவர். அகன்ற இடத்தையுடைய மன்றத்தில் ஆட்டுக்கிடாய்களையும் கௌதாரிப் பறவைகளையும் மோதவிட்டுப் போர்புரியச் செய்யும் விளையாட்டைக் காண்பதற்காகப் பலரும் ஒருங்கு கூடுவர்.'[22]

## மக்கள் கண்ணோட்டத்தில் மறவர்

மறவர்கள் தத்தம் சமூகத்தையும், நாட்டையும் பாதுகாக்கும் காவல் தெய்வங்கள் என்று எண்ணி வாழ்வதால் தான், போர்க்களத்தில் வீரமரணம் எய்தி நடுகல்லாகி நிற்பவர்களை நாள் தோறும் வழிபட்டு வரும் வழக்கத்தை

மேற்கொண்டிருந்தனர். தத்தம் வீட்டில் மறவர்கள் வாழ்ந்து வருவதைப் பெருமையாக எண்ணி மகிழ்ந்தவர்களையும் காணமுடிகிறது. புறநானூற்றுப் புலவர்கள் மாமன்னர்களைப் பாடிய வாயால் இத்தகு மறவர்களையும் பாடிப் போற்றி மகிழ்ந்துள்ளனர். அதில், மறவர் பற்றிய மக்கள் கண்ணோட்டமே மிகுந்திருப்பதைக் காணமுடிகிறது. சிறப்பாகப் பெண்டிரும் இத்தகு வீரமிகு கண்ணோட்டத்தில் பாடிய பாடல்களும் இடம் பெற்றுள்ளன. எனவேதான் அவர்கள் மூதின் மகளிர் எனப் பாராட்டப் பெற்றனர்.

'வெடிவேய் கொள்வது போல ஓடித்
தாவுபு உகளும் மாவே; பூவே
விளங்கிழை மகளிர் கூந்தர் கொண்டை
நரந்தப் பல்காழ்க் கோதை சுற்றிய
ஐதமை பாணி வணர்கோட்டுச் சீறியாழ்க்
கைவார் நரம்பின் பாணர்க்கு ஒக்கிய
நிரம்பா இயல்பின் கரம்பைச் சீறூர்
நோக்கினர்ச் செகுக்கும் காளை ஊக்கி
வேலின் அட்டகளிறு பெயர்த் தெண்ணின்
விண்ணிவர் விசும்பின் மீனும்
தண்பெயல் உறையும் உறையாற் றாவே.'

- (புறம் ; பாடல் எண் - 302)

வெறியாடிய காமக் கண்ணியார் எனும் புலவர், ஊர் மக்கள் போற்றிய மறவன் ஒருவனின் வீரப்பண்புகளை நேரில் கண்டு மகிழ்ந்தது மட்டுமன்று ; வியந்தும் நின்றார். அதனை, அப்படியே இப்பாடலில் பதிவு செய்து, வரலாற்று ஆவணமாக விட்டுச் சென்றுள்ளார்.

'வளைத்துப் பின்னர் விட்டு விட்ட மூங்கிலைப் போல அவன் குதிரைகள் துள்ளித் தாவிச் செல்லும் வலியும் விரைவும் உடையன. விறலியர்க்குப் பொற்பூக்களை அளித்தான். பாணர்க்கு நரந்தம் பூ மாலைகள் வழங்கினான். ஆனால், இவன், தாம் வாழ்ந்த சிற்றூர்களைப் பகைவர்கள் கவர எண்ணிப் போருக்கு வந்த போதோ, கொல்களிறு போலச் சினந்து எழுந்தான். களத்திலே அவன் கொன்று குவித்த களிறுகளை எண்ணினால், அவை வானத்து மீன்களினும், கார்முகில் பொழியும் துளிகளினும் மிகுதியாகும். '[23] எனப்பதிவு செய்துள்ளார்.

எருமைவெளியனார், அரிசில்கிழார், கோவூர்கிழார், மதுரை இளங்கண்ணிக் கோசிகனார், பொன்முடியார், மாங்குடிகிழார், ஐயூர்முடவனார், உறையூர் மருத்துவன் தாமோதரனார். ஆவூர்கிழார், மதுரைக் கணக்காயனார் போன்ற பெரும்புலவர்கள் குதிரைமறம், மூதின் முல்லை, நூழிலாட்டு, வல்லாண் முல்லை முதலான துறைகளில் சிறப்பாகப் பாடிய பாடல்கள் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளன. [24]

புரந்தார்கண் நீர்மல்கப் போர்க்களத்தில் சாதலே சாலச் சிறந்தது என எண்ணிற மறவர்களே மிகுதியாக இருந்தனர். அவர், 'உறினுயிர் அஞ்சா மறவர்' என மக்களால் போற்றப்பட்டனர். அம்மறவர்கள், 'விழுப்புண் படாத நாளெல்லாம் வீணான நாளே ' என வருந்தியவர்கள். அவர்கள், 'என்னைமுன் நில்லன்மின்! தெவ்விர்! பலர் என் ஐ முன் நின்று கல்நின்றவர்!' என வீரமொழி பேசிப் பெருமை பெற்றனர்.

## சமூகக் கட்டுப்பாட்டால் சிறந்த மறவர்

'வாழ்க்கை வாழ்வதற்கே என்னும் தெளிவு பழந்தமிழரிடையே ஊன்றி இருந்தமையால் வாழ்க்கையை வெறுத்த பாடல்கள் சங்க இலக்கியத்தில் இல்லை. அவநம்பிக்கையை ஊட்டும் பாடல்களும் அந்த இலக்கியத்தில் இல்லை. வாழ்வின் எல்லாக் கூறுகளும் இணைந்து செயலாற்ற வேண்டும் என்பது சங்கப் புலவர்கள் கண்ட உண்மை எனலாம். புறவெற்றிச் சிறப்பினை மிகுத்துப்பாடுவோர் ஒரு புறமிருக்க, மனதிற்கு உண்மையான வெற்றியையும் அமைதியையும் தருவதற்கு வேண்டிய உண்மையைத் தெளிவாகப் பாடி-னோரும் இருந்தனர். தனிமனித வீரத்தைப் பாடும் போது சமுதாயத்தின் நலத்தையும் வற்புறுத்தினர்.[25] சமுதாயம் முழுவதும் நலமாக வாழும் போதுதான் தனி மனிதனும் நலமாக வாழமுடியும் என்று கண்டு அறிவூட்டினர் [26] என்று கூறும் பேரா. பாஸ்கரதாஸ் மானிட மதிப்புகளாகக் கருதப்பட வேண்டியவற்றை இவ்வாறு தம் நூலில் கூறுவர்.[27]

சங்கப்புலவர்கள் மறவர்களைப் பற்றிப் பாடிய பாடல்களில் இத்தகு சமூகநலம் பேணும் மறவர்களைப் பற்றிச் சுட்டிக் காட்டியிருப்பதையும் காணமுடிகிறது. அதன் காரணமாக அவர்கள் சமூகக் கட்டுப்பாட்டால் சிறந்து விளங்கிப் பெருமை பெற்றனர் எனலாம். சமூகப் பாதுகாப்பிற்கு மட்டுமன்று, பிற சமூகப் பணிகளுக்குத் தத்தம் தொண்டினை நல்கி மனநிறைவும், மனமகிழ்ச்சியும் கொண்டு வாழ்ந்து வந்த மறவர்களின் பெருமை மிகு வாழ்வைப் புலவர்கள் மன்னர்கள் மூலம் வெளிப்படுத்தினாலும், சில மறவர்களின் இத்தகைய செயல்களையும் நேரில் கண்டு பாடிச் சிறப்பு செய்திருப்பதையும் காணமுடிகிறது.

'பலர்துஞ்சவுந் தான்துஞ்சான்

உலகுகாக்கும் உயர்கொள்கை '

- (புறம் ; 400 ; 06-07)

என்று மறவர்களையும், மன்னர்களையும் புகழ்ந்து பாடும் புலவர் பலராயினும், ஒரு புலவர், வறுமையின் பிரதிநிதியாக வாழும் கிணைவன் ஒருவனை நமக்கு அறிமுகப்படுத்தி, அவன் வாயிலாக வீரமும் ஈரமும் கொண்ட 'தாமான் தோன்றிக்கோன்' என்னும் மறவனை நமக்கு அறிமுகப்படுத்தி, அவன் சமூகக் கட்டுப்பட்டால் பெற்ற பெருமையை நயம் பட எடுத்துக்காட்டுவர். ஐயூர் முடவனார் அவனை நமக்கு அறிமுகப்படுத்தும் பொழுது,

'அறவர் அறவன் மறவர் மறவன்

மள்ளர் மள்ளன் தொல்லோர் மருகன்'

- (புறம் ; 399 ; 19-20)

என்று கூறுவர். இதில், அவன் சமூகக் கட்டுப்பாட்டால் சிறந்த நெறிமுறையை விளக்குவர். 'அறவோர்களில் சிறந்த அறவோன்' என்றும், 'மறவர்க்குள் சிறந்த மறவன்' என்றும், 'உழவருட்சிறந்த உழவன்' என்றும் கூறியதோடு நில்லாமல், 'பழையோருடைய வழித்தோன்றல்' எனக் கூறி, வாழையடி வாழையாக வந்த சமூக மரபைப் போற்றி வாழ்ந்தவன் எனக் குறிப்பிடுவர்.

ஐயூர் முடவனார் முதலில் அந்தக் கிணைவன் வாழ்வை நமக்கு அறிமுகப்படுத்துகிறார். அதுவும் கிணைவன் கூற்றாகவே அமைக்கப்பட்ட சிறப்பு வாய்ந்தது. 'கைக்குத்தலரிசிச் சோறும், புளிக்குழம்பும், வரால் இறைச்சியும், பாகற்காயும் அவ்வவற்றின் இனத்தோடு கலந்து மூடி, ஆவியிலே சமைத்த சோறு உண்பவர் சோணாட்டு உழவர் '[28] என நமக்கு தாம் பிறந்த சோழ நாட்டின் பெருமையை முதலில் கூறி மகிழ்கிறான். பிறகு தம் எளிய

வாழ்வை நமக்குக் கூறுகிறான். 'என் மனைவி தூண்டிலிட்டுக் கிடைத்த மீன்களை விற்று, அதனால் கிடைத்த பொருட்களைக் கொண்டு புளிங் கூழை ஆக்கி வைத்திருப்பாள். காலம் கடந்தே உண்ணும் வழக்கம் உடைய யான் இன்றும் அவ்வாறே உண்டு வருந்தியபடி ஓரிடத்தில் அமர்ந்திருந்தேன்' எனக் கூறுகிறான். அவனைக் கண்டு வருந்தும் ஐயூர் முடவனார், அக்கிணைவனை ஆற்றுப்படுத்தி தாமான் தோன்றிக்கோனிடம் செல்லுமாறு அறிவுறுத்துகிறான்.

கிணைவன் தன் கிணைப்பறையைப் புதிய வார்களைக்கொண்டு செம்மைப்படுத்தி, மறவன் இல்லம் நோக்கிச் சென்று தன் கிணைப் பறையை வாசித்து நின்றான். வெளியே வந்த மறவனைப் பார்த்து, 'ஐயா! புலவர் ஒருவர் எம்பால் வந்து, நின் புகழால் நின்பால் அன்பு கொண்டுவிட்டான். நீ சென்று பார்த்தாயானால் நீ விரும்பும் செல்வத்தைப் பெறுவாய்!' எனக் கூறினார். 'நானும் உம்மைப் பார்த்து யாதேனும் பெற்றுச் செல்வவே வந்தேன்' எனக் கூறி நின்றான். மறவனும் 'உமக்கு வேண்டுவது யாது ? ' எனக் கேட்க, கிணைவன், 'வண்டி சேற்றில் அழுந்தினாலும் , அதனை இழுத்துச் செல்வதிலே தளராத வலிமையுடைய பகடு ஒன்று தருக' என்று இரந்து நின்றான். மறவனும் மகிழ்ந்து சில ஆநிரைகளோடு, அவன் விரும்பிய பகடு ஒன்றையும் வழங்கி அனுப்பினான்.

சங்ககாலத்துச் சமூகக் கட்டமைப்பு, அதில் உருவான சமூகக் கட்டுப்பாடு, அவற்றால் விளைந்த சமூக வாழ்வும், ஒழுங்குமுறையும் நன்கு விளங்குமாறு பாடி மறவர் சிறந்து விளங்கிய நிலையையும் 34 அடிகளைக் கொண்ட புறநானூற்றுப் பாடல் வாயிலாகப் படம் பிடித்துக் காட்டுவதைப் படித்து இன்புறமுடிகிறது. [29]

சமூகக் கட்டுப்பாட்டிற்கு மனிதன் மேற்கொள்ளும் சமூக நல்லொழுக்கங்களே வரையறைகளாக அமைந்து விடுகின்றன. மனிதன் என்ன பணி செய்கிறான் ? என்பது சமூக வினாவாக எழாது. எப்படி பணி செய்கிறான்? என்பது தான் சமூக வினாவாக எழும். அதற்குப் பதிலாக அச்சமூகம் எதிர்பார்ப்பதுதான் 'சமூக நல்லொழுக்கம்' என்பதாகும். இதில், 'கடமை ; கண்ணியம் ; கட்டுப்பாடு ' அனைத்தும் அடங்கி விடுகிறது. மறவர்க்கும் இது இன்றியமையாத ஒன்று என்பதைத்தான் சான்றோரும் வரையறை செய்துள்ளனர்.

'வீரம் உடலால் வெளிப்படுவது என்றும், ஒழுக்கத்தால் வெளிப்படுவது என்றும் இருவகைப்படும். உடலுக்கு ஏற்படும் நோயைத் தாங்கிக் கொண்டு சிறந்த முடிவுக்காக உழைப்பதே 'உடல் வீரம் ' எனலாம். போர் வீரன் தன் நாட்டுக்குச் செய்யும் கடமை இத்தகையதேயாகும். 'ஒழுக்கவீரம் ' என்பது பிறர் இழித்தும், பழித்தும் சாடும் போது தாங்கிக் கொள்ளும் உயர் பண்பாகும். நல்ல கொள்கைகளைப் பின்பற்றும் போது சுற்றுப்புறச் செல்வாக்கு இழந்தநிலையிலும் அதைத் தாங்கிக் கொண்டு பணியாற்றலும் ஒழுக்க வீரமாகும்'[30] என்று கூறும் திறனாய்வாளர் கூற்றுதான் மறவர்களையும், சமூகத்தினரையும் அமைதியான காலத்தில் இணைக்கிறது என்பதை நினைவிற் கொள்ள வேண்டும். இத்துடன், சேரமான் கணைக்காலிரும்பொறை தன்மானத்துடன் பாடிய பாடற் கருத்தை இணைத்துக் காண்பது கூடாது. அம்மன்னர் மானவீரங் கொண்டு, போர் தொடர்பான சூழலில் கூறிய கருத்துக்களே அவை. [31] இங்கு, மேலே கூறியவை சமூகக் கட்டமைப்பாலும், கட்டுப்பாட்டாலும் உருவான சமூகச் சூழலின் உயர்ந்த நிலை சுட்டப்படுகிறது.

இதுவும், மறவர்க்கு வேண்டப்படுவதே என்பது சங்கச் சான்றோர் கண்ட சமூகக் கோட்பாடாகும் என்பதை மனதிற் கொள்ள வேண்டும்.

'வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டிய உண்மைகள், ஒழுக்க நெறிமுறைகளே மதிப்பு (Values) என்கிறோம். சங்கப் பாடல்கள் மதிப்புகளின் கருவூலமாகும். மானிட இனத்திற்கு உலகிற்குச் சங்கப் பாடல்கள் உணர்த்தும் மதிப்புச் செல்வத்தை அறிய முயலும் முயற்சியே சிறந்தது '[32] எனக் கூறும் பேரா. ஈ.கோ. பாஸ்கரதாஸ் வெளிப்படுத்தும் நற்சிந்தனையே நமக்கு வேண்டப்படுவதாகும்.

மறவர்கள் மிகச்சிறந்த வீரர்கள். உயிரையும் துச்சமென மதித்து, விழுப்புண் பெற்று, நாடுவாழ, தாம் வீழ்ந்து இறந்துபடவும் அஞ்சாதவர். நாட்டிற்காகத் தம் இன்னுயிரையே தியாகம் செய்ய முன்வருவோர், நாட்டு நலன் கருதி சமூகக் கட்டமைப்பிற்கு உதவிடவும், அதன் கட்டுப்பாட்டிற்குத் தாமும் கட்டுப்பட்டு வாழவும் எண்ணத்தானே செய்வார்கள். எனவே, தாம் அமைதியான காலத்தில் எப்படி வாழவேண்டும்? என்ன செய்ய வேண்டும்? என்பதைச் சமூகக் கட்டமைப்பிலிருந்து இயல்பாகவே கற்றுக் கொண்டு விடுகின்றனர். இதற்குப் புறநானூறு நல்லதொரு சான்றை நகைச்சுவையோடு வெளிப்படுத்துவதைக் காணலாம். மகட்பாற்காஞ்சித் துறையாக அமைந்த இப்பாடல் முரண்பட்ட கருத்துடைய மறவர்தம் மான வீரத்தால் ஊரே அழியப் போகிறது. அது நன்றன்று; சுயநலத்தைக் காட்டிலும், பொது நலம் பேணும் பண்பு வளர்தல் வேண்டுமென்ற எண்ணத்தில் பாடிய பாடலிது. [33]

மான வீரத்தோடு சமூகக் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டு, சமூகக் கட்டமைப்பிற்கு மறவன் ஒருவன் எவ்வாறு துணைபுரிந்து நல்வாழ்வு வாழ்ந்து

வருகிறான் என்பதை ஐயூர் முடவனார் புறப்பாட்டொன்றின் வாயிலாக நமக்கு எடுத்துக் காட்டுவர்.

'மனைக்கு விளக்காகிய வாள்நுதல் கணவன்
முனைக்கு வரம்பாகிய வென்வேல் நெடுந்தகை
நடுகல் பிறங்கிய உவலிடு பறந்தலைப்
புன்காழ் நெல்லி வன்புலச் சீறூர்க்
குடியும் மன்னுந் தானே கொடியெடுத்து
நிறையழிந்து எழுதரு தானைக்குச்
சிறையும் தானேதன் இறைவிழு முறினே.'

- *(புறம் ; பாடல்எண் - 314)*

'மனிதனின் செயல்முறைகள், ஆளுமை, சமுதாயம், பண்பாடு ஆகிய நான்கின் அடிப்படையில் மதிப்புகள் அமைவன என்கிறது அனைத்து நாட்டுச் சமூக இயல் கலைக்களஞ்சியம்'[34] கூறுகிறதென அறிஞர் கூறுவர். இவையனைத்தும் இப்பாடலில் விளக்கம் பெற்றுச் சிறப்புறுவதைக் காணலாம். இதில், அகவாழ்வு மற்றும் புற வாழ்வுச் செயல்கள் மறவனால் போற்றப்பட்டுள்ளதைக் காணலாம். 'தானே கொடியெடுத்து நிறையழிந்து எழுதரு தானை' என்பது ஆளுமை, 'வன்புலச் சீறூர்குடி' என்பது சமுதாயம், 'முனைக்கு வரம்பாகிய வென்வேல் நெடுந்தகை' என்பது பண்பாடு. இத்தகு பாராட்டத் தக்க அனைத்தும் மறவனிடம் அமைந்ததால் அவனுடைய மதிப்புமட்டுமன்று; சமூகமதிப்பும் உயர்ந்தது. அதனால் தமிழினமே சிறப்பால் பெருமைப்பட்டதெனலாம்.

விட்னே ஓட்ஸ் என்பவர் மதிப்புகள் அமையும் முறையை, 'அரிஸ்டாடிலும் மதிப்புகளின் சிக்கலும்' (Aristotle and the Problem of Values) என்ற நூலில் ஆறு வகையாகப் பகுத்துக் கூறுவர். [35] அவையனைத்தும் இந்தப் பாடலில் சுட்டப் பெற்ற மறவனிடம் இருப்பதைக் காணலாம். அதனால் தான் ஐயூர் முடவனார் இவனைப் புகழ்ந்து பாடியுள்ளார்.

'தலைசிறந்த ஒழுக்க நடவடிக்கையின் அடிப்படையில் மதிப்புகள் தோன்றுகின்றன' என்பது முதல் கோட்பாடு. இப்புறப்பாட்டின் மறவன் தலை சிறந்த இரு சமூக ஒழுகலாறுகளைப் போற்றி வாழ்கிறான் அவை :

(அ) மனைக்கு விளக்காகிய வாள்நுதல் கணவன்

(ஆ) எழுதருதானைக்குச் சிறையும் தானே

என்பவை அகவாழ்வின் சிறப்பையும், புறத்தே அமையும் மறவாழ்வின் சிறப்பையும் புலப்படுத்துதல் காணலாம். இவையிரண்டும் தலைசிறந்த ஒழுக்க நடவடிக்கைகள்.

1. 'கூர்மையான அறிவு, இயற்கை வழிமதிப்புகள் அமைகின்றன' என்பது இரண்டாவது கோட்பாடு.

   வேந்தனுக்குப் பகைவரால் துயரம் என்றால், தானே கொடியினை உயர்த்திப் போருக்குப் புறப்படலும், புகழுடன் வாழ்தலும் இதற்குச் சான்றாகும்.

2. 'ஒரு பொருள் தரும் முடிவிலிருந்து மதிப்புகள் பெறப்படுகின்றன' என்பது மூன்றாவது கோட்பாடு.

   'மனைக்கு விளக்காகிய வாள்நுதல் கணவன்' எனக் கூறப்பட்டதும், 'எழுதரும் தானைக்குச் சிறையும் தானே' எனக் கூறப்பட்டதும் இதற்குச் சான்றாகும்.

3. 'ஒரு பொருளின் சிறப்புத் தன்மை அல்லது முழுமைத் தன்மையிலிருந்து மதிப்புகள் கிடைக்கின்றன' என்பது நான்காவது கோட்பாடு.

மறவர் பலர் வாழ்ந்து நடுகல் ஆகிய தழைமலிந்த புறங்காடு சூழ்ந்த சிற்றூரில் புகழுடன் வாழ்வது இதற்குச் சான்றாகும்.

4. 'பண்பட்ட உயர்நிலையில் இன்பம் அனுபவிக்கையில் மதிப்புகள் தோன்றுகின்றன' என்பது ஐந்தாவது கோட்பாடு.

மனைக்கு விளக்காகிய வாள் நுதலோடு வாழ்ந்து இல்லற இன்பம் துய்த்து வருவதும், வேல் நுனிக்கே எல்லையெனும் படியாக கூரிய வெற்றி வேலினைக் கைக்கொண்டு வருதலும் இதற்குச் சான்றாகும்.

5. 'இயற்கை, கடவுள், மெய்ம்மை ஆகிய கொள்கைகளின் அடிப்படையில் மதிப்புகள் உருவாகின்றன' என்பது ஆறாவது கோட்பாடு.

தழைமலிந்த புறங்காடும், புல்லிய வித்துடைய நெல்லியும் விளங்கும் வன்புலச் சிற்றூர் இயற்கையின் சிறப்பைக் குறிப்பிடுகிறது. 'வேந்தன்' இங்கு 'இறை' எனப்படுதல் கடவுள் தன்மையைக் குறிக்கிறது. 'மெய்ம்மை' என்பது பாடல் முழுவதிலும் பரவிக் கிடப்பதைக் காணலாம்.

'மனைக்கு விளக்காகிய வாள்நுதல்'; 'முனைக்கு வரம்பாகிய வெல்வேல் நெடுந்தகை' ; 'நடுகல் பிறங்கிய உவலிடு பறந்தலை' ; 'எழுதருதானைக்குச் சிறை'; 'சீறூர்க்குடியும் மன்னுந்தானே' என்பவை அனைத்தும் மெய்ம்மைச் சான்றுகள் ஆகும். பாடலில் எங்கும் புனைந்துரை கிடையாது ; உயர்வு நவிற்சி இல்லை; சமூக ஒழுக்கமே இங்கு இயல்பு நவிற்சியாகப் படைக்கப்பட்டது.

சமூகக் கட்டமைப்பிற்குப் பெருந்துணை புரிந்து, சமூகம் விதித்த அறநெறிக் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டே வாழ்ந்த மறவர்களின் வரலாறு நமக்கு மிகுதியாகக் கிடைத்துள்ளன எனலாம்.

'மானிட உயிர்களின் உணர்வுகளும் அனுபவங்களும் வளர்ச்சி பெற்று மதிப்புகளாக உயர்கின்றன. இத்தகைய உணர்வுகளும் அனுபவங்களும் மாறக்கூடியவை ; ஆனாலும், உலகம் உள்ள அளவும் தொடர்ந்து விளங்கக் கூடியவை. மதிப்புக் கோட்பாடுகள் புதிதாகத் தோன்றுதலும், மாறிக் கொண்டிருப்பதும் கால வளர்ச்சியினால் தவிர்க்க முடியாதவை. ஆனால், என்றும் நிலைபேறான மதிப்புகள் (அகம் ; புறம்) காலத்தால் மாறுவதில்லை. அத்தகைய நிலைபேறுடைய மதிப்புகளையே சங்கப்பாக்கள் நமக்கு வழங்கியுள்ளன' என்ற திறனாய்வாளர் கருத்து யாராலும் மறுக்கவியலாது ; நிலைபேறுடையதெனலாம்.

## சமூகக் கட்டமைப்பில் மறவர் பெற்ற பெரும்பங்கு

'சங்க இலக்கியம் மதிப்புகளைச் சமயச் சார்புடன் கூறவில்லை. மானிட இனத்தைச் சார்ந்து கூறுகிறது. தத்துவ அறிவு நிலையில் கூறவில்லை. நடைமுறை வழக்கினை ஒட்டிக் கூறுகிறது. ஆதலின் சங்க மதிப்புக் கோட்பாடு அறிவுச் சட்டமாக அமையாமல் அன்பு நெறியாக அமைந்துள்ளது. அறக்கோட்பாடாக மலர்ந்துள்ளது. இதனால், சங்கப் பாடல்கள் உணர்த்தும் மானிட மதிப்புகள் நிலைபேறு உடையனவாகத் திகழ்கின்றன.'[36] என்று கூறும் திறனாய்வாளர் கருத்துக்களை உண்மையே என்று நிரூபிக்கும் வகையில்தான் மறவர்கள் வாழ்வியற் கூறுகள் அமைந்திருந்தன.

திருவள்ளுவர் அறத்துப்பாலில் 'குடிசெயல்வகை' என்னும் ஓர் அதிகாரம் அமைத்துள்ளார். 'ஒருவன்தான் பிறந்த குடியை உயரச் செய்தலின் திறம்' என்பர் பரிமேலழகர். இதில்,

'நல்லாண்மை என்ப தொருவற்குத் தான்பிறந்த

இல்லாண்மை ஆக்கிக் கொளல்' *(குறள் - 1026)*

என ஒரு குறள் அமைத்து, மறவர்க்குத் தொடர்பான கருத்தை வலியுறுத்துவர். 'ஒருவனுக்கு நல்ல ஆண்மை என்று உயர்த்துச் சொல்லப்படுவது தான்பிறந்த குடியினையாளும் தன்மையைத் தனக்குளதாக்கிக் கோடல்' எனப் பொருள் கூறும் பரிமேலழகர், 'போர்த்தொழிலின் நீக்குதற்கு நல்லாண்மை என விசேடித்தார். குடியினையாளுந்தன்மை : குடியினுள்ளாரை உயரச் செய்து தன் வழிப்படுத்தல் ; அதனைச் செய்து கோடல்' என விளக்கந்தருவர். மறவர்க்கும் சமூகக் கடமைகள் உண்டு என்றும், அதில் நன்முறையில் பங்கேற்று சமூகக் கட்டமைப்பிற்குத் தத்தம் பங்கினைச் செலுத்த வேண்டுமென்றும் கூறியுள்ளனர். அதற்கேற்ப அவர்களும் பங்கேற்றதைப் பரவலாக் காணமுடிகிறது.

ஊழி பெயரினும் தாம் பெயராப் பேராண்மை உடைய மறவர்களும் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து பெருமை பெற்றனர் என்பதைப் பல சங்கப் பாடல்கள் எடுத்துக் கூறுகின்றன. அகப்பாடல்கள் வாயிலாக இல்லறம் போற்றியதையும், புறப்பாடல்கள் வாயிலாகச் சமூகக் கடமைகளை ஆர்வத்துடன் போற்றியதையும் காணமுடிகிறது. அவர்கள் செயற்கரிய செயல்களைச் சமூகத்தில் போர்க்களப் பணிகளை மட்டும் செய்யாமல் பிற பணிகளையும் செய்து தமிழ்ச் சமூகம் உயரப் பாடுபட்டுள்ளதைக் காணமுடிகிறது.

'துப்புத்துறைபோகிய துணிவுடை ஆண்மை' என்றும், 'ஞாயிற்றன்ன வெந்திறல் ஆண்மை' என்றும், 'எற்படைக்கு ஓடா ஆண்மை' என்றும் போர்க்களத்தில் போற்றப்பட்டது ஆண்மை. இந்நோக்கில் மட்டும் தமிழில் ஆண்மை பாராட்டப்படவில்லை. பெரியோர் தம் நெஞ்சத்துக் கொண்ட குறிக்கோள்களை ஆண்மை என்ற பெயரால் சங்கப்பாடல்கள் குறிப்பிடுகின்றன.

'பெரியார் நெஞ்சத்துக் கண்ணிய ஆண்மை' என்று குறுந்தொகை கூறும். 'பகுத்தூண் தொகுத்த ஆண்மை' எனப் பதிற்றுப்பத்து கூறும். 'சேர்ந்தார்க்கு, உறும் இடத்துவக்கும் உதவி ஆண்மை' என்றும், 'ஆள்வினைக்கெழுந்த அசைவில் உள்ளத்து ஆண்மை' என்றும் அகநானூறு கூறும். இத்தொடர்களில் இடம் பெற்ற 'ஆண்மை' என்னும் மதிப்பு, வீரம், குறிக்கோள், உதவி, பகுத்துண்ணல், உறுதி, ஆளுந்தன்மை என்னும் பல்வேறு பொருள்களில் குறிக்கப்பட்டமையைக் காணலாம். [37]

திருவள்ளுவர் 'நாடு' என்ற அதிகாரத்தில், 'சாதி மற்றும் கடவுள் சங்கேத வயத்தான் மாறுபட்டுக் கூடும் பல கூட்டமும், உடனுறையா நின்றே பாழாகச் செய்யும் உட்பகையும், அளவு வந்தால் வேந்தனை அலைக்கும் கொல்வினைக் குறும்பரும் இல்லாத நாடு நல்லநாடு' என்பர். ஆறலைக் கள்வர், குறளைக் கூறுவோர், புலி, கரடி முதலிய விலங்குகளின் வழிவரும் தொல்லைகளிலிருந்து சமூகத்தைக் காக்க மறவர்கள் கடமையாற்றி மன்னர்க்கு உதவி வந்துள்ளனர். இதனை,

'பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் வேந்தலைக்கும்
கொல்குறும்பும் இல்லது நாடு ' (குறள் - 735)

என்ற குறள் வாயிலாகச் சுட்டிக் காட்டுவர்.

இவ்வாறே, திருவள்ளுவர் 'அரண்' என்ற அதிகாரத்தில், 'அரண், எல்லாச்சிறப்புகளையும் மாட்சிமைகளையும் பெற்று, அவற்றைக் கண்காணித்துப் போற்றி வருவார் சரியில்லையென்றால் யாதொரு பயனும் இல்லை' என்று கூறுவர். இக்கருத்தை,

'எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி

இல்லார்கண் இல்ல தரண்' (குறள் - 750)

என்ற குறள் வாயிலாகக் கூறி, மறவர்கள் இத்தகு பணிகளைச் சமூகக் கண்ணோட்டத்தில் செய்து நாட்டுப் பணியை நலப் பணியாக்கியதையும் காணமுடிகிறது.

புறநானூற்றில் ஒரு காட்சி. சாத்தந்தையார் என்னும் புலவர் இக்காட்சியை ஓர் ஓவியமாக வரைந்து நம்முன் காட்சிக்கு வைத்துள்ளார் எனலாம். 'ஊரில் விழா தொடங்கிவிட்டது ; அதிலும் பங்கேற்றுப் பணிபுரிய வேண்டும். மனைவிக்குப் மகப்பேறு காலமும் கூட, அங்கும் சென்று உதவவேண்டும். இத்தகு சமய மற்றும் இல்லறக் கடமைகளுக்கிடையே, தம் சிற்றூரைக் கைக் கொள்ள வந்த வீரனையும் எதிர்த்துத் தாக்கி விரட்டி, ஊரைக் காக்க வேண்டும். இதனை, அந்த மறவன், கட்டிலைப் பிணிக்கும் புலைமகன் தன் கையிலுள்ள ஊசியை விரைவாகச் செலுத்தி வாரைப் பிணைத்துக் கட்டிலை விரைவாகப் பிணித்து முடித்தது போல அனைத்தும் முடியுமாறு செய்து வந்து சேர்ந்தான்' எனக்கூறி, ஒரு சிற்றூர் மறவனின் சமூகக் கடமைகளை நன்கு படைத்துக் காட்டியிருப்பர்.

'சாறுதலைக் கொண்டெனப் பெண்ணீற் றுந்றெனப்

பட்ட மாரி ஞான்ற ஞாயிற்றுக்

கட்டில் நிணக்கும் இழிசினன் கையது

போழ்தூண்டு ஊசியின் விரைந்தன்று மாதோ ;

ஊர்கொள வந்த பொருநனொடு

ஆர்புனை தெரியல் நெடுந்தகை போரே'

*(புறம் ; பாடல் எண் - 82)*

என ஓவியமாகத் தீட்டியுள்ளதைக் காணமுடிகிறது.

'ஒரு குறிக்கோளை அடிப்படையாகக் கொண்டு விருப்பு, வெறுப்பை ஒதுக்கி விட்டு எண்ணிப் பார்க்கும் முறையே புறநிலை மதிப்பு எனப் பொதுவாகக் கூறலாம். இது பரந்து பட்ட நிலையில் அமைவதாகும். அங்கே தனிமனிதனின் கருத்தை விட உலகம் ஒப்புக் கொண்ட கருத்தே மதிப்பாகப் போற்றப்படுகிறது'[38] எனக்கூறும் திறனாய்வாளர் கருத்தினை இங்கு ஒப்பு நோக்கிச் சிந்திப்பது சாலச் சிறந்தது. 'கடமை ; கண்ணியம் ; கட்டுப்பாடு' என்பதே சிந்தையில் விதைக்கப் பெற்ற ஒன்று என்பது தெளிவாகிறது.

'சீரினும் சீரல்ல செய்யாரே சீரொடு

பேராண்மை வேண்டு பவர்' *(குறள் - 962)*

என்ற குறளை இங்கு நினைவிற் கொண்டு பார்த்தால் இம்மறவன் சமூகக் கட்டமைப்பில் பெற்ற பெரும்பங்கு வெள்ளிடை மலையென விளங்கும்.

திருவள்ளுவர் ஒரு திருக்குறளில் ஒரு கேள்வி கேட்டு நம்மைச் சிந்திக்கத் தூண்டுகிறார். 'ஒருவன் தன் சுற்றத்தின் மீது அன்பு செலுத்தாதவன் ; தமக்கேற்ற நல்ல துணையும் பெற்றிருக்கவில்லை ; தமக்குத் தேவைப்படும் வலிமையும் இல்லை; இத்தகையோன் தம்மை எதிர்த்து வரும் பகைவரை எவ்வாறு வீழ்த்தி வெற்றி கொள்ள இயலும் ? ' எனக்கேள்வி கேட்டு, 'இயலாது' என நாம் கூறுமாறு செய்கிறார். மறவர்க்கு பெரும் வலிமை தரக்கூடியது தம்மைச் சார்ந்தார் மீது அன்பு செலுத்துவதும், தமக்குரிய துணையைப் பெறுவதுமாகும்.

இது எப்பொழுது சாத்தியமாகும்? தம்மையும் சமூகக் கட்டமைப்பில் இணைத்துக் கொண்ட பிறகே சாத்தியமாகும். இதனை,

'அன்பிலன் ஆன்ற துணையிலன் தான்றுவ்வான்
என்பரியும் ஏதிலான் துப்பு' (குறள் - 862)

என்ற குறளில் குறிப்பிடுவர்.

கலித்தொகை சுட்டிக்காட்டும், 'ஆற்றுதல், போற்றுதல், பண்பு, அன்பு, அறிவு, செறிவு, நிறை, முறை, பொறை எனும் எல்லாச் சமூகப் பண்புகளையும் பெற்று விளங்கியதால் தான் சங்ககால மறவர், அக்காலச் சமூகக் கட்டமைப்பில் பெரும்பங்கு பெற்று தமிழ்ச் சமூகம் சிறக்க வாழ்ந்தனர் எனலாம். இதன் காரணமாகவே சங்க கால மறவர் அன்றும், இன்றும், என்றும் மக்களால் போற்றிப் பாராட்டி வருகின்றனர் என உறுதிப்படக் கூறலாம்.

'மனிதன் தனக்குள்ளேயே ஓர் ஆற்றலைக் கொண்டுள்ளான். ஆளுமையின் இணைப்பு, இயல்பாக வெளியிடும் தன்மை, நிறைந்த தனித்தன்மை, இருட்டில் இருப்பினும் உண்மையைக் காணும நாட்டம், படைப்புநிலை, பண்புநிலை ஆகிய இவைகளை நோக்கி அவ்வாற்றல் மனிதனை அழைத்துச் செல்கிறது. இறுதியில் முழுமையை நோக்கிச் செல்லும் வகையில் மானிடன் உருவாக்கப்படுகிறான். நல்ல மதிப்புகள், நல்லமைதி, இரக்கம், வீரம், அறிவு, நேர்மை, அன்பு, தன்னலமின்மை ஆகியவற்றைத் தேடிச் செல்வது மனிதனின் குறிக்கோளாகிறது'[39] எனக்கூறும் திறனாய்வாளரின் உயர்கருத்துக்கள் மனிதர்களுக்கிடையே மாணிக்கங்களாகத் தோன்றிய மறவர்கட்கும் பொருந்தக் கூடியவையே என்பதில் மறுப்பு எழமுடியாது. அந்த அளவிற்கு மறவர்கள் சங்க காலத்தில் சமூகக் கட்டமைப்பில் பெரும் பங்கேற்று சிறப்பு செய்துள்ளனர் எனத் தெளிவாகத் தெரிய வருகிறது.

## ஆய்வு முடிவுகள்

1. சங்க காலச் சமூகக் கட்டமைப்பில் மறவர்கள் பங்கேற்ற விதத்தைக் கண்டறிய பன்முக நோக்கில் எல்லாச் சங்க இலக்கியங்களையும் ஆய்வு செய்து வகுத்தும் பகுத்தும் கருத்துக்களைத் தொகுத்தும் வைத்துக் கொள்ளப்பட்டன.
2. நாடு பற்றியும், அதனுள் அமைந்த சமூகம் பற்றியும் கிடைத்த கருத்துக்களில் ஆய்வோடு தொடர்புடைய இன்றியமையாத அனைத்தையும் கண்டறிந்து தொகுத்துக் கூறப்பட்டது.
3. சமூகத்தைக் கட்டுப்படுத்தும் அரசு, அரசியலமைப்பு, அரசாங்கம், இறைமை பற்றிய உண்மைச் செய்திகள் கண்டறியப்பட்டன.
4. அரசியலைமப்பில் அமைந்த அரசாங்கத்திற்குள் இடம் பெற்ற நிறுவனங்களும், துறைகளும் எவையெவை எனக் கண்டறிந்து முறைப்படுத்தப்பட்டன.
5. இவற்றுள் மறவர்களுக்கு வழங்கப்பட்ட பதவிகள் பற்றிய செய்திகளைப் பகுத்துக் கொண்டு, அவற்றுள் மறவர்கள் பெற்ற மற்றும் செய்து வந்த பணிகளின் தனித்தன்மைகள் கண்டறியப்பட்டன.
6. அவ்வப்பொழுது வெளியிடப்படும் அரசாணைகள், சமூகக் கட்டமைப்பிற்கு உதவிய பொழுது மறவர்கள் மேற்கொண்ட பணிகளைக் கண்டறிய மேற்கொண்ட ஆய்வின் முடிவுகள் தொகுத்து வெளியிடப்பட்டன.
7. அரசாணைகளுக்கேற்ப மறவர்கள் நேரிடையாகப் பெற்ற பங்கினைப் பற்றி ஆய்ந்து வெளியிடப்பட்டன.

8. சமூகக் கட்டமைப்பில் தத்தம் பங்கினை வெளியிட முயன்றபொழுது தமக்கு முன்நின்ற சமூக நம்பிக்கைகளுக்கு அவர்கள் தக்க மதிப்பு வழங்கி, தக்கவாறு பயன்படுத்திச் சிறப்பு செய்த விதம் கண்டறியப்பட்டன.

9. மிகுதியாக வெளிப்படும் போர்க் காலத்து மறவர்களைச் சுட்டும் அமைதி காலமறவர்களை ஆய்ந்த பொழுது வெளிப்பட்ட அமைதி கால மறவர்களைப் பற்றியும், அக்காலத்தில் அவர்கள் மேற்கொண்ட பணிகளைப் பற்றியும் கண்டறியப்பட்டன.

10. மக்கள் கண்ணோட்டத்தில் மறவர்கள் பெற்ற சிறப்புகள் தொகுத்து வெளியிடப்பட்டன.

11. சமூகக் கட்டுப்பாடுகளும் மறவர்கள் பெருமை பெறத் துணை நின்றன என்று சுட்டப்பட்ட இலக்கிய நிகழ்வுகள் வெளியிடப்பட்டன.

12. சமூகக் கட்டமைப்பில் மறவர் பெற்ற பெரும் பங்கினைச் சான்று காட்டி விளக்கப்பட்டன.

## அடிக்குறிப்புகள்

1. டாக்டர். கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும், மறுபதிப்பு, 2004, ப.14.

2. மேற்படி நூல் - பக்- 19-20.

3. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை, உரையாசிரியர், புறநானூறு, 1-200 பாட்டுக்கள், முதற்பாகம், மறுபதிப்பு, பக். 77-79.

4. டாக்டர். கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும், மறுபதிப்பு, பக். 25-26.

5. டாக்டர். A. திலகவதி ஜெகதீசன் மற்றும் பேராசிரியர். S. அன்புக்கொடி நல்லதம்பி, ஒப்பீட்டரசியல், முதற்பதிப்பு, ப-25.

6. மேற்படி நூல் - ப-26.

7. புறநானூறு , பாடல் எண் - 186.

8. டா.A. திலகவதி ஜெகதீசன் மற்றும் பேரா. S. அன்புக்கொடி நல்லதம்பி, ஒப்பீட்டரசியல், முதற்பதிப்பு, ப-28.

9. மேற்படி நூல் - ப.78.

10. நூல்களும் - பாடலடிகளும் :

    (1) பொருநராற்றுப்படை - அடிகள் - 226-230.

    (2) பெரும்பாணாற்றுப்படை - அடிகள் - 32-36.

    (3) மதுரைக்காஞ்சி - அடிகள் - 191-192.

    (4) மதுரைக்காஞ்சி - அடிகள் - 489-492.

(5) மதுரைக்காஞ்சி - அடிகள் - 507-510.

(6) பட்டினப்பாலை - அடிகள் - 299-301.

(7) மலைபடுகடாம் - அடிகள் - 155-157.

(8) மலைபடுகடாம் - அடிகள் - 167-169.

(9) மலைபடுகடாம் - அடிகள் - 466-470.

(10) பதிற்றுப்பத்து - பாடல் 82 ; அடிகள் - 14-16.

11. டாக்டர். ஈ.கோ. பாஸ்கரதாஸ் , மானிட மதிப்புகள், முதற்பதிப்பு, 1997, ப - 176.

12. திரு. சு. வித்தியானந்தன், தமிழர்சால்பு, நான்காம் பதிப்பு, ப- 43.

13. மேற்படி நூல் - ப-44 , பாடலடிகள் :

(1) செருவேட்டுச் சிலைக்குஞ் செங்க ணாடவர்

(2) பொதுவிற் றூற்கும் விசியுறு தண்ணுமை

வளிபொரு தெண்கன் கேட்பின்

அதுபோ ரென்னு மென்னையு முளனே.

(3) போரெனிற் புகலும் புனைகழன் மறவர்

(4) உட்பகை யொருதிறம் பட்டெனப் புட்பகைக்

கோவா னாகலிற் சாவேம் யாமென

நீங்கா மறவர் வீங்குதோள் புடைப்ப.

14. முனைவர். வீ. நாகராசன், பத்துப்பாட்டு இரண்டாம் பகுதி, மூலமும் - உரையும், முதல்பதிப்பு, ப-152.

15. முனைவர். சாலினி இளந்திரையன், சங்கத் தமிழரின் மனித நேய மணி நெறிகள், இரண்டாம் பதிப்பு, ப-132.

16. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை, உரையாசிரியர், புறநானூறு, முதல்பாகம் - 1-200 பாட்டுக்கள், மறுபதிப்பு, பக் 221-222.

17. மாங்குடி மருதனார், மதுரைக்காஞ்சி, அடிகள் - 642, 'கண்மாறு ஆடவர் ஒடுக்கம் ஒற்றி' என ஒற்று பற்றிச் சுட்டுவர்.

18. திரு. சு. வித்தியானந்தன், தமிழர் சால்பு, நான்காம் பதிப்பு, பக் - 38-40.

19. புறநானூற்றுப் பாடல் எண் 26-இன் கருத்து.

20. மதுரைக்காஞ்சி அடிகள் - 590-599.

21. ஔவை.சு. துரைசாமிப்பிள்ளை, உரையாசிரியர், புறநானூறு, இரண்டாம் பாகம், 201 முதல் 400 பாட்டுக்கள், மறுபதிப்பு, பக். 345-347.

22. முனைவர். வீ. நாகராசன், பத்துப்பாட்டு, இரண்டாம் பகுதி, உரையாசிரியர், முதல் பதிப்பு, பக் 327-329.

23. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை, உரையாசிரியர், புறநானூறு, இரண்டாம் பாகம், 201-400 பாட்டுக்கள், மறுபதிப்பு, பக். 202-204.

24. புறநானூற்றுப் பாடல்கள் 300 முதல் 350 பாடல்களுக்குள் இடம் பெற்ற பல பாடல்களைக் குறிக்கலாம்.

25. புறநானூற்றுப் பாடல் எண் 35.

26. புறநானூற்றுப் பாடல் எண் 186.

27. டாக்டர். ஈ.கோ. பாஸ்கரதாஸ், மானிட மதிப்புகள், முதற்பதிப்பு, ப-43.

28. புறநானூற்றுப் பாடல் 399 ; அடிகள் ; 01-10.

29. புறநானூற்றுப் பாடல் - 399.

30. டாக்டர். ஈ.கோ. பாஸ்கரதாஸ், மானிட மதிப்புகள், முதற்பதிப்பு, ப-79.

31. புறநானூற்றுப் பாடல் எண் - 74 - பாடற்கருத்து.

32. டாக்டர். ஈ.கோ. பாஸ்கரதாஸ், மானிட மதிப்புகள், முதற்பதிப்பு, முன்னுரை, ப- III.

33. புறநானூற்றுப் பாடல் எண் - 349.

34. டாக்டர். ஈ.கோ. பாஸ்கரதாஸ், மானிட மதிப்புகள், முதற்பதிப்பு, ப-26.

35. மேற்படி நூல் - ப.25.

36. மேற்படி நூல் - முன்னுரை பகுதி - பக் - III - IV.

37. மேற்படி நூல் - பக் - 100 - 102.

38. மேற்படி நூல் - ப - 22.

39. மேற்படி நூல் ப. 24.

# இயல் ஐந்து

## மறவர்கள் பண்பு நலன்களால் விளைந்த சமூகப் பயன்கள்

'மறவர்கள் பண்புநலன்களால் விளைந்த சமூகப்பயன்கள்' என்ற இவ்வியல், 'பண்பு நலன்கள் வரையறை, சமூகம் வகுத்த பண்பு நலன்கள், மானுடம் போற்றும் பண்பு நலன்கள், கல்விவழிகற்ற பண்பு நலன்கள், அரசாணை போற்றிய பண்பு நலன்கள், பண்பு நலன்களைப் பாராட்டிய புலவர்கள், சமூகப் பயன்களின் வரையறை, இயற்கை வழி உருவான பயன்கள், அரசுவழிவந்த சமூகப் பயன்கள், சமூகத்தால் மறவர்கள் பெற்ற பெருமைகளும் பயன்களும்' என்ற தலைப்புகளில் மறவர்களோடு தொடர்புடைய செய்திகளைச் சங்க இலக்கியங்களில் கண்டறிந்தவற்றை ஆய்வுநெறியோடு மதிப்பீடு செய்து கண்டறிந்த முடிவுகளை முறைப்படுத்திக் கூறுகிறது.

தம் வாழ்நாளின் பெரும் பகுதியைப் போர்ப் பணிகளாலும், வீரச் செயல்களாலும் கழித்து வாழும் மறவர்கள் பற்றிய பொது மக்களின் கருத்துக்கள் முரண்பாடாக அமைந்திருப்பதை யாவரும் அறிவர். வீரப் பணிகளால் சிறப்புற்ற மறவர்கள், 'முரடர்கள்; வன்மையாளர்; கொடுஞ்செயல் செய்வோர்; இரக்கமற்றவர்; ஈரமற்றவர்; கருணையில்லாதவர் எனக் கூறுவதையே பெரும்பாலும் கேள்விப்படுவதால் அவர்களைத் தவறாகக் கருதி மதிப்பீடும் செய்யும் வழக்கம் தொன்று தொட்டு வந்தவொன்று என்பதை யாவரும் அறிவர். இதனைச் சங்ககாலச் சமூகம் நன்கு உணர்ந்திருந்ததால்தான் மறவர்கள் சமூகத்திலுள்ள எல்லா நிலைகளிலும் பங்கேற்று அதன் முன்னேற்றத்திற்கும் நல்ல தொண்டாற்றி வந்ததையும் நமக்கு எடுத்துக் காட்டியுள்ளது. வீரத்தோடு

ஈரமும் மறவர்களுக்கு வேண்டப்படும் ஒன்றே என்பதை, அவர்களே உணர்ந்து போற்றி வந்துள்ளதைச் சங்க இலக்கியங்கள் சுட்டிக் காட்டியுள்ளன. அதற்கு, அவர்கள் விரும்பி ஏற்ற அகவாழ்வும், அதில் போற்றிய இல்லற நெறிகளும் வழி வகுத்தன எனலாம்.

மேலும், போர்க்களத்தில் நேரில் காண்கின்ற அவலங்களும் அவர்களைச் சிந்திக்க வைத்துள்ளதையும் அறியமுடிகிறது. போர்க்களத்தில் பகைவர்கள் அழிவதோடும் அவர்கள் நாடும் காடாகி பாழ்பட்டு விடுவதையும் அறிந்தவர்கள், சமூக வாழ்வில் ஈடுபடும் பொழுது அதே சூழ்நிலை உருவாக வேண்டுமென விரும்ப மாட்டார்கள். தம் நாட்டையும், நாட்டு மக்களையும் பாதுகாக்கத்தான் மறவர்கள் போர்க்களத்தில் வீரத்தோடு போரிட முற்படும் பொழுது அதற்கேற்ற பண்புகளும் தேவையென உணர்ந்து, அதற்கேற்ப தம்மை மாற்றியமைத்துக் கொள்கின்றனர்.

'வீரம் என்னும் உணர்ச்சி ஓர் உயர்ந்த நோக்கத்திற்காக ஏற்படுவது. ஒருவன் தன் பாதுகாப்பையும் வசதிகளையும் துறந்து, துன்பத்தை நல்ல நோக்கத்திற்காகத் தாங்கிக் கொள்வதே வீரமாகும்'[1] எனத் திறனாய்வாளர் கூறுவது இங்கு நோக்கத்தக்கது. எனவே, மறவர்கள் தத்தம் சமூகத்தின் பாதுகாப்பிற்கும் நாட்டின் நிலைத்த ஆட்சிக்கும் தடையாக உள்ள பகைமையையும், பகைவர்களையும் வீழ்த்த மேற்கொள்ளும் பணியே போர்க்காலப் பணியாகும். இப்பணி, அவர்களை வீரர்களாக மட்டுமின்றி, நாட்டுப் பற்றாளர்களாகவும், தியாகிகளாகவும் மாற்றி விடுவதையும் கண்டறிய முடிகிறது.

'சிக்கல் நிறைந்த மனித உறவுகளுக்கிடையில் மக்கள் வாழ்வதால் அவர்களுக்கு உரிமைகளும் உள்ளன ; கடமைகளும் உள்ளன. மற்றவர்களின் உரிமையை மதித்துத் தம் கடமையை ஆற்றும் மக்கள் உள்ள சமூகமே நீதி மிக்க சமூகமாகும்'[2] எனத் திறனாய்வாளர் கூறுவதையும் நினைவிற் கொண்டு சங்க காலத்து மறவர்களின் தலையாய கடமை போர்க்களப் பணிகள் என்பதை மனதிற் கொண்டு ஒப்பு நோக்கும் பொழுது, அவர்கள் தத்தம் இல்லற வாழ்விலும், சமூக உறவிலும் பெரியோர்கள் கற்பித்த பண்புகளையே தத்தம் பண்புகளாக விரும்பி ஏற்று வாழ்ந்து வந்ததையும் காணமுடிகிறது.

'சங்ககாலம் பண்பாட்டில் வளர்ச்சி பெற்றுச் சிறந்து விளங்கிய காலம். அக வாழ்க்கையிலும், புற வாழ்க்கையிலும் நிறைவு பெற்ற காலம். அன்றைய வாழ்வியல் பண்பாடு போற்றத் தக்கது மட்டுமல்ல ; வாழ்வுக்கு வழி காட்டியாகவும் கொள்ளத்தக்கது. இன்றைய நம் வாழ்க்கையைச் சீர்பெற அமைக்கவும் உறுதுணையாவது. எதிர்கால வாழ்வை வளமுடையதாக்கவும் இன்பமயமானதாக்கவும் வல்லது சங்கப் பாடல்கள். பண்டைத் தமிழர் தங்கள் வாழ்க்கையில் கடைப்பிடித்த அறநெறிகளின் பண்பை, அக்காலப் பண்பாட்டு வளர்ச்சியைப் பற்றி அறிய உதவுவன'. [3]

## பண்பு நலன்கள் வரையறை

'பண்பு' என்ற சொல்லிற்கு, 'குணம் ; தகுதி ; இயல்பு; முறை; மனத்தன்மை; செய்கை; அழகு ; விதம் '[4] எனப் பல பொருள்கள் சொல்லப்படுகின்றன. 'நலன்' என்ற சொல்லும் 'நலம்' என்ற சொல்லும் ஒன்றேயாகும். இச்சொல்லிற்கு, 'சுகவாழ்வு ; இன்பம்; அழகு ; பயன் ; புகழ் ;

உயர்வு ; உதவி ; கண்ணோட்டம் '[5] எனப் பல பொருள்கள் சொல்லப்படுகின்றன.

எனவே, 'பண்பு நலன்கள்' என்ற தொடர்க்கு 'நற்குண நற்செயல்களால் உருவாகும் நன்மைகள்' எனப் பொருள் கூறலாம். சங்ககால மறவர்கள் தத்தம் வாழ்விலும் பணியிலும் மேற்கொண்ட நற்குண நற்செயல்களால் உருவான நன்மைகள் பற்பல ; எண்ணிறந்தவை. அவற்றால் சங்ககாலச் சமூகத்திற்கு ஏற்பட்டவை என்பதைத் தனித்தும் ; அடுத்து வந்த தமிழ்ச் சமூகத்திற்குக் கொடையாகக் கொடுத்துப் பயன்பெறச் செய்தவற்றைத் தனித்தும் கண்டறிவதால் சங்ககால மறவர் மாண்பு நன்கு புலப்படும்.

' பண்பெனப்படுவது பாடறிந்து ஒழுகுதல் '[6] என்பது நல்லந்துவனார் கூற்றாகும். 'பண்பு எனப்படுவது உலக ஒழுக்கம் அறிந்து ஒழுகுதல் ' எனப்பொருள் கூறுவர். 'மக்கள் உள்ளிட்ட எல்லா உயிரினங்களையும் பொருள்களையும் தன்னுள் கொண்டிருப்பதே உலகு என்று சுட்டப்படுகிறது. அஃது, 'ஐம்பெரும் பூதத்து இயற்கை ' என்ற நிலைக்கும் அப்பால் ஒரு கோட்பாடாகத் திகழவும் செய்கிறது. தனிநிலைப் பண்பிற்கு மாறாகப் பொதுநிலைப் பண்பினை உருவகப்படுத்திக் குறிப்பிடுவதே உலகு என்னும் கோட்பாடு என்று கூறலாம். "உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே" என்பது வழக்கத்தில் உள்ள கருத்தாகும். அனைவர்க்கும் பொதுவான மதிப்புகளை உயர்ந்தோரே எடுத்துக்காட்டி, அவற்றால் அனைவரும் பயன்பெறச் செய்வர். ஆதலின் உலகத்தையும் உயர்ந்தோரையும் இணைத்துக் கூறும் வழக்குநிலை பெற்றது'.[7]

தமிழினத்தின் உயர்ந்தோரில் முதல்வராகக் கருதப்படுவர் தொல்காப்பியர். அவர் தாமியற்றிய தொல்காப்பியத்தில் கிட்டதட்ட இருபது இடங்களில் 'பண்பு' என்ற சொல்லை இலக்கண விளக்கத்திற்கு ஏற்ப பொருள் தருமாறு அமைத்து சிறப்பித்துள்ளார்.[8] அடுத்து, ஐயன் திருவள்ளுவரின் திருக்குறள் இந்தச் சொல்லைக் கிட்டதட்ட முப்பது இடங்களில் பயன்படுத்தியுள்ளதைக் காணமுடிகிறது.[9] இவர்தான் இந்த ஆய்விற்குத் தேவைப்படும் எல்லா விளக்கங்களையும் பன்முக நோக்கில் விளக்கி வழிகாட்டியாகத் திகழ்கிறார்.

பண்புநலனை எளிதாகப் புரிந்து கொள்வதற்கு திருவள்ளுவரின் திருக்குறள் துணை புரிவதைக் காணலாம். 'நீதியையும் அறத்தையும் விரும்புதலால் பிறர்க்கும் தமக்கும் பயன்படுதலை உடையாரது பண்பினை உலகத்தார் கொண்டாடா நிற்பர்' எனப் பரிமேலழகர் விளக்குவர். சங்ககால மறவர்கள் போற்றிய பண்புநலன்கள் நீதியையும் அறத்தையும் அடிப்படையாகக் கொண்டவை. எனவே, உலகத்தார் அவர்கள் விரும்பிப் போற்றிய பண்புகளைப் பாராட்டிப் போற்றுகின்றனர் எனலாம். இதனை,

'நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டும் உலகு' *(குறள் - 994)*

என்ற குறள் விளக்கும்.

இந்தப் பண்பினை ஓர் உடைமையாகவே கருதி, எப்பொழுதும் தம்மோடு இருக்குமாறு பார்த்துக்கொள்ள வேண்டுமென்பர். எளிதாக, எப்பொழுதும், எல்லோரிடமும் பரவலாகப் போற்றப்பட்டு வருவது இதுவே எனக் கூறித் திருவள்ளுவர்,

'எண்பதத்தால் எய்தல் எளிதென்ப யார்மாட்டும்

பண்புடைமை என்னும் வழக்கு.' *(குறள் - 991)*

என்ற குறள் மூலம், இதன் சிறப்பையும் பெருமையையும் எடுத்துக்காட்டுவர். இதற்கு பரிமேலழகர் கூறும் உரையும், விளக்கமும் கற்பார் சிந்தனைக்கு நல்விருந்தாகும். 'யாவர் மாட்டும் எளிய செவ்வியராதலால் அரியதாய பண்புடைமை' என்னும் நன்னெறியினை எய்துதல் எளியது என்று சொல்லுவர் நூலோர் ' எனப் பொருள் உரைத்து, 'குணங்களால் நிறைந்து செவ்வி எளியரும் ஆயக்கால் பண்புடைமை தானே உளதாம் ஆகலின், எண்பதத்தால் எய்தல் எளிது என்றும், அஃது உலகத்தையெல்லாம் வசீகரித்தல் பயத்ததாகலின் அதனைத் தொல்லோர் சென்ற நன்னெறி யாக்கியும், அதனை எளிதின் எய்துதற்கு இது நூலோர் ஓதிய உபாயம் என்பார், அவர் மேல் வைத்தும் கூறினர்' என விளக்கந் தருவர்.

திருவள்ளுவர் இத்தகு பண்பு நலன்களை மக்களுக்கே உரிமை உடையதாக்கி, 'மக்கட்பண்பு' எனவரையறை செய்வர். இப்பண்பைப் பெறாதவர் மரங்களாகவே கருதப்படுவர் எனக் கூறும் திருவள்ளுவர், அவர் மிகச்சிறந்த அறிஞராக இருப்பினும் யார்க்கும் பயன் நல்காது என்பர். இதனை,

'அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்

மக்கட்பண் பில்லா தவர்' *(குறள் - 997)*

என்ற குறள், மறவர்களைத் தனித்துச் சுட்டி விளக்கம் தரக்கூடிய ஒன்று எனக்கூறும் முகத்தான், 'அரம் போலும் கூர்மையர்' எனக் கூறினாரோ? என ஐயம் எழவும் இடம் ஏற்படுகிறது. 'வண்மையிற் பாற்படும் அரமும் கூர்மையும் வீரத்தின் பாற்படும் மறவர்க்கும் சாலும்' எனவும் கூற இடமளிக்கிறது. ஆயினும். 'அரம்' ஆகு பெயராகி நின்று அறிவைச் சுட்டியது என உரையாசிரியர்

கூறுவதால், 'போர் அறிவைக் கூர்மையாகப் பெற்றிருப்பினும் பயன்தராது ; மக்கட்குரிய பண்பு நலன்களைப் பெற்றிருக்க வேண்டும்' எனவும் பொருள் கொண்டு சங்க இலக்கியங்களை அணுகினால், மறவர்தம் பண்பு நலன்கள் பலவாறு நமக்குப் புலப்படும் எனலாம்.

## சமூகம் வகுத்த பண்பு நலன்கள்

அரசரும் சான்றோரும் சமூகத்தின் காவலர்களாக இருந்து மறவர்க்கென வரையறை செய்து பண்புகளை அறிமுகப்படுத்தியதற்கான நேரடியான செய்திகள் சங்க இலக்கியத்தில் காணப்படவில்லை. ஆயினும், புலவர்களால் கூறப்பெற்ற பாடற்கருத்துக்களைக் கொண்டு, 'இப்படித்தான் சமூகத்தார் மறவர்க்குரிய பண்பு நலன்களை வரையறை செய்திருக்கக்கூடும்' எனச் சுட்டிக் காட்ட இடம் உருவாகியுள்ளதெனக் கூறலாம். மன்னர்களையும் மறவர்களாகக் கருதியே புலவர்கள் கூறியிருப்பதைக் காணமுடிகிறது. போர்க்களத்தில் ஆயிரக்கணக்கான மறவர்களோடு மறவராக நின்று போரிட்டு வெற்றிக்கொடி நாட்டிய மன்னர்களுக்குக் கிடைத்த போர் வெற்றிக்கு அத்தகு பண்புநலன்களே துணை புரிந்துள்ளன என உறுதிப்படக் கூறவும் இடமளிக்கிறது. புலவர்கள் இத்தகு பண்பு நலன்களில் மாறுபட்ட மன்னர்களின் தவறுகளையும் சுட்டிக் காட்டி வருந்திய நிகழ்வுகளும் நமக்குச் சங்கப் பாடல்களாகக் கிடைத்துள்ளன.

இத்தகு செய்திகளை நாம் எளிதாக இனங்காண தொல்காப்பியரின் புறத்திணையின் துறைகள் பெரிதும் உதவுகின்றன எனலாம். விரிவஞ்சி சான்றாக ஒரு சிலவற்றைக் காண்பது நலம். தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே இருந்த உலக வழக்கு மற்றும் செய்யுள் வழக்கு கொண்டே இத்தகு இலக்கண நெறி படைக்கப்பட்டதெனத் துணிந்து கூறலாம். வெட்சித்

திணைக்குரிய துறைகள், 'நோயின்று உய்த்தல் ; பாதீடு ; கொடை; நடுகல் ; சீர்த்தகு சிறப்பின் பெரும்படை வாழ்த்தல் ' முதலானவற்றைச் சான்றுகளாகக் காட்டலாம். பகைவர் நாட்டிற்குள் நுழைந்து பகைவரது ஆநிரைகளைக் கவர்ந்த பின் அவற்றிற்கு யாதொரு துன்பமும் நேராவண்ணம் பாதுகாத்தபடித் தம் நாட்டிற்கு ஓட்டி வருதல் வேண்டும். 'பகைவரது பசுக்கூட்டந்தானே' என எண்ணி, மாற்றார் மீது கொண்ட சினத்தைப் பசுக்களின் மீது காட்டுவது மானுடப் பண்பாகாது. பாதுகாப்புடன் கொண்டுவந்த பசுக்கூட்டங்களை யார்யார்க்கு எப்படிப் பகிர்ந்து கொடுக்க வேண்டுமோ? அப்படிப் பகிர்ந்து கொடுக்க வேண்டும். மறவர்கள் தத்தமக்குக் கிடைத்த ஆநிரைகளைத் தம் விருப்பம் போல் தம்மைச் சார்ந்தோர்க்கு அன்பளிப்பாக, கொடையாகக் கொடுத்து மகிழவேண்டும். இவையே, 'நோயின்று உய்த்தல் ; பாதீடு ; கொடை' என இலக்கியங்களில் துறையாக அமைக்கப்பட்டன. இதற்கு புறநானூற்று 257 ஆம் பாடலைச் சான்று காட்டுவர் இளம்பூரணர்.

'புல்லார் இனநிரை செல்புறம் நோக்கிக்
கையின் சுட்டிப் பையென எண்ணிச்
சிலையின் மாற்றி யோனே; அவைதாம்
மிகப்பல ஆயினும் என்னாம் ! '. . . (புறம் ; 257 ; 08-11)

எனக்கூறி, 'ஓட்டி வந்த ஆநிரைகளைப் பலருக்கும் கொடையாகத் தந்து மகிழ்ந்தான் ' என்பர்.

கரந்தை மறவர் தம் ஆநிரைகளை மீட்கப் போரிட்டு வீரமரணம் எய்தினர். அவர்களை அவ்வூரார் அடக்கம் செய்து நடுகல் நட்டு, அதில், அவர்தம் பெயர், வீரப்பண்பு முதலானவற்றைக் குறித்து வழிபட்டனர். இத்தகு பண்பையே,

'நடுகல் என்றும், சீர்த்தகு சிறப்பின் பெரும்படை வாழ்த்தல்' என்றும், தொல்காப்பியர் கூறுவர்.

புறநானூற்றில் இதற்குச் சான்றாகக் காட்டப்படும் பாடல் ஒன்று உள்ளது. புலவர் ஒருவர், இரவலனைப் பார்த்து, 'களிற்றடி போலத் தோன்றும் ஒருகண் பறையோடு வரும் இரவலனே ! பகைவர் கவர்ந்த நிரையை மீட்டு வருகையில், வீரர் பலரும் பகைவர்க் கஞ்சி ஓடத், தான் ஒருவனே நின்றுமீட்டுக் காத்தனன். கரையுடைக்கும் வெள்ளத்தினைத் தடுத்துக் காக்கும் அரண் என விளங்கினான். அம்புகள் விரைந்து சூழ அதனிலே மூழ்கி அவன் வீழ்ந்தனன். அக்கொடிய வழியிலே நிற்கும் அவ்வீரனது நடுகல்லைப் பார் ! அவ்வழியாகப் போகின்றாயாயின், அதனைத்தொழுது போவாயாக ! என்று கூறுவது போல பாடல் படைத்திருப்பதைக் காணலாம். இங்கு வாழும் மறவர்களால் சிறந்த மறவர்க்கு நடுகல் நட்டு சிறப்பு செய்த செய்தி கூறப்பட்டுள்ளது. இது அன்றைய சமூகப் பண்பாகத் திகழ்ந்திருந்தது. புலவர் வீரமரணம் எய்திய மறவனை,

'வில்லுமிழ் கடுங்கணை மூழ்கக்
கொல்புனல் சிறையின் விலங்கியோன் கல்லே !'

- *(புறம் ; 263 ; 07-08)*

இவ்வாறு, ஒவ்வொரு திணைக்கும் மறவர் தொடர்பாக சமூகம் வகுத்த பண்பு நலன்கள் கூறப்பட்டுள்ளன. [10]

## மானுடம் போற்றும் பண்பு நலன்கள்

' நமது மனதிற்குள் நுழைகின்ற ஒவ்வொரு எண்ணமும், நாம் பேசுகின்ற ஒவ்வொரு வார்த்தையும், நாம் செய்கின்ற ஒவ்வொரு செயலும் நமக்குள்ளே முத்திரையைப் பதிக்கின்றன ; இந்த முத்திரைகளும் அடையாளங்களும் தான்

நமது பண்பு நலன் ஆகும்'.[11] என்று ஆரிசன் ஸ்வெட்மார்டன் கூறுவர். இதனைச் சங்க கால மறவர்கள் நன்கு போற்றிப் புரந்ததைச் சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது. 'அறத்தாறு நுவலும் பூட்கை'[12] எனக் கூறும் நெட்டிமையார், தும்பைப் போர் தொடங்குவதற்கு முன்பு மறவர்கள் பரவலாக நகரமெங்கும் பறைசாற்றி, ' பார்ப்பனர், பெண்டிர், நோயாளி, புதல்வரைப் பெறாதோர் பாதுகாப்பான இடத்திற்குச் சென்று விடுங்கள்' எனக் கூறுவதை மரபாகக் கொண்டிருந்தனர். போர்க்களத்தில் போர் தொடங்குவதற்கு முன்பு பகைவர்க்கு எச்சரிக்கை விடுக்கும் பண்பையும் மறவர்கள் பெற்றிருந்தனர் என்பதற்கு,

' என்னைமுன் நில்லன்முன் தெவ்விர் பலரென்னை
முன்னின்று கல்நின் றவர்'

- (குறள் - 771)

என்ற, இந்தத் திருக்குறளும் சான்று பகரும். இவ்வாறு மறவர்களது போர்க்களத்தில் மானுடம் போற்றும் பண்பு நலன்கள் பலவாறு இலக்கியங்களில் எடுத்துக் காட்டப்படுகின்றன.

போர் அல்லாத காலத்தில் தம் குடும்பத்தாரோடு இல்லறம் பேணி வாழும் பொழுதும்,

' அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது'

என்னும் திருவள்ளுவரின் கருத்திற்கேற்ப வாழ்ந்து வந்துள்ளதையும் அகப்பொருள் இலக்கியங்களின் வாயிலாகக் கண்டறிய முடிகிறது. தலைவியை மணந்து இன்புற்று வாழுகின்ற தலைவன், அந்த இல்லற இன்பத்தை வியந்து, தலைவியின் தோழியர் கேட்பக் கூறுகின்றனன்.

' விரிதிரைப் பெருங்கடல் வளைஇய உலகமும்

அரிதுபெறு சிறப்பின் புத்தேள் நாடும்

இரண்டும் தூக்கின் சீர்சா லாவே

பூப்போல் உண்கண் பொன்போல் மேனி

மாண்வரி அல்குல் குறுமகள்

தோள்மாறு படூஉம் வைகலொடு எமக்கே !'

- *(குறுந் ; பாடல் எண் 101)*

விரிந்த அலைகளையுடைய பெரிதான கடலாற் சூழப் பெற்றிருக்கின்ற இந்த உலகமும், அரிதாகப் பெறுவதான சிறப்பினையுடைய தேவருலகமும் எம் தலைவி வழங்கும் இல்லற இன்பத்திற்கு ஈடாகா எனக் கூறி மானுடம் போற்ற இல்லறம் வேண்டுமென மகிழ்ந்து கூறுகிறான். 'இந்த உலகமும், தேவர் உலகமும் கிடைத்தாலும் வேண்டேன்' எனக் கூறுவதிலிருந்து அத்தலைவன் மறவன் எனத் தெரிய வருகிறது. அகவாழ்விற்கு உற்ற துணையாக இருப்பவள் தலைவி. அவள்மீது அன்பு கொண்டு வாழத் தலைப்படுபவனே, உற்றார்; விருந்தினர் ; சுற்றத்தார் எனத்தேடி வருவார் மீது நேயம் கொண்டு வரவேற்று இன்புற முடியும்.

தலைவன் தான் மேற்கொண்டு சென்ற செயலானது முற்றிய பின்னர், ஊருக்கு மீள்கின்ற தலைவன், தன் தேர்ப் பாகன் தேரை விரையச் செலுத்த, வழியைக் கடந்து தன் வீட்டையும் அடைகிறான். அடைந்தவன் தன் தேர்ப்பாகனைப் பாராட்டி மானுட நேயத்தின் உறவை மேலும் வளர்க்க முயல்கிறான். தலைவன் தேர்ப்பாகனைப் பார்த்து, 'நோயினாலே வருந்தியவளாக வாழும் தலைவியை எனக்கு மீட்டுத் தந்தமையால், இன்று நீ

தேரினை விரைவாகச் செலுத்தி வந்து, என் தலைவியை உயிரோடு மீட்டுத் தந்தாய் !'[13] என்கிறான்.

*'சான்றவிர் வாழியோ! சான்றவிர் என்றும்*

*பிறர்நோயும் தம்நோய் போல் போற்றி அறனறிதல்*

*சான்றவர்க்கு எல்லாம் கடன் '*

*- (கலி ; 139 ; 01-03)*

என்று கூறுவதும்,

*'பிறருறு விழுமம் பிறரும் நோப*

*தம்முறு விழுமம் தமக்கோ தஞ்சம்'*

*- (அகம் ; 382 ; 1-2)*

என்றும்,

*'ஒன்றன்கூ றாடை யுடுப்பவரே யாயினும்*

*ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை'*

*- (கலி ; 18; 10-11)*

என்றும்,

*'யாக்கைக்கு உயிரியைந் தன்ன நட்பின்*

*வாழ்தல் அன்ன காதல்*

*சாதல் அன்ன பிரிவறி யோளே'*

*- (அகம் ; 339 ; 12-14)*

என்றும் கூறுவனவெல்லாம் மறவர்க்கும் பொருந்துவனவாக உள்ளன.

'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் ' என்பதும், 'ஒத்த தறிவான் உயிர் வாழ்வான்' என்பதும், 'கைம்மாறு வேண்டா கடப்பாடு' என்பதும், 'ஈதல் இசைபட வாழ்தல்' என்பதும் மறவர்கள் போற்றிய பண்பு நலன்களே என்று

சங்க இலக்கியங்கள் வாயிலாகக் கண்டறிய முடிகிறது. கடையேழு வள்ளல்கள் போற்றிய வள்ளண்மை யனைத்தும் மானுடம் போற்றும் பண்பு நலன்களால் வளர்ந்து முதிர்ச்சி பெற்ற நிலையே என்பதைக் கூறி,

'எழுசமம் கடந்த எழுஉறழ் திணிதோள்

எழுவர்பூண்ட ஈகைச் செந்நுகம்' *(சிறுபா ; 112-113)*

என நல்லியக்கோடனைப் புகழ்ந்து பாராட்டுவதையும் காணலாம்.

'நல்வாழ்வினை அரிஸ்டாட்டில் 'யூ டெ மோனியா' என்பார். மனிதனை மனிதனாக மாற்றிச் சமுதாயத்தில் அவனை ஓர் அங்கமாக ஆக்குவது நல்வாழ்வுக் குறிக்கோளகும். மனிதன் உலகத்தின் பொருட்டு உழைப்பதால் இக்குறிக்கோள் தோன்றுகிறதேயன்றித் தானுண்டு தன் வேலையுண்டு என்று வரையறுத்துக் கொண்டு வாழ்வதால் இக்கோள் தோன்றுவதில்லை '[14] எனத் திறனாய்வாளர் கூறுவதை மறவர்தம் சமூகப் பணிகளோடு ஒப்பிட்டு நோக்கின் அவர்தம் மானுடம் போற்றும் பண்பு நலன்கள் உள்ளங்கை நெல்லிக்கனி எனத் தென்படும்.

'தெண்கடல் வளாகம் பொதுமை இன்றி
வெண்குடை நிழற்றிய ஒருமை யோர்க்கும்
நடுநாள் யாமத்தும் பகலும் துஞ்சான்
கடுமாப் பார்க்கும் கல்லா ஒருவற்கும்
உண்பது நாழி உடுப்பவை இரண்டே'

*- (புறம் ; 189 ; 01-05)*

என்று நக்கீரர் கூறிய கருத்துக்களைச் சங்க கால மறவர்கள் நன்கு உணர்ந்தவர்கள் என்பது தெளிவு.

## கல்வி வழி கற்ற பண்பு நலன்கள்

'அரசன் தான் கற்றற்குரிய நூல்களைக் கற்றல். அவையாவன , அறநூலும், நீதி நூலும், யானை, குதிரை, தேர், படைக்கலம் என்னும் இவற்றின் நூல்களும் முதலாயின. அரசன் அறிவுடையன் ஆயக்கால் தன்னுயிர்க்கே அன்றி மன்னுயிர்க்கும் பயன்படுதல் நோக்கி, இஃது அரசியலுள் வைக்கப்பட்டதாயினும், யாவர்க்கும் உறுதி பயத்தற் சிறப்புடைமையின் பொதுப் படக்கூறுகின்றார் ' [15] எனப் பரிமேலழகர் திருக்குறள், பொருட்பாலின் இடம் பெற்ற 'கல்வி' எனும் அதிகாரத்திற்கு விளக்கம் கூறுவர்.

'இறைமாட்சி' என்ற அதிகாரத்தில் இடம் பெற்ற மூன்றாவது திருக்குறளில் திருவள்ளுவர், 'நிலத்தினை ஆளும் திருவுடையார்க்கு, அக்காரியங்களில் விரைவுடைமையும், அவை அறிதற்கு ஏற்ற கல்வியுடைமையும், ஆண்மை உடைமையும் ஆகிய இம்மூன்று குணமும் ஒரு காலும் நீங்காதிருக்கவேண்டும்' எனக் கூறுவர்.

'தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்

நீங்கா நிலனாள் பவர்க்கு'

- (குறள் - 383)

என்பது குறள். உரையாசிரியர் கல்வி என்பது, 'படை ; குடி; கூழ் ; அமைச்சு ; நட்பு ; அரண்' எனப்படும் ஆறு அங்கத்திற்கும் இன்றியமையாதது என்பர். இதில், 'அரண்' என்பது தூதற்கும், ஒற்றற்கும் ஆகுபெயர் ஆகி வந்து நின்றதென்பர். சங்க இலக்கியங்கள் கல்லா மக்களையும் சுட்டிக் காட்டுகிறது. கற்றவர்களையும் சுட்டிக் காட்டுகிறது. கல்லாமக்களாகிய மறவர் ஒரு சிலரிடம் உணர்வும் செயலும் மட்டுமே இருந்ததைக் குறிப்பர். கற்றறிந்த மறவர்கள் நன்கு சிந்தித்துச் செயல்படுவர் என்பதைச் சுட்ட மறந்தாரில்லை.

'கல்லா இடையன் போல ' (புறம் ; 331 ; 05)

'கடுமாப் பார்க்கும் கல்லா ஒருவர்க்கும்' (புறம் ; 189 ; 04)

'கல்லா இளைஞர் சொல்லிக் காட்ட' (பொரு ; 100)

'கல்லா இளைஞர் கவளம் கைப்ப ' (முல் ; 36)

'கல்லா இளைஞர் மெல்லத் தைவர' (சிறு ; 33)

என மிகக் குறைந்த அளவிலேயே கல்லா மனிதர்கள் சுட்டப்பட்டுள்ளனர்.

இற்றைய கல்வி முறைகளை மனதிற் கொண்டு சங்ககாலக் கல்வி முறையை ஒப்பிடுதல் தவறாகக் கருத நேரிடும். சங்ககாலக் கல்வி சமூகம் சார்ந்த கல்வியாக இருந்ததெனலாம். முறையாக எழுத்தும், எண்ணும் கற்றவர்களைப் புலவர்கள் என்றும், கணக்காயர் என்றும், சான்றோர் என்றும், அறிவுடையார் என்றும் கூறித் தனித்து ஓரினமாகக் காணுகின்ற சமூகப் பார்வை தான் அன்று இருந்தது. ஏனைய பெரும்பாலான மக்கள் தத்தமக்குரிய தொழிற்கல்வியைத்தான் கற்றறிந்திருந்தனர். அதுவும் செய்முறைக் கல்வியேயாகும். ஏட்டுக் கல்வி இத்தகையோர்க்குத் தேவைப்படவில்லை. சிறப்பாக மறவர்கள் மேற்கொண்டிருந்த கல்வி போர்க்கல்வி என்பதைத் தெளிவாகக் காணமுடிகிறது. ஏட்டுக் கல்வி உயர்ந்தோர்க்குரிய தெனத் தெளிவாகக் கூறும் தொல்காப்பியர்,

'ஓதலும் தூதும் உயர்ந்தோர் மேன ' (தொல்; பொ; அ ; 26)

என்றும்,

'உயர்ந்தோர்க்குரிய ஓத்தினான ' (தொல்; பொ ;அ; 31)

என்றும் கூறுவதைக் காணலாம்.

பொன்முடியார் கடமை எனக் கூறும் புறநானூற்றுப் பாடல் கூட, 'சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே ' என்றுதான் கூறுகிறது. பதிற்றுப்பத்து கூறும் சான்றோர் போர் வீரனாகத் தான் இருக்கிறான். இதனை உறுதிப்படுத்துவது போல, 'வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே' என்கிறது. இறுதியில், 'களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே' எனக் கூறுவதும் தொழிற்கல்விக்கே சங்க காலத்து சமூகம் முதலிடம் தந்துள்ளது என முடிவெடுக்கவும் இடம் ஏற்படுகிறது. ஏட்டுக் கல்வியின் சிறப்பை ஆரியப் படைகடந்த நெடுஞ்செழியன், 'அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும்' என்பதை மற்றொரு புறப்பாடல் வாயிலாகக் கூறியிருப்பதை இங்கு ஒப்புநோக்கிப் பார்ப்பது நன்று. திருவள்ளுவர் கல்லாமையைச் சுட்டிக் காட்டிய பிறகு 'கேள்வி ' என்ற அதிகாரம் ஒன்று அமைத்து விளக்கம் தருவதும் தொழிற்கல்விக்கு துணை புரிவதாகவும் கருத இடமேற்படுகிறது. இத்துடன் தெரிந்து செயல்வகை, வினைத் திட்பம், வினைத்தூய்மை போன்ற அதிகாரங்கள் தொழிற்கல்விக்கே துணை புரிகின்றன என்பது தெளிவாகிறது.

மறவர்களுக்குரிய தலையாய கல்வி போர்க்கல்விதான் என்பதை மறுக்க இயலாது. அத்துடன் போர் நடவா காலத்தில் உழவுத்தொழில், வேட்டையாடுதல், மீன் பிடித்தல் போன்ற தொழில்களைத் தமதாக்கிக் கொண்டு வாழ்ந்ததையும் கண்டறிய இடம் ஏற்படுகிறது. எனவே, மறவர்கள் தத்தமக்குரிய பண்பு நலன்கள் சிறக்கத் தேவைப்படும் தொழில் கல்விகளையே கற்றிருந்தனர் எனக்கூறவே இடம் அளிக்கிறது. அவர்களுக்கெனத் தனித்து கல்வித் தொடர்பான பயிற்சி வழங்கியதற்கானச் சான்றுகள் கிடைக்கப் பெறவில்லை எனலாம்.

இதற்கு அரண் செய்வது போல மேஜர். கதிர்மகாதேவன், 'வினைநவில் கவிதைகள்' என்று நமக்கு அறிமுகப்படுத்தி விளக்கந் தருவதைக் காணலாம்.

'வீரநிலைக் காலத்தில் தோன்றிய கவிதைகளை 'வினைநவில் கவிதைகள்', என்றும், 'வீரநிலைக் கவிதை' என்றும், மேலை நாட்டு ஒப்பீட்டாய்வாளர்கள் குறித்துள்ளனர். வீரச்சுவை உடைய கவிதைகள் எல்லாம் வீரநிலைக் காலக் கவிதைகள் எனல் பொருந்தாது. சான்றாகப் 'பரணி' போன்ற இலக்கிய வகை, வீரச் சுவை பயப்பது ; ஆனால், வீரநிலைக் காலப் பண்பாட்டில் ஊறியது அன்று, வீரச்சுவை உடைய கவிதைகள் எல்லாக் காலத்திலும் எழுதப்படலாம். பேரா. சி.எம். பௌரா 'செய்வினைக்கவிதைகள்' என்ற தலைப்பை வீரநிலைக் காலக் கவிதைகளைக் குறிக்கப் பயன்படுத்துகின்றார். தமிழில் இக்கவிதைகளை 'வினை நவில் கவிதைகள் ' எனலாம்[16] என்று கூறுவர்.

மேலும் அவர், 'சங்க இலக்கியத்தில் ஊரில் பிச்சை எடுக்கும் யானைக்கும், களத்தில் அமர்புரியும் யானைக்கும் உள்ள வேறு பாட்டை விளக்கப் புலவர்கள், ' பிச்சையானை' என்றும், 'வினைநவில் யானை ' என்றும் வேறுபடுத்தினர். செருமுனையில் சமர்புரியும் குதிரையை ' வினைநவில் புரவி ' என்றனர். இங்கு 'வினைநவில் ' என்ற அடைமொழி அமரைக் குறிக்கும். எனவே, ஈண்டு வீரநிலைக் காலக் கவிதைகளைக் குறிக்க, 'வினைநவில் கவிதை' எனக் கூறுதலே பொருத்தமாகும் ' [17] எனக் கூறுவர்.

'. . . .    . . . .    . . . . பெரும்புண்

ஏளர் தழும்பன் ஊர்ஊர் ஆங்கண்

பிச்சைசூழ் பெருங்களிறு போலவெம்

அட்டி லோலை தொட்டனை நின்மே '.    - (நற் ; 300 ; 11-12)

என்றும்,

'பணைநிலை முனைஇய <u>வினைநவில்</u> <u>புரவி</u>

இழையணி நெடுந்தே ராழி யுறுப்ப' (அகம் ; 254 ; 12-13)

என்றும் புலவர்கள் பாடியிருப்பதைச் சான்று காட்டுவர். இத்தகு தொடர்கள், 'பதிற்றுப்பத்து' ; 'நெடுநல்வாடை'; 'அகநானூறு' ; 'புறநானூறு'; முதலான நூல்களிலும் பரவலாக இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.[18]

சங்க காலத்தில் தொழில்சார் கல்வியே மிகச் சிறப்பாகக் கருதப்பட்டது என்பதைத் தொல்காப்பியரும் வலியுறுத்திக் கூறியிருப்பதைக் காணமுடிகிறது. 'ஓதல் , ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்ற ஆறு திறனாகிய அந்தணர் பக்கமும், ஓதலும், வேட்டலும், ஈதல், படை வழங்குதல், குடிகளைப் பாதுகாத்தல் என்ற ஐவகை மரபின் அரசர் பக்கமும், வணிகர், வேளாளர்க்கு ஓதல், வேட்டல், ஈதல், உழவு, வணிகம், நிரையோம் பல் என்ற ஆறும், குற்றமற்ற செயலையுடைய மழை, பனி, வெயில் என்ற மூவகைக் காலத்தினையும் பொறுத்த அறிவன் பக்கமும், எட்டுவகை வழக்கினையுடைய துறவோர் பக்கமும், பாகுபாட்டினை அறிந்த வீரர் பக்கமும், வாளானும் தோளானும் பொருது வெற்றி பெறலன்றி, மேற் கூறியவற்றாலும் வெற்றி பெறும் நிலையுடையது என்று கூறுவர் அறிவுடையோர்'.[19]

## அரசாணை போற்றிய பண்பு நலன்கள்

அரசாணை என்பது அரசனே நேரில் விடுக்கும் ஆணை ; படைத்தலைவர் அரசராணை இதுவென அறிவித்தல் ; அமைச்சர்கள் இதுவே அரசாணை என ஆணையிடல்; தத்தம் குழுத்தலைவர் அரசாணைக் கேற்ப தத்தம் வீரர்கட்கு ஆணை பிறப்பித்தல் முதலானவை இதனுள் அடங்கும். போர்க் களப் பணிகளுக்காக மட்டும் இத்தகு ஆணை பிறப்பித்துக் கண்காணிப்பது

மட்டுமன்று. ஏனைய காலங்களிலும் தேவைப்படும். காவல் பணிக்கும், பிற பணிக்குங்கூட ஆணை பிறப்பிப்பது அரசின் கடமையாகும். இவற்றைப் போற்றித் தத்தம் கடமைகளைக் கண்ணுங்கருத்துமாக செய்துவந்த மறவர்கள் பற்றிய செய்திகளும் இலைமறைக் காயாகச் சங்கப் பாடல்களில் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். மறவர்கள் இத்தகு பண்பு நலன்களால் பெருமை பெற்றது மட்டுமன்று ; தம்மைச் சார்ந்தார்க்கும் இத்தகு பண்பு நலன்களைப் பெறவும் பயிற்சி வழங்கியுள்ளனர். இத்தகு அரசாணைகள் ஒற்றர்கள் மூலமும் வருவதுண்டு ; தூதுவர் மூலமும் வருவதுண்டென்பர். [20]

'வருகதில் வல்லே ; வருகதில் வல்லென
வேந்துவிடு விழுத்தூது ஆங்காங்கு இசைப்ப
நூலரி மாலை சூடிக் காலின்
தமியன் வந்த மூதி லாளன்
அருஞ்சமம் தாங்கி முன்னின்று எறிந்த
ஒருகை இரும்பிணத்து எயிறு மிறையாகத்
திரிந்த வாய்வாள் திருத்தாத்
தனக்குஇரிந் தானைப் பெயர்புறம் நகுமே. '

- *(புறம்; பாடல் எண் 284)*

ஓரம் போகியார் பாடிய பாடல் இது. அரசாணைக்கு எவ்வளவு மதிப்பு வழங்கப்பட்ட தென்பதை நேரில் கண்டு வியந்து இப்பாடலைப் பாடியுள்ளார் எனலாம். 'விரைந்து வருக ! விரைந்து வருக ! ' என, வேந்தனிட்ட தூதுவர் வந்து ஆங்காங்கே அழைக்க, நூலரி மாலை சூடிக் காலால் நடந்து, தான் ஒருவனாகவே வந்தான் அவ்வீர மறவன். அவன் வீரம் கேண்மின்! வருபவரை முன்னேறாதவாறு தடுத்து, முன்னின்று போராடிய பகைவரின் கொல் களிற்றை

வெட்டி வீழ்த்தி அவன் பிணமாக்கினான். அதன் பற்களிலே சிக்கி வளைந்த தன் வாளை நிமிர்த்துக் கொண்டு அவன் திரும்பினான். அப்போது அவன் ஆற்றல் கண்டு எதிர் நிற்க அஞ்சிய பகைவன் ஒருவன் ஓடிக் கொண்டிருந்தது கண்டு, அங்கிருந்தே வீர நகை செய்து நின்றவனன்றோ? அவன் ! ' என்று வியந்து பாராட்டிக் கூறியுள்ளதைக் காணலாம்.

இத்தகு அரசாணை பற்றி காப்பியாற்றுக் காப்பியனார், களங்காய்க் கண்ணிரார் முடிச்சேரலைப் பாடிய பொழுது குறிப்பிடுவர்.

'எயில்முகம் சிதையத் தோட்டி ஏவலின்
தோட்டி தந்த தொடிமருப் பியானைச்
செவ்வுளைக் கலிமா ஈகை வான்கழல்
செயலமை கண்ணிச் சேரலர் வேந்ததே !'

*- (பதிற் ; நான்-பத்து ; பாடல் 8 ; 05-08)*

எனப்புகழந்து பாடுவதையும் காணலாம். 'பகையரசருடைய மதில் இடங்கள் சிதைந்து அழியுமாறு, நீதான் நின் யானைப் படைகளைச் செலுத்தும் மறவரை ஏவினை ! நின் ஏவலின் படிக்குச் சென்ற அவரும், அவ்வாறே, அவற்றை வென்று, அந்நாடுகளின் காவலையும் நினக்குத் தந்தனர். அத்தகைய தொடியணிந்த மருப்பினையுடைய யானைப் படையும், சிவந்த பிடரிமயிரைக் கொண்ட செருக்குடைய குதிரைப் படையும் உடையோனே ! பொன்னாற் செய்த உயர்ந்த கழலையும், செயற்பாடமைந்த கண்ணியையும் அணிந்த சேர நாட்டு மறவர்க்கு வேந்தனே !' எனப் புலவர் பாராட்டிப் பாடியுள்ளார்.

## பண்பு நலன்களைப் பாராட்டிய புலவர்கள்

பொருநர், பாணர், புலவர் எனப்பட்டோர் போர்க்களத்தில் மறவர்கள் இயல்பாக வெளிப்படுத்திய பண்பு நலன்களை வியந்து பாராட்டி மகிழ்ந்துள்ளனர். வருங்காலச் சந்ததியர்க்கென உதவும் வகையில் பாட்டாகப் பதிவு செய்யும் பணியைச் செய்தவர்கள் புலவர்களே. பொருநரும், பாணரும் பிறரும் இத்தகு மறவர்தம் பண்புநலன்களை வியந்து கூறியதைக் கேட்ட புலவர்கள், அவற்றையும் தத்தம் பாக்களில் பதிவு செய்து வைத்துச் சென்றுள்ளனர்.

'அடங்கிய புடையல் பொலங்கழல் நோன்தாள்
ஒடுங்காத் தெவ்வர் ஊக்கறக் கடைஇப்
புறக்கொடை எறியார்நின் மறப்படை கொள்ளுநர் !
நகைவர்க்கு அரண மாகிப் பகைவர்க்குச்
சூர்நிகழ்ந் தற்றுநின் தானை !'

*- (ப.ப ; 4ம் பத்து ; முதல் பாடல் ; 31-35)*

'வேற்படைகள் தம்முள் நெருங்கிய போர்க்களத்தே, ஒடுங்கிய பனம்பூ மாலையினையும், பொற்கழலினையும், வலிய கால்களையும் உடையவரான நின்படை மறவர், அடங்காத பகைவரது ஊக்கம் எல்லாம் அறவே அழியுமாறு, அவர்களைக் களத்தினின்றும் தோற்று ஓடச் செய்வர். அவ்வாறு அவர்கள் புறங்கொடுத்து ஓடும் பொழுது, அவர்களின் முதுகின் புறத்தே, தம் கைவேலை ஒரு போதும் எறியமாட்டார் ' எனக் காப்பியாற்றுக் காப்பியனார் கூறுவதைக் காணலாம்.

'நெடுநா ஒள்மணி நிழத்திய நடுநாள்
அதிரல் பூத்த ஆடுகொடிப் படாஅர்
சிதர்வால் அசைவளிக்கு அசைவந் தாங்கு
துகில்முடித்துப் போர்த்த தூங்கல் ஓங்குநடைப்
பெருமூ தாளர் ஏமம் சூழ'

(முல்லைப்பாட்டு ; 50-54)

என நப்பூதனார் மெய்க்காப்பாளராகப் பணிபுரியும் மூத்த மறவர்களின் கடமை தவறாப் பண்பினை நயம்பட எடுத்துரைப்பர். 'மயிர்க்கட்டுக் கட்டிச் சட்டையிட்ட, நல்லொழுக்கமிக்க, வயது முதிர்ந்த, மெய்க்காப்பாளர் துயில் மயக்கத்துடன், ஆடி அசைந்து கொண்டே மன்னனைச் சூழ்ந்து காவலாக நின்றனர் ' எனச் சிறப்பித்துக் கூறுவர். இப்புலவர் இந்த முல்லைப் பாட்டிலேயே செஞ்சோற்றுக் கடனுக்காகப் போர்க்களத்தில் வீரமரணம் எய்திய மறவர்களை 'சோறு வாய்த்து ஒழிந்தோர் ' எனப்புகழ்ந்து பாராட்டுவதையும் காணமுடிகிறது.

மாங்குடி மருதனார் மதுரைக் காஞ்சியில், 'வாட்போர் புரிந்து, தம்முடைய வீரத்தை மிகுத்துக் காட்டும் வீரர்களின் தோளின் வெற்றி, அவர்கள் பகைவர்களை முறையாக வெட்டுவதால் முற்றுப்பெறும் ' எனக்கூறி மறவர்தம் செந்நெறியை, 'வளம் மிகு மறமைந்தர் தோள் முறையான் வீறுமுற்ற ' எனப் பாராட்டுவர். இவரே பாலை நில மறவர்களை,

' உவலைக் கண்ணி வன்சொல் இளைஞர்
சிலையுடைக் கையர் கவலை காப்ப'

- (மது.கா ; 311-312)

எனக்கூறித், 'தத்தம் இனத்தாரைத் தாமே ஆறலைக் கள்வர்களிடமிருந்து காத்து வருவர் ' என்பர். 'அச்சம் அறியாது ஏமமாகிய ஊர்காப்பாளர் ' என மதுரை நகரைக் காவல் புரியும் மறவர்களை கடமை உணர்வைப் பாராட்டிப் போற்றுவர். இவரே,

'வருபுனல் கற்சிறை கடுப்ப இடையறுத்து
ஒன்னார் ஓட்டிய செருப்புகல் மறவர் '

- *(மது.கா ; 725-726)*

எனக்கூறி மறவர்தம் நாட்டுப் பற்றினையும், தியாகத்தையும் சுட்டிக் காட்டி வியந்து பாராட்டுவர். மேலும், பல மறவர்களைப் பலவாறு பாராட்டி, அவர்தம் தறுகண் பற்றிய செய்திகளை நமக்குப் புலப்படுத்துவர். [21]

## சமூகப் பயன்களின் வரையறை

சங்ககால மறவர்களின் பண்பு நலன்கள் பன்முகத் தன்மை வாய்ந்தவை. வீரத்தோடு, எல்லா மக்களும் பெறவேண்டிய எல்லாப் பண்பு நலன்களையும் பெற்றுத் திகழ்ந்தனர். எனவே, சமூகத்திற்கு இவர்களால் எண்ணிறந்த பயன்கள் உருவாகியிருந்ததைச் சங்க இலக்கியங்கள் பலவாறு எடுத்துக் காட்டுகின்றன. அவற்றைக் கண்டறிவதற்கு முன் இன்றைய சமூகவியலார் கூறும் சமூகப் பயன்களைப் பற்றிக் கண்டறிவது நன்று. மக்கள் தத்தம் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள பிறரை நாடுவது இயல்பு. 'கொள்ளலும் கொடுத்தலும் ' எல்லாக் காலத்திற்கும் எல்லா மக்களுக்கும் பொதுவான பண்பாகத் திகழ்ந்திருந்ததைக் காணமுடிகிறது. சங்க காலத்திலும் இது நிறைவாக இருந்துள்ளதெனலாம். இதனை முடத்தாமக் கண்ணியார் இயல்பு நவிற்சியாகக் கூறியிருப்பதைப் 'பொருநராற்றுப் படை ' என்னும் பத்துப்பாட்டு நூலில் காணமுடிகிறது. அவை:

(அ) குறிஞ்சி நிலத்துக் கருப்பொருள்களான தேனையும் கிழங்கையும் கொண்டு போய் நெய்தல் நிலத்தில் பண்ட மாற்றுச் செய்த குறிஞ்சி நிலமக்கள், அவற்றின் விலையாக நெய்தல் நிலத்து மீன், நெய்யொடு நறவாகிய கள்ளையும் பெற்று வருவர்.

(ஆ) மருத நிலத்துக் கருப்பொருள்களான தீஞ்சுவைக் கரும்போடு அவலையும் விற்றோர், முல்லை நிலத்துக் கருப்பொருள்களாக மானின் தசையோடு மதுவைப் பண்ட மாற்றாகப் பெற்று வருவர் .

(இ) குறிஞ்சி நிலத்து குறிஞ்சிப் பண்ணை, நெய்தல் நிலத்துப் பரதவர் பாடுவர் ; நெய்தல் நிலத்து நெய்தல் பூவால் ஆன கண்ணியைக் குறிஞ்சி நிலத்துக் குறவர் சூடிக்கொள்வர்.

(ஈ) கானவரான முல்லை நிலத்து மக்கள், மருதநிலத்து மருதப் பண்ணைப் பாடுவர் ; அகநாட்டவரான மருத நிலத்து உழவர்கள், நீல நிறமுடைய முல்லைக் கொடி படர்ந்த பல பகுதிகளாலான காட்டு நிலமாகிய முல்லை நிலத்தைச் சிறப்பித்துக் கொண்டாடுவர்.

(உ) முல்லை நிலத்துக் காட்டுக் கோழிகள் மருத நிலத்திற்குச் சென்று நெற்கதிரைக் கொத்தித் தின்னும். மருதநிலத்து மனைக்கோழிகள், குறிஞ்சி நிலத்திற்குச் சென்று தினையை விருப்பத்தொடு தின்னும்.

(ஊ) குறிஞ்சி நிலத்து மலைவாழ் குரங்குகள் , நெய்தல் நிலத்துக் கழியிலே மூழ்கி நீராடும். நெய்தல் நிலத்துக் கழியில் திரியும் நாரைகள், குறிஞ்சி நிலத்து மலையில் சென்று தங்கி இளைப்பாறும். [22] இத்தகு நிலத்து வாழ் மக்கட்கு காவலனாக இருந்து நல்லாட்சி புரிந்து வந்தவன் சோழன் கரிகாற் பெருவளத்தான் ஆவான். அவனது நாடும், நல்லாட்சிக் காவலும் எப்படி சிறப்புற்றிருந்ததென முடத்தாமக் கண்ணியார் தொடர்ந்து விளக்குவர்.

'தண் வப்பின் நால்நாடு குழீஇ
மண் மரங்கினான் றுவின்றி
ஒரு குடையான் ஒன்றுகூற
பெரிது ஆண்ட பெருங்கேண்மை
அறனொடு புணர்ந்த திறனறி செங்கோல்
அன்னோன் வாழி ! வென்வேற்குருசில் ! '

*- (பொரு ; 226-231)*

எனப் போற்றிப் புகழ்ந்து வாழ்த்துவர்.

'இவ்வாறு ஒன்றனோடு ஒன்று நெருங்கிப் பொருந்துமாறு, குளிர்ந்த வாழ்நிலப் பகுதிகளையுடைய நான்கு கூறாகிய நாடுகள் திரண்டு கிடக்கும் தன் மண்ணுலகமாகிய சோழநாட்டில் வீற்றிருந்து, ஒரு குற்றமும் இன்றித் தன் ஒப்பற்ற வெண்குடைக் கீழ் நின்ற தன் ஆணை ஒன்றனையே உலகம் முழுவதும் கூறும் படியாக, நெடும்பகுதியை அரசாண்டு வருபவன் கரிகால் வளவன். பெரிய நட்புடன் அறத்தொடு கூடிய வழியை உலகம் அறிதற்குக் காரணமான செம்மையான கோலையுடைய அக்கரிகாற் பெருவளத்தான் இனிது வாழ்வானாக! வெல்கின்ற வேற்படையை உடைய தலைவனாகிய அவன் வாழ்வானாக !' [23] என மனமாரப் பாராட்டுவதுடன் வாழ்த்தவும் செய்கிறார்.

'மனிதன் சுதந்திரமானவனாக இருந்ததாலும் பிறப்பிலும், பிறந்த பின்னர் சமுதாயத்துடன் இணையும் போதும், சமூகம், அவனைப் போன்ற எண்ணற்ற தனிமனிதர்களின் சக்திகளைக் கொண்டு ஒரு சில காரியங்களைச் சாதிக்க முற்படும் போதும், அவனைத் தன்னகத்தே ஏற்றுத் தனது கட்டுதிட்டங்களுக்கு உள்ளாக ஆட்படுத்துவதன் மூலம் தனிமனிதன் சமூகம் எனும் கூட்டமைப்பில் ஒன்றுகின்றான்' [24] என்ற சமூகக் கோட்பாடும் சங்ககாலச் சமூகத்திற்கும்

பொருந்தும். எனவேதான், அற்றைய சமூகம், 'சேர சமூகம் ; சோழ சமூகம் ; பாண்டிய சமூகம் ' எனப்பரந்து விரிந்து ஒட்டுமொத்தமாகத் தமிழ்ச் சமூகம் எனக்கூறும் அளவிற்குப் பெருமை பெற்றிருந்ததென்பர். தொல்காப்பியரும்,

'வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்
நாற்பேர் எல்லை அகத்தவர் . . . . '

- *(தொ ; பொ ; செய் ; 78 ; 3-4)*

எனச் சிறப்பித்துச் சுட்டிக் காட்டினார். மொழியாலும், பண்பாலும், நாகரிகத்தாலும் ஒன்றுபட்டு, மண்ணாசையால் வேறுபட்டுக் கிடந்த மூவரசும், மூவேந்தரும் ஒன்றுபட்டு வாழவேண்டும் என்ற எண்ணம் அக்காலத்துச் சான்றோர்களிடம் இருந்ததென்பதைப் புலவர் ஒருவர் தன் பாட்டில் வெளிப்படுத்தியுள்ளதையும் காணமுடிகிறது. முடத்தாமக் கண்ணியார், தாமியற்றிய பொருநராற்றுப் படையில்,

'முரசு முழங்குதானை மூவருங் கூடி
அரசவை இருந்த தோற்றம் போல '

- *(பொரு ; அடிகள் 54-55)*

எனப் பாடியிருப்பதையும் காணமுடிகிறது. இவ்வாறே, 'குன்றூர்கிழார் மகனார் ' என்னும் புலவர் இவ்விருப்பத்தை வேறு வடிவில் வெளிப்படுத்துவதைப் புறநானூற்றுப் பாடலில் காணமுடிகிறது. போந்தைப் பட்டினத்தை ஆண்ட நெடுவேள் ஆதனின் மறப்பண்பைப் புகழ்ந்து பாடிய பொழுது,

'. . . .. . . . . . . . கருஞ்சினை
வேம்பும் ஆரும் போந்தையும் மூன்றும்
மலைந்த சென்னியர் அணிந்த வில்லர்

கொற்ற வேந்தர் தரினும் தன்தக

வணங்கார்க்கு ஈகுவன் அல்லன் '

- (புறம் ; 338 ; 05-09)

எனத் தமிழனின் தன்மான உணர்வுக்குரிய வரம்பெல்லையை மகட்பாற்காஞ் சித்துறையின் வாயிலாகக் கூறுவர்.

புலவர், 'கரிய கொம்புகைளயுடைய வேப்பமாலையும், ஆத்திமாலையும், பனந்தோட்டு மாலையுமாகிய மூன்றையும் சூடிய தலையையுடையராய், வெற்றி மிக்க முடிவேந்தர் மூவரும் மகட்கொடை வேண்டி வந்தாலும், தன் தகுதிக் கேற்ப தன்னை வணங்கி இரந்து கேட்டார்க் கல்லது இவள் தந்தை இவளை மகட்கொடை நேரான் ' எனக் கூறுவதையும் காணமுடிகிறது. இருப்பினும் தமிழ் மக்களிடையே ஒன்றுபட்ட பல பண்புகளைக் காணமுடிகிறது. அதற்கு மக்கள் மேற்கொண்ட சமூக நடத்தைகளே காரணமாக அமைந்திருந்தன எனலாம். சமூக உளவியலார் இதனை நான்கு வகைப்படுத்தி விளக்குவார். இந்நான்கில் ஒன்றாகக் கருதப்படுவதுதான், 'குழுக்களிடையே நிகழ்வன ' என்னும் சமூக நடத்தையாகும். குழுவுக்கும் குழுவுக்கும் கீழ்க்கண்ட வகைகளில் சமூக நடத்தை நடைபெறுகிறது எனக் கூறுவர். அவை :

1. ஒரு குழுவினர் இன்னொரு குழுவினருடன் தொடர்பு கொள்வது.
2. ஒரு குழுவிலுள்ள ஒருவர் இன்னொரு குழுவிலுள்ள எல்லோரிடத்தும் தொடர்பு கொள்வது.
3. ஒரு குழுவினர் இன்னொரு குழுவிலுள்ள ஒருவருடன் தொடர்பு கொள்வது.
4. ஒரு குழுவிலுள்ள ஒருவர் இன்னொரு குழுவிலுள்ள ஒருவருடன் தொடர்பு கொள்வது. [25]

இந்த நான்கும் தமிழகத்தில் இயல்பாகவே நடந்து வந்ததென்பதையும், அதனால், பண்பு நலன்களில் அதிக ஒருமைப்பாடு இயல்பாக உருவாகி நிலை பெற்றதென்பதையும் ஆற்றுப்படை இலக்கியங்கள் வாயிலாகத் தெளிவாகவும், விரிவாகவும் காணமுடிகிறது. இவற்றுள் இடம் பெற்ற புவியியல், மானிடவியல், சமூகவியல், அரசியல், கலையியல் தொடர்பான செய்திகளே இதற்குச் சான்றாகத் திகழ்கின்றன. [26]

இவற்றின் அடிப்படையில்தான் சங்ககால மறவர் தம் பண்புநலன்களால் உருவாகும் சமூகப் பயன்களை வரையறை செய்ய வேண்டும். இவற்றை உடன் பாட்டு நெறிகளால் மட்டும் வரையறை செய்வது நிறைவுதராது. முரண்பாட்டு நெறிகளாலும் வரையறை செய்வதற்கு வழிவகுக்கின்றன எனலாம்.

## உடன்பாட்டு நெறிமுறையின் வரையறைகள்

(அ) தறுகண் மற்றும் தன்மான வீரப்பண்பு நலன்கள்.

(ஆ) கொடைத்திறம் நிறைந்த பண்பு நலன்கள்.

(இ) ஒற்றாடலும் தூதுரைத்தலுமாகிய பண்பு நலன்கள்.

(ஈ) கடமை, கண்ணியம், கட்டுப்பாடு போற்றிய பண்பு நலன்கள்.

(உ) கற்றோரை - சான்றோரை - புலவரைப் போற்றும் பண்பு நலன்கள்.

(ஊ) மக்கள் உரிமை போற்றும் பண்பு நலன்கள்.

(எ) மகளிர் போற்றிய வீரப்பண்பு நலன்கள்.

(ஏ) அறனெனப் பட்டதே இல்லறம் எனும் பண்பு நலன்கள்.

(ஐ) இல்லறப் பற்று ; நாட்டுப்பற்று ; தியாகப்பண்பு நலன்கள்.

## முரண்பாட்டு நெறிமுறையின் வரையறைகள்

(அ) போர் தொடர்பாக முரண்பட்ட பண்பு நலன்கள்.

(ஆ) சமூகம் தொடர்பாக முரண்பட்ட பண்பு நலன்கள்.

(இ) இல்லறம் தொடர்பாக முரண்பட்ட பண்பு நலன்கள்.

சமூகவியலார் இத்தகு உடன்பாட்டு நெறிகளும், முரண்பாட்டு நெறிகளும் உருவாவது இயல்பே என்றும், அதற்கு சமூகச் சூழலே காரணம் என்றும் கூறுவர். ராபர்ட் கே. மெர்ட்டன் என்பவர், 'மக்கள் பல்வேறு சூழ்நிலைக் கேற்றபடி தங்களை மாற்றியமைத்துக் கொள்ளும் முறைகள் ஐந்து வகையாக அமையும் ' என்பர்.

அவை:

1. சமுதாயத்தைச் சார்ந்து நடத்தல்
2. புதிய வழியினைத் தேர்ந்தெடுத்தல்
3. சடங்கு முறைகளைப் பின்பற்றுதல்
4. பின்வாங்குதல்
5. மீறி எழுதல். [27]

இவற்றை அணுகுமுறைகளாகக் கொண்டு மேலே கூறப்பட்ட உடன்பாட்டு நெறிகளையும், முரண்பாட்டு நெறிகளையும் சான்றாதாரங்களுடன் மதிப்பீடு செய்யும் பொழுது மறவர்களால் உருவான சமூகப் பயன்கள் சங்க காலத்தில் மட்டுமன்று; தொடர்ந்து வந்த இருண்டகாலம், பக்திகாலம், பிற்காலம் , தற்காலம் வரை தொடர்ந்து வெளிப்பட்டுக் கொண்டிருப்பதைத் தெளிவாகக் காணமுடிகிறது. கடந்த நான்கு இயல்களில் இவற்றிற்கான நிகழ்வுச் சான்றுகள் நேரிடையாகவே கூறப்பட்டு வந்துள்ளதைக் காணலாம். இங்குச்

சுருங்கச் சொல்லி விளங்க வைப்பதே நன்று மட்டுமன்று ; அவையே ஆய்வுப் பயனாகவும் வெளிப்படும் எனலாம்.

## இயற்கை வழி உருவான பயன்கள்

சங்ககாலத் தமிழன் வாழ்வு குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நானிலத்தையே அடிப்படையாகக் கொண்டது. முதுவேனிற் காலத்தில் வெப்ப மிகுதியாலும், நீரின்மையாலும் முல்லையும் குறிஞ்சியும் தன் இயற்கைவளத்தை இழந்து பாலை நிலத்தன்மை பெற்று தமிழர் வாழ்வைத் தாக்கும் தன்மை கொண்டதென்பர்.[28] இல்லற வாழ்வும், சமூக நிகழ்வுகளும் நானிலங்களுக்கேற்ப சங்ககாலத்தில் அமைந்திருந்தது போலவே, மறவர்கள் மேற்கொண்ட போர் நிகழ்வுகளும் நிலங்களை அடிப்படையாகக் கொண்டு நடந்தன.

'நிலத்திற்கு ஏற்றவாறுதான் களமுறைகள் அமையும். மூன்று வகையான உண்மைகள் களமுறையில் இன்றியமையாதன என்று இக்கால அமர்முறையும் இதனைக் கூறுகிறது. 'இடம் ; காலம் ; வலி ' எனப்படும் இந்த மூன்று வகையான உண்மைகளைத் தான் தொல்காப்பியர் முதல், கரு, உரி என்று அகத்திற்குக் கூறிக் குறிப்பால் புறத்திற்கு உணர்த்துவதைக் காணலாம் '.[29]

சங்ககாலத் தமிழர்கள் தத்தம் பாதுகாப்பிற்கு இயற்கையரண்களையே மிகுதியாக நம்பி இருந்தனர் எனத் தெரிய வருகிறது. நீர்அரண்; காட்டரண் ; மலையரண் ; கோட்டையரண் என்பன அன்றைய தமிழகத்தில் இருந்தன என்பதைத் திருவள்ளுவர் கூறுவர்.[30] இவர் குறிப்பிடும் 'மண்ணரண்' என்பதே கோட்டையரண். ஏனெனில், அக்காலத்தில் மண்ணால் தான் கோட்டைகள் கட்டப்பட்டன. ஆயினும், உரையாசிரியர் பரிமேலழகர், 'மதிற்புறத்து மருதநிலம், பகைவர் அரண்பற்றாமைப் பொருட்டு, நீரரண் ; மலையரண்,

காட்டரண், நிலவரண் என இயற்கையும் செயற்கையுமாய் இந்நான்கு அரணும் சூழப்படுவது அரண் ' எனக் கூறிக் கோட்டையைத் தனித்துச் சுட்டுவர். இது செயற்கை வழி ஆக்கப்பட்டது எனத் தனித்துச் சுட்டி, நிலன்களும் அரண்களாக அமையும் சிறப்பைக் குறிப்பிடுவர். எனவே, மறவர் இயற்கைத் துணைக் கொண்டு தத்தம் நாட்டு காவற்பணிகளை மேற்கொண்டு வந்தனர் எனத் தெளிவாகிறது. இவர்கள் போற்றி வந்த காவலரண் நெறிகளே இடைக்காலம், பிற்காலம் வரை போற்றப்பட்டு வந்தன என்பது வரலாற்றுண்மை.[31]

'மனித இன வாழ்வில் போர் என்பது ஓர் உயிரியல் தேவை. அஃது ஒழுக்கங்களை நெறி நிறுத்தி வகைப்படுத்தும் இன்றியமையாத ஒரு கருவி என்பர் அறிஞர் பென்கர்த்தி. அர்னால்டு டாயின்பீ போன்ற வரலாற்று ஆசிரியர்கள் போர் தவிர்க்க முடியாதது என்றும், அது மனித முயற்சிக்கு அப்பாற்பட்டது என்றும், பிறப்போடு தொடர்புடையது என்றும் கூறுவர். மானிட சமூக இயலார் போர் இயற்கையானது ; போரிடுவது மனிதர்களின் தொன்மையான பண்புகளுள் ஒன்று என்று கூறுவர். போர் என்பது நாடுகளுக்கிடையே மாறாத ஒன்று என்பதை நமக்குக் கடந்தகால வரலாறு உணர்த்துகின்றது.'[32]

பல்லவர் வரலாறு ; பிற்காலச் சோழர் வரலாறு ; பாண்டியர் வரலாறு இக்கருத்தைத் தெளிவாகச் சுட்டுவதைக் காணலாம். கலிங்கத்துப் பரணி, நந்திக் கலம்பகம், மூவருலா போன்ற இடைக்காலத்து இலக்கியங்களும் சான்று பகருகின்றன. கடல் வழி நிகழ்ந்த போர்கள் பற்றியும், சிறப்பாக இலங்கைப் போர்கள் பற்றியும், செய்திகள் மிகுதியாகக் கிடைத்துள்ளன. இவற்றையெல்லாம் இயற்கை வழி உருவான மறவர்தம் பண்பு நலன்களின் வளர்ச்சிகள் என்பதே

தெளிவு. வாழையடி வாழையாக அடுத்தடுத்து வரும் மன்னர்கள் இத்தகு இயற்கை நியதிகட்கு உட்பட்டு தத்தம் மறவர்கள் துணைக் கொண்டு போரிட்ட வரலாறு மிகுதியாகும். இருப்பினும், தேவைப்படும் சில மாற்றங்கள் ஏற்பட்டுள்ளதையும் காணமுடிகிறது. சிலப்பதிகாரம் கூறும் கோட்டை அரணின் அமைப்புகளும், கருவிகளும் மாறுபட்டிருப்பதையும் அவை, செயற்கை வழியை மேற்கொள்ள உருவான தொடக்க கால போர் மரபுகள் என்பதைக் கண்டறிய முடிகிறது. சிலம்பில் இடம் பெற்ற வஞ்சிக் காண்டம் கூறும் போர் நிகழ்ச்சிகள் பழைமைக்குப் பழைமையாகவும், புதுமைக்குப் புதுமையாகவும் தென்படுவதைக் காணலாம். அதற்கேற்ப மறவர்களின் பண்புநலன்களும் மாறியுள்ளதைக் காணலாம். [33]

## அரசுவழி வந்த சமூகப் பயன்கள்

சங்ககாலத்து மூவேந்தர்கள் சேர, சோழ, பாண்டியர்கள் ஆவர். இவர்கள் அல்லாமல் சிற்றரசர்களும், குறுநிலமன்னர்களும், குழுத்தலைவர்களும் இருந்து நாடு காவலுக்கு அதிக முக்கியத்துவம் வழங்கி நல்லாட்சி செய்து வந்ததைக் காணமுடிகிறது. இவையேயன்றி, அதியமான்கள், ஆய்கள், மலையமான்கள், வேளிர்கள் ஆண்டு வந்த குறுநாடுகள் பலவும் தனியரசுகளாகவே இயங்கி வந்தன. காட்டுநாடு, பாரிநாடு, கோனாடு, முக்காவல் நாடு, வேங்கடநாடு முதலிய நாடுகளும் புறநானூற்றில் குறிப்பிடப்படுகின்றன.

பழந்தமிழர் ஒன்றுபட்டு வாழாமல் இவ்வாறு தனித்தனி அரசியற் சமூகங்களாகப் பிரிந்து வாழ்ந்து வந்ததற்கு நாட்டின் இயற்கை அமைப்பே காரணம். அவ்வப்போது ஒரு கரிகாலனோ, இராசேந்திரனோ தோன்றி அண்டை அயல்நாடுகளை வென்று தனியரசு செலுத்தி வந்துள்ளனர். தமிழகத்திலும் ஒருமைப்பாடு காணப்பட்டது என வரலாற்றறிஞர் கூறுவர். [34]

இம்மன்னர்கள் அனைவரும் தத்தமக்கென நால்வகைப் படைகளைத் தனித்து அமைத்துக் கொண்டு நாடு காவலில் ஈடுபடுத்தியும், பகை மன்னர்களுடன் போரிட்டும் மக்களை நன்கு பாதுகாத்து வந்தனர் என்பதை விரிவாகக் காணமுடிகிறது. பேரரசுக்கு இத்தகைய குறுநில மன்னர்கள் தத்தம் படைகளை வழங்கி உறுதுணையாக இருந்து பெருமை பெற்று வந்ததையும் காணலாம். [35]

சங்கம் சார்ந்த மன்னர்களைப் பற்றியும், மறவர்கள் பற்றியும் கூறும் சிலப்பதிகாரம் சங்க மரபுகள் போற்றப்பட்டு வந்த வழிமுறைகளையும், படிப்படியாக மாற்றம் பெற்ற விதங்களையும் கூறுவதைக் காணலாம். எனவே, அரசர் வழி மறவர் பெற்ற அங்கீகாரத்திற்கேற்ப சமூகப் பயன்கள் உருவாகி வந்துள்ளதையும் காணமுடிகிறது. பக்தி வளர்ச்சியின் மேம்பாட்டால் சமூகப் பயன்கள் விளைய தெய்வத்திறன் வாய்ந்த வெள்ளிடை மன்றம், இலஞ்சிமன்றம், நெடுங்கல்மன்றம், பூதசதுக்கம், பாவை மன்றம் போன்றவை உதவி வந்ததையும் காணமுடிகிறது. [36]

பல்லவர் காலத்தில் சேர, சோழ, பாண்டியர் மரபினர்கள் சிற்றரசர்களாக சுருங்கி விட்ட போதிலும் சங்ககால மறவர் மாண்பு தொடர்ந்தே வந்துள்ளது என்பதை சாளுக்கியன் பட்டயம் கீழ்க்கண்ட வாறு குறிப்பிட்டுள்ளதைக் காணலாம் .

'துள்ளிவிழும் கயல் மீன்களைக் கண்களாகக் கொண்ட காவிரி, சாளுக்கியனுடைய யானைகளின் மதநீர் விழுந்ததால் ஓட்டம் தடைப்பட்டுக் கடலில் கலக்க இயலாததாயிற்று. புலிகேசியும் பல்லவனாகிய பணியைப் போக்கும் பகலவனாய்ச் சேர - சோழ - பாண்டியரைக் களிப்புறச் செய்தான்' [37]

பிற்கால சோழர் காலத்திய படைகளும் மிகுதியான மறவர்களைப் பெற்று எல்லாப் படைவகைகளையும் பெற்று சிறப்புற்று விளங்கிற்று. கடற்படைகளும் மிகுதியாக இருந்தன. பல கல்வெட்டுகள், செப்பேடுகள் பிற்கால சோழர் காலத்திய படைகளின் சிறப்புகளைக் குறித்துக் கூறியவற்றை, வரலாற்றறிஞர் கீழ்க்கண்டவாறு குறித்துள்ளதைக் காணலாம்.

'அநபாயனிடம் பண்பட்ட யானைப்படை, குதிரைப்படை, காலாட்படைகள் பலவாக இருந்தன. இவையன்றிப் பெருநாட்டிற்கு உட்பட்ட மண்டலங்களில் தனித்தனி 'நிலைப்படைகள் ' வேறு இருந்தன. படைவீரர், வில், வேல், வாள், அம்பு, தடி முதலியவற்றைப் போர்க் கருவிகளாகக் கொண்டிருந்தனர். இராஜராஜன் காலத்து கடற்படை இராஜேந்திரன் காலத்தில் வளர்ச்சி பெற்றது. அப்படை நமது அநபாயன் காலத்தும் வன்மை உற்றிருந்தது. வில் வீரர் 'வில்லிகள்' எனப்பட்டனர். படைகட்கு அரசனுடைய விருதுப் பெயர்கள் வழங்கப்பட்டன. போர் வீரர் போர் இல்லாத காலங்களில் பயிர்த் தொழிலில் ஈடுபட்டிருந்தனர். '[38]

முதல்மாறவர்மன் சுந்தர பாண்டியன் கி.பி.1216-1238 வரை பாண்டியநாட்டை ஆட்சி செய்து பெருமை பெற்றவன். இவன் மூன்றாம் இராசராச சோழனை அடக்கித் தம் கட்டளைக்கேற்ப சோழ நாட்டை ஆண்டு வருமாறு செய்தான். இதன் காரணமாக இவன், 'சோணாடு கொண்டருளிய சுந்தரபாண்டிய தேவர் ' என்னும் பட்டப் பெயரால் பாராட்டி அழைக்கப் பெற்றான். [39]

நாயக்கர்கள் ஆட்சிக் காலத்தில் உருவான எழுபத்திரண்டு பாளையபட்டுகள் தகுதியும் திறமையும் வாய்ந்த மறவர்களைத் தலைவர்களாகவும் சிற்றரசர்களாகவும் ஏற்று தமிழர் மரபிற்கேயுரிய

மறப்பண்பை போற்றி தமிழகத்தின் பெருமையைப் பாதுகாத்து வந்தனர். இச்சூழலில் உருவான நாடு ஒன்று 'மறவர் நாடு' என்று தனித்து அழைக்கப் பெற்று சீருஞ்சிறப்புமாக விளங்கியிருந்ததையும் வரலாறு பகரும். திருமலை நாயக்கர் இந்த மறவர் நாட்டு மறவர்கள் துணைக்கொண்டு தம் ஆட்சியை நன்கு நடத்தி வந்தார் என வரலாறு கூறுகிறது. நாயக்கர் ஆட்சிக் காலத்தில் தான் மறவர்கள் சேதுபதிகள் என்றும், தேவர்கள் என்றும் சிறப்பாக அழைக்கப் பெற்றுப் பெருமைபட ஆட்சி செய்து வந்தனர் என்பதும் தெளிவாகக் குறிக்கப்பட்டுள்ளன. [40]

கி.பி. 1675 வரை நாயக்கர் ஆட்சி நடைபெற்றது. பிறகு மராட்டியர் ஆட்சி 1799 வரை நடைபெற்றது. இவர்கள் ஆட்சியில் தான் ஆங்கிலேயர்கள் தம் ஆட்சியை நிலை நாட்டமுயன்று வெற்றியும் பெற்றனர். இதற்கு கருநாடக நவாபுகளும், ஆர்க்காடு நவாபும் பெருந்துணை புரிந்தனர். ஆங்கிலேயர்க்கு உதவிய எல்லா உள்நாட்டுப் படைகளில் பழந்தமிழ் மறப்பண்பு கொண்ட மறவர்களே இடம் பெற்றுப் பெருமை பெற்றனர். நாயக்கர் ஆட்சியாளர்க்கும், மராட்டிய ஆட்சியாளர்க்கும், நவாபுகளுக்கும் ஆயிரக்கணக்கான மறவர்கள் இடம் பெற்ற படைபலம் இருந்தன. இதற்குத் தென்திசையில் நல்லாட்சி நடத்தி வந்த பற்பல சேதுபதிகளின் படை மறவர்களே காரணமாகத் திகழ்ந்து பழந்தமிழ் மரபைப் போற்றிப் பாதுகாத்து வந்தனர். இந்த மரபில் வந்த மாவீரன் பூலித்தேவன் தம்மைச் சார்ந்த மறவர்களின் துணையைக் கொண்டு ஆங்கிலேயர்களை எதிர்த்து பெருமை பெற்றதையும் வரலாறு நன்கு தெளிவாக எடுத்துக் காட்டியுள்ளது. [41]

சங்க கால மறவர்கள் போற்றிய தறுகண், தன்மானம், பெருவீரம் போன்ற எல்லாப் பண்புகளையும் ஒட்டு மொத்தமாகத் தன்னகத்தே அமையுமாறு செய்து

கொண்டு பெருமை பெற்ற மாவீரன் வரலாறு தனிச்சிறப்பு வாய்ந்தது. வாழையடி வாழையாக வந்த மறவர்தம் பண்பு நலன்களால் உருவான பெருமை, சிறப்பு, மாண்பு அனைத்தும் இவரால் தனித்தன்மை பெற்று விளங்கிற்று எனலாம்.

1710 முதல் 1743 வரை நவநயத்தவரும், 1743 முதல் 1801 வரை வாலாஜாக்களும் ஆர்க்காட்டு நவாபுகளாக ஆண்டு வந்தனர். நவநயத்தாரைச் சேர்ந்த சந்தா சாகிப்புக்கும், வாலாஜாவைச் சேர்ந்த முகமது அலிக்கும் ஏற்பட்ட தகராறு காரணமாக தென்னிந்தியாவில் ஆங்கிலேயரின் எழுச்சிக்கு வலி கோலியது. 1801-இல் கர்நாடக நவாபை நீக்கிவிட்டு ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனி ஆட்சி செலுத்தும் அரசாக எழுந்தது என்று டாக்டர். கு. ராசையன் கூறுவது குறிப்பிடத்தக்கதாகும். [42]

மதுரையில் விசுவநாத நாயக்கன் ஆட்சி செய்யும்போது பாண்டியநாடு எழுபத்திரெண்டு பாளையப்பட்டுகளாகப் பிரிக்கப்பட்டது. அவற்றுள் ஒன்றுதான் 'நெற்கட்டான் செவ்வல் பாளையம் ' ஆகும். பாண்டியரின் ஆட்சிக் காலத்தில் 'ஆவுடையார் பாளையம்' என்று அழைக்கப் பெற்றது. 1378 இல் மதுரையை ஆண்டு வந்த வரகுண சிந்தாமணி பாண்டியனால் இப்பாளையம் பூலித்தேவனின் முன்னோர்களில் ஒருவருக்கு வழங்கப் பெற்றதற்கான சான்றுகள் உள்ளன. இந்த வழியில் வந்தவர்களில் பூலித்தேவன் பத்தாவது பாளையக்காரர் ஆவார். இவர் காலத்தில் தான் இப்பாளையம் 'நெற்கட்டான் செவ்வல் பாளையம் 'எனப்பெயர் பெற்று அழைக்கப் பெற்று வந்தது என்பர். [43]

தொல்காப்பியர் புறத்திணையில் சிறப்பாகக் கூறிய, 'காட்சி ; கால்கோள் ; நீர்ப்படை ; நடுகல் ; சீர்தகு சிறப்பின் பெரும்படை வாழ்த்தல்' எனப்படும் மறவர்தம் பண்புநலன்களுக்குரிய பணியை பதினெட்டாம் நூற்றாண்டில் ஆட்சி புரிந்த பூலித்தேவன் தம் படைத்தலைவனுக்காக நட்டுச் சிறப்பித்த நடுகல்

பற்றிய செய்தியும் அறியப்படுகிறது. சிவகிரி பாளையக்காரன் வந்து பூலித்தேவனின் கால்நடைகளைக் கொள்ளையிட்டு கவர்ந்து சென்று விடுகிறான்.

இதையறிந்த படைத்தளபதி 'சவணத்தேவன்', உடன் இலவந்தூரில் இருந்த பூலித்தேவனுக்குச் செய்தி அனுப்புகிறான். அவன் ஆணைப்படி பெரும்படையுடன் சிவகிரிப் பாளையக்காரர்களைத் தடுத்துப் போரிடச் செல்கிறான். பிறகு பூலித்தேவனும் சென்று போரிட்டு கால்நடைகளைக் காப்பாற்றித் தம் நாட்டிற்கு ஓட்டி வர ஏற்பாடு செய்கிறான். அப்போரில் 'சவணத்தேவன் ' வீரமரணம் எய்துகிறான். இக்கரந்தைப்போரில் வீரமரணம் எய்திய சவணத்தேவருக்கும், மற்ற வீரமரணம் எய்திய மறவர்கட்கும் நடுகல் நட்டு பெருமைபடுத்தினான். சவணத்தேவனுக்கு அவன் இறந்த இடமான கூடலூருக்கு அருகில் வீரக்கல் நடப்பட்டது. அந்த விரக்கல் தற்போதும் உள்ளது.[44]

'பூலித்தேவன் சிந்து' எனப்பெயர் பெற்ற நூலில் இடம் பெற்ற ஒரு பாடல் இதனை நயம்பட எடுத்துரைப்பதைக் காணலாம்.

'பூலித்துரை மன்னர் விரைந்தாராம் கூடலூர்
புனித சந்தனக் கட்டையுடனே
சந்தனக் கட்டை அகிலங்கட்டை - அங்கு
சாதிநெல் லிக்கட்டை தேக்கங் கட்டை
வீரண் சவுணத்தேவனை நூறுகுடம் - நெய்யை
விட்டு எரித்தார் ஒரு நாழிகையில்
வீரக்கல்லும் நட்டு பூலித்துரை - அங்கே
வீரவழி பாடும் தானே செய்தார்.'[45]

இந்திய சுதந்திர போராட்ட வரலாற்றை எழுதும் அறிஞர்கள் 'பூலித்தேவன் தான் ஆங்கில அரசை எதிர்த்துப் போரிட்ட முதல் வீரமன்னன் ஆவான்' எனக் குறிப்பிட்டுள்ளனர். கல்கண்டு தமிழ்வாணன், டா. ந. சஞ்சீவி, புலியூர் கேசிகன், துர்க்காதாஸ், எஸ்.கே. ஸ்வாமி, வேணுகோபால் பிள்ளை, சிரஞ்சீவி போன்ற சிறந்த திறனாய்வாளர்கள் 'இந்திய விடுதலைப் போருக்கு முதல் முதல் குரல் கொடுத்தவன் மாவீரன் பூலித்தேவனே ' எனக்கூறிப் பாராட்டியுள்ளனர்.

'1757 இல் பிளாசி யுத்தம் நடந்தது. அதற்கு முன்பே மக்கள் புரட்சியைத் துவக்கினான் பூலித்தேவன். தென்னாட்டில் முதன்முதல் விடுதலைப் போர் முரசு கொட்டியவர்களில் பூலித்தேவன் முதலிடம் பெறுகிறானென்று வ.வேணுகோபாலன் என்பவர் தமது நூலில் குறிப்பிட்டுள்ளார். '[46]

நமது நாட்டு விடுதலை வேள்வியைத் துவக்கிய வேந்தர் திலகம் முத்துராமலிங்க விஜயரகுநாத சேதுபதிமன்னர் (1760-1809) பற்றிய செய்திகளை வரலாற்று ஆவணங்களில் கண்டறியலாம்.

முப்பத்து ஐந்து ஆண்டுகள்கூட முற்றுப்பெறாத மன்னர் பாஸ்கர சேதுபதி ஆற்றிய பணிகளும் அக்கால மறவர்தம் பண்பின் சிறப்பிற்கும் சான்றாகும். அவர் கி.பி. 1893-இல் அமெரிக்கநாட்டு சிக்காகோ நகரில் நடைபெற்ற அனைத்துலகச் சமயப்பேரவையில் இந்திய நாட்டின் பண்பாட்டையும், இந்து சமயச்சிறப்பையும் எழுச்சியுடன் முழக்கமிட, நமது நாட்டின் பிரதிநிதியாக சுவாமி விவேகானந்தரைத் தமது சொந்தச் செலவில் அனுப்பி வைத்தார். [47]

இவ்வாறு அரசு வழி வந்த மறவர்தம் பண்பு நலன்கள் பரவலாகக் குறிக்கப்பட்டுள்ளன.

**மறவர்களால் உருவான பன்முகச் சமூகப் பயன்கள்**

சமூகப் பயன்களின் வரையறையாக முன்பு சுட்டப்பட்ட பத்து உடன்பாட்டு நெறிமுறையின் வரையறைகளைச் சுட்டலாம். இவையே, பன்முகச் சமூகப் பயன்கள் காலந்தோறும் உருவாக அடித்தளமாக அமைந்தன. 'சமுதாயத்தைத் தனிமனித உடலுக்கு ஒப்பிடுவர். உடலின் ஒவ்வொரு உறுப்பும் சமூகத்தின் பல்வேறு தொழில் புரியும் மக்களாவர். ஒருடலிலுள்ள அனைத்து உறுப்புகளும் ஒரு சேரப் பணியில் ஈடுபட்டாலன்றி உடல் மேம்பாடடைய முடியாது. அதுபோன்றே சமுதாயத்தின் பல்வேறு நிலைகளிலுள்ள மக்களும் ஒருவருக்கொருவர் ஒத்துழைத்தாலன்றி சமூகம் முன்னேறவியலாது. இந்நிலையை நன்குணர்ந்திருந்த மறவர் பல்வேறு நிலை மக்களுடனும் பழகி ஒல்லும் வகையெல்லாம் அவர்களுக்கு உதவி வந்திருக்கின்றனர்.'[48]

அடுத்துவரும் வழித்தோன்றல்கள் அனைவருமே வீரப்பண்புடன் வாழ வேண்டுமெனப் பேராசை கொண்டவர்கள் சங்ககால மறவர்கள். தத்தம் வீரப்பண்பில் தறுகணும், தன்மான உணர்வும் நிறைந்திருக்குமாறு பார்த்துக் கொண்டனர். இவற்றைத் தாம் வாழ்ந்த காலத்து மக்கள் கண்டும் கேட்டும் உணர்ந்து கொள்ளக் கூடும். கற்றறிந்தோர் அவற்றைக் கேட்டும், கண்டும் வியந்ததைத் தம்மையொத்த சான்றோரிடமும், அவையிலும் கூறிப்பாராட்டியவையே புலவர்களால் பாடல்களாக வடிவம் பெற்று நிலைத்து வாழ்ந்து வருகின்றன. கற்றறிந்தோர் அவற்றைக் கேட்டும், கண்டும் வியந்ததைத் தம்மையொத்த சான்றோரிடமும், அவையிலும் கூறிப் பாராட்டியவையே புலவர்களால் பாடல்களாக வடிவம் பெற்று நிலைத்து வாழ்ந்து வருகின்றன. அவையே, இன்றும், என்றும் கருத்துப் பரிமாற்றச் செய்தி ஊடகங்களாக நிலவி

வருகின்றன. சமூகவியலாரும் இதனையே வேறு வடிவில் வலியுறுத்துவதைக் காணலாம்.

'மனிதனின் ஒவ்வொரு தலைமுறையும் கடந்த காலத்தைப் பார்த்துக் கற்றுக் கொண்டு தன்னுடைய அனுபவங்களை எதிர்காலச் சமுதாயத்துக்கு விட்டுச் செல்கிறது. ஒவ்வொரு சமுதாயத்தில் பிறக்கின்ற குழந்தையும், சமுதாயஞ்சாருதல் முறையில் தன்னுடைய பெற்றோர்களிடமிருந்தும், உடன்பிறப்புகள், ஆசிரியர்கள், நண்பர்கள் சமுதயாத்திலள்ள பெரியோர்கள், மதநம்பிக்கை ஆகிய சமுதாயத்தின் பல்வேறு அங்கங்களைப் பார்த்து, கேட்டு, கற்று உணர்ந்து கொள்கிறது. இப்படிச் சமுதாயத்திலிருந்து ஒரு குழந்தை அறிந்து கொள்வதற்கு ஒரு சமுதாயத்தினால் ஒப்புக்கொள்ளப்பட்ட, பலராலும் ஒரே மாதிரி அறிந்து கொள்ளக் கூடிய பொருள் கொண்ட செயல்முறைகள், நடத்தைகள் ஆகியவை ஒருவரிடமிருந்து மற்றொருவருக்கு வருகின்ற செய்தித் தொடர்பு மூலம் செல்கிறது எனக்கூறலாம்.'[49]

புறநானூற்றிலும், பதிற்றுப்பத்திலும், பிற பத்துப்பாட்டின் புறப்பாடல்களிலும் கூறப்பட்ட தறுகண் மற்றும் தன்மான வீரப்பண்புகளை சிலம்பு, கலிங்கத்துப் பரணி, மூவருலா முதலான இலக்கியங்களிலும், பிற்காலச் சோழர் மற்றும் பாண்டியர் வரலாற்றிலும் பரவலாகக் கண்டு இன்புறலாம்.

சங்ககால மறவர்கள் தத்தம் கொடைத் திறம் நிறைந்த பண்பு நலன்கள் மூலம் இல்லறத்திலும், சமூகத்திலும் மேற்கொண்ட நற்பணிகள் எல்லா இலக்கியங்களிலும் போற்றிப் பேசப்படுகின்றன. ஈத்துவக்கும் இன்பம் அறிந்த சங்ககால மறவர்கள், 'ஈதல் இசைபட வாழ்தல் ' என்பதையும், 'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல்' என்பதையும் நன்கு அறிந்தவர்கள். 'பாணர் பசிக்குப் பகைஞர்களாக விளங்கினர் மறவர். தம்மிடம் பொருள் இல்லையென்றாலும்,

இரந்து வருபவர்க்கு இல்லை என்று சொல்வதில்லை. இரப்போர் செல்லின், அவன் தன்னூர்க் கொல்லனை வரவழைத்து அவனுக்கு இரப்போரைச் சுட்டிக் காட்டி அவரது உண்ணா வயிற்றினைக் சுட்டிக் காட்டி அவரது உண்ணா வயிற்றினைக் காட்டி, 'உடனே வேல் வடித்துக் கொடு ; யான் சென்று போருடற்றிப் பொருள் கொணர்ந்து, இவர்தம் பசிதீர்த்தல் வேண்டுமென்று சொல்லி இரந்து நிற்பான். பிறர்பசி தீர்க்கத்தான் இரந்து நிற்கும் பண்பினை மறவரிடமே காணமுடிகிறது. மருந்து மரம் போன்று அவன் உடம்பு வடுப்பட்டிருந்தது என்கிறான் அவனிடம் பரிசு பெற்ற ஒரு பாணன். பிறர் பசி தீர்க்கும் பொருட்டுப் பகை தேடிப் போன அம்மறவனின் பண்பு ஏனையோர் பண்பை விடச் சிறந்தது எனலாம் '[50] எனக்கூறுவதைக் காணலாம்.

'பசிப்பிணி மருத்துவன் இல்லம்

அணித்தோ சேய்த்தோ ? கூறுமின் எமக்கே'

*- (புறம் ; 173 ; 11-12)*

எனச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளன் பாடியதையும் அறியலாம். இப்பண்பு காலப்போக்கில் விருந்தோம்பல் பண்பாக மலர்ந்து இன்றுவரை நடைபெற்றுக் கொண்டிருப்பதை யாவரும் அறிவர். திருநாவுக்கரசர்,

'இரப்பவர்க்கு ஈய வைத்தார்

ஈபவர்க்கு அருளும் வைத்தார் '

எனப் பாடியுள்ளதையும் காணலாம். மறவர்தம் கொடைப் பண்பு நலன்கள் தமிழர்க்கே உரித்தான பிறவிக்குணமாக இன்றும் திகழ்ந்து வருவதைக் காணலாம். அதற்குச் சங்ககால மறவர்தம் பங்கும் சிறப்பாக இடம் பெற்றுதைக் காணலாம்.

ஒற்றாடலும், தூதுரைத்தலும் தத்தமக்குரிய தொழிற்பண்பு நலன்களாகப் பெற்றுத் திகழ்ந்த சங்ககால மறவர்கள் நாட்டு நலன்களின் மீது அக்கறை கொண்டு பணியாற்றிய நிகழ்ச்சிகளைச் சங்க இலக்கியங்களில் பரவலாகக் காணமுடிகிறது. கோவூர்கிழாரும், ஔவையாரும் ஒற்றர் வாயிலாக மாற்றார் நிலையறிந்து தத்தம் மன்னர் சார்பாகத் தூது சென்றதைப் புறநானூறு பகரும், இவை, தொடர்ந்து இன்றும் பின்பற்றப்பட்டு வருவதை வரலாறும், அரசியலும் பகரும். எனவேதான்,

'எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் தொழில் '

*- (குறள் - 582)*

என்றும்,

'மறைந்தவை கேட்கவற் றாகி அறிந்தவை
ஐயப்பா டில்லதே ஒற்று '

*- (குறள் - 587)*

என்றும் திருவள்ளுவர் கூறும் ஒற்றாடல் பற்றிய கருத்துக்கள் சங்ககாலம் முதல் இன்றுவரை இன்றியமையாப் பணிகளாகப் போற்றப்பட்டு வருவதைக் காணலாம். தூது பற்றிக் கூறும் பொழுது,

'இறுதி பயப்பினும் எஞ்சா திறைவதற்கு
உறுதி பயப்பதாம் தூது '

*- (குறள் - 690)*

என்ற குறள் கூறுவதையும் காணலாம். இப்பண்பு இன்று வரை வேண்டப்படுவதொன்று என்பது உண்மையே.

சங்ககால மறவர்கள் தத்தம் கடமைகளை நல்ல கட்டுப்பாட்டுடன் செய்து வந்ததோடு கண்ணியமாக காவல் பணிகளைச் செய்து வந்திருப்பதைப் பல பாடல்கள் வாயிலாகக் கண்டறிய முடிகிறது. 'எல்லா உயிர்களுக்கும் பாதுகாப்பாக வாழும் உரிமை உண்டு. வாழும் மக்களுக்குப் பாதுகாப்பு அளிப்பது ஆள்பவரின் கடமையாகும். போர்க் காலங்களில் மக்கள் பாதுகாப்பற்றுத் தம் வாழ்வுரிமையை இழந்துள்ளனர். இது, இக்காலத்தை விட மன்னராட்சிக் காலத்தில் மிகுதியாக இருந்தது. போர் என்பது ஆட்சி எல்லை விரிவாக்கத்தையும் பகைவேந்தரின் செருக்கை அடக்குவதையும் முதன்மை நோக்கங்களாகக் கொண்டது. ஆயினும், அவை நிகழும் பொழுது மேற்கண்டவற்றோடு நேரடித் தொடர்பற்ற மக்களைத் தாக்குதல் போர் அறமாகாது என்பதைக் கருத்தில் கொண்டு போர்க்காலங்களில் மக்களுக்குப் பாதுகாப்பு தேவை எனும் அடிப்படையில் பாதுகாப்பு உரிமை காக்கப்பட்டது' என்று திறனாய்வாளர் கூறியுள்ளார். இத்தகு பண்பு நலன்கள், இற்றைய போர்ப் பணிகளில் காணமுடியவில்லை என வருந்தும் ஐக்கியநாடுகள் சபை இதற்கென நெறிமுறைகளை வகுத்து, கட்டாயம் பின்பற்றப்பட வேண்டுமென வலியுறுத்தி வருகிறது. அதன் பிரகடனத்தில் தமிழர் அன்று முதல் போற்றி வந்த மறவர்க்கான 'கடமை - கண்ணியம் - கட்டுப்பாடு' ஆகிய பண்புகள் இன்றியமையாதவைகளாகக் சுட்டிக் காட்டி வருவதைக் காணலாம்.

போர் கூடாது என்பதையும், அது அழிவுக்கே வழிவகுக்கும் என்பதையும் சங்ககாலச் சான்றோர், கற்றோர், புலவர் கூறி வந்தாலும், தவிர்க்க முடியாத போர் நிகழ்வுகளையும் அதில் பங்குபெறும் மறவர்களையும் உற்று நோக்கி கொள்ளத்தக் கதையும், தள்ளத்தக்கதையும் அவ்வப்பொழுது கூறி வந்துள்ளதை சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது. இவர்களே, ஆட்சியாளர்களுக்கும்,

மறவர்க்கும், மன்னர்களுக்கும், மக்களுக்கும் இணைப்புப் பாலமாக இருந்து நற்றொண்டாற்றி வந்துள்ளதை யாவரும் அறிவர். எனவே, மறவர்கள் இவர்களைப் பெரிதும் போற்றி வணங்கி , இவர்தம் கருத்துக்களைப் போற்றிப் பின்பற்றி வந்துள்ளதையும் காணமுடிகிறது. 'சங்க காலச் சமுதாயம் எனப்படும் வீரநிலைக் காலத்தில் பெருமதிப்பிற்கு உரியவர் இருவர். ஒருவர் புலவர் ; மற்றொருவர் வீரர். புலவர் அறிவிற்கும் புலமைக்கும் நிலைக்களமாய் நின்றவர். வீரத்திற்குப் பெருமிதமும், பெருமிதத்திற்கும் மதிப்பும், மதிப்பிற்குப் பாராட்டும் பெற்றவர்கள் வீரர்கள். வீரர்களில் சிலர் புலவராயும் இருந்தனர். மறவர்கள் தத்தம் வீரத்தைப் புலவர்கள் புகழ்ந்து பாடிச்சிறப்பிப்பதையே விரும்பியுள்ளனர்.' [51] எனவேதான், மறவர்கள் இத்தகு சான்றோர், கற்றோர், புலவர் போன்றோரை உயர்வாகக் கருதி வணங்கி வந்துள்ளனர். இன்றும், உலகம் தழுவிய நிலையில் போர்ப் பணியில் பங்கு பெற்று சிறப்புற்ற மறவர்களை இத்தகு பேரறிவார்களே பாமர மக்களுக்குத் தத்தம் படைப்புகள் வாயிலாக அறிமுகப்படுத்திச் சிறப்பித்துப் போற்றியுள்ளதைக் காணமுடிகிறது. இரண்டாம் உலகப்போர் முடிந்த பிறகு படைக்கப்பட்ட இதன் தொடர்பான வரலாற்று நூல்கள் இதற்குச் சான்று பகரும் எனக் கூறுவர். [52]

மறவர்களிடையே <u>மக்கள் உரிமை போற்றும் பண்பு நலன்கள்</u> இயல்பாகவே இருந்ததைச் சங்க இலக்கியங்கள் பகருகின்றன. இவர்கள் மக்கள் நல்வாழ்விற்காகவே தத்தம் உடல்-பொருள்- ஆவியனைத்தையும் தியாகம் செய்யமுன் வருகின்றனர். மக்கள் உரிமை எக்காலத்தும் எக்காரணத்தாலும் இழப்பிற்குள்ளாகக் கூடாதென விரும்பினர். 'உரிமை என்பது ஒருவருக்கு ஒருவர் கொடுப்பதுமன்று; ஒருவரிடத்திலிருந்து எடுப்பதுமன்று. ஒவ்வொருவரும் தனது எண்ணக் கருத்துக்களை, அதன் செயல் ஆக்கவடிவத்தினை

வெளிப்படுத்தும் போது அவற்றின் மேல் குடும்பத்தினரோ, சமுதாயமோ அளிக்கும் பங்களிப்புச் சிந்தனையே உரிமையாகும்'[53] என்பர்.

பொதுவுடைமைக் கோட்பாட்டின்படி ஒருதனி நபருக்குத் தேவைப்படும் அடிப்படை உரிமை உணவைப் பெறுதல் ; மானம் காக்க ஆடை பெறுதல் ; இருக்க இடம் பெறுதல் என்பர். இவை தனிமனிதரின் தொடக்க உரிமைகள் ஆகும். இவை, வாழ்வியல் சூழலுக்கேற்ப வளர்ந்து கொண்டேபோகும். வளர்ந்து விரிவடையும் மற்றும் வாழும் உரிமைகளை வழங்கும் கடமை அரசுக்கே உரியது. அரசு, அதனைத் தம்மால் நியமனம் செய்யப்பட்ட அரசாங்கப் பணியாளர்களே நிறைவேற்றி வைக்கவேண்டும்.

'மனித உரிமைகளைப் பாதுகாப்பதில் ஆட்சியில் இருப்பவர்களுக்குப் பெரிதும் பங்கு உண்டு. நீதியோடு ஆட்சி செய்வதே மனித உரிமைகளைக் காப்பதற்கு அடிப்படையாகும்.'[54]

சங்க காலத்தில்,

'முறை வேண்டுநர்க்கும் குறை வேண்டுநர்க்கும்
வேண்டுப வேண்டுப வேண்டினார்க் கருளி'

- (பெரும் ; அடிகள் 443-444)

எனக்கூறுவதைக் காணலாம்.

இதற்கென மன்னர்களால் நியமிக்கப்பட்ட அரசு அலுவலர்களில் முதல்வராகக் கருதப்பட்டவர்களே மறவர்கள். இவர்களே மூவகைப்பட்ட காவற்பணியைச் செய்து வந்தனர். பகைவர்களிடமிருந்து நாட்டைப் பாதுகாத்தல் ; கொடியவர்களிடமிருந்து மக்களைப் பாதுகாத்தல் ; நாட்டின் செல்வங்களையும், பொருட்களையும் பாதுகாத்தல் என்ற முக்கூட்டுப் பணிகள் சங்ககாலத்தில் மறவர்களால் தான் நன்கு நிறைவேற்றப்பட்டு வந்தன.

'இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து

அதனை அவன்கண் விடல்'

- (குறள் - 517)

என்று திருவள்ளுவர் கூறியதை மன்னர்கள் மனதிற்கொண்டு செயல்பட்டு வந்தனர். 'இயற்றலும்', 'ஈட்டலும் ' பிற அரசு பணியாளர்களின் முதன்மைப் பணியாகும். 'காத்தல் ' என்பது மறவர்தம் பணியாகும். 'காத்த வகுத்தல் ' என்பது மன்னர்க்குரியது. ஆயினும், அனைத்திற்கும் பொறுப்பேற்பவன் மன்னவனே. ஏனென்றால், அவன்தான் மக்களின் உரிமைகளைப் பாதுகாத்து, அவர்கட்கு உரியனவற்றை முறையாகப் பெறுமாறு செய்விக்கிறான். அவனும் மறவனே தான்.

'இலக்கியத்தில் மனித உரிமைகள்' எனும் நூலில் பேராசிரியர். இராஜமுத்திருளாண்டி அவர்கள் உரிமைகளை மூவகைப்படுத்திக் கூறுவர். அவை :

1. முதல் தலைமுறை உரிமைகள்
2. இரண்டாம் தலைமுறை உரிமைகள்
3. மூன்றாவது தலைமை உரிமைகள்

என வகைப்படுத்துகின்றார். இவற்றுள் முதல் தலைமுறை உரிமைகள் அரசு, மக்களுக்கெதிராக எவற்றைச் செய்யக் கூடாது என்பதை வலியுறுத்தச் செய்யவேண்டியதை நினைவூட்டுகிறது. இரண்டாம் தலைமுறை உரிமைகள் இன்னின்னவற்றை அவசியமாக மக்கள் நலன் கருதி அரசு செயல்படுத்த வேண்டும் என்பதை வலியுறுத்துவது. மூன்றாம் தலைமுறை உரிமைகள், சமுதாய வளர்ச்சி கருதித் தற்காலப் போக்கினை மையமாகக் கொண்டவை.' [55] என விளக்கந் தருவர்.

அனைத்திலும் அடிப்படையாக வேண்டப்படுவது பாதுகாப்பேயாம். அதனை, மறவர்கள் சங்ககாலம் முதல் தொடர்ந்து செய்து வந்துள்ளதால்தான் பல்வகை ஆட்சி மாற்றங்கள் ஏற்பட்டும், தமிழர்க்கே உரிய இனப்பற்று, மொழிப்பற்று, பண்பாட்டுப்பற்று, நாகரிகப்பற்று தனித்த உரிமைகளாகக் கருதப்பட்டு இன்றும் போற்றப்பட்டு வருகிறதெனலாம். ஆரியர்களின் பண்பாட்டுத் தாக்கத்தாலும், படையெடுப்பாலும், தந்திர செயல்களாலும் தமிழினத்தின் உரிமைகள் இன்றும் அப்படியே பாதுகாக்கப்பட்டிருப்பதற்கு சங்ககாலத்தில் மட்டுமன்றி, களப்பிரர், பல்லவர், இஸ்லாமியர், நாயக்கர், ஆங்கிலேயர் ஆட்சிக் காலங்களிலும் அரசுரிமைகளை மட்டும் இழந்து, பிறவற்றை இழக்காது போற்றிப் பாதுகாத்து வந்த உரிமைக் காவலின் சிறப்பே ஆகும். இன்றும் பழந்தமிழ் மறவர்களின் எச்சங்களாக இருப்போரைத் தென்தமிழ் நாட்டில் மிகுதியாகக் காணலாம். அவர்கள் ஆரிய பழக்கவழக்கமும், பிராமணர் தொடர்பும் இன்றைக்கும் இல்லாதவர் ஆவர். இதனைத் தக்க ஆய்வோடும் திறனாய்வாளர் கருத்தோடும் நமக்குத் தெளிவாக எடுத்துக் காட்டியுள்ளனர். [56]

மறவர் குடியில் பிறந்த மகளிரும் வீரப் பண்புகளைப் போற்றி வந்ததால் வாழையடி வாழையாக மறவர்தம் பண்பு நிலைத்திருப்பதைக் காணமுடிகிறது. எனவேதான் இத்தகு மகளிரைச் சங்க இலக்கியம், 'மூதின் மகளிர்' என்றும், 'மூதிற்பெண்டிர்' என்றும் பாராட்டிப் போற்றியதைக் காணலாம். இவற்றை அடிப்படையாகக் கொண்டுதான் ஐயனாரிதனார், தாமியற்றிய புறப்பொருள் வெண்பாமாலையில்,

'அடல்வே லாடவர்க் கன்றியும் அவ்வில்
மடவரன் மகளிர்க்கு மறமிகுத் தன்று ' - *(பு.வெ.மா ; 08; 24)*

என இலக்கணம் வகுத்துக் கூறியிருப்பதையும் காணலாம். மேலும், இந்நூல், 'மூதின் முல்லை' என்னும் துறையை அறிமுகப்படுத்தியுள்ளது. இதற்கு, 'மறக்குடி மகளிர்க்கும் சினமுண்டாதலை மிகுத்துச் சொல்லுதல்' எனப்பொருள் கூறுவர்.

ஒக்கூர் மாசாத்தியார், கழாத்தலையார், அள்ளூர் நன் முல்லையார், கோவூர்கிழார், பொன்முடியார் முதலான புலவர்கள் பாடிய புறநானூற்றுப் பாடல்கள் இத்தகு மகளிர்களின் வீரப்பண்புகளை பெருமிதத்தோடு வெளிப்படுத்துவதைக் காணலாம். 'கெடுகசிந்தை ; கடிது இவள் துணிவே; மூதின் மகளிர் ஆதல் தகுமே' என்றும், 'களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே' என்றும், 'மூதிற்பெண்டிர் கசிந்தழ' என்றும் கூறுவதைக் காணலாம். மறக் குலத்தில் தோன்றிய மகளிர் அஞ்சா நெஞ்சம் படைத்தவர்களாக இருந்தனர். மறப்பண்பும் ஆடவரைப் போருக்கு அனுப்பும் வேட்கையும், அவர் நெஞ்சம் முழுதும் நிறைந்திருந்தன. ஆண்மையும், நாட்டுப்பற்றும் மறக்குல மகளிரிடம் காணப்படும் குறிப்பிடத்தக்க பண்புகளாகப் பாராட்டும் பாடல்களை மிகுதியாகச் சங்க இலக்கியத்தில் காணலாம்'.[57] இதன் தொடர்ச்சியைப் பிற்கால இலக்கியங்களிலும் இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

காலப்பெட்டகத்தின் கருவறைக்குள்ளேயே சிறைப்பட்டுப்போன வீர வரலாற்று நாயகி ராணி வேலுநாச்சியார், இந்திய விடுதலைப்போராட்ட வரலாற்றின் முதல் அத்தியாயத்தில் இடம் பெற்றிருக்க வேண்டிய இந்த வீரமங்கை, ராணி இலட்சுமிபாய் காலத்திற்கு முற்பட்டவர். ஆங்கிலேயர்களை எதிர்த்துப் போரிட்டு வெற்றி பெற்ற சுநத்நதிரப் போராட்ட வீராங்களை எனப் பாராட்டப்பெற வேண்டிய பிற்கால மூதிண் மகளிர் ஆவார். [58]

மறவர்கள், 'அறனெப்பட்டதே இல்லறம் என்னும் பண்பு நலன்கள்' மீது அதிகம் அக்கறை காட்டியுள்ளதால்தான் சங்க இலக்கியங்களில் அகப்பொருள் தொடர்பான பாடல்கள் மிகுதியாக இடம் பெற்றுள்ளன எனலாம். 'பண்டைக் காலத்தில் மனையறம் நற்பண்புகளை வளர்க்கும் நாற்றங்காலாகத் திகழ்ந்தது. வீட்டைக் காக்கும் பொறுப்பு மகளிர்க்குரியதாக இருந்தது. வீட்டுக்காவல் என்பது அறக்காவல். மகளிர்தம் மக்களைப் பாலுடன் பண்பையும் ஊட்டி நன் மக்களாக வளர்த்தனர். அவர்கள் போற்றிவளர்த்த பண்புகள் ஆடவர் வாயிலாக அறநெறிகளாக வெளிப்பட்டன. அவ்வறநெறிகள் பண்டைத் தமிழரின் பண்பாட்டு வாழ்விற்கு வழிகாட்டியாக அமைந்தன. சங்ககால மகளிர் மாண்புகள் பண்பாட்டின் வளர்ச்சிக்கும் பெரிதும் உறுதுணையாயின '[59]

மறவர்கள் தத்தம் பண்பாட்டு வளர்ச்சிக்கும், மறப்பண்பிற்கும் உரிய பயிற்சிக் கூடமாகத் தத்தம் இல்லறங்களையே நம்பி வாழ்ந்தனர் என்பதற்குப் பல சான்றுகள் சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன. கலித்தொகையில் கபிலர் பாடியதாக இடம் பெற்ற தோழி அறத்தொடு நிற்றலைக் குறித்து விளக்கம் தரும் முப்பத்தொன்பதாம் பாடல், 'மறவர்க்கு இல்லற வாழ்வின் தொடக்கம் இயற்கையாலும், மறப்பண்பாலும் எவ்வாறு அமைய வழி வகுத்ததென்பதை நயம்படக் கூறுவர். 'நீரில் அடித்துச் செல்லப்பட்ட தலைவியைக் காத்தல்'; 'இருவரும் காதல் கொள்ளல் ' ; 'வீட்டார்க்குத் தோழி அறத்தொடு நிற்றல் '; 'பெரியோர் சினங்கொண்டு போரிட எண்ணல்'; 'தலைவன் மாண்பினை அறிந்து சினம் தணிதல் ' ; 'நல்லநாளில் பெண் கேட்க தலைவனைச் சார்ந்தார் வருதல் ' என நாடகப் போக்கில் நடந்த நிகழ்வுகள் கூறப்பட்டன. அதில் தோழி,

'காந்தள் கடிகமழும் கண்வாங்கு இருஞ்சிலம்பின்
வாங்கமை மென்தோட் குறவர் மடமகளிர்
தாம்பிழையார் கேள்வர்த் தொழுது எழலால் தம்ஐயரும்
தாம்பிழையார் தாம் தொடுத்த கோல்'

*- (கலி ; 39 ; 13-16)*

எனக் கூறித் தலைவர் குழாத்து மறப்பண்பினைப் புகழ்ந்து பாராட்டுவள். இப்பாடலில் கூறப்படும் கருத்துக்கள் அனைத்தும் மறவர் - காதல் - திருமணம் - இல்லறம் பற்றிய கருத்துக்களைச் சுவைபடக் கூறுவதைக் காணலாம். [60]

உகாய்க்குடிக்கிழார் எனும் புலவர் குறுந்தொகையில் பாடிய பாடல் ஒன்று மறவர்தம் இல்லற வாழ்வின் குறிக்கோளை நயம்படக்கூறும்.

'ஈதலும் துய்த்தலும் இல்லோர்க்கு இல்லெனச்
செய்வினை கைம்மிக எண்ணுதி ; அவ்வினைக்கு
அம்மா அரிவையும் வருமோ
எம்மை உய்த்தியோ ? உரைத்திசின் நெஞ்சே !'

*- (குறுந் ; பாடல் 63)*

பொருள் தேடி வருதல் வேண்டும் எனத் துணிந்த தன் நெஞ்சிற்குத் தன் நிலையை இப்படி எடுத்துக் காட்டுகிறான் தலைவன். இவன் தன் நெஞ்சைப் பார்த்து, 'நெஞ்சே ! அறநெறி நிற்றலை விரும்பி இரவலருக்குக் கொடுத்தல் என்பதும், இன்பம் பெறுதலை நினைத்து தலைவியோடு கூடி இன்பந்துய்த்தல் என்பதும், பொருள் வளம் இல்லாதவர்களுக்கு வாய்ப்பதில்லை. இவ்வாறு, நீயும் கருதினாய் ! அப்பொருள் தேடுதலான வினையைச் செய்வதற்கு, அழகிய மான் நிறத்தினளான தலைவியும் நம்முடன் வருவாளோ ? அல்லது, அவளை இங்கே தனித்திருக்க விட்டு என்னை மட்டும் போகுமாறு செலுத்துகின்றாயோ ?

இதனை முதற்கண் எனக்குச் சொல்வாயாக !' என்று வருந்திக் கூறுவதைக் காணலாம். பாரதிதாசனின் 'குடும்ப விளக்கு' என்னும் குறுங்காவியம் சங்க இலக்கியங்களின் சாயலாகவே கருதப்படுவதை யாவரும் அறிவர். இல்லறமே நல்லறம் என்பது என்றும் உள்ள ஒரு வாழ்வியல் மெய்ப் பொருளாகும்.

சங்க கால மறவர்களின் இத்தகைய இல்லறப்பற்றுதான், நாட்டுப் பற்றினை வளர்க்கும் உரமாயிற்று. தியாகப் பயிர்கள் தொடர்ந்து செழித்து வரவழி வகுத்தது எனலாம். காலந்தோறும் தழிழினம் கண்டு போற்றிய இத்தகு பண்புகளை உள்ளடக்கியே இலக்கியங்கள் படைக்கப்பட்டு வந்தன என்பதற்கு நிலைக்களனாக இருப்பவை தமிழர்தம் இல்லறப் பண்போடு கூடிய நாட்டுப்பற்றும், தியாக உணர்வுமாகும் என்பது உண்மையே ; வெறும் புகழ்ச்சியுரையன்று.

'தனிமனித ஒழுக்கத்தின் அடிப்படை மனித இயல்பு, ஆற்றல் ஆகியவற்றின மீது எழுப்பப்படுகிறது. அது அவனுடைய பழக்கம், கற்பனை, மனநிலை ஆகியவற்றின் தாக்கத்தைப் பெறுகிறது. ஒரு மனிதன் தன்னுடைய மனைவி, மக்களிடம் பாசம் கொண்டவனாய் இருக்கவேண்டும் என்பதற்கு இதுவே காரணம். அவனுக்கு மிகவும் நெருக்கமாகவும், நன்கு தொடர்பு உள்ளதாகவும் கருதப்படும் மனிதர்கள் மீதும், பொருட்கள் மீதும் மிகுந்த ஆர்வம் உள்ளவனாய் இருக்கவேண்டும். இயற்கையாகவே பழக்கம், உணர்வுகள் ஆகியவற்றால் உருவாக்கப்படுபவனே மனிதன் என்பதால் இந்தப் பண்பு அவனிடம் படிகிறது' [61] எனச் சான்றோா கூறுவதையும் காணலாம்.

'சங்ககால மறவர் பல உயரிய பண்புகளைக் கொண்டு உடல், பொருள், ஆவி மூன்றையும் நாட்டின் நலத்திற்காகவும், நாட்டு மக்களின் நல்வாழ்விற்காகவும் ஒப்படைத்தனர். மறப்பண்பு மிகுந்த, அஞ்சாநெஞ்சங்

கொண்ட வாழ்க்கையை நடத்தி வந்தவராயினும் பழிக்கு அஞ்சும் பண்பினராகவும் எளியோர் பிழை செய்யின் அதனைப் பொறுத்தருளுபவராகவும் பிறர்க்குண்டாகிய வறுமையைக் கண்டு நாணுபவராகவும் அவ்வறுமை நன்குணர்ந்திருந்த மறவர் பொன்னுக்கும் பொருளுக்கும் வேட்கை கொள்ளாது அழியாச் செல்வமாகிய புகழுக்காகவே உயிர் வாழ்ந்தனர் ' [62] என்று திறனாய்வாளர் கூறும் கருத்துக்களை ஒப்பு நோக்கின் மறவர்கள் இல்லறப் பற்றுடன், நாட்டுப் பற்றினையும், தியாக உணர்வுகளையும் பெற்று வாழ்ந்து பெருமை பெற்றதற்கான நல்ல நோக்கும் போக்கும் தெளிவாகத் தெரியும். இந்த மரபு இன்று வரை போற்றப்பட்டு வருவதை இற்றைய தமிழக மறவர்களிடமும் காணமுடிகிறது.

மறவர்கள் மேலே கூறப்பட்ட பண்பு நலன்களோடு சிறப்பாக வாழ்ந்து பெருமை பெற்றனர் என எல்லை வகுத்துக் கூறி முடித்து விடக்கூடிய ஒன்றன்று. அவர்களிடம் வேறு பல இன்றியமையா பண்பு நலன்களும் மிகுதியாகவும் நிறைவாகவும் இருந்தன என்பதற்குச் சங்க இலக்கியங்கள் எண்ணற்ற சான்றுகளைப் பகருகின்றன. இத்தகு பன்முகப் பண்பு நலன்களால் வாழ்ந்த மறவர் வரலாறு சீருஞ்சிறப்போடும் இன்று வரை தொடர்ந்து வருவது மட்டுமன்று ; பெருமைபெற்றும் திகழ்கிறது.

'அலகில் வெற்றியும் உரிமையும் இவையென
அவயத்தினில் எழுதிய அறிகுறி
அவையெனப் படுவடு நிரையு டையவர் ;
அடிப்புறக்கிழல் அமரர்தம் உலகொடிவ்
வுலகு கைப்படும் எனினும் அதுஒழிபவர்
உடலெமக் கொருசுமை யெனமுனிபவர் ;

உயிரை விற்றுஉறு புகழ்கொள உழல்பவர்

ஒருவரொப்பர் படைஞர்கள் மிடையவே.'[63]

என்ற கலிங்கத்துப்பரணிப் பாடல் இங்கே நினைவு கூரத்தக்கது.

காலந்தோறும் பாடப் பெற்ற இலக்கியங்களும் இவர்தம் பன்முகச் சிறப்புகளை அவ்வப்பொழுது பறைசாற்றி வருகின்றன. பேரிலக்கியங்களும், சிற்றிலக்கியங்களும், பிற்கால உரைநடை நூல்களும், நாடகநூல்களும் தொடர்ந்து இவர்தம் பெருமையை மக்களுக்கு எடுத்துக்காட்டியவண்ணம் இருந்தன. 18 ஆம் நூற்றாண்டில் பாமர மக்களால் பாடப் பெற்ற நாட்டுப்புற இலக்கியங்கள் மறவர்களுக்கான பல உண்மை வரலாறுகளை முன்வைத்து எண்டிசையும் அவர்தம் பெருமைகளை மக்கள் கேட்டு வீறு கொள்ளுமாறு செய்ததையும் காணமுடிகிறது.

சமூக, வரலாற்றுக் கதைப் பாடல்களில் மறவர்களைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. இவற்றை,

(1). மறவர்களைப் பற்றிய சமூகக் கதைப் பாடல்கள்

(2). மறவர்களைப் பற்றிய வரலாற்றுக் கதைப் பாடல்கள்

என்று இரு பிரிவுகளாகப் பிரிக்கலாம். கௌதல மாடன் கதை ; முத்துப்பட்டன் கதை ; வன்னியடிமறவன் கதை ; ஈனமுத்துப் பாண்டியன் கதை; சந்தனத் தேவன் கதை ; சேர்வைக்காரன் கதை ; அழகுத்தேவன் கதை ; சிதம்பரத்தேவன் கதை போன்றவை மறவர்களைப் பற்றிய சமூகக் கதைப் பாடல்களாகும். இராமப்பையன் அம்மானை மற்றும் சிவகங்கைக் கும்மி ஆகியவை மறவர்களைப் பற்றிய வரலாற்றுக் கதைப் பாடல்களாகும். [64]

மறவர்கள் பண்பு நலன்களால் விளைந்த சமூகப் பயன்களின் மலைமுகடாகக் கருதப்பட வேண்டிய நிகழ்ச்சிகள் இந்திய விடுதலைப்

போராட்ட காலங்களில் பூலித்தேவன் செய்த வீரச் செயல்களேயாம். இம்மறவனின் மாண்பை ஆங்கிலேய படைத்தளபதிகளே நேரில் கண்டு பாராட்டி எழுதி வைத்த அரசு ஆவணக் குறிப்புகள் பற்பல உள்ளன. அவற்றுள் மறவர் பற்றிய செய்திகள் இராபர்ட் ஓம் எழுதிய வரலாற்றுக் குறிப்பேட்டில் விரிவாகக் குறிக்கப்பட்டுள்ளன. இதனைப் பேராசிரியர். ந. சஞ்சீவி, தாம் எழுதிய வீரத்தலைவர் பூலித்தேவர் என்ற நூலில் எடுத்துக் காட்டியுள்ளார். அதனைச் சிறந்த திறனாய்வாளராகிய ந. இராசையா, தாம் படைத்த, 'மாவீரன் பூலித்தேவன்' என்ற நூலில்,

"பூலித்தேவனின் போர் வீரர்கள் எப்போதும் வாளையும் கேடயத்தையும் வைத்திருந்தனர். போரின் போது வெவ்வேறு படையினர் தனித்தனியாகவே நின்று போரிடுவர். ஈட்டி எறிவோரே சிறந்த படையாற்றல் பொருந்தியவர். அவர்களே எல்லாப் போரையும் முன்னின்று நடத்துவார்கள். இந்தப் படைக்கருவி பதினெட்டு அடிநீளமுடையது. அவர்கள் இவ்வாயுதத்தின் நுனியில் குதிரை முடியைக் குஞ்சரமாகக் கட்டி விடுவார்கள். குதிரையைத் தாக்கும் போது ஒரு சிறு மணியைக் கட்டுவார்கள். அவர்கள் முன்னதாகத் திரண்டு விடுவார்கள். நெருக்கமாக அணி வகுத்து அவர்கள் கையிலே ஈட்டியை ஏந்திக் கொண்டு முன்னேறுவார்கள். கைகளிலே இருக்கும் ஈட்டியை இலாவகமாகவும், முன்னோக்கியும் பிடித்துக் கொண்டிருப்பார்கள"[65] எனக்குறித்துப் பாராட்டியுள்ளார்.

நாணயத்திற்கு இருபக்கங்கள் இருப்பது போலவும், வெண்ணிலவிலும் களங்கம் வெளிப்படுவது போலவும் சங்ககால மறவர்களுள் சிலர் தத்தம் ஆணவத்தாலும், யான்- எனது என்னும் செருக்காலும் சமூகத்திற்கும் மக்கள் நலனுக்கும் ஒவ்வாத ஒருசில செயல்களில் ஈடுபட்டு தம் இனத்திற்கு ஊறு

விளைவித்த நிகழ்ச்சிகளையும் புலவர்கள் பதிவு செய்து வைத்துள்ளனர். அவர்கள் மிகுதியாகப் போற்றியவை போர் தொடர்பாக மேற்கொண்ட முரண்பட்ட பண்பு நலன்களாகும். இதன் தொடர்பான செய்திகள் புறநானூற்றில் அங்கொன்றும் இங்கொன்றுமாக இடம் பெற்றுள்ளன. அவை :

தத்தம் வல்லாண்மையை மிகுதியாக வெளிப்படுத்த வேண்டுமென்ற துடிப்பில் ஒற்றுமையின்மைக்கு அதிகம் இடம் தந்து விட்டனர். வேற்று நாட்டவர் எவரும் போரிடத் தமிழகம் அதிகம் வந்தாரில்லை. தம் தமிழ் இனத்தாரிடையே இத்தகு முரண்பட்ட செயல்களில் ஈடுபட்டமையால், 'வல்லான் வகுத்ததே வாய்க்கால்' எனும் நிலை தமிழகம் முழுவதும் படிப்படியாக பரவியதன் காரணமாகவே களப்பிரர் படையெடுப்பிலிருந்து தமிழகத்தைப் பாதுகாத்துக் கொள்ள முடியாது போயிற்று. தறுகணும் தன்மானவுணர்வும் கொண்ட மறவர் குழுவும், மறவர் குழுத் தலைவர்களும், மன்னர்களும் இத்தகு முரண்பட்ட பண்புகளால் நலமிழந்து பகைவர்களுக்கு இடந்தர நேரிட்டதெனலாம்.

'ஆரியரால் விளைவிக்கப்பட்ட பண்பாட்டுப் புரட்சியினாலும், களப்பிரரால் நேர்ந்த அரசியல் புரட்சியினாலும், தமிழர் வாழ்வு சீர்குலைந்தது; அவர்களுடைய மொழிக்கும், நூல்களுக்கும், கலைக்களுக்கும், பண்பாட்டுக்கும் தீரா இன்னல்களும் இடையூறுகளும் நேர்ந்தன. தமிழை வளர்த்து வந்த சங்கமும் தமிழ்க் கலையும் அழிவதற்கு நெருக்கடி ஒன்று தோன்றிற்று. தமிழகம் முழுவதிலும் இவர்கள் பரவினார்கள். தொண்ட மண்டலம், சோழ மண்டலம், பாண்டிய மண்டலம் ஆகியவற்றுள் ஒன்றேனும் இவர்களுடைய கொடுமையினின்றும் தப்பவில்லை. தமிழகத்துக்கு இவர்களால் ஏற்பட்ட குழப்பமும் இழப்பும் அளவிறந்தன. இவர்கள் கொடுங்கோலர்கள் ;

கலியரசர்கள் ' [66] என்று வரலாற்றாசிரியர் வேதனையுடன் எழுத நேரிட்டது. அதற்கு மேலே குறிப்பிட்டவையே காரணமாயிற்று.

'எழுவர் கூடி ஒரு இளவரசனை எதிர்த்து போரிட முயன்றது ; மூன்று பேரரசர் ஒருங்கு கூடி கடையெழுவள்ளலில் முதல்வராகப் போற்றப்பட்ட சிற்றரசரைத் தாக்கியது ; பங்காளிக்காய்ச்சல் கொண்டு தமக்குள் போரிட முற்பட்டது ; மூத்தவரைக் காட்டிற்கு அச்சுறுத்தி விரட்டிவிட்டு இளையவர் ஆட்சி செய்தது ; பகைமன்னரின் மக்களை அழிக்க முயன்றது ; நீதி மறந்து பெண் கொலை புரிந்தது ; பெண்கொடுக்க மறுத்தவர் நாட்டையே அழித்தது ; பகைவர்தம் காவல் மரங்களை வெட்டி வீழ்த்தியது ; பெரும்படைகொண்டு நாட்டின் வளத்தையே சீரழித்தது ; செய்ந்நன்றி மறந்து தம் மன்னரையே ஏமாற்றி போரிட மறுத்து தொல்லை கொடுத்தது '[67] எனப் புறநானூற்றில் பதிவாகியவற்றைச் சான்றாகக் காட்டலாம். யான் - எனதென்னும் செருக்கு; நீதி மறந்தது ; ஒற்றுமையின்மை ; மண்ணாசையும் பெண்ணாசையும் ; படைவலிமையையே பெரிதாகக் கருதியது ; உடல் வலிமைக்கு முதலிடம் வழங்கி, உள்ளத்துணர்ச்சிக்கும் சிந்தனைக்கும் மதிப்பு வழங்காமல் புறக்கணித்து போன்றவை அதிகம் தலைதூக்க இடம் கொடுத்து துன்பத்தையும் தோல்வியையும் விருந்தாளியாக வரவேற்றனர்.

வல்லாண்மையைப் பெரிதாக நினைத்துப் போற்றிய மறமன்னர் சிலர் தீயோர் நட்புறவால் வரிக்கொடுமையால் மக்கள் துன்புறுமாறு செய்தது ; நீர்வளம், நிலவளம், உழவு முதலியவற்றைக் கவனிக்காது புறந்தள்ளியது ; ஈகையை மறந்து வறுமை பரவ இடந்தந்தது ; சமூகக் கொடுமைகட்கு இடந்தந்தது ; பார்ப்பாரை புறக்கணித்தது ; புலவரை ஒற்றராக நினைத்து துன்புறுத்தியது ; துறவு - நிலையாமை பற்றிப் பேச வேண்டிய நிலை

ஏற்பட்டது[68] போன்றவை சமூகம் தொடர்பாக முரண்பட்ட பண்புநலன்கள் மறவர் குழுவாலும், தலைமை ஏற்ற மறமன்னர் கவனக்குறைவாலும் ஏற்பட்ட தென்பதையும் காணமுடிகிறது.

வல்லாண்மைக்கு மடைமாற்றம் தேவை எனக்கருதி கள்குடித்தலுக்கும் பரத்தமைக்கும் இடம் வழங்கியது; உடன்கட்டை ஏறும் பழக்கம் இருந்தது; போன்றைவை இல்லறம் தொடர்பான முரண்பட்ட பண்புநலன்கள் எனக் குறிப்பிடலாம். இங்கே தமிழ் இனத்தார் சிறப்பாக சிந்திக்க வேண்டியவை இரண்டு உள்ளது. தோற்றுப் போன பகைநாட்டு வீரமறவர் தமக்கு சமூகத்தில் ஆதரவு கிடைக்காததால் ஆறலைக் கள்வராக மாறிய இழிநிலை ஏற்பட்டதும் ; தோற்றோர் நாட்டுப் பெண்டிரைத் தம் நாட்டிற்குக் கொண்டு வந்து பணியாளர்களாகப் பயன்படுத்தி, அதுவே, பரத்தமை வளர்ச்சிக்கு இடம் ஏற்பட்டதுமாகிய இந்த இரண்டு இழிநிலை பற்றித் திறனாய்வாளர்கள் வருந்தி வேதனையோடு விளக்கங்கள் கூறியிருப்பதையும் காணமுடிகிறது. மறவர் குடும்பத்தைச் சார்ந்தவர்கள் நாடு தோல்வியடைந்த பிறகு கொண்டி மகளிர் என அழைக்கப்பட்ட வேதனையையும் சங்க இலக்கியத்தில் காணமுடிகிறது. [69]

இந்த இருவகைப் பண்பு நலன்கள் காலந்தோறும் தமிழக மறவர்களிடையே தொடர்ந்து வந்துள்ளதை வரலாறும் விரிவாகக் கூறியுள்ளது ; படைக்கப்பட்ட இலக்கியங்களும் சுட்டிக் காட்டிச் சிறப்பித்துள்ளன. 'தீர்த்தகிரி என்ற கொங்கு நாட்டு வீரன் ஆங்கிலேயரை எதிர்த்துப் போர் நடத்தினான். 1799 முதல் 1805 வரை ஆங்கிலேயரை தீவிரமாக எதிர்த்து நின்றான். இவன் கொங்கு நாட்டில் 'ஓடாநிலை' என்னும் ஊரில் கோட்டை கட்டி ஒரு படையைத் திரட்டி எதிரிகளுடன் போரிட்டான். இவனையும் ஆங்கிலேயர் 1805இல் அடக்கினர். தமிழகத்தில் கடைசியாக ஆங்கிலேயரை எதிர்த்து நின்றவன் தீர்த்தகிரியே.

இவன் 'தீரன் சின்னமலை' என்னும் பெயரால் தமிழக வரலாற்றில் புகழ் பெற்றான்'.[70]

2500 ஆண்டுகளுக்கு மேற்பட்ட பழந்தமிழ் மறவர் தொடர் வரலாறு இத்துடன் முடிந்து விட்ட தென்றே கருத வேண்டியது. அடுத்து வரும் வரலாறு , தற்கால வரலாற்றின் பண்பாடு மற்றும் தனித்தன்மைக் கேற்ப உலகவரலாற்றோடு கைக்கோர்த்து சென்று கொண்டிருக்கிறது எனலாம், இந்த வரலாற்றிற்குப் பெருமை சேர்த்தவர் பலராவர். அவர்களுள் 'பாண்டித்துரை தேவர்' அவர்களும், பசும்பொன் முத்துராமலிங்க தேவர்' அவர்களும் முதன்மையாகவும் சிறப்பாகவும் குறிப்பிடத்தக்கவராவர்.

## சமூகத்தால் மறவர்கள் பெற்ற பெருமைகளும் பயன்களும்

சமூகம் என்பது ஒரு கூட்டு வாழ்க்கை. கூட்டு வாழ்க்கை மனித இனத்தைப் பண்படுத்துகின்றது. எந்தவொரு தனி மனித வாழ்வும் இக்கூட்டு வாழ்க்கையில் பின்னிப் பிணைந்ததாக அமைய வேண்டும். இந்த அமைப்பில்தான் பல்வேறு நெறி முறைகளும் , பண்பாட்டுக் கூறுகளும், பண்பாட்டு அடையாளங்களும் பொதிந்து கிடக்கும். இத்தகைய அடையாளங்கள் சமூகத்தின் அங்கமாகிய தனிமனித வாழ்வை வெளிப்படுத்திக் காட்டுவனவாக அமைந்துவிடும்.'[71]

தனிமனிதனாகக் கருதப்படும் ஒவ்வொரு மறவனும், தத்தம் பொறுப்பிற்கேற்ப சமூகத்தோடு நல்லுறவு கொண்டு சமூகப் பாதுகாப்பெனும் சிறந்த தொண்டினைச் செய்து வந்ததால், சங்கத்தமிழ்ச் சமூகம் அவர்களை நன்குமதித்துப் போற்றி வந்ததைப் புலவர் கூற்றிலிருந்து காணமுடிகிறது.

'விசும்புறழ் புரிசை வெம்ப முற்றிப்
பைங்கண் யானை வேந்துபுறத் திறுத்த
நல்வெயில் உடையோர் உடையம் என்னும்
பெருந்தகை மறவன் '

- *(நற் ;287; 01-04).*

என்றும்,

'மாயிரும் புடையன் மாக்கழல் புனைந்து
மன்னெயில் எறிந்து மறவர்த் தரீஇத்
தொன்னிலைச் சிறப்பின் இன்னிழல் வாழ்வர்'

- *(ப.ப;37;08-10)*

என்றும்,

'களிறுகதன் அடக்கிய வெளிறுஇல் கந்தின்
திண்தேர் குழித்த குண்டுநெடுந் தெருவில்
படைதொலைபு அறியா மைந்துமலி பெரும்புகழ்
கடைகால் யாத்த பல்குடி கெழீஇ'

- *(பெரும்;396-399)*

என்றும் சிறப்பித்துக் கூறியுள்ளதைக் காணலாம். இவையெல்லாம், சமூகம் மற்றவர்களுக்கு அளித்த அங்கீகாரம் மட்டுமன்று; நற்சான்றிதழ்கள் ஆகும்.

'இயற்கையைப் போலவே அறவொழுக்கமும் எல்லாக் கலைகளையும் விடச் சிறந்ததென குறிப்பிடத் தகுந்ததுமாகும். ஆதலின், அறவொழுக்கம் எப்போதும் இரண்டு எல்லைகளின் இடைப்பட்ட நிலை என்று கூறலாம். சான்றாகக் கண்மூடித்தனமான தீவிர இயல்புக்கும் கோழைத்தனத்திற்கும் இடைப்பட்ட நிலையே வீரம் எனலாம். ஊதாரித்தனத்திற்கும்

உலோபத்தனத்திற்கும் இடைப்பட்ட நிலையே வள்ளன்மை எனலாம். தீவிர ஈடுபாட்டிற்கும் அடைக்கிவைப்பதற்கும் இடைப்பட்ட நிலையே தன்னடக்கம் எனலாம்.'[72] மக்களின் எண்ணங்களாகவும், விருப்பங்களாகவும், தேவைகளாகவும் இருப்பனவற்றைத் தெளிவாக எடுத்துக் கூறும் திறனாய்வாளர், மக்கள் விரும்பும் 'வீரம்; வள்ளன்மை; தன்னடக்கம்' முதலானவை இப்படி இருந்தால்தான் சமூகநலம் பேணப்படும் என்கிறார். இங்குக் கூறப்படும் வீரம் தமதெல்லையைத் தாண்டும் பொழுது கொடுமை நிறைந்த தீவிரவாதம் ஆகிவிடும். வள்ளன்மை தமதெல்லையைத் தாண்டும் பொழுது விரயம் ஆகிவிடும். தன்னடக்கம் தமதெல்லையைத் தாண்டினால் கோழைத்தனம் தான் மிஞ்சும். காப்பியாற்றுக்காப்பியனார், களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலைப் பாடிய பதிற்றுப்பத்துப் பாடலொன்று மறவர் தலைவனுக்கு எவ்வாறு சமூகம் மதீப்பீடு செய்து பாராட்டியுள்ளதெனக் கூறுவர். [73]

'கரிய பெரிய பனந் தோட்டு மாலையினையும், சிறந்த கழலினையும் புனைந்து சென்று, பகைவரது நிலைபெற்ற அரணினை அழித்து வென்றாய். அப்பகைவரது வீரர்களைச் சிறைப்பற்றிக் கொணர்ந்தாய். தொன்மையான நிலையைக் கொண்ட சிறப்பினோடு, நின்நிழலிலே வாழ்பவருக்கு ஒப்ப, அவருக்கும் கொடுமை இல்லாதபடி அவரையும் திருத்தி வைத்த மாறுபடாத கொள்கையினையும், மற்றும் நற்பண்புகளையும் நீ பெரிதும் உடையை! இவற்றால், வெவ்விய திறனமைந்த வேந்தனே! இவ்வுலகத்தோரின் பொருட்டாக நின் வளனும், நின்வழ்நாளும் என்றென்றும் நிலைத்து வாழ்வனவாகுக! ' எனக்கூறிப் பாராட்டியதில் மேலே குறிப்பிட்ட தேவையான வீரம்; நியாயமான வள்ளன்மை; தேவைப்படும் தன்னடக்கம் பெற்று மக்களால் பாராட்டுப் பெற்று

மக்களுக்காகவே வாழ்ந்ததால், புலவர், என்றென்றும் நிலைத்து வாழ்க என வாழ்த்தும் காப்பியாற்றுக் காப்பியனாரின் சமூக மதிப்பீடு கண்டுணர்ந்து உவகை பெறலாம்.

'இத்தகு சிறப்புகளைக் கொண்டிருந்த காரணத்தால்தான் மறவர்களை, அவர் மன்னராயினும் - சாதாரண குடிமகனாயினும், கடவுள் நிலைக்கு ஏற்றி வழிபட்டனர். மறவனுக்கு எடுக்கப்பட்ட நடுகலன்றி வேறுகடவுள்கள் இல்லை என்று கூறுகின்ற அளவிற்கு அக்கால சமுதாயம் மறவரைப் போற்றி வழிபட்டது'[74] எனக்கூறும் திறனாய்வாளர், 'தற்பொழுது தமிழகத்தின் பல பகுதிகளில் காணப்படும் வேடியப்பன், முனியப்பன், கருப்பசாமி, மீனாரப்பன், ஐயனார், மதுரைவீரன் போன்ற சிறு தெய்வங்களின் வழிபாட்டின் வளர்ச்சியே ஆகும் '[75] எனக்கூறி, கிரேக்க இலக்கியத்திலும் நடுகல் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளதைச் சுட்டிக்காட்டி நம் கருத்திற்கு வலுவூட்டுகிறார்.

தமிழ்ச்சமூகம் தொடர்ந்து இவர்களுக்குத் தத்தம் நினைவலைகளாகப் பதிவு செய்து பெருமைப்படுத்தியுள்ள இலக்கியங்களையும், வரலாற்றுக் குறிப்புகளையும் மிகுதியாகக் காணமுடிகிறது. முத்தொள்ளாயிரம், களவழிநாற்பது போன்றவை இருண்டகாலத்தில் தான் படைக்கப்பட்டுள்ளது. ஐம்பெருங்காப்பியம், ஐஞ்சிறுகாப்பியம் மறவர்களின் மறப் பண்புகளை மிகைப்படுத்திக் கூறியுள்ளதையும் காணலாம். கலிங்கத்துப்பரணி, மூவருலா போன்றவை மறவர்களின் மீவியல்புகளை காலத்தின் தேவைக்கேற்ப படைத்துக் காட்டியுள்ளதைக் காணமுடிகிறது. தொடர்ந்து படைக்கப் பெற்ற பேரிலக்கியங்களும், சிற்றிலக்கியங்களும், காப்பியங்களும் இதனையே பின்பற்றி படைக்கப்பட்டன.

பிற்காலத்தில் எழுந்த நாட்டுப்புறப் பாடல்கள் தத்தம் காலத்தில் வாழ்ந்த மறவர்களின் மறப்பண்புகளையும், சமூகப்பாதுகாப்பு பணிகளையும், உள்ளவாறு கூறியிருப்பதைக் காணமுடிகிறது. வரலாற்று நூல்களும் தொடர்ந்து அவ்வக் காலங்களில் நிலைத்திருந்த மறவர்தம் எல்லா வரலாற்று நிகழ்வுகளையும் உள்ளவாறு பதித்து வைத்துள்ளதைக் காணலாம். இறுதியாக, விடுதலை போராட்ட வீரன், தீரன்சின்னமலை முடிய பதிவு செய்யப்பட்டுள்ளதைக் காணலாம். [76]

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பாண்டித்துரைத் தேவர் நான்காம் தமிழ்ச் சங்கத்தை மதுரையில் தொடங்கினர். அச்சங்கம் தொடங்கிய காலச்சூழலை மிக வேதனையோடு, 'தமிழ் இலக்கிய வரலாறு பற்றியோ, தமிழர் வரலாறு பற்றியோ பண்டைய பண்பாடு, நாகரிகம் பற்றியோ ஓர் இருண்மை சூழ்ந்து நின்ற காலப்பகுதியில் தமிழ்ச்சங்கத்தைப் பாண்டித்துரைத் தேவர் தோற்றுவித்தார்'[77] எனக் கூறியிருப்பதைக் காணமுடிகிறது. இவர்தம் பெருமுயற்சியால் மீண்டும் பழந்தமிழ் மறவர் பெருமை ஒளிபெற்று சிறப்புப் பெற்றதைத் தமிழகமே அறியும். இப்பணி இன்றும் பலரால் தொடர்ந்து செய்யப்பட்டு வருகிறது.

பழந்தமிழர் போற்றி வந்த வீரம்பற்றியும், நற்சிந்தனை பற்றியும் மீண்டும் நினைவு படுத்தி, சமுகம் மறவர்க்குத் தொடர்ந்து உருவாக்கி வந்த பெருமை, காலம் உள்ளவரை நிலை பெற வேண்டுமென்ற எண்ணத்தில் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் கூறியவற்றை நினைவிற் கொள்வது நலம் பயக்கும். அதனைத் திறனாய்வாளர் இவ்வாறு சிறப்பித்துக் கூறுவர். 'வீரம், விவேகம் ஆகிய அவருடைய தத்துவத்தை அரசியலில் தேவர் புகுத்துகிறார். அவரைப் பொறுத்த அளவில் அரசியல் என்பது இந்த இரண்டும் கலந்ததே. விவேகம்,

வீரம் ஆகிய இரண்டையும் மதத்தின் மூலமே பெறமுடியும். விவேகம் மட்டுமே உள்ள அரசியல் வெறும் கேலிக் கூத்தாகக் காட்சியளிக்கும். வீரமற்ற ஒருவன் மரணபயத்தை வெல்ல முடியாது. உண்மையான ஞானி என்பவர் காமத்தையும் மரண பயத்தையும் வென்றவரே ஆவார். ஆகவே, ஓர் அரசியல்வாதி வீரமும் விவேகமும் கொண்டு ஒரு ஞானியைப் போல் விளங்கவேண்டும். இவற்றில் ஒன்றில்லாவிட்டாலும் ஒருவர் நாடாளும் தகுதியற்றவராகி விடுகிறார்'[78] எனக்கூறிச் சங்க காலத்து மூவேந்தர்தம் - மறவர்தம் மறப்பண்புடைய ஆட்சி மலர வேண்டுமென்கிறார்.

## ஆய்வு முடிவுகள்

மறவர்கள் பண்பு நலன்களால் விளைந்த சமூகப் பயன்கள் ஆல் போல் பலவாறு கிளைத்துப் பரவியிருந்ததைச் சங்க இலக்கியங்களில் காண முடிகிறது. அது காலந்தோறும் தொடர்ந்து பல தடைகளைச் சந்தித்துப் போராடி, அவற்றை நீக்கித் தமிழ் மறவர் தமிழகத்தில் தொடர்ந்து இன்றுவரை தமக்குரிய கடமைகளைச் செய்தபடிச் சிறப்பிடம் பெற்றுத் திகழ்வதைப் பல ஆய்வின் மூலம் கண்டறிந்து, கீழ்க்கண்டவாறு முறைப்படுத்தி இந்த இயலில் இடம் பெறச் செய்யப்பட்டுள்ளன.

1. பண்பு நலன்களுக்குரிய வரையறைகள் பலநூல்களின் கருத்துக் கொண்டு அடிப்படையாக அமைத்துக் கொள்ளப்பட்டது.
2. பழந்தமிழ்ச் சங்ககாலச் சமூகம் வகுத்த பண்புநலன்களைத் தொகுத்துக் கூறி, அவற்றையும் அளவுகோலாக அமைத்துக் கொண்டு ஆய்வுசெய்து முடிவுகள் வெளியிடப்பட்டன.

3. பண்பு நலன்களின் அடித்தளமாக அமைய வேண்டிய மானுடம் போற்றும் பண்புநலன்கள் இற்றைய சமூகவியலார் கோட்பாடுகளை முன் வைத்து ஆய்ந்து கிடைத்தவற்றை வெளியிட்டு, மானுடம் போற்றுவதே தலையாய பண்பு நலன்களாக இருந்துள்ளதைப் பட்டியலிட்டுக் காட்டப்பட்டது.

4. கல்வி வழிகற்ற பண்பு நலன்களை ஏட்டுக் கல்வி, சமூகக்கல்வி, இல்லறக்கல்வி, போர்க்கல்வி எனச்சங்கச் சான்றோர் பகுத்துக் கூறிய அனைத்தையும் ஆய்ந்து கிடைத்த முடிவுகள் தொகுத்து முன் வைக்கப்பட்டன.

5. நாடுகாவலில் முதன்மையாளராகக் கருதப்பெற்ற அரசர்கள் இத்தகு பண்பு நலன்களை ஆணைகளாகப் பிறப்பித்துச் சமூகத்திற்குக் கட்டளையிட்டு வெற்றி பெற்றதை ஆய்வின் வழி கண்டறிந்து தொகுத்து வெளியிப்பட்டது.

6. மக்கள் முதலாக மன்னர் வரை போற்றி வந்த பண்பு நலன்களுள், எவையெவை சிறந்தவை, எவை அதிகம் போற்றத்தக்கவை, எவை கண்டிக்கத் தக்கவை எனச் சான்றோர்களாகிய புலவர்கள் கூறியவற்றைச் சங்க இலக்கியத்தில் இடம் பெற்ற மறவர் தொடர்பானவற்றை மட்டும் ஆய்ந்தெடுத்து அவற்றின் சிறப்பை முறையாக வெளியிட முயற்சி செய்யப்பட்டது.

7. பண்பு நலன்களால் உருவான சமூகப் பயன்களை வரையறை செய்து, மறவர்தம் பன்முகப் பணிகளால் சமூகம் பெற்ற பயன்களை வெளிப்படுத்த அமைத்துக் கொண்ட அடித்தளங்களை அறிமுகம் செய்ய முயற்சிக்கப்பட்டது.

8. இயற்கைவழி மறவர்கள் உருவாக்கி சமூகத்திற்கு வழங்கிய பயன்கள் பற்றி ஆய்வு செய்யப்பட்டு முடிவுகள் தொகுத்துக் கூறப்பட்டன.

9. அரசுவழி வந்த மறவர் தம் சமூகப் பயன்கள் எல்லாக் காலத்திலும் எவ்வாறு வெளிப்பட்டன என்பது ஆய்வு செய்து வெளியிடப்பட்டன.

10. மேலே, பலதலைப்புகளில் ஆய்வுசெய்து முடிவாகக் கண்டவற்றை முன்வைத்து வெளிப்பட்ட சமூகப்பயன்களின் பன்முகத் தன்மைகள் இருபதாம் நூற்றாண்டுவரை கிடைத்த சான்றுகளைக் கொண்டு பட்டியலிட்டு காட்டப்பட்டன.

11. சமூகத்தால் மறவர்கள் பெற்ற பெருமைகளையும், பயன்களையும் வெளியிட வேண்டும். இல்லையேல் ஆய்வு முழுமை பெறாது. எனவே, இருபதாம் நூற்றாண்டு வரை கிடைத்த இலக்கிய, வரலாற்று ஆய்வு செய்ததில் கிடைத்த கருத்துக்கள் தொகுத்து இறுதியாகத் தரப்பட்டன.

# அடிக்குறிப்புகள்

1. டாக்டர். ஈ.கோ. பாஸ்கரதாஸ், மானிட மதிப்புகள், முதல்பதிப்பு, பக். 78, 79.
2. மேற்படி நூல் - ப. 81.
3. முனைவர்.வே. முத்துலக்குமி, பண்பாட்டுச் சிந்தனைகள், முதற்பதிப்பு, ப-10.
4. டாக்டர். மு. நிலாமணி மற்றும் டா. கலா. கே. தாக்கர், தொகுப்பாசிரியர்கள், வர்த்தமானன் தமிழ் - தமிழ் அகராதி, நான்காம் பதிப்பு, ப.696.
5. மேற்படி நூல் - ப. 646.
6. முனவைர்.அ. விசுவநாதன், உரையாசிரியர், கலித்தொகை, மூன்றாம் பதிப்பு, பக். 580-582.
7. டாக்டர். ஈ.கோ. பாஸ்கரன், மானிட மதிப்புகள், முதற்பதிப்பு, ப-107.
8. பண்பு என்ற சொல் இடம் பெற்ற தொல்காப்பிய நூற்பாக்கள் எண்கள் - 501 ; 550 ; 619; 625; 653; 698; 705; 727; 743; 782; 895; 899; 901; 1049 ; 1116 ; 1225; 1334 ; 1417; 1602.
9. பண்பு என்ற சொல் இடம் பெற்ற திருக்குறள்களின் எண்கள் - 45; 62; 194; 389; 469; 579; 579; 681; 688; 783; 810; 851; 865; 871; 874; 912; 937; 955; 991; 992; 993; 994; 995; 996; 997; 998; 1000; 1181.

10. தொல்காப்பியர், பொருளதிகாரம், புறத்திணையியல், சமூகம் வகுத்த சில பண்பு நலன்கள் :

1. வஞ்சி : பெருஞ்சோற்று நிலை ; தழிஞ்சி.

2. உழிஞை : நாள்கோள் ; மண்ணுமங்கலம் .

3. தும்பை : தார்நிலை ; எருமைமறம் ; நல்லிசை நிலை; நூழில்.

4. வாகை : வல்லாண்பக்கம் ; அவிப்பலி; பிழைத்தேர் தாங்கும் காவல்.

5. காஞ்சி : கையறுநிலை ; மறக்காஞ்சி ; வஞ்சினக்காஞ்சி.

11. பேராசிரியர். பெ. இளவரசு, ஒழுக்கம் உலகில் மிக உயர்ந்தது, ஆரிசன் ஸ்வெட் மார்டன் எழுதிய ஆங்கில நூலின் தமிழாக்கம், முதற்பதிப்பு, ப-81.

12. புறநானூற்றுப் பாடல் எண் - 09.

13. குருற்தொகைப் பாடல் எண் - 400.

14. டக்டர் ஈ.கோ. பாஸ்கரன், மானிட மதிப்புகள், முதற்பதிப்பு, ப-36.

15. எஸ். கௌமாரீஸ்வரி, பதிப்பாசிரியர், திருக்குறள், பரிமேலழகர் உரை, எட்டாம் பதிப்பு, ப-125.

16. மேஜர். கதிர்மகாதேவன், பழந்தமிழர் வீரப்பண்பாடு, முதற்பதிப்பு, ப-53.

17. மேற்படி நூல் - ப-53.

18. பதிற்றுப்பத்து ; 9-ஆம் பதிகம் ; 2-ஆம் பாடல் ; 3-5.

நெடுநல்வடை ; 100-வது அடி

மலைபடுகடாம் ; 225-227 அடிகள்.

அகநானூறு ; 201ம் பாடல் ; 01-03 அடிகள்.

அகநானூறு ; 213 ம் பாடல் ; 01 வது அடி

புறநானூறு ; 347 வது பாடல் ; 10-12 அடிகள்.

19. தொல்காப்பியம் ; பொருளதிகாரம் ; புறத்திணையியல் ; வாகைத்திணை ;

மூன்றாம் நூற்பா :

'அறு வகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்
ஐவகை மரபின் அரசர் பக்கமும்
இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்
மறுவில் செய்தி மூவகைக் காலமும்
நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்
நாலிரு வழக்கின் தாபதப் பக்கமும்
பாலறி மரபின் பொருநர் கண்ணும்
அனைநிலை வகையொடு ஆங்கெழு வகையின்
தொகைநிலை பெற்றது என்மனார் புலவர் '

20. திருக்குறள் ; ஒற்றாடல் - அதிகாரம் 59; குறள் எண் - 585; 586; 587;

தூது ___ அதிகாரம் 69; குறள் எண் - 687; 688 ; 689 ; 690.

21. மதுரைக்காஞ்சி ___ பாடலடிகள் - 728- 747.

22. முனைவர். இரா. மோகன், உரையாசிரியர், பத்துப்பாட்டு, முதற்பகுதி, மூலமும் உரையும், மூன்றாம் பதிப்பு, பாடலடிகள் - 214 முதல் 225 வரை., உரையாசிரியர் விளக்கம் - பக் - 120 முதல் 121.

23. மேற்படி நூல் - ப. 121.

24. டாக்டர். செ.ரா. பரமேஷ், சமூக உளவியல், முதற்பதிப்பு, பக் 07-08.

25. மேற்படி நூல் - ப-12.

26. பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம் முதலிய இலக்கியங்கள் சுட்டிக் காட்டும் கலைஞர் குழுக்களின் பயண நிகழ்ச்சிகள்.

27. டாக்டர். கு. சொக்கலிங்கம், குற்றவியல், முதற்பதிப்பு, பக்-245-248.

28. சிலப்பதிகாரம் ; மதுரைக்காண்டம் ; காடுகாண்காதை :

'முல்லையுங் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து
நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப்
பாலை யென்பதோர் படிவங் கொள்ளும் ' (64-66)

29. மேஜர். கதிர்மகாதேவன், பழந்தமிழர் வீரப்பண்பாடு, முதற்பதிப்பு, ப-150.

30. மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்
காடும் உடைய தரண் - குறள் எண் - 742.

31. திருவள்ளுவர், திருக்குறள், பரிமேலழகர் உரை, 8ஆம் பதிப்பு, ப-230.

32. முனைவர். வே. முத்துலக்குமி, பண்பாட்டுச் சிந்தனைகள், முதற்பதிப்பு, பக் 60-61.

33. சிலப்பதிகாரம் - (1) மதுரைக்காண்டம் - ஊர்காண்காதை
பாடலடிகள் - 11-12.

'அறத்துறை விளங்கிய அறவோர் பள்ளியும்
மறத்துறை விளங்கிய மன்னவன் கோயில் '

(2) வஞ்சிக்காண்டம் - காட்சிக்காதை அடிகள் - 174 முதல் 180 வரை - இப்பகுதியில் ஒற்றர்கள் முன்னதாக வடநாடு சென்று ஒற்றறிதல் - மறவர்கள் வஞ்சினங் கூறிப் புறப்படுதல் முதலானவை இடம் பெற்றுள்ளன.

(3) கால் கோட் காதை

(4) நீர்ப்படைகாதை

(5) நடுகற்காதை போன்றவைதான் பழைமைக்குப் பழமையாகவும், புதுமைக்குப் புதுமையாகவும் உள்ளன.

34. டாக்டர். கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு — மக்களும் பண்பாடும், மறுபதிப்பு, ப-26.

35. பத்துப்பாட்டு, மதுரைக்காஞ்சி, பாட்டின் அடிகள் - 728-747 ; குறுநில மன்னர்கள் போரில் உதவிய செய்திகளும், பாண்டியன் அவர்களுக்குப் பரிசு வழங்கிப் பாராட்டி மகிழ்ந்த செய்தியும்.

36. சிலப்பதிகாரம், இந்திர விழவூரெடுத்த காதை, பாடல் அடிகள் 115-140.

37. டாக்டர். மா. இராசமாணிக்கனார், தமிழ்நாட்டு வரலாறு, முதல்பதிப்பு, ப-222.

38. மேற்படி நூல் - பக். 736-737.

39. மேற்படி நூல் - ப.794.

40. மேற்படி நூல் - பக் - 816 ; 819-820.

41. மேற்படி நூல் - பக் 835 - 836.

42. முனைவர். ந. இராசையா, மாவீரன் பூலித்தேவன், முதற்பதிப்பு, ப- 05.

43. மேற்படி நூல் - பக். 29-30.

44. மேற்படி நூல் - பக்.100-102.

45. மேற்படி நூல் - பக். 102-103.

46. மேற்படி நூல் - பக். 19-20.

47. டாக்டர். காவ்யா சண்முகசுந்தரம் (தொகுப்பாசிரியர்), முனைவர். எஸ்.எம். கமால் எழுதிய சேதுபதிகள் சரித்திரம், முதற்பதிப்பு பக். XI - XXI மற்றும் XXII

48. டாக்டர். சு. முத்தையா, சங்ககால மறவர், ஒரு சமூகவியல் பார்வை, முதற்பதிப்பு, ப-62.

49. டாக்டர். கு. சொக்கலிங்கம், குற்றவியல், முதல்பதிப்பு, 1997, ப-05.

50. டாக்டர். சு. முத்தையா, சங்ககால மறவர், ஒரு சமூகவியல் பார்வை, முதற்பதிப்பு, ப-109.

51. மேஜர். கதிர்மகாதேவன், பழந்தமிழர் வீரப்பண்பாடு, முதற்பதிப்பு, ப- 97.

52. திரு. மருதன், இரண்டாம் உலகப்போர், முதற்பதிப்பு, பக். 239-270.

53. அருள்திரு. முனைவர். ஆ. ஜோசப். சே.ச. மற்றும் இருவர் (பதிப்பாசிரியர்கள்), தமிழ் இலக்கியத்தில் மனித உரிமைகள், முதல்பதிப்பு, முனைவர். ந. சாந்தி எழுதிய கட்டுரைக் கருத்துகள், ப.95.

54. மேற்படி நூல் - பக். 443-444.

55. மேற்படி நூல் - ப - 133.

56. டாக்டர். சு. முத்தையா, சங்ககால மறவர், முதற்பதிப்பு, ப 21 மற்றும் 24.

57. மேற்படி நூல் - பக். 109-111.

58. டாக்டர். காவ்யா சண்முக சுந்தரம், வேலு நாச்சியார், முதற்பதிப்பு, பக்.105.

59. முனைவர். வே. முத்துலக்குமி, பண்பாட்டுச் சிந்தனைகள், முதல்பதிப்பு, ப. 57.

60. கலித்தொகைப் பாடல் எண் 39.

61. முனைவர். காமாட்சி, பசும்பொன் தேவரும் எட்மண்ட் பர்க்கும், முதற்பதிப்பு, ப-55.

62. டாக்டர். சு. முத்தையா, சங்ககால மறவர், ஒரு சமூகவியல் பார்வை, முதற்பதிப்பு, பக்.119-120.

63. ஜெயங்கொண்டார், கலிங்கத்துப் பரணி, ஏழாம்பதிப்பு, ப.170.

64. முனைவர். ந. இராசையா, மாவீரன் பூலித்தேவன், முதற்பதிப்பு, பக். 409-414.

65. மேற்படி நூல் - பக். 361 மற்றும் 371-372.

66. டாக்டர். கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும், மறுபதிப்பு, பக் 183-184.

67. புறநானூற்றுப் பாடல்கள் : 45 ; 46 ; 57 ; 72 ; 109 ; 151 ; 165 ; 178 ; 225 ; 336 முதல் 354 வரை;.

68. புறநானூற்றுப் பாடல்கள் எண்கள் - 18 ; 266 ; 34 ; 43 ; 47 ; 184 ; 356 ; 357 ; 358

69. புலியூர்க் கேசிகன் , தெளிவுரையாசிரியர் , பதிற்றுப்பத்து , மறுபதிப்பு , பக் 45 ; பாட்டும் தொகையும் - ப.77

70. டாக்டர். கே.கே. பிள்ளை , தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும் , மறுபதிப்பு, ப-477.

71. முனைவர். தாயம்மாள் அறவாணன், தமிழ்ச் சமூகவியல் - ஒருகருத்தாடல், முதற்பதிப்பு, முனைவர். சா. கிருட்டினமூர்த்தி, அணிந்துரை, ப-III.

72. டாக்டர். ஈ.கோ. பாஸ்கரதாஸ், மானிட மதிப்புகள், முதற்பதிப்பு, ப-78.

73. பதிற்றுப்பத்து ; பாடலெண் 37 ; தலைப்பு : வம்படு வென்றி ; 'வாழ்க நின்வளனே ' எனத் தொடங்கி, 'இவ்வுலகத்தோர்க்கே ' என முடியும் பாடல், வீரம் ; வள்ளன்மை, தன்னடக்கம் பற்றிய சமூக மதிப்பீடு.

74. டாக்டர். சு. முத்தையா, சங்ககால மறவர், முதற்பதிப்பு, பக். 120.

75. மேற்படி நூல் - ப. 96.

76. *(1)* டாக்டர். மு.வ. எழுதிய 'இலக்கிய வரலாறு'

*(2)* டாக்டர். கே.கே. பிள்ளை எழுதிய 'தமிழ்நாட்டு வரலாறு'

*(3)* டாக்டர். மா. இராசமாணிக்கனார் எழுதிய 'தமிழ் நாட்டு வரலாறு'

*(4)* டாக்டர். ந. இராசையா எழுதிய 'மாவீரன் பூலித்தேவன்'

*(5)* மறவர் கதைப் பாடல்கள்

*(6)* ந. சஞ்சீவியின் 'பூலித்தேவர்' மற்றும் 'மருது பாண்டியர்கள்'

77. டாக்டர். காவ்யா சண்முகசுந்தரம், தொகுப்பாசிரியர், பாண்டித்துரைத் தேவரின் சங்கத் தமிழ்க் களஞ்சியம், முதற்பதிப்பு, ப.46.

78. முனைவர். காமாட்சி, தமிழில் பெ. இளவரசு, பசும்பொன் தேவரும் எட்மண்ட் பர்க்கும், முதற்பதிப்பு, ப-20.

# முடிவுரை

கடந்த ஐந்து இயல்களில் ஆய்வின்வழி கண்டறிந்த கருத்துக்கள் இங்கு தொகுக்கப்பட்டுள்ளன. அவை,

*(1)* பொதுநிலையில் கண்டறிந்த முடிவுகள்

*(2)*சிறப்பு நிலையில் கண்டறிந்த முடிவுகள்

என்று விளக்கப்பட்டுள்ளன.

'ஆய்வு என்பது தொடர் ஓட்டம் போல, ஒருவர் விட்ட இடத்திலிருந்து நாம் தொடர வேண்டும். முன்னவர் ஓடிய பகுதியிலேயே நாமும் ஓடின் தவறாகும். அவர் வந்து தொடும் இடம் நாம் தொடங்கும் இடமாகும்' எனக்கூறும் தமிழண்ணல் கருத்தின்படியே முன்னோடிகள் முடித்த இடத்திலிருந்து ஆய்வைத் தொடங்கிக் கண்டறிந்தவை இவையெனத் முடிவுரையாக அமைக்கப்பட்டுள்ளது.

## பொது நிலையில் கண்டறிந்த முடிவுகள்

*(1)* தற்கால சமூகவியலார், இல்லறவியலார், உளவியலார், அரசியலார், பொருளியலார், போர் இயலார் அனைவரும் கூறிய கோட்பாடுகளுள் பல சங்க இலக்கியங்களில் இயல்பாகவே இடம் பெற்றுள்ளன. ஒரு சில முரண்பட்ட, மாறுபட்ட கருத்துக்களும் சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன.

*(2)* சங்க இலக்கியங்கள் சுட்டிச் சிறப்பிக்கும் தமிழ் மறவர்தம் மறப்பண்புகள் பலகிரேக்க, ரோமானிய மறவர்களின் பண்புகளோடு ஒன்றியுள்ளதையும் காணமுடிகிறது.

(3) சமூகக் கட்டுக்கோப்பிற்கு உதவிய மறவர்கள், தத்தம் இல்லற வாழ்வில் கற்றறிந்தவற்றை வழுவாது போற்றி வந்த பண்புகளே அதற்குத் துணை நின்றன எனத் தெளிவாகத் தெரிகிறது.

(4) தன்மானம், தறுகண் போன்ற மறப்பண்புகள் தொடர்ந்து வாழையடி வாழையாக வந்து கொண்டிருப்பதை இன்றும் காணமுடிகிறது.

(5) இனப்பற்று, மொழிப்பற்று, நாட்டுப்பற்று மிகுதியாகப் பெற்றிருந்தும் ஒற்றுமையின்மையால் சிதறுண்டு பகைவர் வந்து தமிழினத்திற்கு ஒவ்வா அவர்தம் பண்புகளை விதைத்திட இடமேற்பட்டுவிட்டதையும் தெளிவாகக் காணமுடிகிறது.

## சிறப்பு நிலையில் கண்டறிந்த முடிவுகள்

இயல்தோறும் கூறப்பட்ட ஆய்வு முடிவுகளே சிறப்பு நிலையில் கண்டறிந்த முடிவுகள் ஆகும். குறிப்பிட்ட எல்லை அமைத்துக் கொண்டு ஆய்வு செய்த பொழுது கிடைத்த முடிவுகள் இயல்தோறும் இயலின் இறுதியில் தரப்பட்டுள்ளன. அவற்றால் கண்டறிந்த சிறப்புச் செய்திகள் இங்கு தரப்பட்டுள்ளன.

(1) சங்க இலக்கியங்கள் வாயிலாக அற்றைய தமிழ்ச் சமூகம், சமூக உள்கட்டமைப்பிலும், வெளிக்கட்டமைப்பிலும் சிறந்து விளங்கியது.

(2) அரசர் முதலாகப் பாமரர் ஈறாக உள்ள அனைவரும் இக்கட்டமைப்புகளுக்குத் தத்தம் பங்கினைச் சிறப்பாகச் செலுத்தியுள்ளனர்.

(3) அகம்-புறம் என்ற வாழ்வியல் அமைப்பே இத்தகு கட்டமைப்பிற்கு அடித்தளமாக அமைந்தன.

(4) தற்காப்பு, பாதுகாப்பு, பல்வகைக் காவல், பகைஒழிப்பு போன்றவற்றிற்கு இந்தக் கட்டமைப்புகள் உதவியது போலவே சங்ககால மறவர்களும் இதற்கு நன்கு உதவியுள்ளனர்.

(5) பன்னாட்டு ஆய்வாளர்கள் போற்றிப் பாராட்டி நூல்களில் இடம் பெறுமாறு செய்ததற்கு, அற்றைய சங்ககாலச் சமூகக் கட்டமைப்புகளின் தனித்தன்மையுடன் விளங்கிய கூட்டமைப்பே காரணமாயிற்று.

(6) சங்க இலக்கியங்களில் வெளிப்படும் பன்முக அமைப்புகள் அற்றைய மறவர்களின் பங்களிப்புகளைத் தெளிவாகக் கண்டறிய உதவுகின்றன.

(7) சங்க இலக்கியம் சுட்டும் மாந்தர்களுள் அரசர்களே முதன்மை மாந்தர்களாகத் திகழ்ந்து மறவர்தம் பிரதிநிதிகளாக நின்று சிறப்புச் செய்துள்ளனர்.

(8) பன்முக அமைப்பில் அறம், பொருள், இன்பம் வாழ்வியற் கோட்பாடாக அமைந்து சிறக்க பிறர் தத்தம் பங்கினைச் செலுத்தியது போலவே மறவர்களும் செலுத்தி வந்துள்ளனர்.

(9) சமூகத்தார் அனைவரும் போற்றிப் பாராட்டும் உயர்நிலையைப் பெற்றிருந்தாலுங்கூட, சிலர் தத்தம் மறப்பண்புகளைத் தவறாகப் பயன்படுத்தியுள்ளதையும் காணமுடிகிறது.

(10) மறவர்களின் தனித்தன்மைகளைக் கண்டறிய சங்க இலக்கிய பன்முக அமைப்புகளே துணை நின்று வெளிப்படுத்தியுள்ளன.

(11) சங்க இலக்கியங்கள் மறவர்களை எந்தெந்த வகையில் சிறப்பித்துப் பாராட்ட முடியுமோ அந்தந்த வகையில் பாராட்டிப் பெருமைபடுத்தியுள்ளதைக் காணமுடிகிறது.

(12) போர்க் காலங்களில் மட்டுமன்றி, அமைதிக் காலங்களிலும் மறவர்கள் சமூகக் காவலர்களாகவும், சமூகத்தொண்டர்களாகவும் வாழ்ந்து வந்துள்ளனர்.

(13) பழந்தமிழ் நாட்டுற்குரிய உண்மையான வரலாற்றை உருவாக்க மறவர்களின் பங்களிப்பு மிகுதியாக உள்ளன.

(14) மறவர்களின் தறுகண் எனப்படும் மறப்பண்பு ஈடு இணையற்றது என்பதை கிரேக்க-ரோமானிய மறவர்களோடு ஒப்பிட்டுக் காணும் பொழுது நன்கு வெளிப்படுகிறது.

(15) வாழ்வியற்கூறுகளான அகமும் புறமும் நெறிமுறையோடு போற்றிப் புரந்த பண்பினை மறவர்கள் இயல்பாகவே பெற்றிருந்தனர்.

(16) சமூகக் கட்டமைப்பில் நாடும்-நாடு காவலும் முதலிடம் பெற்று, அதற்கு மறவர்களே பெரும்பங்காற்றியுள்ளதைக் காணமுடிகிறது.

(17) அரசு - அரசாங்கம் போற்றவற்றுள் முக்கிய அங்கம் பெற்று ஆட்சி சிறக்க மறவர்கள் ஆற்றிய தொண்டுகள் நன்கு விளக்கம் பெற்றுள்ளன.

(18) அரசாணைகளை மதித்து, தத்தம் பொறுப்புணர்ந்த மறவர்கள் ஆற்றிய கடமைகள் நன்கு சுட்டப்பட்டுப் பாராட்டப்பட்டதைக் காணமுடிகிறது.

(19) மறவர்களும் கொடையாளிகளாக வாழ்ந்து வந்துள்ளதையும் காணமுடிகிறது.

(20) வீர மரணம் எய்திய மறவர்களை மன்னர்களும், மக்களும் தெய்வமாகப் போற்றி வணங்கி வந்துள்ளனர்.

(21) மறவர்கள் மானுடம் போற்றும் பண்பு நலன்களால் சிறந்திருந்ததால்தான் சங்ககாலச் சமூகம் பற்பல சமூகப் பயன்களைப் பெற்று பொற்காலமாகத் திகழ்ந்திருந்ததெனத் தெளிவாகச் சுட்டுகின்றன.

(22) மறவர்களின் முதன்மைப் பணி காவற்பணி என்று வரையறை செய்து, அதனால், மக்கள் அச்சமின்றி சுதந்திரமாக வாழ்ந்து வந்துள்ளது நன்கு விளக்கிக் காட்டப்பட்டள்ளது.

(23) வாழையடி வாழையாக மறவர்கள் சமூகத்தில் சிறப்பிடம் பெற்றதால்தான் இடைக்கால வரலாற்றிலும் தமிழக மறவர் சுட்டப்பட்டுப் பாராட்டப்பட்டுள்ளனர்.

(24) விடுதலைப் போராட்டங்களில் காலந்தோறும் மறவர் மரபில் தோன்றிய ஆடவர்கள் மட்டுமின்றி பெண்களும் தலைமை ஏற்று நற்றொண்டாற்றிப் பெருமை பெற்றுள்ளனர்.

(25) விடுதலைக்கு முன்பும், விடுதலை பெற்றதற்குப் பின்பும் தொடர்ந்து இன்றுவரை தமிழக மறவர்கள் தமிழகம் சிறக்க பாடுபட்டு வரும் நற்செயல்களுக்கெல்லாம் சங்ககால மறவர்களின் பண்பு நலன்களால் விளைந்த சமூகப் பயன்களுக்குரிய சான்றுகள் காட்டப்பட்டுள்ளன.

இவ்வாறு, இலக்கியச் சான்றுகளோடு வரலாற்றுச் சான்றுகளையும் இணைத்து ஆய்வுசெய்து கண்டறிந்த முடிவுகள் முறைப்படுத்தப்பட்டு பட்டியலிடப்பட்டுள்ளன.

'அடிவானம் போல் முடிவிலா ஆய்வினைத்
தம்முடன் தொடங்கித் தம்முடன் முடிவதாய்
இம்மா னுடர்கள் எண்ணுதல் தவறே'

என்று கூறும் தமிழண்ணல் கூற்றிற்கேற்ப, இந்த ஆய்வின் தொடர்ச்சியாக மேலும் பல ஆய்வுகளை மேற்கொள்ள இடமளிக்கும் என நம்பலாம். மேலாய்வுக்களங்காக, "சங்க இலக்கியம் போற்றும் மூதின் மகளிர்" ; "சங்ககால அரசியலில் மறவர்கள் பங்கு" ; சங்ககால மறவர்களும் போர் நெறிகளும்" ;

"பழந்தமிழ் மறவர்களின் மறப்பண்புகளும் சமூகமும்" எனப் பல்வேறு தலைப்புகளில் ஆர்வமுள்ள ஆய்வாளர்கள் ஆய்வினை மேற்கொள்ளலாம்.

இத்தகு ஆய்வுகள் மறைக்கப்பட்ட உண்மைகள் வெளிவர உதவுவதோடு, இற்றைய தமிழ்ச் சமூகம் மீண்டும் விழிப்புற்று வீறுகொண்டு பழந்தமிழர் போற்றிய பெருமைகளை உலகரங்கில் பதிவு செய்யும் உயர் பணிக்கான ஆக்கமும் ஊக்கமும் நல்கும் என உறுதியாக நம்பலாம்.

# துணை நூற்பட்டியல்

## (1) முதன்மை நூல்கள்

**திரு. / முனைவர். :**


*1.* கேசிகன், புலியூர் - பதிற்றுப்பத்து மூலமும் உரையும், பாரிநிலையம், சென்னை, மறுபதிப்பு, 2005.

*2.* தொல்காப்பியர் - தொல்காப்பியம், பொருளதிகாரம், நச்சினார்க்கினியம், முதல் ஐந்து இயல், திருநெல்வேலி தென்னிந்திய சைவ சிந்நாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, மறுபதிப்பு, 1979.

*3.* துரைசாமி, ஔவை.சு. உரையாசிரியர், புறநானூறு 1-200 பாடல்கள், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, மறுபதிப்பு, 1967.

*4.* மேற்படி - உரையாசிரியர், புறநானூறு 201-400 பாடல்கள், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, மறுபதிப்பு, 1967.

*5.* நாகராசன், வீ., - உரையாசரியர், பத்துப்பாட்டு, இரண்டாம்பகுதி, மூலமும் உரையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், முதற்பதிப்பு, 2004.

**6.** மோகன், இரா., - உரையாசிரியர், பத்துப்பாட்டு, முதற்பகுதி, மூலமும் உரையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், மூன்றாம் பதிப்பு, 2007.

**7.** விசுவநாதன், அ., - உரையாசிரியர், கலித்தொகை, மூலமும் உரையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், செனனை, மூன்றாம் பதிப்பு, 2007.

**8.** வையாபுரிப்பிள்ளை, எஸ்., - தொகுப்பும் பதிப்பும், சங்கஇலக்கியம், பாட்டும் தொகையும், பாரிநிலையம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1967, முதற்பாகம்.

**9.** மேற்படி - தொகுப்பும் பதிப்பும், சங்க இலக்கியம், பாட்டும் தொகையும், பாரிநிலையம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1967, இரண்டாம் பாகம்.

## 2. துணைமை நூல்கள்

**திரு/திருமதி/செல்வி/ முனைவர்**

*1.* அவினாசிலிங்கம். தி.சு. - கலக்களஞ்சியம், தொகுதி ஏழு, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை முதற்பதிப்பு, 1960.

2. அன்னிதாமசு - தமிழர் சமூகவியல், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, முதற்பதிப்பு, 2000.

3. இராசமாணிக்கனார். மா. - தமிழ் நாட்டுவரலாறு, காவ்யா பதிப்பகம், சென்னை, முதற்குறிப்பு, 2008.

4. இராசையா. ந. - மாவீரன் பூலித்தேவன், காவ்யா பதிப்பகம், செனனை, முதற்பதிப்பு, 2007.

5. இளங்கோவடிகள் - சிலப்பதிகாரம், நாவலர். ந. மு. வேங்கடசாமி நாட்டார் உரை, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம். லிட், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1950.

6. இளவரசு. பெ. - ஒழுக்கம் உலகில் மிக உயர்ந்தது, ஆரிசன் ஸ்வெட்மார்டன் - எழுதிய ஆங்கில நூலின் தமிழாக்கம், கண்ணதாசன் பதிப்பகம், செனனை, முதற்பதிப்பு, 2007.

7. மேற்படி - வி. கே. டி. பாலனின் தலைமைப் பண்புகள், வெளியீட்டாளர்:இளவரசு. பெ., சென்னை, முதற்பதிப்பு, 2009.

8. உருத்திரங்கண்ணனார். கடியலூர். - பட்டினப்பாலை, சோமசுந்தரனார் உரை, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்., 1962.

9. கண்ணகி கலை வேந்தன் - பதிப்பாசிரியர், தரணிபோற்றும் தமிழர் பண்பாடு, தமிழய்யா வெளியீட்டகம்,தஞ்சை, முதற்பதிப்பு, 2005.

10. கந்தசாமி. சோ. ந. - தமிழ்யாப்பியலின் தோற்றமும் வளர்ச்சியும், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சை, முதற்பதிப்பு, 1989.

11. மேற்படி - தமிழிலக்கியச் செல்வம், தொகுதி I, மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், முதற்பதிப்பு, 2003.

12. கந்தையா.ந.சி. - அகநானூறு, அமிழ்தம் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2003.

13. கமால். எஸ். எம். - சேதுபதி மன்னர் வரலாறு, சர்மிளா பதிப்பகம், இராமநாதபுரம், முதற்பதிப்பு, 2003.

14. காந்தி.க. - தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, இரண்டாம்பதிப்பு, 1981.

15. காமாட்சி. - பசும் பொன்தேவரும் எட்மண்ட் பர்க்கும், ஆங்கில நூலின் தமிழாக்கம், பெ.இளவரசு, காவ்யாபதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 1998.

16. குருசாமி. ம. ரா. போ. - கபிலம், திருக்கோவலூர் பண்பாட்டுக் கழகம் சார்பில், மோகன் புரூவரீஸ் அண்டு டிஸ்டிலரிஸ் லிமி. வெளியிட்டது, முதற்பதிப்பு, 2000.

17. கோபாலையர். தி. வே. - தமிழ் இலக்கணப் பேரகராதி, தமிழ்மண் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2005, (12 பாகம்).

18. கோவிந்தன். கா. - பண்டைத்தமிழர் போர்நெறி, தமிழத்தாய் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2003.

19. கௌமாரீஸ்வரி.எஸ் - பதிப்பாசிரியர், திருக்குறள், பரிமேலழகர் உரை, சாராதா பதிப்பகம், சென்னை, எட்டாம்பதிப்பு, 2007.

**20.** சண்முகசுந்தரம். காவ்யா. - தொகுப்பாசிரியர், எஸ். எம். கமாலின் சேதுபதிகள் சரித்திரம், காவ்யா பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2008.

**21.** மேற்படி - தொகுப்பாசிரியர், பாண்டித்துரைத் தேவரின் சங்கத்தமிழ்க் களஞ்சியம், காவ்யாபதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2008.

**22.** மேற்படி - வேலு நாச்சியார், காவ்யாபதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2008.

**23.** சம்பத்.வி.ஆர்.எஸ் - தமிழ்நாட்டில் நீதிமுறை ஒருவரலாற்றுப்பார்வை, சட்டக்கதிர் வெளியீடு, சென்னை, முதற்பதிப்பு, 2004.

**24.** சாலினி இளந்திரையன். - சங்கத்தமிழரின் மனித நேய மணிநெறிகள், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 2004.

**25.** சிதம்பரனார்.சாமி - இலக்கியம் என்றால் என்ன? மணிவாசகர் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2000.

**26.** மேற்படி - பத்துப்பாட்டும் பண்டைத்தமிழரும், அறிவுப் பதிப்பகம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 2006.

**27.** சுப்பிரமணியன். ச.வே. - தொல்காப்பியம், தெளிவுரை, மணிவாசகர் பதிப்பகம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 1999.

**28.** மேற்படி - தமிழ் இலக்கிய வகையும், வடிவும், தமிழ்ப்பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 1984.

**29.** சுப்பு ரெட்டியார். ந. - தொல்காப்பியர் காட்டும் வாழ்க்கை, பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, நான்காம் பதிப்பு, 2002.

**30.** சூரிய நாராயணன்.பா. - தமிழ் நாட்டு வரலாற்றில் இலக்கிய ஆதாரங்கள், கி.மு.200-கி.பி. 300, உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, முதற்பதிப்பு, 1998.

**31.** சூரிய நாராயண சாஸ்திரியார் (பரிதிமாற்கலைஞர்) - தமிழ்மொழியின் வரலாறு, உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், மறுபதிப்பு, 1903.

**32.** செல்வம். வே.தி. - தமிழக வரலாறும் பண்பாடும், மணிவாசகர் பதிப்பகம், செனனை, நான்காம் பதிப்பு, 2003.

**33.** சேதுப்பிள்ளை. ரா.பி. - தமிழர்வீரம், பழனியப்பாபிரதர்ஸ், சென்னை, 12ஆம் பதிப்பு, 2007.

**34.** சொக்கலிங்கம்.கு. குற்றவியல், பார்வதி பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 1997.

**35.** ஞானசம்பந்தன் அ.சா. - இலக்கியக்கலை, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, முதற்பதிப்பு, 1999.

**36.** ஞானமூர்த்தி.தா.ஏ. - இலக்கியத் திறனாய்வியல், யாழ்வெளியீடு, சென்னை, மறுபதிப்பு, 2002.

**37.** தாயம்மாள் அறவாணன் - தமிழ்ச்சமூகவியல், - ஒரு கருத்தாடல், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, முதற்பதிப்பு, 2002.

**38.** திலகவதி ஜெகதீசன் மற்றும் எஸ். அன்புக்கொடி நல்லதம்பி - ஒப்பீட்டரசியல், தீபா பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2000.

**39.** நடராசன்.ம. - விடுதலைப்போரில் வேலு நாச்சியார், தமிழ் அரசிப்பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2005.

**40.** நிலாமணி.மு.மற்றும் கலா.கே.தாக்கர் - வர்த்தமானன் தமிழ் - தமிழ் அகராதி, வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, நான்காம்பதிப்பு, 2000.

**41.** பக்தவத்சல பாரதி - தமிழர் மானிடவியல், மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பரம், முதற்பதிப்பு, 2002.

**42.** மேற்படி - பண்பாட்டு மானிடவியல், மெய்யப்பன் பதிப்பகம், சென்னை, மறுபதிப்பு, 2003.

**43.** பரமேஷ்.செ.ரா. - சமூக உளவியல், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, முதற்பதிப்பு, 1993.

**44.** பழனிச்சாமி.எம்.எஸ் மற்றும் பலர் - சமூக அறிவியல் ஆயத்தப் பாடத்திட்டம், தமிழ்நாடு திறந்தநிலைப் பல்கலைக் கழகம், சென்னை, மறுபதிப்பு, 2009.

**45.** பாஸ்கர சேதுபதி.இரா - நிருவாகவியல் சிந்தனையாளர்கள், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, இரண்டாம் பதிப்பு, 2007.

**46.** பாஸ்கரதாஸ். ஈ.கோ - மானிட மதிப்புகள், திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, முதற் பதிப்பு, 1997.

**47.** பிள்ளை.கே.கே. - தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, மறுபதிப்பு, 2004.

**48.** மகாதேவன்.கதிர்.மேஜா - பழந்தமிழர் வீரப்பண்பாடு, இலட்சுமி வெளியீடு, மதுரை, முதற்பதிப்பு, 1980.

**49.** மணவாளன்.அ.அ. - இருபதாம் நூற்றாண்டின் இலக்கியக் கோட்பாடுகள், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 2002.

**50.** மருதநாயகம்.ப. - புதுப்பார்வைகளில் புறநானூறு, காவ்யா பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2004.

**51.** மேற்படி - சங்க இலக்கிய ஆய்வு, தெ.பொ.மீயும் மேலை அறிஞரும், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, முதற்பதிப்பு, 2008.

**52.** மருதன் - இரண்டாம் உலகப் போர், கிழக்குப் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2009.

**53.** முத்துலக்குமி, வே. - பண்பாட்டுச் சிந்தனைகள், அனிதா பதிப்பகம், திருச்சிராப்பள்ளி, முதற்பதிப்பு, 2000.

**54.** முத்தையா.பா.சு. - சங்க கால மறவர், காவ்யா பதிப்பகம், பெங்களூர், முதற் பதிப்பு, 1998.

**55.** ரத்னம். க. - சங்க இலக்கியத்தில் யானைகள், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2005.

**56.** வரதராசன்.மு. - இலக்கிய மரபு, பாரி நிலையம், சென்னை, மறுபதிப்பு, 2007.

**57.** மேற்படி - இலக்கிய மரபு, பாரி நிலையம், சென்னை, மறுபதிப்பு, 2006.

**58.** வித்தியானந்தன். க. - தமிழர் சால்பு, குமரன் புத்தக இல்லம், சென்னை, நான்காம் பதிப்பு, 2006.

**59.** வேங்கடசாமி. மயிலை சீனி - நுண்கலைகள், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, 2001.

**60.** ஜெயங்கொண்டார் கலிங்கத்துப்பரணி, பாரிநிலையம், சென்னை, ஏழாம்பதிப்பு, 1974.

**61.** ஜெயா.வ. - சங்கப்பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, முதற்பதிப்பு, 2003.



62. ஜோசப்.ஆ.சே.ச. - பதிப்பாசிரியர், தமிழ் இலக்கியத்தில் மனித உரிமைகள், தமிழ்த் துறை, தூயவளனார் கல்லூரி, திருச்சி, முதற்பதிப்பு, 2002.

63. ஸ்டாலின் குணசேகரன் - விடுதலை வேள்வியில் தமிழகம், நிவேதிதா பதிப்பகம், ஈரோடு, முதற்பதிப்பு,2000.

### 3. துணைநின்ற ஆங்கில நூல்கள்

1. Raj Kumar - Military System in Ancient India, Common Wealth Publication, New Delhi, Ist Edition, 2004.

2. Subramaniam.S.V. - Studies in Tamilology, Tamil Patippakam, Chennai, First Edition,1982.

3. Thirunavakkarasu. K. D. - Chieftains of the Sangam Age, International Institute of Tamil Studies, Chennai, First Edition, 1994.

சங்க இலக்கியங்களில் மறவர்கள் - பன்முக ஆய்வு

**சென்னைப்பல்கலைக் கழகத்திற்கு**
**முனைவர் (பிஎச்.டி) பட்டப்பேற்றிற்காக**
**அளிக்கப்படும் ஆய்வேடு.**


**ஆய்வாளர்**

**திருமதி கா. கலைச்செல்வி,** எம்.ஏ, எம். ஃபில்., பி.எட்.,
முழு நேர ஆய்வாளர் - தமிழ்த்துறை
பச்சையப்பன் கல்லூரி
சேத்துப்பட்டு, சென்னை-600 030

**நெறியாளர்**
**முனைவர். திருமதி. சொ. சுடலி,** எம்.,ஏ., பிஎச்.டி.
தமிழ் இணைப்பேராசிரியர்
பச்சையப்பன் கல்லூரி
சேத்துப்பட்டு, சென்னை- 600 030





**சென்னைப்பல்கலைக்கழகம்**
**மார்ச் - 2010**

# முடிவுரை

கடந்த ஐந்து இயல்களில் ஆய்வின்வழி கண்டறிந்த கருத்துக்கள் இங்கு தொகுக்கப்பட்டுள்ளன. அவை,

*(1)* பொதுநிலையில் கண்டறிந்த முடிவுகள்

*(2)*சிறப்பு நிலையில் கண்டறிந்த முடிவுகள்

என்று விளக்கப்பட்டுள்ளன.

'ஆய்வு என்பது தொடர் ஓட்டம் போல, ஒருவர் விட்ட இடத்திலிருந்து நாம் தொடர வேண்டும். முன்னவர் ஓடிய பகுதியிலேயே நாமும் ஓடின் தவறாகும். அவர் வந்து தொடும் இடம் நாம் தொடங்கும் இடமாகும்' எனக்கூறும் தமிழண்ணல் கருத்தின்படியே முன்னோடிகள் முடித்த இடத்திலிருந்து ஆய்வைத் தொடங்கிக் கண்டறிந்தவை இவையெனத் முடிவுரையாக அமைக்கப்பட்டுள்ளது.

## பொது நிலையில் கண்டறிந்த முடிவுகள்

*(1)* தற்கால சமூகவியலார், இல்லறவியலார், உளவியலார், அரசியலார், பொருளியலார், போர் இயலார் அனைவரும் கூறிய கோட்பாடுகளுள் பல சங்க இலக்கியங்களில் இயல்பாகவே இடம் பெற்றுள்ளன. ஒரு சில முரண்பட்ட, மாறுபட்ட கருத்துக்களும் சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன.

*(2)* சங்க இலக்கியங்கள் சுட்டிச் சிறப்பிக்கும் தமிழ் மறவர்தம் மறப்பண்புகள் பலகிரேக்க, ரோமானிய மறவர்களின் பண்புகளோடு ஒன்றியுள்ளதையும் காணமுடிகிறது.

(3) சமூகக் கட்டுக்கோப்பிற்கு உதவிய மறவர்கள், தத்தம் இல்லற வாழ்வில் கற்றறிந்தவற்றை வழுவாது போற்றி வந்த பண்புகளே அதற்குத் துணை நின்றன எனத் தெளிவாகத் தெரிகிறது.

(4) தன்மானம், தறுகண் போன்ற மறப்பண்புகள் தொடர்ந்து வாழையடி வாழையாக வந்து கொண்டிருப்பதை இன்றும் காணமுடிகிறது.

(5) இனப்பற்று, மொழிப்பற்று, நாட்டுப்பற்று மிகுதியாகப் பெற்றிருந்தும் ஒற்றுமையின்மையால் சிதறுண்டு பகைவர் வந்து தமிழினத்திற்கு ஒவ்வா அவர்தம் பண்புகளை விதைத்திட இடமேற்பட்டுவிட்டதையும் தெளிவாகக் காணமுடிகிறது.

## சிறப்பு நிலையில் கண்டறிந்த முடிவுகள்

இயல்தோறும் கூறப்பட்ட ஆய்வு முடிவுகளே சிறப்பு நிலையில் கண்டறிந்த முடிவுகள் ஆகும். குறிப்பிட்ட எல்லை அமைத்துக் கொண்டு ஆய்வு செய்த பொழுது கிடைத்த முடிவுகள் இயல்தோறும் இயலின் இறுதியில் தரப்பட்டுள்ளன. அவற்றால் கண்டறிந்த சிறப்புச் செய்திகள் இங்கு தரப்பட்டுள்ளன.

(1) சங்க இலக்கியங்கள் வாயிலாக அற்றைய தமிழ்ச் சமூகம், சமூக உள்கட்டமைப்பிலும், வெளிக்கட்டமைப்பிலும் சிறந்து விளங்கியது.

(2) அரசர் முதலாகப் பாமரர் ஈறாக உள்ள அனைவரும் இக்கட்டமைப்புகளுக்குத் தத்தம் பங்கினைச் சிறப்பாகச் செலுத்தியுள்ளனர்.

(3) அகம்-புறம் என்ற வாழ்வியல் அமைப்பே இத்தகு கட்டமைப்பிற்கு அடித்தளமாக அமைந்தன.

(4) தற்காப்பு, பாதுகாப்பு, பல்வகைக் காவல், பகைஒழிப்பு போன்றவற்றிற்கு இந்தக் கட்டமைப்புகள் உதவியது போலவே சங்ககால மறவர்களும் இதற்கு நன்கு உதவியுள்ளனர்.

(5) பன்னாட்டு ஆய்வாளர்கள் போற்றிப் பாராட்டி நூல்களில் இடம் பெறுமாறு செய்ததற்கு, அற்றைய சங்ககாலச் சமூகக் கட்டமைப்புகளின் தனித்தன்மையுடன் விளங்கிய கூட்டமைப்பே காரணமாயிற்று.

(6) சங்க இலக்கியங்களில் வெளிப்படும் பன்முக அமைப்புகள் அற்றைய மறவர்களின் பங்களிப்புகளைத் தெளிவாகக் கண்டறிய உதவுகின்றன.

(7) சங்க இலக்கியம் சுட்டும் மாந்தர்களுள் அரசர்களே முதன்மை மாந்தர்களாகத் திகழ்ந்து மறவர்தம் பிரதிநிதிகளாக நின்று சிறப்புச் செய்துள்ளனர்.

(8) பன்முக அமைப்பில் அறம், பொருள், இன்பம் வாழ்வியற் கோட்பாடாக அமைந்து சிறக்க பிறர் தத்தம் பங்கினைச் செலுத்தியது போலவே மறவர்களும் செலுத்தி வந்துள்ளனர்.

(9) சமூகத்தார் அனைவரும் போற்றிப் பாராட்டும் உயர்நிலையைப் பெற்றிருந்தாலுங்கூட, சிலர் தத்தம் மறப்பண்புகளைத் தவறாகப் பயன்படுத்தியுள்ளதையும் காணமுடிகிறது.

(10) மறவர்களின் தனித்தன்மைகளைக் கண்டறிய சங்க இலக்கிய பன்முக அமைப்புகளே துணை நின்று வெளிப்படுத்தியுள்ளன.

(11) சங்க இலக்கியங்கள் மறவர்களை எந்தெந்த வகையில் சிறப்பித்துப் பாராட்ட முடியுமோ அந்தந்த வகையில் பாராட்டிப் பெருமைபடுத்தியுள்ளதைக் காணமுடிகிறது.

(12) போர்க் காலங்களில் மட்டுமன்றி, அமைதிக் காலங்களிலும் மறவர்கள் சமூகக் காவலர்களாகவும், சமூகத்தொண்டர்களாகவும் வாழ்ந்து வந்துள்ளனர்.

(13) பழந்தமிழ் நாட்டுற்குரிய உண்மையான வரலாற்றை உருவாக்க மறவர்களின் பங்களிப்பு மிகுதியாக உள்ளன.

(14) மறவர்களின் தறுகண் எனப்படும் மறப்பண்பு ஈடு இணையற்றது என்பதை கிரேக்க-ரோமானிய மறவர்களோடு ஒப்பிட்டுக் காணும் பொழுது நன்கு வெளிப்படுகிறது.

(15) வாழ்வியற்கூறுகளான அகமும் புறமும் நெறிமுறையோடு போற்றிப் புரந்த பண்பினை மறவர்கள் இயல்பாகவே பெற்றிருந்தனர்.

(16) சமூகக் கட்டமைப்பில் நாடும்-நாடு காவலும் முதலிடம் பெற்று, அதற்கு மறவர்களே பெரும்பங்காற்றியுள்ளதைக் காணமுடிகிறது.

(17) அரசு - அரசாங்கம் போற்றவற்றுள் முக்கிய அங்கம் பெற்று ஆட்சி சிறக்க மறவர்கள் ஆற்றிய தொண்டுகள் நன்கு விளக்கம் பெற்றுள்ளன.

(18) அரசாணைகளை மதித்து, தத்தம் பொறுப்புணர்ந்த மறவர்கள் ஆற்றிய கடமைகள் நன்கு சுட்டப்பட்டுப் பாராட்டப்பட்டதைக் காணமுடிகிறது.

(19) மறவர்களும் கொடையாளிகளாக வாழ்ந்து வந்துள்ளதையும் காணமுடிகிறது.

(20) வீர மரணம் எய்திய மறவர்களை மன்னர்களும், மக்களும் தெய்வமாகப் போற்றி வணங்கி வந்துள்ளனர்.

(21) மறவர்கள் மானுடம் போற்றும் பண்பு நலன்களால் சிறந்திருந்ததால்தான் சங்ககாலச் சமூகம் பற்பல சமூகப் பயன்களைப் பெற்று பொற்காலமாகத் திகழ்ந்திருந்ததெனத் தெளிவாகச் சுட்டுகின்றன.

(22) மறவர்களின் முதன்மைப் பணி காவற்பணி என்று வரையறை செய்து, அதனால், மக்கள் அச்சமின்றி சுதந்திரமாக வாழ்ந்து வந்துள்ளது நன்கு விளக்கிக் காட்டப்பட்டள்ளது.

(23) வாழையடி வாழையாக மறவர்கள் சமூகத்தில் சிறப்பிடம் பெற்றதால்தான் இடைக்கால வரலாற்றிலும் தமிழக மறவர் சுட்டப்பட்டுப் பாராட்டப்பட்டுள்ளனர்.

(24) விடுதலைப் போராட்டங்களில் காலந்தோறும் மறவர் மரபில் தோன்றிய ஆடவர்கள் மட்டுமின்றி பெண்களும் தலைமை ஏற்று நற்றொண்டாற்றிப் பெருமை பெற்றுள்ளனர்.

(25) விடுதலைக்கு முன்பும், விடுதலை பெற்றதற்குப் பின்பும் தொடர்ந்து இன்றுவரை தமிழக மறவர்கள் தமிழகம் சிறக்க பாடுபட்டு வரும் நற்செயல்களுக்கெல்லாம் சங்ககால மறவர்களின் பண்பு நலன்களால் விளைந்த சமூகப் பயன்களுக்குரிய சான்றுகள் காட்டப்பட்டுள்ளன.

இவ்வாறு, இலக்கியச் சான்றுகளோடு வரலாற்றுச் சான்றுகளையும் இணைத்து ஆய்வுசெய்து கண்டறிந்த முடிவுகள் முறைப்படுத்தப்பட்டு பட்டியலிடப்பட்டுள்ளன.

'அடிவானம் போல் முடிவிலா ஆய்வினைத்
தம்முடன் தொடங்கித் தம்முடன் முடிவதாய்
இம்மா னுடர்கள் எண்ணுதல் தவறே'

என்று கூறும் தமிழண்ணல் கூற்றிற்கேற்ப, இந்த ஆய்வின் தொடர்ச்சியாக மேலும் பல ஆய்வுகளை மேற்கொள்ள இடமளிக்கும் என நம்பலாம். மேலாய்வுக்களங்காக, "சங்க இலக்கியம் போற்றும் மூதின் மகளிர்" ; "சங்ககால அரசியலில் மறவர்கள் பங்கு" ; சங்ககால மறவர்களும் போர் நெறிகளும்" ;

"பழந்தமிழ் மறவர்களின் மறப்பண்புகளும் சமூகமும்" எனப் பல்வேறு தலைப்புகளில் ஆர்வமுள்ள ஆய்வாளர்கள் ஆய்வினை மேற்கொள்ளலாம்.

இத்தகு ஆய்வுகள் மறைக்கப்பட்ட உண்மைகள் வெளிவர உதவுவதோடு, இற்றைய தமிழ்ச் சமூகம் மீண்டும் விழிப்புற்று வீறுகொண்டு பழந்தமிழர் போற்றிய பெருமைகளை உலகரங்கில் பதிவு செய்யும் உயர் பணிக்கான ஆக்கமும் ஊக்கமும் நல்கும் என உறுதியாக நம்பலாம்.